ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட
ஆயிரம்மடங்கதிஶயித்த
பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்
ப்ரபந்நஜநகூடஸ்த்தராய் எழுந்தருளியிருக்கும்
மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

## இரண்டாம்பத்து

## மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்.

இவை,
ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமான்-ஆழ்வார்திருநகரி. வடபத்ரஶாயி
**அரையர்ஸ்வாமி அவர்களாலும்**
ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,
**கா. ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்**
அநேகப்ரதிகளைக்கொண்டுபரிஶோதிக்கப்பட்டு
சென்னை. ராமாநுஜசித்தாந்தஸபாத்யக்ஷராகிய
ஸ்ரீமான்,
**முதலியாண்டான்முன்னிலையில்**
கண்ணபாளயம் - ஐயாபிள்ளை அவர்கள்குமாரர்
**ஸ்ரீரங்கப்பிள்ளை**
புலியனூர் - இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்
**கிருஷ்ணஸ்வாமிமுதலியார்**
செஞ்சி-கோதண்டராமமுதலியார்அவர்கள்குமாரர்
**இராகவராமாநுஜதாசர் இவர்களால்**

சென்னை:
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

ஆழ்வார்திருவவதாராதிவர்ஷங்கள்-௪௯௮0- பஹுதாந்யவர்ஷம்.
Madras. March 1879.



ஸ்ரீ

    

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

### முதற்றிருவாய்மொழியின் ப்ரவேஶம்.

### ஆறாயிரப்படி.

( வாயுந்திரை ) இப்படி நிரவதிக ஸௌந்தர்யாதி கல்யாணகுண கண பரிபூர்ணனாயிருந்த எம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாற்போலே தம்முடைய திருவுள்ளத்தாலே யநுபவித்து, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலுள்ள அபேக்ஷையாலே அதிலே ப்ரவ்ருத்தராய், அது கைவாராமையாலே அத்யந்தமவஸந்நரா யந்யாபதேஶத்தாலே ஸ்வதஶையைப் பேசுகிறார். பகவத்ஸம்ஶ்லேஷ வியோகைக ஸுகது:கையாய், தத்விஶ்லேஷத்தினாலே அத்யந்த மவஸந்நையா யிருந்தா ளொருபிராட்டி, ஸ்வத்ருஷ்டிகோசரமான பதார்த்தங்களினுடைய ப்ரவ்ருத்திவிஶேஷங்களை பகவத் விஶ்லேஷஜநித து:கஹேதுகமாக ஸ்வாத்மாநு ஸந்தாநத்தாலே யநுஸந்தித்து, அந்த சேதநாசேதந பதார்த்தங்களைக்குறித்து, நீங்களும் நான் பட்டது பட்டீர்களாகாதே யென்கிறாள்........................................*

### பன்னீராயிரப்படி.

இரண்டாம்பத்தில். இப்படிபரத்வாதிகுணங்களாலே பரஶேஷியான ஸர்வேஶ்வரனுடைய ஸர்வரக்ஷகத்வ ப்ரயுக்தமான உபாயத்வத்தை ப்ரதிபாதித்து, அநந்தரம் இப்பத்தாலே - உபேயத்வோபயுக்தமான அவனுடைய நிரதிசயபோக்யதையை யருளிச்செய்வதாக, அந்தபோக்யதாதிசய ஸூசகமான ; அல்பகாலவிஶ்

லேஷத்திலு மதிக்லேஶா வஹத்வத்தையும், ஆஶ்சர்யருபமான உத்துங்கலலித த்வத்தையும், ஸர்வஸாரஸ்ய ஸமவாயருப திவ்யபோக்யதையையும், போகாலாப த்தில்வந்த ஆர்த்தியைப்போக்கி ரக்ஷிப்பானவனே யென்னுமிடத்தையும், ஆர்த்தி தீரும்படி கிட்டினவனுடைய ஹர்ஷகாரிதமான ஸௌந்தர்யாதிசயத்தையும், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷப்ரீதனுடைய தத்விஶ்லேஷ பீருத்வத்தையும், ஸம்ஶ்ரித ஸம்பந்தி குலஸந்தாநபர்யந்த ஸம்ரக்ஷணத்தையும், ரக்ஷணகாஷ்ட்டையான மோக்ஷப்ரதத்வத்தையும், மோக்ஷதாத்பர்யமான பாரதந்த்ர்யத்தையு ‡ மருளிச்செய்வதாக, தது பபாதகமான; அவனுடைய ஸ்ரீயஃபதித்வத்தையும், ஶேஷஶாயித்வத்தையும், அநிஷ்ட்ட நிவர்த்தகத்வத்தையும், நிவர்த்தநபரிகரவத்வத்தையும், ஶக்தியோகத்தையும், ஸத்யவாதித்வத்தையும், ஸம்பந்தவிஶேஷவத்வத்தையும், காருணிகத்வத்தையும், கமநீயவிக்ரஹயோகத்தையும், காரணத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விதபோக்யபூதனுடைய அல்பகாலவிளம்பத்திலாற்றுமையாலே அஶேஷபதார்த்தங்களும் தம்மைப்போலேயவனைப்பிரிந்து நோவுபடுகிறனவாக அபிஸந்திபண்ணும்படி கலங்கினப்ரகாரத்தை, நாயகனுன ஈஶ்வரனைப் பிரிந்தாளொருநாயகி, ஸகலபதார்த்தங்களுந் தன்னைப்போலே தத்விரஹதுக்கத்தாலே யீடுபடுகிறனவாகநினைத்துப் போலிமைக்கிரங்கி யுரைத்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறுர். "இதுதன்னுட்கையா[?]றெய்திடுகிளவி" என்பர்..............................*

---

ஈடு.

முதற்பத்தால் - பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென் றறுதியிட்டார்; இரண்டாம்பத்தால் - அந்தக்கைங்கர்யத்தில் களையறுத்தார்; மூன்றும்பத்தால் - விரோதிகழிந்த கைங்கர்யவேஷம் - பாகவதஶேஷத்வ பர்யந்தமான பகவத்கைங்கர்யமென்றுர் ; நான்காம்பத்தால் - இப்படிப்பட்டகைங்கர்யத்துக்கு விரோதி - ஐஶ்வர்ய கைவல்யமென்றுர் ; ஐந்தாம்பத்தால் - அந்தவிரோதியைப் போக்குவானுமவனேயென்றுர் ; ஆறும்பத்தால் - விரோதிநிரஸநஶீலனுனவன் திருவடிகளிலே ஶரணம்புக்கார் ; ஏழாம்பத்தால் - இப்படி பெரியபிராட்டியார் முன்னிலையாக ஶரணம்புக்கவிடத்திலும், தக்தபடந்யாயம்போலே ஸம்ஸார மநுவர்த்திக்கிற படியைக்கண்டு விஷண்ணராகிறுர் ; எட்டாம்பத்தால் - " இப்படி ப்ரபந்நராயிருக்கச்செய்தேயும் தக்தபடந்யாயம்போலே நம்மைவிடாதே யநுவர்த்திக்கிறது நம்முடைய ஆத்மாத்மீயங்களில் நசையறுதபடியாலே" என்றுபார்த்து, அவற்றிலொரு நசையில்லையென்கிறுர் ; ஒன்பதாம்பத்தால் - " இப்படி நசையற்றபின்பும் ரக்ஷியாதொழிவானெனென் " என்றுஅதிஶங்கைபண்ண, " நான் நாராயணன், ஸர்வஶக்தியுக்தன், உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும் செய்துமுடிக்கிறோம் " என்றருளிச்செய்ய, அவனுடைய ஶீலகுணத்திலே யாழங்காறபடுகிறுர் ; பத்தாம்பத்தால் - ஆழ்வாருடைய பதற்றத்தைக்கண்டு, திருமோகூரிலேதங்கு வேட்டையாகவந்துதங்கி, இவர்க்கர்ச்சிராதி கதியையுங்காட்டி, இவருடைய அபேக்ஷித ஸம்விதாநம்பண்ணினபடியை யருளிச்செய்தார்.

இழற்றிருவாய்மொழியிலே "மணியைவானவர்கண்ணனைத்தன்னதோரணியை" என்று - ஸௌலப்யத்தையும், மேன்மையையும், வடிவழகையும் சொல்லிற்று; இவையோரொன்றே போருமிறே மேல்விழப்பண்ணுகைக்கு, இங்ஙனன்றிக்கே, இவைமூன்றும் குறைவற்றவிஷயமானால் அநுபவியாதிருக்கப் போகாதிறே; "இவ்விஷயத்தை யிப்போதே யநுபவிக்கவேணும்" என்று பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்தது; அப்போதே நினைத்த பரிமாற்றம் பெறாமையாலே பிறந்த அவஸாதாதிஶயத்தை; எம்பெருமானோடே கலந்து பிரிந்து ஆற்றாமையாலே நோவுபடுகிறாளொருபிராட்டி, ஆற்றாமை கைகொடுக்க லீலோத்யாநத்திலேபுறப்பட்டு, அங்கேவர்த்திக்கிற பதார்த்தங்களைக்கண்டு, அவையுமெல்லாம் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாகக்கொண்டு, அவற்றுக்குமாகத்தான் நோவுபடுகிற பாசுரத்தாலே பேசுகிறார். அஞ்சிறையமடநாரையிலும் இதுக்காற்றாமை கரைபுரண்டிருக்கும். அதுக்கடியென்னென்னில்; "பெருநிலங்கடந்தநல்லடிப்போதயர்ப்பிலனலற்றுவன்" என்று - அவதாரத்திலே யநுபவிக்கக் கோலிப் பெறாததாகையாலே, "அதொருகாலத்திலே, நாம்பிற்பாடராகை" என்றறலாம்; இதங்ஙனன்றிக்கே, அவதாரத்தில்; பிற்பாடர்க்கு மிழக்கவேண்டாதபடி முகங்கொடுக்கைக்கு நிற்கிறவிடமிறே உகந்தருளின நிலங்கள்; "நம்பியைத்தென்குறுங்குடிநின்ற" என்று - உகந்தருளினநிலத்திலே அநுபவிக்க ஆசைப்பட்டுப் பெறாமையாலே வந்த ஆற்றாமையாகையாலே இது கனத்திருக்கும். அஞ்சிறைய மடநாரையில் - தூதுவிடுகைக்குத் தரிப்புண்டாயிற்று; இதில் - அங்குத் தூதுவிட்டவையும் நோவுபடுகிறனவாக அவற்றுக்குமாகத் தாம் நோவுபடுகிறார். அநுபவிக்கிற இவர்தம்படியாலும் இத்திருவாய்மொழிக் காற்றாமை கனத்திருக்கும்; பத்துடையடியவர்க்குமுன்பவ்விஷயத்தை யநுபவித்துப் பிரிந்தவளவாலுள்ள ஆற்றாமையிறே அதிலுள்ளது; அஞ்சிறையமடநாரைக்குப் பின்பிவ்வளவும் வர அவனுடையகுணங்களை யநுபவித்துப் பிரிந்த பிரிவாகையாலே ஆற்றாமை மிகவுங் கனத்திருக்குமிதில்; பயிலப்பயிலவிறே யினிதாயிருப்பதிவ்விஷயம்.

நாரையாகில் வெளுத்திருக்கையும், அன்றிலாகில் வாயலகுநெகிழ்த்தவாறே கதறுகையும், கடலாகில் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி கூப்பிடுகையும், காற்றாகில் ஸததகதியாய்த் திரிகையும், மேகமாகில் நீராயிற்றிற்றுவிழுகையும், சந்த்ரனாகில் தேய்வதுவளருவதாகக்கடவதென்றும், தமஸ்ஸாகில் பதார்த்ததர்ஶநம்பண்ணவொட்டாதென்றும், கழியாகில் அலைவாய்முகமாய் ஏறுவது வடிவதாகக்கடவதென்றும், விளக்காகில் இற்றிற்றெரியக்கடவதென்றும், இவற்றுக்கிவை நியதஸ்வபாவமென்றறியாதே, இவையெல்லாம் தம்மைப்போலே பகவத்

விஶ்லேஷத்தாலே வ்யஸநப்படுகிறனவாகக்கொண்டு, அவற்றுக்குமாகத் தாமநுஶோகிக்கிறார்.

இத்திருவாய்மொழியால் - இளையபெருமாளிற் காட்டி லிவர்க்குண்டான வ்யாவ்ருத்திசொல்லுகிறது. எங்ஙனே யென்னில்; மத்ஸ்யத்துக்கு ஜலம் தாரகமாகவறுதியிட்டாரவர், இவர் அந்த மத்ஸ்யத்தோடு ஜலத்தோடு தம்மோடு வாசியற பகவத்குணங்களே தாரகமென் றிருக்கிறார். ஆகையாலே, து:கிகளாயிருப்பார் தங்களோடு ஸமது:கிகளைக்கழுத்தைக் கட்டிக்கொண்டு கிடந்துகூப்பிட்டு ஆற்றாமைக்குப் போக்குவிட்டு தரிக்குமாபோலே, இவளும் கண்ணுக்கிலக்கான பதார்த்தங்களெல்லாவற்றோடும் கழுத்தைக் கட்டிக்கொண்டுகிடந்து "நீபட்டதோ, நான் பட்டதோ" என்று கூப்பிடுகிறாளா யிருக்கிறது; "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" (அபிவ்ருக்ஷா:பரிம்லாநா:) என்னுமாபோலே - சேதநாசேதந விபாகமற நோவுபடுத்தவற்றையிறே இவள் பிரிந்தவிஷயந்தா னிருப்பது.

[உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச] (உபதப்தோதகாநத்ய:பல்வலாநிஸராம்ஸிச என்று) ஆறுகளோடு சிறுகுழிகளோடு பெருங்குழிகளோடு வாசியற, கரையருகுஞ் சென்று கிட்டவொண்ணாதபடி ராமவிரஹத்தாலே கொதித்ததிறே. [பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச] (பரிஶுஷ்கபலாஶாநிவநாந்யுபவநாநிச என்று) சிறுகாட்டோடு பெருங்காட்டோடு வாசியற, விரஹாக்நி கொளுத்திற்று. பெருமாள் "ஸீதேம்ருதஸ்தே ஶ்வஶுர: பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண" (ஸீதேம்ருதஸ்தேஶ்வஶுர:பித்ராஹீநோஸிலக்ஷ்மண) என்று ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு கிடந்து கூப்பிட்டாற்போலே கூப்பிடுகிறாரிங்கு.......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

வாயுந்திரைப்ரவேஶே, கீழோடிதுக்கு ஸங்க்ரஹஸங்கதி (கீழ்த்திருவாய்மொழியிலே யித்யாதி) தன்னதோரணியை - தனக்குத்தானே யத்விதீயமான ஆபரணமானவனே. அவஸந்நையான விவளுக்கு த்யாநகமநமெப்படி யென்ன (ஆற்றாமையித்யாதி) "பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாக" என்கிறவிடத்திலே - க்ருஷ்ணன் தர்மபுத்ராதிகளை வினவப்போயெழுந்தருளி யிருக்க, பதினாறுயிரம் ஸ்த்ரீகளும் விஶ்லேஷவ்யஸநம்பொறுக்கமாட்டாமல் நோவுபடாநிற்க, ஒரு நாள்ராத்ரியோரன்றில்கதற, அத்தைப்பார்த்து, "நீயுமெங்களைப்போலே நோவுபட்டாயாகாதே" என்று அவற்றுக்குமாகத்தாங்கள் நோவுபட்டுச்சொன்ன,

“ [illegible] ” (குரரீவிலபஸித்வம் வீதநித்ராநஶேஷே ஸ்வபதிஜகதிராத்ர்யா மீஸ்வரக்ரஸ்த்தபோதே | வயமிவஸகிகச்சித்காடநிர்விண்ண சேதாஃநளிநநயநஹாஸோதாரலீலேக்ஷணேந ) என்கிறஶ்லோகமும், “ [illegible] ” (த்வம்யக்ஷமனுபலவதாகிக்ருஹீதஇந்தோக்ஷீணஸ்தமோநிஜதீதிபிஃ க்ஷிணோஷி | கச்சிந்முகுந்தகதிதாஙியதாவயந்த்வம்விஸ்ரப்யபோஸ்த்தகிததீருபலக்ஷயஸேநஃ ) என்கிறஶ்லோகமுமநுஸந்தேயம்.

அஞ்சிறையமடநாரையிலும், இத்திருவாய்மொழியிலும் விஶ்லேஷவ்யஸநம் துல்யமாயிருக்க, அங்கு - நாரைமுதலானவை தூதுவிடும்படி களித்து வர்த்திக்கிறனவாகவும், இங்கு - தூதுவிடவொண்ணுதபடி நோவுபடுகிறனவாகவும் நினைக்கையாகிற இந்தக்கார்யவைஷம்யங் கூடினபடியெங்ஙனேயென்ன (அஞ்சிறையவித்யாதி) அதுக்கடியேதென்ன ; விஷயஸ்வபாவத்தாலே யென்கிறுர் ( அதுக்கடியித்யாதி ) உகந்தருளின நிலங்களிலே யாசைப்பட்டாரோவென்ன ( நம்பியையித்யாதி ) “ கனத்திருக்கும் ” என்றவநந்தரம் - ஆகையாலே யென்று ஶேஷம். விஷயஸ்வபாவமாத்ரத்தா லன்றிக்கே, அநுபவித்ரு ஸ்வபாவத்தாலு மாற்ருமையதிகமென்கிருர் ( அநுபவிக்கிறவித்யாதி ) அக்கார்யவைஷம்யத்துக்கடி - ஆற்ருமையின்தாரதம்யம் ; அதுக்கடி - விஷயஸ்வபாவமு மநுபவித்ரு ஸ்வபாவமுமென்றபடி. அதெப்படியென்ன ( பத்துடையித்யாதி ) பத்துடையடியவர்க்குமுன்பு- பத்துடையடியவரோடேகூட முன்பு. “ [illegible] ” (விநாதேநேதிமர்யாதாஸஹதேநேத்யபிவிதிஃ) இதிந்யாயாதபிவிதிஹவிவக்ஷிதஃ. அதிலுள்ளது - அஞ்சிறையமடநாரையிலுள்ளது. இதில் - இத்திருவாய்மொழியில். “ [illegible] ” ( அதிபரிசயாதவஜ்ஞாஹிபவதி ) என்று - சிரபரிசய மிழக்கைக்குறுப்பன்றேவென்ன ( பயிலப்பயிலவித்யாதி ) பயிலப்பயில - அப்யஸிக்க வப்யஸிக்க.

“ நோவுபடுகிறனவாகக்கொண்டு ” என்கைக்கு - அவற்றுக்கு வாஸ்த்தவாகாரமேதென்ன ( நாரையாகிலித்யாதி ) யத்வா, விஸ்தாரஸங்கதியாதல். நெகிழ்த்தவாறே - நெகிழ்ந்தவாறே. இற்றிற்றெரியக்கடவதென்று மென்றது-ஸந்தாநாவிச்சேத பரமான “ நந்தாவிளக்கம் ” என்றத்தைப்பற்ற.

ஸ்வாபதேஶம் (இத்திருவாய்மொழியிலித்யாதி) “ [illegible] ” (ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) என்று - ஜலம்தாரகமாக வறுதியிட்டாரொன்றபடி. ஆகையாலே- உக்தஹேதுக்களா லாற்ருமை மிக்கிருக்கையாலே.

யோக்யதையுள்ள விடத்தேயன்றே ப்ரமமுள்ளது, அசேதநங்களுக்கு பகவத்விரஹவ்யஸந யோக்யதையுண்டோவென்ன ( அபிவ்ருக்ஷாஇத்யாதி ) அயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதிஸுமந்த்ரஃ, “ [illegible]

ஸ நகஸ்ரீருதா: । கவிவ்ருக்ஷா:பரிம்லாநாஸ்ஸபுஷ்பாங்குரகோரகா: ।
உபதப்தோதகாநத்ய: பல்வலாநி ஸராம்ஸிச । பரிஶுஷ்கபலாஶாநி
வநாந்யுபவநாநிச " ( விஷயேதேமஹாராஜராமவ்யஸநகர்ஶிதா: । அபி
வ்ருக்ஷா:பரிம்லாநா ஸ்ஸபுஷ்பாங்குரகோரகா:| உபதப்தோதகாநத்ய: பல்வலாநி
ஸராம்ஸிச । பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநிச. ) வற்று - ஸமர்த்தம். உப
ஶப்தார்த்தம் ( கரையருகுமிதி )

து:கிகள் ஸமது:கிகளைக் கழுத்தைக்கட்டிக்கொண்டு கூப்பிட்டவிடமுண்டோவென்ன ( பெருமாளித்யாதி ) அயோத்யாகாண்டே ராம:, " ஏவமுக்த்வா
தபரதம்பார்யாமப்யேத்யராகவ: । உவாசஶோகஸந்தப்த: பூர்ண
சந்த்ரநிபாநநாம் । ஸீதேம்ருதஸ்தேஶ்வஶுர: பித்ராஹீநோஸிலக்ஷ்மண"
( ஏவமுக்த்வாதபரதம்பார்யாமப்யேத்யராகவ: । உவாசஶோகஸந்தப்த: பூர்ண
சந்த்ரநிபாநநாம் । ஸீதேம்ருதஸ்தேஶ்வஶுர: பித்ராஹீநோஸிலக்ஷ்மண. ) சில ஸ்ரீகோஶங்களிலே யீட்டுவாக்யங்கள் முன்பின்னாகவிருந்தால், அதுக்கநுகுணமாக அரும்பதவாக்யங்களை யோஜித்துக்கொள்வது. " முதற்பத்தால் பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்றறுதியிட்டார் " இத்யாதிவாக்யம் சிலஸ்ரீகோஶங்களிலே யித்திருவாய்மொழியின் ப்ரவேஶாதியிலிருந்தபோது, ப்ரவேஶஶேஷமாக யோஜித்துக்கொள்வது.................................................................*

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி.—முதற்பாட்டு.

வாயுந்திரையுகளுங்கானன்மடநாராய்
யாயுமமருலகுந்துஞ்சிலுநீதுஞ்சாயால்
நோயும்பயலைமையுமீதூரவெம்மேபோல்
நீயுந்திருமாலானெஞ்சங்கோட்பட்டாயே.

### ஆறாயிரப்படி.

( வாயும் ) வாயும்திரைகளுகளுகிற கழியிலே வர்த்திக்கிறமடநாராய், நீயுறங்கிலு முறங்காத வுன்னுடைய தாய்மாரும் ஸ்வபாவத ஏவ உறங்காத தேவலோகமுமுறங்கிலும் நீயுறங்குகிறிலை; ஆதலால், விரஹ வ்யஸந வைவர்ண்யத்தாலே அபிபூதையான வென்னைப்போலே நீயுமெம்பெருமானை யாசைப்பட்டா யாகாதே யென்கிறாள்......................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், "மணியைவானவர்கண்ணனை" என்று - கீழ்ப்ரஸ்த்துதமான போக்யதாதிசயத்துக்கு வர்த்தகமாயுள்ள லக்ஷ்மீஸம்ஶ்லேஷத்தையநுஸந்தித் நிடிபட்டநாயகி, கடற்கரைக்கருகானதன்னுத்யாநத்திலேயிருந்ததொரு நாரையைப்பார்த்து, நீயுமவனாலே நெஞ்சுபறியுண்டாயோ வென்கிறாள்.

வாயும் - மேல்மேலுங்கிட்டுகிற. திரை - திரையிலே. உகளும் - அமுக்கிநடப்பதாய். கானல் - கடற்கரையிலே. மடம் - உன்னினைவுகைவருந்தனையு மோங்கியிருக்கிற. நாராய் - நாராய். ஆயும் - உறக்கமில்லாததாயும். அமருலகும் - உறங்காமை நித்யமானதேவலோகமும். துஞ்சிலும் - உறங்கிலும். நீ - நீ. துஞ்சாய்- உறங்குகிறிலை. ஆல் - ஆதலால். நோயும் - உள்ளேநோவுமுண்டாய். பயலைமையும் - அதின்கார்யமான பயலைமையாகிற உடம்பில்வெளுப்பு. மீதூர - மேலிட்டுவர. எம்மேபோல் - அபிமதவிஷயமா யகப்பட்ட வெங்களைப்போலே. நீயும் - அதுக்கடைவற்றிருக்கிற நீயும். ஆஸத்திமாத்ரமே ஹேதுவாக திருமாலால் - ஸ்ரீயஃபதியாலே. நெஞ்சம் - நெஞ்சு. கோட்பட்டாயே - பறித்துக்கொள்ளப்பட்டாயே.

ஏ என்னுமசை - வினா. இத்தால் - ஸாம்ஸாரிக கல்லோலத்தை மதியாதிருப்பார்க்கு முறங்காமையும் ரூபவிபர்யாஸமும் பகவத்விஶ்லேஷ ஜநிதமென்றிருக்கை.............................................................................*

## ஈடு-முதற்பாட்டு.

பிரிந்தாரிரங்குவது நெய்தல்நிலத்திலே யாகையாலே, கடற்கரைச்சோலையைப்பற்ற இவள் பிரிவுக்கிரங்கி யிருக்கச்செய்தே, அங்கே ஆமிஷார்த்தமாக அவதாநம்பண்ணிக்கொண் டிருக்கிற தொரு நாரை கண்ணுக்கிலக்காக, அதினுடம்பில் வெளுப்பைக்கண்டு, அதுவுந் தன்னைப்போலே பிரிவாற்றாமையாலே வந்த வைவர்ண்யத்தோடே யிருக்கிறதாகக்கொண்டு ; பாவியே! ன், நீயும் நானகப்பட்ட விஷயத்திலே யகப்பட்டு நெஞ்சு பறியுண்டாயாகாதே யென்கிறாள்.

( வாயுந்திரையுகளும் ) வாய்கை-கிட்டுகை. பெரியமலைபோலே வந்து கிட்டுகிற திரைகள் மேலே தாவிப்போகா நின்றாலும் நினைத்தது சைப்புகுருமளவும் சலியாதே யிருக்குமாயிற்று. பகவத்பராநபர ரிருக்குமாபோலே யிருக்கும். அலைகடனீர்குழம்பவகடாட வோடியகல்வானுரிஞ்சமுதுகில் மலைகளைமீது கொண்டுவருமீனை மறவாதிருப்பார்க்குப்போலியாயிராநின்றது அலைகளை மீதுகொண்டுவருமீனை மறவாதிருக்கிறவிதுவும். [ கிரயோவர்ஷதாராபிர் ஹந்யமாநா விவ்யது: । அபிஸ்ரூயமாநா வ்யஸநைர் யதாதோக்ஷஜசேதஸ: ] ( கிரயோவர்ஷதாராபிர் ஹந்யமாநாவிவ்யது: । அபிஸ்ரூயமாநாவ்யஸனைர்யதாதோக்ஷஜசேதஸ: ) என்று சொல்லக்கடவதிறே - நிரந்தரமாக வர்ஷதாரைகள் விழாநிற்கச்செய்தேயும் மலைகள் சலியாதேகின்றன, என்போலேயென்றால், “ ஸர்வேஸ்வரனேரக்ஷகன் ” என்றிருப்பார் தாபத்ரயங்களால் வந்த வ்யஸநங்களுக்கிடையாதே யிருக்குமாபோலே. வந்துகிட்டுகிற திரையுகளா நின்றுள்ள, கானலிலே - நெய்தல்நிலத்திலே யிருக்கிற மடநாராய். யாகங்களும்பண்ணி பவித்ரங்களும் முடிந்திட்டு “ தார்மிகர் ” என்னும்படி திரியாநிற்பர்களிறே பரஹிம்ஸை பண்ணாநிற்கச்செய்தே க்ராமணிகள், அப்படியே க்ஷுத்ரமத்ஸ்யங்கள் வந்தாலு மநாதரித்திருக்குமாயிற்று நினைத்ததுகைப் புகுருமளவும் ; பற்றிற்றுவிடாதொழிகையிறே - மடப்பமாவது. ( ஆயும் ) என்பிறப்பே பிடித்துறங்காததாயு முறங்கிலும், ( அமருலகுந்துஞ்சிலும் ) தங்கள் ஸத்தையே பிடித்துறங்காத நித்யஸூரிகளுறங்கிலும் நீயுறங்குகிறிலை. இவளைப் பெற்ற தாய்க் குறக்கமின்றிக்கேயொழிவானென்னென்னில் ; முன்பெல்லாம் “ இவளுக்கு ஸத்ருஸனாயிருப்பா னொருவனைப்பெற்றுக் கொடுத்தோமாகவல்லோமே ” என்று கண்ணுறங்காது, பின்பு நாயகனைப் பிரிந்திவள் நோவுபடுகிறபடியைக் கண்டு, அத்தாலே கண்ணுறங்காது ; [ பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா । சிந்தார்ணவகத: ] ( பதிஸம்யோகஸுலபம்வயோ த்ருஷ்ட்வாசமேபிதா । சிந்தார்ணவகத: ) என்றாளிறேபிராட்டி - “ ஒரு உபக்நத்திலே கொண்டுபோய்ச்சேர்த்து நோக்கில் நோக்கலாய், இல்லை

யாகில் கிடையாதபடியான பருவமாயிராநின்றது, இவளுக் கிடாயிருப் பானொருவனைப்பெற்று அவன்கையில்காட்டிக்கொடுத்தோமாகவல்லோமே" என்று - எங்களையர் சிந்தார்ணவகதராளு ரென்றுளிறே பிராட்டி. அப்படியேயிறே யிவளைப்பெற்ற தாயாரும் கண்ணுறங்காதே படும்படி. அமிமிஷராய் ஸதாதர்ஶநம் பண்ணுகிறவர்களாகையாலே நித்ய ஸூரிகளுக்கும் தானே நித்ராயில்லையே. (நோயும்பயலைமையும்) மாநஸவ்யதையும், அத்தாலேவந்த வைவர்ண்யமும் தன்பக்கலிலே காண்கையாலேய வ்விரண்டு மதுக்குண்டென்றிருக்கிறாள். (மீதூர) விஞ்சமேறினாற்போலே யுடம்பிலே பரக்க. (எம்மேபோல்) இப்படி க்லேஶப் படுகைக்கு நாளொருத்தியுமென்றிருந்தேன், நீயுமென்னைப்போலே யாவதே. துஃக பரிபவங்களைப் பொறுத்திருக்கையாலும், பற்றிற்று விடாதிருக்கிறபடியாலும், வைவர்ண்யத்தாலு மென்னைப்போலே யிராநின்றாய்.

(நீயும்) விரஹவ்யஸநம் பொறுக்கமாட்டாத மார்தவத்தையுடையநீயும். "ததஸ்யஸ்த்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கமாட்டாமைக் கிருவருமொத்தோமோ. (திருமாலானெஞ்சங்கோட்பட்டாயே) மாநஸவ்யதையும் வைவர்ண்யமு மிருந்தபடி கண்டேனுக்கு, நீயும் நானகப்பட்ட துறையிலே யகப்பட்டாயாகாதே. மைந்தனை மலராண்மணவாளனையோ நீயுமாசைப்பட்டது. (நெஞ்சங்கோட்பட்டாயே) நெஞ்சு பறியுண்டாயாகாதே. தோற்புரையன்றியே, மறுபாடுருவ வேர்ப்பற்றிலே நோவுபட்டாயாகாதே..........................*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (வாயுந்திரையித்யாதி) அந்தஃபுரத்திலிருக்குமிவளுக்குக் கடற்கரையில் வர்த்திக்கிற பக்ஷிதர்ஶநமெப்படிகூடுமென்கிற ஶங்கையையும்பரிஹரியாநின்றுகொண் டருளிச்செய்கிறார் (பிரிந்தாரென்று) இரங்குவது - துஃகப்படுவது. அவதாநம்பண்ணிக்கொண்டு - ப்ரமாதமின்றிக்கே. பறியுண்டாய் - அபஹரிக்கப்பட்டாய்.

"வாயுந் திரையுகளும் மடநாராய்" என்றதுக்கர்த்தம் (பெரியமலைபோலேயித்யாதி) (மேலேதாவி) வாயுந்திரையுகளும்போது மேலேதாவவேணுமிறே. மடப்பம் - பற்றிற்றுவிடாமை. அத்தைச்சொல்லுகிறது (நினைத்ததித்யாதி) (சலியாதே) "உகளும்" என்கிறவர்த்தமான நிர்த்தேஶத்தால் - திரைதாவுகையில் அநுஸ்யூதிதோன்றுகையாலே, சலியாமைஸித்தமிறே. நினைத்தது கைப்புகுருமளவும் சலியாமைக்குத்ருஷ்டாந்தம் (பகவத்யாநேத்யாதி) இத்தைவிஶேஷ நிஷ்டமாகக்காட்டுகிறார் (அலைகடலித்யாதி) "எங்களுக்கொருரக்ஷகரில்லை) என்ன; "நானுளனாயிருக்க, நீங்களஞ்சவேணுமோ; நான்ரக்ஷகனாகிறேன்' என்னும்படியான க்ருபையாலே, க்ஷோபிதமாய் வருகிறதாகவும், தன்கீழ்வயிற்றிலே யலையெறியும்படியாகவும், ஆகாசத்திலே ப்ரஹ்மாதிகள் குடியிருப்பிலேசென்று வீசும்

படியாகத்தன் திருமுதுகிலே மலைகளைக்கழலாதபடி யேறிட்டுக்கொண்டுவருகிற, ஜலம்தாரகமான வஸ்துவை, ஸர்வாதிகனான ஸர்வேஸ்வரனை. அவனப்படி தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு அரியனசெய்து ரக்ஷியாநின்றான், உனக்குச்செய்யவேண்டுமருந்தேவை - அவனை மறவாதிருக்கை ; இத்தனையுஞ்செய்யப்பாராய். மறக்கவொண்ணாதசெயல்களையவன்செய்யாநின்றால் மறவாதிருக்கவேண்டாவோவென்றுபொருள், இதுவும் - நாரையும். த்ருஷ்டாந்தாந்தரம் ( கிரயஇத்யாதி ) யத்வா, ஆமிஷார்த்தமாகஅவதாநம்பண்ணிக்கொண்டிருக்கிறஆகாரத்துக்குக்கீழ் த்ருஷ்டாந்தமாய், திரைகள் மேலேதாவினாலும் சலியாமைக்குத்ருஷ்டாந்தம் ( கிரயஇத்யாதி ) என்னுதல். முந்தினது - " மடம் " என்றத்தைப்பற்ற ; இரண்டாம் த்ருஷ்டாந்தம் - " திரையுகளும் " என்றத்தைப்பற்ற. யத்வா, " பகவத்யாநபரரிருக்குமாபோலே " இத்யத்ர - ஆத்யாத்மிகாதி து:கஸாகரதரங்கஸஹிஷ்ணுத்வேநாவஸ்த்தாநம்ஹ்ருதிஸ்தாய, தத்ரப்ரமாணமாஹ ( கிரயோவர்ஷதாராபிரிதி ) அத:க்ருதாங்யக்ஷாணியைஸ்தே - அதோக்ஷா: ; தேஷுஜாயதஇத்யதோக்ஷஜ: - ஜிதேந்த்ரியாணும் மநஸிஸந்நிதத்த இதியாவத். தேஷாஸுலப: - வஶ்யஇதிவா. யத்வா, தேப்யோராமக்ருஷ்ணுதிரூபேண ஜாயத இதிவா. " அம்ருதோத்திவ ஸர்வைர்ப்புஜ்யமாநோபி ஸர்வதா। அதோ நக்ஷீயதே ஜாது யஸ்மாத் தஸ்மாத் அதோக்ஷஜ: " ( அம்ருதோததிவத்ஸர்வைர்ப்புஜ்யமாநோபிஸர்வதா। அதோநக்ஷீயதேஜாதுயஸ்மாத்தஸ்மாததோக்ஷஜ:. ) அக்ஷஶப்தநிருக்தி-" நக்ஷீயதே " என்றது ; " ஜ: " என்றத்தின்நிருக்தி-. " ஜாது " என்றது. எல்லாவற்றாலும் - ஸர்வகாலத்திலு மம்ருதோததிபோலே யநுபவிக்கப்படாநிற்கச் செய்தேயும், ஜாது- ஒருகாலும், யாதொருகாரணத்தாலே. அதோநக்ஷீயதே ; ஆகையாலே - அதோக்ஷஜனென்றபடி. ஏதேந- " கொள்ளமாளாவின்பவெள்ளம் " இத்யுக்தம்பவதி. கொள்ளக்கொள்ள, மாளாத - நசியாத, ஆநந்தஸாகரஇத்யர்த்த:. இஶ்லோகார்த்தம் ( நிரந்தரமாகவித்யாதி ) இடையாதே - சலியாதே. க்லேஶப்படாதேயென்றபடி. ஶப்தார்த்தம் ( வந்துகிட்டுகிறவித்யாதி ) " திரையுகளும் " என்றது - நாரைக்கு விஶேஷணமாதல், கானலுக்கு விஶேஷணமாதல். நாரைக்குவிஶேஷணமென்றது - ஆசார்யஹ்ருதயத்திலே, " திரையுகளும் வ்யஸநவ்யதை " என்றவிடத்திலே ஸ்பஷ்டம். இப்போது, உகளாநின்றுள்ளதாயிருக்கிற - நாராயென்றுகொள்ளவேணும். " திரையுகளும் " என்கிறது - கானலுக்கு விஶேஷணமானபோது, நாரைக்கு " திரையுகளும் " என்கிறது - அர்த்தாத்ஸித்தம். " கானல் " என்கிறது- நெய்தல்நிலத்துக்கும், கடற்கரைச்சோலைக்கும்பேர். நெய்தல்நிலம்-ஸமுத்ரதீரப்ரதேஶம். பகவ்ருத்திகளான க்ராமணிகள் ஸ்வபாவத்தை யிதின்ஸ்வபாவத்துக்கு த்ருஷ்டாந்தமாக வருளிச்செய்யாநின்றுகொண்டு, க்ஷுத்ரமத்ஸ்யங்களை வந்தாலும் கணியாதிருக்கும் ப்ரகாரத்தை - மடப்பத்துக்கர்த்தமாக வருளிச்செய்கிறார் ( யாகங்களுமித்யாதி ) மடப்பமென்றால் - இவ்வர்த்தத்தைக்காட்டுமோவென்னில் ( பற்றிற்றித்யாதி )

தடஸ்த்தஶங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் ( இவனையித்யாதி ) "ஸத்ருஶனாயிருப்பானொருவனைப் பெற்றுக்கொடுத்தோமாக வல்லோமேயென்று கண்ணுறங்காது " என்னுமதுக்கு ப்ரமாணம் ( பதிஸம்யோகேத்யாதி ) " த்ருஷ்டவ " ( த்ருஷ்ட்வாச ) என்கிறவிடத்தில் சகாரம் - முன்பெல்லாம் சிந்தார்ணவகதரானபடி சொல்லுகிறது. பிதாவென்றது - மாதாவுக்குமுபலக்ஷணம். " வதி

ஸம்யோகே ஸதி ஸ்வபாவம்" (பதிஸம்யோகேஸதிஸ்வபாவம்) என்றர்த்தம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஒருஉபக்நத்திலே யித்யாதி) "ஸத்தையேபிடித்துறங்காத" என்றத்தை ஹேதுபூர்வகமாக வருளிச்செய்கிறார் (அநிமிஷராயித்யாதி)

நோயும்பயலைமையு மிதுக்குண்டாகைக்கு நியாமகங்காட்டுகிறார் (மாநஸவ்யதையுமித்யாதி) வைவர்ண்யஸ்ய ப்ரத்யக்ஷத்வாத் தத்ஜ்ஞாநம்கடதே; மாநஸவ்யதாயா அப்ரத்யக்ஷத்வாத், வஸ்துத:பக்ஷிணீமாநஸவ்யதா பாவாச்ச "நோயும்பயலைமையும்" இதிகதமாஹேத்யாஶங்காம், ஸ்வஸ்மிந்ஸாஹசர்யக்ரஹணாதித்யபிப்ராயேணபரிஹரதி (தன்பக்கலிலே காண்கையாலேயிதி) "ஊர" என்றதுக்குத்தாத்பர்யம் (விஷமேறினாற்போலேயென்றது) "எம்" என்று - ஆத்மநிபஹுவசநம். "எம்மே" என்கிற ஏவகாரத்துக்குவாஸநை (இப்படியித்யாதி) "எம்மேபோல்" என்கையாலே - தமக்குண்டான ஆகாரத்தை யின்னதென்று விஶதீகரியாநின்றுகொண்டு, இப்படி நீயுமிராநின்றாயோ வென்கிறாளென்றுதோற்றுவிக்கிறது (து:கபரிபவங்களையித்யாதி) பகவத்விஶ்லேஷத்தாலுண்டான பரிபவம். பற்றிற்று விடாதிருக்கிறபடியென்றது - "மடநாராய்" என்றத்தைப்பற்ற. த்ருஷ்டாந்தத்திலே, பற்றின பகவத்விஷயத்தை விடாதிருக்கை.

ப்ராதாந்யத்திலே - சஶப்தமாக தாத்பர்யம் (விரஹவ்யஸநமித்யாதி) யத்வா, பூர்வோக்தபாவ ஏவயுஷ்மச்சப்த விவக்ஷிதவிஶேஷப்ரதர்ஶநபரம்வா. ஸமுச்சயத்திலேயாக தாத்பர்யாந்தரம் (தத்தஸ்யேத்யாதி) "ஶ்ரிய:பதியாலேயபஹ்ருத சித்தையானாய்" என்னுமதுக்கு நியாமகஞ்சொல்லுகிறார். (மாநஸவ்யதையுமித்யாதி) திருமாலிடத்திலே தானாசைப்பட்டிருப்பாளாவென்ன (மைந்தனையித்யாதி) மாநஸவ்யதையும் வைவர்ண்யமும் - நோயும்பயலைமையும். யத்வா, "நானகப்பட்டதுறையிலே யகப்பட்டாயாகாதே" இத்யேதத்விவ்ருணோதி (மைந்தனையிதி) புருஷகாரபூதாம் விநாகேவலம் ஸ்வதந்த்ரேஶ்வரவிஷயவாஞ்சாசேத், "ஸ்வாதந்த்ர்யாந்நாகத:, கிங்குர்ம:" (ஸ்வாதந்த்ர்யாந்நாகத:, கிங்குர்ம:) இதி ஸ்வஸ்த்ததயாஸ்த்தாதும் ஶக்யதே; புருஷகாரவிஶிஷ்டேஶ்வரவிஷய ப்ராவண்யாத்விளம்பயோக்யதாபாவாத்விஷாதோதிஶயிதோபவதீதிபாவ:. "எம்மேபோல்" என்கையாலே, "திருமாலால்நெஞ்சங்கோட்பட்டாய்" என்றதுக்கு - மைந்தனைமலராள் மணவாளனையோநீயு மாசைப்பட்டதென்று தாத்பர்யமென்கிறானென்னவுமாம். மைந்தனை - யுவாவை. கோட்பட்டாய் - கொள்ளப்பட்டாயென்றபடி. "நெஞ்சம்" என்று - அந்த:கரணம் சொன்னதுக்குதாத்பர்யம் (தோற்புரையித்யாதி) மறுபாடுருவவென்றதுக்கு - து:காதிஶயத்திலேநோக்கு. நெஞ்சு எல்லாவற்றுக்குங் காரணமாகையாலே (வேர்ப்பற்றென்கிறார்.) *

## இரண்டாம்பாட்டு.

கோட்பட்டசிந்தையையாய்க்கூர்வாயவன்றிலே
சேட்பட்டயாமங்கள்சேராதிரங்குதியா
லாட்பட்டவெம்மேபோனீயுமரவணையான்
றாட்பட்டதண்டுழாய்த்தாமங்காமுற்றாயே.

## ஆ று யி ர ப் ப டி.

(கோட்பட்ட) கூர்வாயவன்றிலே, அபஹ்ருதமான நெஞ்சை யுடையையாய் நீளியவானராத்ரிகளி லுறங்காதே யிரங்காநின்ருய் ; நீயு மென்னைப்போலே பெரியபெருமாள் திருவடிகளில் திருத்துழாயை யா சைப்பட்டாயாகாதே யென்கிருள்..........................................*

## ப ன் னீ ர ா யி ர ப் ப டி.

அநந்தரம், ஓரன்றிலைப் பார்த்து, நீயும் ஶேஷஶாயியான அவன்திருவடி களில் திருத்துழாயை யாசைப்பட்டாயோ வென்கிருள்.

கோட்பட்ட - பறியுண்ட. சிந்தையையாய்-நெஞ்சையுடையையாய்க்கொ ண்டு. கூர்வாய - அந்தவார்த்தியடியாக கத்கதமாகையாலேசெறிந்தகுரலை யுடை த்தான. அன்றிலே - அன்றிலே. சேட்பட்ட - நெடிதான. யாமங்கள் - யாமங்க ள். சேராது - சேக்கையிற்சேராதே. இரங்குதி - துஃகியாகின்ருய். ஆல் - ஆதலா ல். ஆட்பட்ட - அடிமைப்பட்ட. எம்மேபோல் - எங்களைப்போலே. நீயும் - பிரிவா ற்ருமை தோற்றியிருக்கிற நீயும். அரவணையான் - திருவரவணையைத் தனக்குநிரு பகமாக வுடையவனுடைய. தாள் - திருவடிகளிலே. பட்ட - போகதசையிலேமி தியுண்ட. தண் - செவ்வியையுடைய. துழாய்த்தாமம் - திருத்துழாய்மாலையை. காமுற்ருயே - ஆசைப்பட்டாயோ.

வாயென்று - வாய்மையாய், குரலைச்சொல்லுகிறது. கூர்தல் - செறிவு. அன்றியே, கூர்த்தவாயென்று - பிரிந்தாரை யீருங்குரலென்றுமாம். இத்தால் - ஆர்த்தத்வநியுடையார் அவனைப்பிரிந்து கூப்பிடுகிருர்களென்றிருக்கை............*

---

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இப்படி நாரையைப்பார்த்து வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே, அருகே நின்றபனையிலே தங்கின அன்றிலானது வாயலகு நெகிழ்த்தவா றே கூப்பிட்டது, இதினுடைய ஆர்த்தத்வநியைக் கேட்டு, பாவியேன், நீயுமென்னைப்போலே யகப்பட்டா யாகாதேயென்கிருர்.

(கோட்பட்டசிந்தையையாய்) அபஹரிக்கப்பட்ட ஹ்ருதயத் தையுடையையாய். "அபஹ்ருதமானமனஸ்ஸ" என்றறிந்தபடி யென் னென்னில் ; அதினுடைய அடியற்ற த்வநிதான் "நெஞ்சிழந்தது" எ ன்றுதோற்றநின்றதுகாணு மிவளுக்கு. (கூர்வாயவன்றிலே) தனியரா யிருப்பாரை யிருதுண்டமாக இடவல்ல த்வநியாயிற்று. (கூர்வாய) வா யென்று - வார்த்தை. அன்றியே, கூர்த்த வாயலகையுடைய வென்னுத ல். (சேட்பட்டயாமங்கள்) ராத்ரியாய் நெடுகுகை யன்றிக்கே, யாம ங்கடோறும் நெடுகாநின்றதாயிற்று. (சேராதிரங்குதியால்) நெடுகுகி ற யாமங்களில் படுக்கையிற் சேராதொழிந்தாலும் தரிக்கலாமிறே. அங் ஙனே செய்யாதே ஶிதிலையாகாநின்ருய்.

( ஆட்பட்டவெம்மேபோல் ) நெஞ்சு பறியுண்டு படுக்கையிலுஞ் சேராதே நோவுபடுகைக்கு என்னைப்போலே நீயும் அவன்றிருவடிகளில் தாஸ்யபரிமளத்திலே யாகாதே யகப்பட்டது. ( நீயும் ) நாட்டாரில் வ்யாவ்ருத்தமாகப் போந்திருக்கிற நீயும். “ வதிංவிஸ்வஸ,” ( பதிம் விஸ்வஸ்ய, ) “ யஸ்யாஸ்மி ” ( யஸ்யாஸ்மி ) என்றேதினையல்லை. * மயர்வறமதிநலம்பெற்றுயில்லை - என்றனையுட்புகாத நீயுமிப்படியாவதே.

( அரவணையானித்யாதி ) “ திருமாலால் ” என்றதிறேகிழே, இருவருமானு லிருப்பது படுக்கையிலேயா யிருக்குமே ; “ அவனுமவளுமாய்த் துகைத்த திருத்துழாய்மாலை பெறவேணும் ” என்று அத்தையோ நீயுமாசைப்பட்டது. ( தாட்பட்டதண்டுழாய்த்தாமம் ) * சுடர்முடிமேல்துழாயொழிய, அவர்களிருவருங்கூடத் துகைத்த துழாயையோ நீயுமாசைப்பட்டது. புழுகிலே தோய்த்தெடுத்தாற்போலே பரிமளத்திலே தெரியுமே, கலம்பகம்நாறுமே. “ தாளிணைமேலணிதண்ணந்துழாய் ” என்றிறே தான்கிடப்பது. தாமம் - ஒளியும், மாலையும். ( காமுற்றுயே ) ஸங்கத்தளவிலே நின்றிலையாகாதே, பெறில் ஜீவித்தல் பெறுவிடில் முடிதலான அவஸ்த்தையை ப்ராபித்தாயாகாதே. ..............*

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( கோட்பட்டவித்யாதி ) “ கூர்வாயவன்றிலே, எம்மேபோல் தாமம்காமுற்றுயே ” என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( இப்படியித்யாதி ) பனை - தாலத்ருமம். “ முன்றில்பெண்ணைமேல் ” இத்யாதிப்படியே, அன்றிலாகில் பனையிலேயிருக்கைஸித்தம். வாயலகு - சஞ்சுபுடம். நெகிழ்த்தவாறே - நெகிழ்ந்தவாறே இத்யர்த்தஃ. க்ரௌஞ்சமிதுநம் பரஸ்பரஸம்ஶ்லிஷ்ட சஞ்சுகம் பவதீதிப்ரஸித்திஃ.

(கோட்பட்டசிந்தையையாய்) [குரரிவிலபஸீத்யாதி] ஹேகுரரி, த்வம்ராத்ர்யாமீஸ்வர க்ரஸ்தபோதே ஜகதிஸ்வபதிஸதிஎன்று - ஸதிஸப்தமியாய், ராத்ரியிலே யீஸ்வரனாலே க்ரஸிக்கப்பட்டிருக்கிற ஜ்ஞாநத்தையுடைத்தான ஜகத்தானது நித்ரைபண்ணி யுள்ளளவில், போயிருக்கிற நித்ரையையுடையையாய்க் கொண்டுசயிக்கிறுயில்லை ; கூப்பிடாநிற்கிறுயெங்களைப்போலே ; வாராய்ஸகியே, நளிநநயந ஹாஸோதாரலீலேக்ஷணேந - தாமரைபோன்ற திருக்கண்களென்ன, அப்படியிருந்துள்ள திருமுறுவலென்ன, இவற்றாலே யுதாரமான லீலையையுடைய பார்வையையுடைத்தான க்ருஷ்ணனாலே. காடநிர்விண்ணசேதாஃ - மிகவும் துஃக்கப்பட்ட நெஞ்சையுடையை யானையோவென்றபடி. தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறுர் ( அபஹ்ருதேத்யாதி ) ( அடியற்றத்வநியென்றது ) “ கூர்வாய ” என்றத்தின் - க்ரூரமானவார்த்தையென்ற வர்த்தத்தைப்பற்ற. அடியற்ற - அமூலகமான. அடி - மநஸ்ஸு.

வார்த்தைக்குக் கூர்மையேதென்ன ( தனியராயித்யாதி ) ப்ரதமார்த்தே, கூர்மை - க்ரௌர்யம், தனியராயிருப்பார்-நாயகனைப் பிரிந்திருப்பார். இதின் த்வ

ஙிக்ரு பாதகத்வம் - நாயகஸம்ஶ்லேஷ ஸ்மாரகத்வேந. ( கூர்த்தவாயலகையிதி ) வாயலகுக்குக் கூர்மையாவது - க்ரூரமான த்வநிபுண்டாக்குகை.

சேண் - நெடுமை. படுகை - உடைத்தாகை. நீட்சியையுடைத்தான யாமங்களென்றபடி. சேட்பட்டராத்ரி என்னாதே, “ யாமங்கள் ” என்கிறதென்னென்ன ( ராத்ரியாயித்யாதி ) வ்யஸநாதிசயத்தாலே நெடுகித்தோற்றுமென்றபடி. ( சேராதென்று ) படுக்கையிலே யென்றத்யாஹார்யம். இரங்குகைஶைதில்யம். அத்யாஹ்ருதபதத்தோடேகூட “ சேராது, இரங்குதி ” என்கிறபதத்வயத்துக்கும் பாவம் ( நெடுகுகிறவித்யாதி ) அங்ஙனேசெய்யாதே - அம்மாத்ரமின்றிக்கே.

மேலேயுங்கூட்டிபாவம் ( நெஞ்சுபறியுண்டித்யாதி ) பொந்திருக்கிறவென்றதுக்கு - உன்னகத்திலே யிருக்கிறநீயும் என்றுஸ்வபாவார்த்தம் ; பொந்தென்று - பணியென்று த்வந்யர்த்தம். தாத்பர்யாந்தரம் ( யதிம்விஶ்வஸ்யேத்யாதி ) யத்வா, வ்யாவ்ருத்யுப பாதநமாதல். இத்தால் - ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந மில்லையென்றபடி. பலிதம் ( என்றணையித்யாதி ) என்றனை - என்மாத்ரம்.

ஶ்ரீமே “ திருமாலால் ” என்கையாலும், “ அரவணையான் ” என்றபதஸாமர்த்யத்தாலும், “தாட்பட்டதண்டுழாய்” என்றதுக்கு இருவருமாய்த்துகைத்த தண்டுழாயென் றருளிச்செய்கிறார் ( திருமாலாலித்யாதி வாக்யத்ரயத்தாலே ) “தாட்பட்ட” என்றதுக்கு வ்யாவர்த்த்யம் ( சுடர்முடியித்யாதி ) இருவரும்துகைத்ததுழாயென் றறியும்படியென்னென்ன ( புழுகிலேயித்யாதி ) தான்துகைத்ததிருத்துழாயை யாசைப்பட்டிருக்குமோவென்ன ( தாளிணையித்யாதி ) தாமம் - மாலை.

காமுற்றாயே - ஆசைப்பட்டாயோ. ( ஸங்கேதி ) ஸங்ககாமாநுராகஸ்நேஹாத்யவஸ்த்தைகளிலே ப்ரதமபர்வம் - ஸங்கம். உத்தரபர்வம் - காமம். விவரணம் ( பெறிலித்யாதி )

க்ரமேணாந்வய:. ஆல் - விஷாதே. “ தாட்பட்ட தண்டுழாய்த்தாமம் காமுற்றாயே ” என்கிறவிடத்திலே - “ நேத்ரே நிமீலய ஸிநூந மத்ருஷ்டபந்து ஸ்த்வம் ரோரவீஷி கருணம் பத சக்ரவாகி । தாஸ்யங்கதா வயமிவாச்யுத பாதஜுஷ்டாம் கிம் வா ஸ்ரஜம் ஸ்ப்ருஹய ஸே கபரேண வோடும் ” நேத்ரேநிமீலயஸிநூநமத்ருஷ்டபந்துஸ்த்வம்ரோரவீஷிகருணம்பதசக்ரவாகி । தாஸ்யங்கதாவயமிவாச்யுதபாதஜுஷ்டாம்கிம்வாஸ்ரஜம்ஸ்ப்ருஹயஸேகபரேணவோடும்) என்கிற ஶ்லோகமநுஸந்தேயம்...........................................*

---

# மூன்றாம்பாட்டு.

காமுற்றகையறவோடெல்லேயிராப்பக
ஸீமுற்றக்கண்டுயிலாய்நெஞ்சுருகியேங்குதியாற்
றீமுற்றத்தென்னிலங்கையூட்டினான்றாணயந்த
யாமுற்றதுற்றாயோவாழிகனைகடலே.

## ஆறாயிரப்படி.

(காமுற்ற) எம்பெருமானை யாசைப்பட்டுப்பெருமையாலே நீ யிரவுபகலெல்லாங்கண்டுயிலாதே நெஞ்சுருகியேங்காநின்றாய்; தீமுற்றத் தென்னிலங்கையூட்டினவன் திருவடிகளை யாசைப்பட்ட நான் பட்டது பட்டாயாகாதே, ஐயோ! கடலே யென்கிறாள் ........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கத்துகிறகடலைப்பார்த்து, விரோதிநிவர்த்தகனானஅவனுடைய திருவடிகளை யாசைப்பட்ட வென்னைப்போலானாயோவென்று சொல்லுகிறாள்.

காமுற்ற - காமிக்கப்பட்டபோகங்கள். கையறவோடு - கைப்படாதவிழ வோடேகூடினாற்போலே. நீ - நீ. இராப்பகல் - இராப்பகல். முற்ற - முழுக்க. கண் டுயிலாய் - கண்ணுறங்குகிறிலை. நெஞ்சு - அகவாயும். உருகி - நீராய். ஏங்குதி- ஏங்கினகுரலிரங்காமல் முழுக்கக்கூப்பிடாநின்றாய். ஆல் - ஆதலால். தென்னிலங் கை - தென்னிலங்கையை. முற்ற - முற்ற. தீயூட்டினான் - தீயூட்டினவன். தாள்- திருவடிகளை. நயந்த - ஆசைப்பட்ட. யாம் - நாங்கள். உற்றது - பட்டது. உற்றா யோ - பட்டாயோ. கனை - இரைகிற. கடலே - கடலே. வாழி - உன்க்லேஶந்தீர் ந்து வாழ்வாயாக.

எல்லே என்று - கடலுக்கு ஸம்புத்தியாதல், என்னே என்னும் வெறுப்பாத ல். இத்தால் - மஹத்தையையுடையார் வாய்விட்டலறுவது அவனைப்பிரிந்தாலென் றிருக்கை ........................................................................*

---

## ஈடு - மூன்றாம்பாட்டு.

அன்றிலினுடைய த்வநிக்கு இடைந்திருக்கிறவளவிலே; கடலெ ன்றொரு மஹாதத்த்வமாய், அது தன் காம்பீர்யமெல்லா மிழந்து கரை யிலே வருவது கரையேறமாட்டாதே வுள்ளே விழுவதாய், எழுத்துஞ் சொல்லும் பொருளுந் தெரியாதபடி ஊமைக்கூறாகக் கூப்பிடுவதாகி றபடியைக்கண்டு; பாவியேன், நீயும் ராமகுணத்திலகப்பட்டு நான்பட்ட து பட்டாயாகாதே யென்கிறாள்.

(காமுற்றகையறவோடு) "நெஞ்சுருகியேங்குதியால்" என்றந் வயம். (காமுற்றகையறவோடு) ஆசைப்பட்டபொருளிழவோடே. கை த்து என்றது - பொருள். ஆசைப்பட்ட பொருள் கைப்புகுராமையால் வந்த இழவோடே. காமுறுகையு மிழவும் கடலுக்கின்றிக்கேயிருக்க, த் ருஷ்டாந்தபூதையான தனக்குண்டாகையாலே, "இதுக்குமுண்டு" எ ன்றநுமித்துச்சொல்லுகிறாள். (எல்லே) இரவோடு பகலோடு வாசிய றக்கதறுகிறபடியைக்கண்டு, தன்படிக்குப்போலியாயிருக்கையாலே தோ ழியை ஸம்போதிக்குமாபோலே ஸம்போதிக்கிறாள் சிறையுறவுபோலே; "ஓதமுநானுமுறங்காதிருந்தேனே" என்னக்கடவதிறே. அன்றிக்கே,

எல்லேஎன்றது - என்னே என்றாஶ்சர்யமாதல். ( இராப்பகல் நீ முற்றக் கண்டுயிலாய் ) உறங்கக்கண்ட இரவுக்கும், உறங்காமைக்குக்கண்ட பகலுக்கு முன்பக்க லொருவாசி கண்டிலோமீ !. ( நீ ) உன் காம்பீர்யமெல்லா மெங்கே போயிற்று. ( நெஞ்சுருகியேங்குதியால் ) உறக்கமின்றிக்கேயொழிந்தால் நெஞ்சுதானழியாதிருக்கப் பெற்றதோ. ( பேற்றுக்கேற்ற ) நெஞ்சழிந்து கூப்பிடாநின்றாய்.

( தீமுற்றத் தென்னிலங்கையூட்டினான் ) பாவியேன் ! பரத்வத்திலே யாசைப்படமாட்டிற் றில்லையாகாதே, ப்ரணயிநி விரஹம்பொறுக்கமாட்டாத சக்ரவர்த்தி திருமகனை யாகாதே நீயுமாசைப்பட்டது. தென்னிலங்கைமுற்றத் தீயூட்டினான். விபீஷண க்ருஹம் லங்கைக்குள்ளன்றுபோலே. அவனவர்களுக்குக் கூட்டில்லாதாப்போலே, அவனகமு மவர்களகத்துக்குக் கூட்டில்லைகாணும்; அவனகம் - தாஸோஹமிறே. அன்றிக்கே ( தீமுற்றத்தென்னிலங்கையூட்டினான் ) ராவணபயத்தாலேமுன்பு அரைவயிறாக ஜீவித்த அக்நி, " ஒள்ளெரி மண்டியுண்ண " என்கிறபடியே வயிறுநிறையவுண்டு ஜீவிக்கப்பெற்றதாயிற்று பெருமாளையண்டைகொண்ட பலத்தாலே ; " செந்தீயுண்டுதேக்கிட்டதே " என்னக்கடவதிறே. ( தாள்நயந்தயாமுற்றதுற்றாயோ ) பரமப்ராணயியான சக்ரவர்த்தி திருமகன் றிருவடிகளை யாசைப்பட்ட நான் பட்டது பட்டாயாகாதே நீயும். தாள்நயந்தாரோடு தோள்நயந்தாரோடு வாசியறுவதே க்லேஶப்படுகைக்கு, பிராட்டியோடு ஸ்ரீபரதாழ்வானோடுவாசியற்றதிறே. (வாழி) இவ்வவஸ்தம் நீங்கி நீஜீவித்திடுக. ( கனைகடலே ) வாய்விட்டுக்கூப்பிடமாட்டாதே, விம்மல்பொருமலாய்ப் படுகிறாயாகாதே. கோஷிக்கிற கடலே என்னவுமாம்.......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. ( காமுற்றவித்யாதி ) " கனைகடலே தீமுற்ற " இத்யாதிபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை ( அன்றிலித்யாதி ) இடைந்து - க்லேஶப்பட்டு. ஊமைக்கூறன் - மூகஜல்பிதம்.

அவதாரிகாநந்தரம், காமுற்றகையறவோடென்றது - பாட்டுக்கெல்லாமுபாதாநம். நெஞ்சுருகியேங்குதியால் என்றந்வயமென்றது - பாட்டையெல்லாஞ்சொல்லி, நெஞ்சுருகியேங்குதியால் என்று முடிக்கவென்றபடி. எல்லே, கனைகடலே, தீமுற்றவித்யாரப்ய, உற்றாயோ ; இராப்பகல்முற்றவும் நீகண்டுயிலாய்; காமுற்றகையறவோடு நெஞ்சுருகி யேங்குதியால்; வாழியென்றந்வயமென்று தாத்பர்யம்.

காமுற்ற - ஆசைப்பட்ட. கை-பொருள். அறவு - இழவு. "கைத்து" என்றத்தை "கை" என்று - குறைத்துக்கிடக்கிறது. விவரணம் (ஆசைப்பட்டவித்யாதி) கடலுக்கிவ்வாகாரமுண்டென்றறிந்தபடி யென்னென்ன (காமுறுகையித்யாதி)

“எல்லே” என்றும், “ஏடி” என்றும், “தோழி” என்றும்-முன்னிலைப்பேர். எல்லேயென்று - தோழியை ஸம்போதிக்குமாப்போலே அசேதநத்தை ஸம்போதிக்கிறதென்னென்ன ( இரவோடித்யாதி ) “வாசியற” என்றவநந்தரம், உறங்காதேயிருந்து என்றத்யாஹார்யம். சிறையுறவு-சிறைக்கூடத்திலேசேரவிருக்கையால் வந்தவுறவு. தன்படிக்குப்போலியாயிருக்குமோவென்ன (ஓதமுநானுமித்யாதி) ஓதம்-ஸமுத்ரம்.

பகல் கண்டுயிலாமைஸித்தமாயிருக்க, இங்கே யெடுத்துக்கழித்ததுத்ருஷ்டாந்தார்த்தமென்கிறுர் ( உறங்கக்கண்டவித்யாதி ) பகல்போலேயிராமுற்ற நீகண்டுயிலாய் இத்யந்வயঃ. “நீ” என்கிற ஸ்வரத்துக்குபாவம் (உன்காம்பீர்யமித்யாதி) நெஞ்சழிந்து-மநஸ்ஸைழிந்து பிறந்து.

(பாவியேனித்யாதி) பரத்வத்திலே ப்ரணயிநீவிரஹாக்ஷமதா ப்ரஸங்கமில்லாமையாலே விளம்பம்பொறுக்கலாமென்றுபாவம். ப்ரணயிநிவிரஹம்பொறுக்கமாட்டாதவென்றது-“நைவதம்ஸாங்க்ஷமஸகாந்” ( நைவதம்ஸாங்கமஸகாந் ) “நமாம்ஸம்ராகவோபுங்க்தே” ( நமாம்ஸம்ராகவோபுங்க்தே ) இத்யாதியைப் பற்ற. விபீஷணக்ருஹம்தப்பியிருக்க, “ முற்ற ” என்னப்போமோவென்ன ( விபீஷணக்ருஹமித்யாதி ) உபபாதநம் ( அவனித்யாதி ) “ விபீஷணஸ்து ” ( விபீஷணஸ்து ) என்று-அவர்களில்வேறுபட்டானிறே. கூட்டல்லாதபடி யெங்ஙனேயென்ன (அவனகமித்யாதி ) ரஸோக்தி. அகமென்று - க்ருஹமும், அபிமாநமும். த்விதீயார்த்தத்துக்கு, “ முற்ற ” என்றது பூர்ணமாகவென்றபடி. ( ஒள்ளெரிமண்டியுண்ண ) திருமொழி. ஒள்ளெரி - ஶ்லாக்யமானஅக்நி. மண்டி - ஸாதரமாக. “வயிறுநிறையவுண்டு” என்றதுக்கு ஸம்வாதம் ( செந்தீயித்யாதி ) சம்பநாடகத்திலே. தேக்கிட்டதென்று - த்ருப்தி.

கீழ்ச்சொன்ன நாரை யன்றில்கள் ஸ்த்ரீவ்யக்திகளாகையாலே தம்மைப்போலே யாசைப்படக்கூடும், புருஷனானகடலுக்குத் தம்மைப்போலே யதிஶயிதப்ராவண்யங்கூடுமோவென்ன ( தாணயந்தாரோடித்யாதி ) ஸேதுபந்தநஸமயத்திலே தாள் நயந்தது கடல், பிராட்டியவஸ்த்தையை பஜிக்கையாலே தோள்நயந்தார் தாம்; கடலுக்கு ஸ்வாபாவிகதாஸத்வமுண்டிறே. தோள் நயந்தயாம் என்னுதே, “ தாள்நயந்தயாம் ” என்கிறது - ப்ராஹ்மணர் பிச்சேறினாலும் ஓத்துச்சொல்லுமாப்போலே யடிவிடாததம் வாஸநையாலேயென்று கண்டுகொள்வது. வாசியற்றமையை த்ருஷ்டாந்தத்தாலே யுபபாதிக்கிறுர் ( பிராட்டியோடித்யாதி )

அவதாரிகையில் “ ஊமைக்கூறனாய் ” என்றதுக்குச்சேரவருளிச்செய்கிறுர் ( வாய்விட்டித்யாதி ) கனைக்கை - அநக்ஷரமாகவிளைகையும் கோஷிக்கையும். விம்மல்பொருமல்-ப்ரீதியில் ஶரீரவிகாரம். “ போபோஸதாங்க்ஷடநஸேதுநந்தவந்நலப்தநித்ரோஸிகதப்ரஜாகரঃ । கிம்வாமுகுந்தாபஹ்ருதாத்மலாஞ்சநঃ ப்ராப்தாம்தஶாம்த்வஞ்சகதோதுரத்யயாம் ” ( போபோஸதாங்க்ஷடநஸேதுநந்தவந்நலப்தநித்ரோஸிகதப்ரஜாகரঃ । கிம்வாமுகுந்தாபஹ்ருதாத்மலாஞ்சநঃ ப்ராப்தாம்தஶாம்த்வஞ்சகதோதுரத்யயாம்) இதிஶ்லோகோத்ராநுஸந்தேயঃ. ப்ராப்தாம்-மயேதிஶேஷঃ. முகுந்தாபஹ்ருதாத்மலாஞ்சநঃ - காம்பீர்யம் கடலுக்குலக்ஷணமிறே.

அந்வயம் கீழ்ச்சொன்னபடியே கண்டுகொள்வது. யத்வா, எல்லேயிராப்பகல் முற்றநீகண்டுயிலாய்; காமுற்றகையறவோடு நெஞ்சுருகியேங்குதியால்; கனைகடலே, நீமுற்றதொடங்கி, உற்றாயோ; வாழி இத்யந்வயோவா.........................*

---

# நான்காம்பாட்டு.

கடலுமலையும்விசும்புந்துழாயெம்போற்
சுடர்கொளிராப்பகற்றுஞ்சாயாற்றண்வாடாய்
அடல்கொள்படையாழியம்மானைக்காண்பானீ
யுடலநோயுற்றாயோவூழிதோறூழியே.

## ஆறுயிரப்படி.

(கடலும்) என்னைப்போலே "எங்குற்றாயெம்பெருமான்" என்றுகடலும் மலையும் விசும்புந்துழாவி யிராப்பகலுறங்குகிறிலை; நீயுமெம்பெருமானுடைய திருவாழியுங்கையுங் காணவாசைப்பட்டுப் பெருமையாலே காலதத்வமெல்லாமுடலம் நோயுற்றாயாகாதே தண்வாடாயென்கிறாள்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "விரோதிநிரஸநபரிகரத்தை யுடையவனைக்காணவேணும்" என்னும் வ்யஸநத்தை நீயுற்றனையோவென்று ஒருவாடையைப்பார்த்துச் சொல்லுகின்றாள்.

தண் - ஸந்நிபதித ஶரீரம்போலே குளிர்ந்திருக்கிற. வாடாய் - வாடாய். கடலும் - கடலும். மலையும் - மலையும். விசும்பும் - விசும்பும். துழாய் - தடவிக்கொண்டு. எம்போல் - "𑌅𑌮𑍍𑌭𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍇 𑌭𑍁𑌵𑌨𑌸𑍍𑌯 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌨𑌾𑌕𑌸𑍍𑌯 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇" (அம்பஸ்யபாரேபுவநஸ்யமத்யேநாகஸ்யப்ருஷ்ட்டே) என்று க்ஷீராப்தியிலும் திருமலையிலும் பரமபதத்திலு மவனை யாராய்கிறவெங்களைப்போலே. சுடர் - சந்த்ராதித்யதேஜஸ்ஸுகளை. கொள் - நிரூபகமாகவுடைய. இரா - இரவும். பகல் - பகலும். துஞ்சாய் - ஓரிடத்தில் பர்யவஸித் துறங்குகிறிலை. ஆல் - ஆதலால். அடல் - மஹாபாரதயுத்தத்திலே. கொள் - "ஆயுதமெடேன்" என்று வைத்து எடுத்த. படையாழி - திருவாழியையுடைய. அம்மானை - ஸர்வேஶ்வரனை. காண்பான் - அந்த பீஷ்மன் கண்டாற்போலே காணநினைத்து. நீ - ஸர்வோபகாரகமான நீ. ஊழிதோறூழி - கல்பபேதங்கள் பிறந்து நடந்தாலும் காலமுள்ளதனையும் அவனை யொருப்பட்டு. உடலம் - ஶரீரமுள்ளதனையும் வ்யாப்தமான. நோய் - வ்யாதியை. உற்றாயோ - கொண்டாயோ.

உபகாரஶீலர்க்கு முடம்பில் வரும் விகாரங்கள் அவனைக்காணப் பெருமலென்றுகருத்து.........................................................................*

---

## ஈ. டு _ நான்காம்பாட்டு.

கார்றென்று ஒருவ்யாபகதத்வமாய், அதுதான் அபிமதவிரஹவ்யஸநத்தாலே யிருந்தவிடத்தி லிருக்கமாட்டாதே, மடலூருவாரைப்போலே யுடம்பிலேபுழுதியை யேறிட்டுக்கொண்டு வடிவுதெரியாதபடியாய், ஜ்வரஸந்நிபதிதரைப்போலே குளிர்ந்திருந்தது ; அதைப்பார்த்து, நீயும் நான்பட்டதுபட்டா யாகாதேயென்கிறாள்.

(கடலும்மலையும்விசும்புந்துழாய்) "காரார்திருமேனி காணுமளவும்போய்" என்று - க்ஷீராப்தியோடு திருமலையோடு பரமபதத்தோடு வாசியறத்தேடுவார்க்குப்போலியாயிருக்கிறபடி. * ஊராயவெல்லாமொழியாமே தேடுவார்க்குப்போலியா யிருக்கிறபடி. "தௌவநாநி கிரீம் ஸ்சைவ ஸரிதஸ்ஸரஸாம்ஸி ச। நிகிலேந விசிந்வாநௌ ஸீதாம் தஸரதாத்மஜௌ" (தௌவநாநிகிரீம்ஸ்சைவ ஸரிதஸ்சஸராம்ஸிச।நிகிலேநவிசிந்வாநௌ ஸீதாம்தஸரதாத்மஜௌ) என்றுதேடித்திரிந்தவர்களுக்குப் போலியாயிராநின்றது. [ஸீதாம்] (ஸீதாம்) "தேடிக்கண்டிலோம்" என்றுறியிருக்கலாம் விஷயமன்று. [தஸரதாத்மஜௌ] (தஸரதாத்மஜௌ) தேடப்பிறந்தவர்களல்லர் ; அவர்கள் ஜீவிக்கையென்றொரு பொருளுண்டோ. இத்தால் - சென்றற்றதென்றபடி. (கடலித்யாதி) அபரிச்சிந்நமானகடல், நிர்விவரமானமலை, அவகாசப்ரதாநம்பண்ணுகிற ஆகாசம். அன்றியே, அச்சமான ஆகாசம். (எம்போல்சுடர்கொளிராப்பகல் துஞ்சாயாற்றண்வாடாய்) ஜ்வரஸந்நிபதிதரைப்போலே சென்றற்றாயாகாதே என்னைப்போலே. சுடரொன்று - ஆதித்யன். சுடரைக்கொள்ளப்பட்டதென்றது - ஆதித்யனஸ்தமித்தஇரவோடு, சுடரையுடைத்தான பகலோடுவாசியற உறங்குகிறிலை, குளிர்ந்தவாடாய். (அடல்கொளித்யாதி) அடலென்று - மிடுக்கு. எதிரிகள் மிடுக்கைக்கொள்ளுகை யென்னுதல், தான் மிடுக்கையுடைத்தா யிருக்குமென்னுதல். "ஏதத் வ்ரதம் மம" (ஏதத் வ்ரதம்மம) என்றவளவன்றிக்கே, ஆஶ்ரிதார்த்தமாக அஸத்யப்ரதிஜ்ஞனவனேரத்தளவு மகப்பட்டாயாகாதே. பாரதஸமரத்திலே சக்ரோத்தாரணத்தினன்று அர்ஜுநனிளைத்துக் கைவாங்கினவாறே, பண்ணினப்ரதிஜ்ஞையயழித்துத்திருவாழியைக்கொண்டு ஸ்ரீபீஷ்மரைத்தொடர்ந்தானிறே [ஏஹ்யேஹி] (ஏஹ்யேஹி) கெட்டோடுகிறவன் பிற்காலித்துநின்று "எங்களம்மைநாயனார் மாறிமாறியிடுகிறவடி யிருக்கிறவழகென்" என்றான். [புல்லாம்புஜபத்ரநேத்ர] (புல்லாம்புஜபத்ரநேத்ர) என்றுமாணைமறுத்தால் சேதமென், சீறிச்சிவந்த கண்ணழகைக்காணப்பெற்றால். [ப்ரஸஹ்ய மாம் பாதய] (ப்ரஸஹ்யமாம்பாதய) "ஆயுத

மெடேன்" என்றநீராயுதமெடுத்தாலும் அடியேன் கையிலாயுதமிருக்கில்தோலேன், ஆயுதத்தைப்பொகடச்சொல்லித் தலையறுத்தருளீர். [லோகநாத] (லோகநாத) உமக்கும் வீரத்துக்கும்தோலேன், முதன்மைக்குத்தோற்பன். (அடல்கொள்படையாழி) மிடுக்கையுடைத்தான படையாகிறதிருவாழி. (ஆழியம்மானே) கையிலே திருவாழியையுடைய ஸர்வேஶ்வரனேயாகாதே நீயுங்காணவாசைப்பட்டது. (நீயுடலநோயுற்றுயோ) ப்ரத்யுபகார நிரபேக்ஷமாக வுபகரிக்கும்நீ, ஸர்வரக்ஷகமான சரீரத்திலே நோவுவரும்படி பட்டாயாகாதேயென்கிறுள். ஸஞ்சாரமிதுக்கு நியதஸ்வபாவமிறே. (ஊழிதோறூழியே) கல்பந்தோறும் கல்பந்தோறும். நோவுபடாநிற்கச்செய்தே தவிராதபடி சரீராந்தமான நோவுகொண்டாயாகாதே. காலம்மாறிவரச்செய்தேயும் நோவுமாறுதேஏகரூபமாய்ச் செல்லுகிறபடி.........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (கடலுமித்யாதி) வ்யாபகதத்வம் - வ்யாபிக்கிறதத்வம். அதஏவ (இருந்தவிடத்திலிருக்கமாட்டாதே யென்றபடி) "துழாய்" என்றத்தைப்பற்ற (இருந்தவிடத்திலித்யாதி) ஜ்வரஸந்நிபதிதனைப்போலே யென்றது - உள்ளில்வெதுப்பும், புறம்பில் சைத்யமும் தோன்றுகைக்காக. (குளிர்ந்திருந்தது) இவளுக்கிப்படியுந்தோற்றிற்றென்றபடி.

"எம்போல்" என்னலாம்படி யிவர்தேடினரோவென்ன (காராரித்யாதி) சிறியதிருமடல். மேகம்போன்ற அழகிய திருமேனியைக்காணுமளவும்போயென்கை. தேடுவார்க்குப் போலியாயிருக்கிறபடி யென்றது - "எம்போல்" என்றதுக்கர்த்தம். தேடுவார்-தாமும், திருமங்கையாழ்வாரும். "காரார்" இத்யாதியிலே- க்ஷீராப்தியும் பரமபதமுஞ்சொல்லவில்லையேயென்ன (ஊராயவித்யாதி) "ஊராயவெல்லாம்" என்கையாலே - க்ஷீராப்தியும் பரமபதமும் ஸித்தமென்றபடி.

இவ்வளவன்றிக்கே, பிராட்டியைத் தேடித்திரிந்தவர்களுக்கும் போலியாயிருக்கிறதென்கிறுர் (தௌவநாநீத்யாதி) ஆரண்யகாண்டே ஏகஷஷ்டிதமே. "நிலிநெ ந" (நிகிலேந) என்கையாலே - கடலாகாஶமுட்படவெங்கும், விஶ்லேஷப்ரயுக்தமயக்கத்தாலே "அஸாத்யம்" (அஸாத்யம்) என்றறியாதே தேடத்தொடங்கினர்களென்றபடி. (தேடிக்கண்டிலோமித்யாதி) அயோநிஜத்வத்தால் வந்த வைலக்ஷண்யத்தையுடையளாகையாலே யாறியிருக்கப்போகா தென்றபடி. "தஶரதாத்மஜௌ" (தஶரதாத்மஜௌ) என்று - ராஜபுத்ரர்களாகையால் வந்த ஸௌகுமார்யஞ்சொன்னபடி. (தேடப்பிறந்தவர்களல்லவென்றது) "மஹாதபஸாராமமஹாதாசாபிகர்மணா ராஜ்ஞாதஶரதேநத்வம்லப்தோம்ருதமிவாமராꞏ" (மஹாதபஸாராமமஹாதாசாபிகர்மணா ராஜ்ஞாதஶரதேநத்வம்லப்தோம்ருதமிவாமராꞏ) என்றத்தைப்பற்ற. சென்றற்றது - ஜீவிக்க ஶக்யமன்று. "அம்பஸ்யபாரேபுவநஸ்யமத்யேநாகஸ்யப்ருஷ்டே" (அம்பஸ்யபாரேபுவநஸ்யமத்யேநாகஸ்யப்ருஷ்டே) என்கிறஶ்ருதியை - "கடலும்"

இத்யாதிக்கு ஸம்வாதமாக அருளிச்செய்வர். தழாயெம்போல் - தேடுகிற வெங்க ளைப்போலே,

குளிர்த்தியைச் சொல்லுகிறவனுடைய ஹார்த்தபாவம் (ஜ்வரஸங்நிபதிதே த்யாதி) சென்றற்றுயாகாதே - முடியுமளவானுயன்றே "சுடர்கொள்" என்று ராத்ரிக்கு விஸேஷணமானபோது, ஆதித்யனை க்ரஸித்தஇரவென்றபடி. கொள்கை - க்ரஸிக்கை. பகலுக்கு விஸேஷணமானபோது, கொள்கை - உடைத்தாகை.

மேலுக்கெல்லாம் பாவம் (ஏதத்வ்ரதம்மமேத்யாதி) யுத்தகாண்டேஷ்டாதஸே, "ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே । அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம." (ஸக்ருதேவப்ரபந்நாய தவாஸ்மீதிசயாசதே। அபயம்ஸர்வபூதேப்யோ ததாம்யேதத்வ்ரதம்மம.) அதாவது - ஏதத்வ்ரதம் மமவென்று - ஆஶ்ரிதரக்ஷணத்தளவன்றிக்கே, ஆஶ்ரிதரக்ஷணத்துக்காக அஸத்ய ப்ரதிஜ்ஞனவனுடைய வோரத்தளவு மகப்பட்டாயாகாதேயென்றபடி. ஓரம் என்றதுக்கு த்வந்யர்த்தம் - திருவாழியின்முனை; ஸஹஜார்த்தம் - பக்ஷபாதம். ஆஶ்ரிதார்த்தமாக அஸத்யப்ரதிஜ்ஞனை விடமுண்டோவென்ன (பாரதேத்யாதி) பீஷ்மபர்வணி, "ஏஹ்யேஹி புல்லாம்புஜபத்ரநேத்ர நமோஸ்து தே தேவவராப்ரமேய। ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத ரதோத்தமாத் பூதஶரண்ய ஸங்க்யே" (ஏஹ்யேஹிபுல்லாம்புஜபத்ரநேத்ரநமோஸ்துதேதேவவராப்ரமேய। ப்ரஸஹ்யமாம்பாதயலோகநாதரதோத்தமாம்பூதஶரண்யஸங்க்யே) "பண்ணினப்ரதிஜ்ஞையையழித்து" என்றவிடத்திலே - "ஸ்வநிகமமபஹாய மத்ப்ரதிஜ்ஞாம் ருதமதிகர்த்துமவப்லுதோ ரதஸ்த:" (ஸ்வநிகமமபஹாயமத்ப்ரதிஜ்ஞாம்ருத மதிகர்த்துமவப்லுதோ ரதஸ்த்த:) இத்யாத்யநுஸந்தேயம். பீஷ்மனைத்தொடர்ந்தமைக்குஸூசகப்ரமாணம்) (ஏஹ்யேஹீத்யாதி)"ஏஹ்யேஹி" (ஏஹ்யேஹி) என்கிற வீப்ஸைக்குபாவம் (கெட்டோடுகிறவனித்யாதி) அஸக்ருதாவ்ருத்தி ஆதராதிஶயகார்யமிறே யென்றபடி. நடையழகிலே யீடுபட்டுச் சொன்னபடி. கெட்டோடுகிறவன் - பீஷ்மன். அம்மைநாயனார் - தாயும் தமப்பனுமானவர். ரதத்தினின்று மவப்லுதனுய்க் கிட்டியிருக்கச்செய்தே "வாரீர்வாரீர்" என்னும்போது - பத்தெட்டடியோடிநின்று சொல்லுகிறுனுகவேணுமென்றபடி. ஆணைமறுத்தால் சேதமென்னென்றது - சேஷியுடைய "ஆயுதமெடேன்" என்ற ப்ரதிஜ்ஞையை சேஷபூதன் பரிபாலிக்க ப்ராப்தமாயிருக்க, அதுசெய்யாதே ஆயுதமெடுக்கும்படி பண்ணிலும்சேதமென்னென்றபடி. லோகநாத என்ற - "முதன்மைக்குத் தோற்பன்" என்கையாலே - "வீரத்துக்குத் தோலேன்" என்றது ஸித்தமென்கை. கீழே, கெட்டோடுகிறவனென்றது - வாஸ்தவமானவாகாரத்தைப்பற்ற; இங்கு, தோலேனென்கிறது - ஆஶ்ரிதஜயம் தன்னதாக நினைத்திருக்கும் பகவத்குணதிக்யத்தைப்பற்ற. புல்லாம்புஜபத்ரநேத்ர, ஏஹ்யேஹி; பூதஶரண்ய, ஸங்க்யேமாம் ரதோத்தமாத்ப்ரஸஹ்யபாதய; லோகநாத, தேவவர, அப்ரமேய, தேநமோஸ்து இத்யந்வய:. பாதய - விழவிடு. த்விதீயார்த்தவிவரணம் (மிடுக்கையித்யாதி)

ஸர்வரக்ஷகமான நீ நோயுற்றுயோ என்ன வமைந்திருக்க, “ உடலம்” என்கையாலே - அதினுடைய வுத்கர்ஷந்தோற்றுகிறது. நோயுற்றமையை யிவளறிந்தபடியென்னென்ன ( ஸஞ்சாரமித்யாதி ) அதாவது - நியதமாக ஸஞ்சரிக்கையாலே, “ நோவுகண்டது ” என்றிருக்கிறு ளென்றபடி. ( நியதஸ்வபாவமிறே ) இது அபிமதவிஶ்லேஷ ப்ரயுக்தமான நோயாலே வந்ததென் றிருக்கிறுள் என்று சேஷம். யாவச்சரீரபாவியான நோயென்று பாவாந்தரம் ( நோவுபடாநிற்கவித்யாதி ) ஊழி என்னுதே, “ ஊழிதோறூழி ” என்றதுக்கு பாவம் ( காலம்மாறியித்யாதி ) “ ஶோகஸ்ஸலிலகாலேந ” ( ஶோகஶ்சஸிலகாலேந ) இத்யாதி. “ எம்போல் ” என்றது - கீழுக்கும் மேலுக்கும் சேஷம்.

தண்வாடாய், எம்போற்கடலும் மலையும் விசும்பும் துழாய் ; எம்போற்சுடர்கொ ளிராப்பகல் துஞ்சாயால் ; அடல்கொளித்யாரப்ய காண்பான் நீயூழிதோறூழி யுடலநோயுற்றுயோ இத்யந்வயঃ......................................................*

# ஐந்தாம்பாட்டு.

ஊழிதோறூழியுலகுக்குநீர்கொண்டு
தோழியரும்யாமும்போல்நீராய்நெகிழ்கின்ற
வாழியவானமேநீயுமதுசூதன்
பாழிமையிற்பட்டவன்கட்பாசத்தாலைவாயே.

## ஆறுயிரப்படி.

( ஊழிதோறூழி ) லோகமெல்லாம் நிறையும்படி யிக்காலமெல்லாம்நின்று நீராயுருகுகிற வாழியவானமே, நீயுமெங்களைப்போலே யெம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களிலே யகப்பட்டு அவன்பக்கலுள்ள ஸங்கத்தாலே யிப்படிநைந்தாயாகாதே யென்கிறுள்.... ................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீயு மவன் ஶக்தியோகத்திலே யகப்பட்டு ஶிதிலமாகிறுயோ வென்று ஒருமேகத்தைக்கண் டுரைக்கிறுள்.

தோழியரும் - ஸமானதுঃகைகளான தோழிமாரும். யாமும்போல் - துঃகோத்தரைகளான நாங்களும்போலே. உலகுக்கு - லோகம் நிரம்பவேண்டும். நீர்கொண்டு - நீரைக்கொண்டு. ஊழிதோறூழி - காலமுள்ளதனையும். நீராய் - ஜலமயமாய். நெகிழ்கின்ற - இற்றுவிழுகிற. வானமே - மேகமே. நீயும் - உதாரஶீலமான நீயும். மதுசூதன் - மதுமர்த்தநனுடைய. பாழிமையில் - பெருமிடுக்கிலே. பட்டு - அகப்பட்டு. அவன்கண் - அவன்பக்கல். பாசத்தால் - ஸ்நேஹத்தாலே. நைவாயே - ஶிதிலமாகிறுயே. வாழிய - இந்த ஶைதில்யந் தீர்ந்து வாழ்வாயாக. உதாரஸ்வபாவர்க்கு ஶைதில்யம் பகவத்விரஹ ஜநிதமென்கை.........................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

அவ்வளவிலே யொருமேகமானது கரைந்துநீராய் விழப்புக்கது; நீயுமவனுடைய விரோதிநிரஸந சீலதையிலே யகப்பட்டாயாகாதேயெ ன்கிறாள்.

( ஊழிதோறூழி - நீராய்நெகிழ்கின்ற ) கல்பந்தோறும் கல்பந் தோறும் நீராய்நெகிழ்கின்ற. ( உலகுக்குநீர்கொண்டு ) லோகமடங்க வெள்ளமிடவேண்டும்படி நீரைமுகந்துகொண்டு. உனக்கு நல்லநிதர்ஶந முண்டு ( தோழியரும்யாமும்போல் ) என்னிழவுக்கு * எம்மின்முன்ன வனுக்குமாயுந் தோழிமாரையும் என்னையும்போலே. நீராய்நெகிழ்கின்ற- கரைந்துநீராய்விழுகிற. ( வாழிய ) ஜகத்துக் குபகாரகமாயிருக்கிற நீயு ன்னுடைய கண்ணநீர்நீங்கி வாழ்ந்திடுக. ( வானமே ) மேகத்தைச்சொ ல்லுதல், ஆகாசத்தைச்சொல்லுதல். அதிஸூக்ஷ்மமானவாகாசம் நீரை முகந்துகொண்டு சிதறியுருகி நீராய்விழுகிறதென்று நினைக்கிறாள். வான மென்று - மேகத்துக்குப்பேர் ; " வான்கலந்தவண்ணன் " என்றதிறே, " வானம்வழங்காதெனின் " என்றானிறே தமிழனும். (நீயும்) லோகோ பகாரகமாக வடிவுபடைத்தநீயும். ( மதுசூதனித்யாதி ) விரோதிநிரஸந சீலனானவனுடைய வீரகுணத்திலேயகப்பட்டு, அவன்பக்கலுண்டான ந சையாலே ஜீவிக்கவுமாட்டாதே முடியவுமாட்டாதே நோவுபடுகிறாயா காதே. பாழிமை - பலம். இடமுடைமையென்றுமாம். ( அவன்கண்பாச த்தால் ) அவன்பக்கல் நசையாலே. விஷயாநுகூலமாயிறே நசையிருப்ப து ; எவ்வளவுநசையுண்டு, அவ்வளவும் நைவுண்டாமிறே வ்யதிரேகத்தி ல். ( நைவாயே ) நைவேபலம்.............................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு. ( ஊழிதோறித்யாதி ) " நீராய்நெகிழ்கின்ற, மதுசூதன் பாழிமையிற்பட்டு " என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( அவ்வளவிலே யித் யாதி )

" உலகுக்குநீர்கொண்டு " என்றது - லோகரக்ஷகமான வுனக்கும் நோவு வந்ததென்று ஸ்வபாவகதநமித்தனை ; அந்யதாவாக ப்ரமிக்கைக்குடலன்று. " ஊ ழிதோறூழி நீராய்நெகிழ்கின்ற " என்றது - அந்வயப்ரதர்ஶநம். யதாக்ரமமானா ல், " ஊழிதோறூழி " இத்யாதியாலே - லோகோபகாரகத்வமும், " தோழிய ரும் " இத்யாதியாலே ஶைதில்யமுந் தோன்றுகிறது ; இவை தம்மிற்சேரும்படி யெங்ஙனேயென்ன (ஊழிதோறூழியென்று ) அந்வயிக்கிறது. " உலகுக்கு " எ ன்கிறவிது - தாதர்த்த்யே சதுர்த்தியன்று, ஸம்பந்தமாத்ரத்திலே ஷஷ்ட்டியெ ன்கிறார் ( லோகமடங்கவென்று ) ( முகந்துகொண்டு ) ஒருஸமுத்ரத்தில் நின்றும் முகந்துகொண்டு வந்தாற்போலே யிருக்கிறதென்கிறாள் ஜலஸம்ருத்தியைப் பற்ற

வென்று தாத்பர்யம். தங்கள் கண்ணீர் பாயலுக்குப் பாய்ச்சலாமோபாதி, இந் நீருமென்றிருக்கிறுள்.

மேலுக்கவதாரிகை (உனக்கித்யாதி) தோழியரை முன்னே நிர்த்தேஶித் ததின் தாத்பர்யத்தை யருளிச்செய்கிருர் (என்னிழவுக்கித்யாதி) மாயும் - ஶிதி லமாகாநின்றுள்ள. (கரைந்து) * நெகிழ்கின்றதின்தாத்பர்யம். (நீராய்நெகிழ் கின்றவிதி) அத்ர ப்ராந்தித்வமாகாஶபக்ஷ மேகபக்ஷேபிஸமாநம்.

ஜகத்துக்குபகாரகமாயென்றதுக்கு - "உலகுக்குநீர்கொண்டு" என்றதிலே நோக்கு (உபகாரகமாயிருக்கிற) மேகத்தைச் சொல்லும்போது, ஆதபத்ராணத் தாலே; ஆகாஶத்தைச் சொல்லும்போது, அவகாஶப்ரதாநத்தாலே. ஆகாஶத்து க்கு வர்ஷம் நியதஸ்வபாவமாகவில்லாமையாலே, நீராய்விழக் கூடுமோவென்ன (அதிஸூக்ஷ்மமித்யாதி) பலாஶபுஷ்பவ்ருத்தங்களில் தாவப்ரமர ப்ரமங்கள்போ லே, இங்கு மேககாலத்திலே, மேகத்தையாகாஶமாகவும், வர்ஷத்தைத்துளிக்கிற தாகவும் ப்ரமிக்கக்கூடுமென்று கருத்து. "வானம்" என்று - மேகத்தைச்சொல் லுமோவென்ன (வான்கலந்தவண்ணனித்யாதி) இரண்டாந் திருவந்தாதி. மேக த்தோடு ஸத்ருஶமாய்ச்சேர்ந்த வடிவையுடையவன். "பெருகுமதவேழம்" இத் யாதி. ப்ரயோகாந்தரம் (வானமித்யாதி) "தானந்தவமிரண்டுந்தங்காவியனுல கம், வானம்வழங்காதெனின்" என்று குறள்.

"மதுசூதன்பாழிமை" என்கையாலே - வீரகுணமென்று பலிக்கிறது. "நைவாய்" இத்யத்ர வர்த்தமாநார்த்தமாஹ (ஜீவிக்கவும்மாட்டாதேயித்யாதி) பலம் - காயபலம். இடமுடைமை - ரக்ஷகத்வப்பாரிப்பு. யத்வா, இடமுடைமை யென்றது - "மநஸ்வீ" என்கிறபடியே யவன் மநஸ்ஸிலிடமுடைமை யென்றப டி. க்லேஶசரமாவதிம்ஹேதுகர்ப்பபதாப்யாம்தர்ஶயதி (அவன்கட்பாசத்தாலி த்யாதி) "மதுசூதன்" என்றத்தைக் கடாக்ஷித்துபாவம் (விஷயாநுகூலமித்யா தி) "பாசத்தால்நைவாயே" என்று மேலேகூட்டிதாத்பர்யம (எவ்வளவித்யா தி) ஏவகாரார்த்தம் (நைவேபலமென்று) யத்வா (நைவேபலம்) வர்த்தமாந நிர்த்தேஶதாத்பர்யம். ஸம்ஶ்லேஷவிநாஶங்களி லந்யதரத்தைப் பெருமலிதுவே பலமாய்விட்டதென்கிருர்.

வானமே, உலகுக்குநீர்கொண்டு, தோழியரும் யாமும்போ லூழிதோறூழி நீராய் நெகிழ்கின்ற நீயும் மதுசூதன்பாழிமையிற்பட்டு அவன்கட்பாசத்தால்நை வாயே; வாழியஇத்யந்வயஃ. (தோழியரும்யாமும்போ லூழிதோறூழிநீராய்நெ கிழ்கின்றநீயுமிதி) அநேந - ப்ரதிகல்பம்வ்யாஸமநு ப்ரஹ்மவாதிவத் பராங்குஶ பரகாலயதிவராதயோபிஸந்திதிஸூச்யதே. "க்ஷணாணவஃகல்பகோட்யஃ" (க்ஷ ணவஃகல்பகோட்யஃ) "பலபலவூழிகளாயிடும்" இத்யபிப்ராயாதுக்தம்வா. "மேகஶ்ரீமம்ஸ்த்வமஸிதயிதோயாதவேந்த்ரஸ்யஸூநும் ஶ்ரீவத்ஸாங்கம்வயமிவப வாந்த்யாயதிப்ரோமபத்தஃ। அத்யுத்கண்டாசபலஹ்ருதயோஸ்மத்விதோபாஷ்பதா ராஸ்ஸ்ம்ருத்வாஸ்ஸ்ம்ருத்வாவிஸ்ருஜஸிபுநர்த்துஃகதஸ்தத்ப்ரஸங்கஃ"
(மேகஶ்ரீமம்ஸ்த்வமஸிதயிதோயாதவேந்த்ரஸ்யஸூநும் ஶ்ரீவத்ஸாங்கம்வயமிவப வாந்த்யாயதிப்ரோமபத்தஃ। அத்யுத்கண்டாசபலஹ்ருதயோஸ்மத்விதோபாஷ்பதா ராஸ்ஸ்ம்ருத்வாஸ்ஸ்ம்ருத்வாவிஸ்ருஜஸிபுநர்த்துஃகதஸ்தத்ப்ரஸங்கஃ.) ஶ்ரீமந் - * மே

புராணப்ரக்ரியை - வையதிகரண்யம். இதிஹாஸபுராண ப்ரக்ரியையாலேயென்றது - "க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யயঃ," (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யயঃ,) "மாபாவம்விடவரற்குப்பிச்சைபெய்" இத்யாதியைப்பற்ற. பரத்வத்திலே பரத்வமென்றது - "அயர்வறுமமரர்களதிபதி" என்றத்தைப்பற்ற. அவதாரத்திலே பரத்வமென்றது - "கண்ணன்" என்றத்தைப்பற்ற.................................*

---

## இரண்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

திண்ணன்வீடுமுதன்முழுதுமா
யெண்ணின்மீதியனெம்பெருமான்
மண்ணும்விண்ணுமெல்லாமுடனுண்டநங்
கண்ணன்கண்ணல்லதில்லையோர்கண்ணே.

### ஆறாயிரப்படி.

மோக்ஷாத்யஶேஷபுருஷார்த்தப்ரதனாய், வாங்மநஸாபரிச்சேத்ய கல்யாணகுணங்களை யுடையனாய், எனக்கு ஸ்வாமியாய், ஸர்வாத்ம ஸம்ரக்ஷகனாயிருந்த வண்டுவரைப்பெருமாளே இஜ்ஜகத்தி லீஶ்வரன்; மற்றீஶ்வரனில்லை; இதிலொரு ஸம்ஶயமில்லை யென்கிறார்... ..........*

### பன்னீராயிரப்படி,

முதற்பாட்டில், க்ருஷ்ணனே ஸர்வநிர்வாஹக னென்கிறார்.

திண் - திண்மையையுடைத்தாய். நன் - விலக்ஷணமான. வீடு - மோக்ஷம். முதல் - முதல். முழுதுமாய்-ஸகலப்ரயோஜநநிர்வாஹகனாய். எண்ணின்மீதியன்-நினைவுக்கவ்வருகான அபரிச்சிந்நஸ்வபாவனாய். எம்பெருமான் - இம்மேன்மையைக்காட்டி யென்னையடிமைகொண்ட ஸ்வாமியாய். மண்ணும் - பூமியும். விண்ணும்-ஊர்த்வலோகமும். எல்லாம் - ஒன்றொழியாமல். உடன்-தாரதம்யமில்லாதபடி ஏகோத்யோகத்திலே. உண்ட-வயிற்றிலேவைத்துநோக்கின. நங்கண்ணன்-க்ருஷ்ணனாயவதரித்து நமக்கே தன்னைத்தந்தஸுலபனே. கண் - ஜகத்துக்குநிர்வாஹகன். அல்லது-அல்லது. ஓர்-ஒரு. கண்-நிர்வாஹகவஸ்து. இல்லை-இல்லை.

கண்-களைகண். திண்ணனென்றது-நிஶ்சிதமென்றுமாம்........................*

---

### ஈடு-முதற்பாட்டு.

இத்திருவாய்மொழியிற்சொல்லுகிற பரத்வத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

(திண்ணன்வீடுமுதன்முழுதுமாய்) திண்ணனென்றது - திண்ணமென்றபடி. அதாவது-த்ருடமென்றபடி. த்ருடமானவீடென்று-நித்யவிபூதிக்கு விஶேஷணமாய், தார்ட்யமாவது - * ஆவிர்ப்பாவதிரோபாவஜந்மநாஶவிகல்பங்களென்னுமவையில்லாமையாலே கர்மநிபந்தநமாகவருமழிவில்லையென்கை. ஐச்சமாகவரும்விகாரங்களுண்டானால் தோஷாயவுமன்று, அதுஅழிவாயுந்தோற்றுதிறே. ஏதேனுமாக ஸம்ஸாரவிபூதியிற்போலே கர்மநிபந்தநமாக வருமவையில்லையென்கை. திண்ணிதானநித்யவிபூதிதொடக்கமான எல்லாவிபூதியையுமுடையனாய். அன்றியே, "திண்ணம்" என்கிற இத்தை விட்டுவைத்து, வீடுமுதல் முழுதுமாய்-மோக்ஷப்ரப்ருத்யஶேஷபுருஷார்த்தப்ரதனென்னவுமாம். (எண்ணின்மீதியன்) அஸங்க்யேயமான கல்யாணகுணத்தையுடையவன். கீழ் - விபூதிபரமானபோது, எண்ணின்மீதியனென்றது-குணபரமாகிறது; கீழ்-குணபரமானபோது. எண்ணின்மீதியனென்றவிடம்-விபூதிபரமாகிறது. வீடுமுதல் முழுதுமாயென்றபோது-மோக்ஷப்ரதத்வத்தையே நினைத்ததாகில், எண்ணின்மீதியனென்றவிடம்-அநுக்தமான குணங்களைச்சொல்லுகிறது. எண்ணின்மீதியனென்றவிடம்-எண்ணுக்குமேலாயுள்ளானென்றபடி. குணங்களாலேயாதல்,விபூதியாலேயாதல்வந்த அபரிச்சேத்யஸ்வபாவதையைச்சொல்லுகிறது. (எம்பெருமான்) குணவிபூதிகளையுடையனாயிருக்கிறஇருப்பைக்காட்டி யென்னையெழுதிக்கொண்டவன். (மண்ணுமித்யாதி) இப்படி யிவற்றையுடையனாய், உடைமைநோவுபட விட்டிருக்கையன்றிக்கே, ப்ரளயாபத்திலே வயிற்றிலேவைத்து நோக்குமென்கிறார். பூம்யந்தரிக்ஷாதிகளை வெள்ளங்கொள்ளப்புக, எடுத்து வயிற்றிலேவைக்கிறவிடத்திலொன்றும் பிரிகதிர்ப்படாமே, ஏககாலத்திலேவைத்து ரக்ஷித்தநங்கண்ணன். (உடனுண்ட) ரக்ஷணமவனுக்கு தாரகமாகையாலே - "உண்ட" என்கிறது. இல்லையாகில், காக்கும் என்னவமையும். க்ருஷ்ணனோ பின்னை ஜகத்தைவிழுங்கினானென்னில் ; ஆம், க்ருஷ்ணனே; * அங்காந்திடவையமேழுங்கண்டாளிறே யசோதை. ஆகையாலே ஸர்வரக்ஷகனான க்ருஷ்ணனே ஜகத்துக்கு த்ருஷ்டி ; "க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பவ: ப்ரலயஸ்ததா । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய: । க்ருஷ்ணஸ்யஹிக்ருதே ) என்கிற ப்ரமாணப்ரஸித்தியிருக்கிறபடி. (அல்லதில்லையோர்கண்ணே) இவ்வர்த்தத்தையொழிய ஶப்தத்தைக்கொண்டுபோய், "பீலிக்கண்" என்று வ்யவஹரியாநின்றதிறே ; அதுக்குங்கூசவேண்டும்படியிருக்கும்.

மாலைக்கண்ணென்றிருப்பார்க்கு அல்லாததெல்லாம் மாலைக்கண்ணாய்த்தோற்றுமிறே. இதுதிண்ணம் - த்ருடம். "ஸத்யம்ஸத்யம்" (ஸத்யம்ஸத்யம்) என்னுமாபோலே. நங்கண்ணன் கண்ணென்கையாலே-

அந்வயத்தாலே பரத்வஞ்சொன்னார்; அல்லதில்லையென்கையாலே-வ்யதிரேகத்தாலே பரத்வஞ்சொன்னார்......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (திண்ணணித்யாதி) திண்ணமென்றபடியென்றது - "மனக்கருழறிவரும்" என்கிற ந்யாயத்தாலே. ஸ்ரீவிஷ்ணுபுராணே ப்ரதமேம்ஸே, "[illegible]" (ததேததக்ஷயந்நித்யம்ஜகந்முநிவராகிலம் | ஆவிர்ப்பாவதிரோபாவஜந்மநாஸவிகல்பவத்) "[illegible]" (அம்ருதம்ஸாஸ்வதம்நித்யமநந்தம்பரமம்பதம் | ஸாந்தஸத்த்வமயம்திவ்யமக்ஷரம்ப்ரஹ்மண:பதம்) இத்யாதிகளையுட்கொண்டருளிச்செய்கிறார் (தார்ட்யமாவதாவிர்ப்பாவேத்யாதி) அவிர்ப்பாவதிரோபாவங்களென்று-ஸமஷ்டி ஸ்ருஷ்டியையும், ஸமஷ்டி ஸம்ஹாரத்தையுஞ்சொல்லி; ஜந்மநாஸங்களென்று-வர்த்தமாநோத்பத்திநாசங்களைச்சொல்லுதல்; ஆவிர்ப்பாவதிரோபாவ ரூபஜந்மநாஸங்களென்னுதல். ஆவிர்ப்பாவம்-தோற்றுகை. திரோபாவம் - மறைகை. விமாநகோபுர மண்டபாதிரூபேண பரிணாமமுண்டாயிருக்க, "இல்லை" என்கிறதென்னென்ன (கர்மநிபந்தநேத்யாதி) அங்கும்பரிணாமமுண்டேயென்ன (இச்சமாகவித்யாதி) அழிவாய்த்தோற்றுவிட்டாலும் விகாரமுண்டேயென்ன (ஏதேனுமித்யாதி) ஸப்தார்த்தம் (திண்ணிதானவித்யாதி) இவ்வர்த்தத்தில், "முழுதுமாய்" என்றது - லீலாவிபூதியைச்சொல்லுகிறது; "ஆய்" என்ற ஸாமாநாதிகரண்யம் - நிர்வாஹ்யநிர்வாஹகபாவேந. (மோக்ஷேத்யாதி) ஐஸ்வர்யகைவல்யாத்ய ஸேஷபுருஷார்த்த ப்ரதனென்றபடி. இத்தால் - ஔதார்யகுணத்தைச்சொல்லிற்றாய், இது-மற்றகுணங்களுக்கு முபலக்ஷணமாய், ஸமஸ்தகல்யாணகுணங்களை யுடையவனென்றபடி. "ஆம்" என்றஸாமாநாதிகரண்யம் - ப்ரதாத்ருப்ரதேயபாவேந.

பௌநருக்த்யம் வாராமற்பரிஹரிக்கிறார் (கீழ்விபூதியித்யாதி) (குணபரமாகிறது) ஸமஸ்தகுணபரமாகிறது. (கீழ்குணபரமானபோது) புருஷார்த்தப்ரதத்வம்-குணாந்தரங்களுக்கு முபலக்ஷணமென்று தாத்பர்யம். (மோக்ஷப்ரதத்வத்தையே) மோக்ஷப்ரதத்வமாத்ரத்தையே. அதாவது - ஔதார்யகுணமாத்ரத்தையே சொல்லிற்றாகிலென்றபடி. மோக்ஷபதம் - புருஷார்த்தமாத்ரோபலக்ஷணம். ஆக, "திண்ணன்வீடு" இத்யாதிக்கு மூன்றர்த்தம். அதாவது - "திண்ணன்வீடு" இத்யாதியாலே-உபயவிபூதியையும், "எண்ணின்மீதியன்" என்று - குணங்களையுஞ்சொல்லுதல்; யத்வா, "திண்ணன்வீடு" இத்யாதியாலே-மோக்ஷபுருஷார்த்தப்ரதத்வருபௌதார்யாதி குணங்களைச்சொல்லி, "எண்ணின்மீதியன்" என்று-உபயவிபூதியையுஞ்சொல்லுதல்; அன்றிக்கே, "திண்ணன்வீடு" இத்யாதியாலே-ஔதார்யாதிகுணமாத்ரத்தையேசொல்லி, "எண்ணின்மீதியன்" என்று-அநுக்தங்களான குணங்களைச்சொல்லுதலென்று. ஏகஸப்தத்துக்கேகினைத்தவகைகளெல்லாஞ் சொல்லக்கூடுமோவென்ன; ஸாமாந்யஸப்தமாகையாலே கூடுமென்கிறார் (எண்ணின்மீதியனென்றவிடமித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (குணங்களாலேயித்யாதி)

"மண்ணும்" இத்யாதிக்கவதாரிகை (இப்படியித்யாதி) "எல்லாம்" என்றதுக்கர்த்தம் (ஒன்றும்பிரிகதிர்ப்படாமேயென்று) "உடன்" என்றதுக்கர்த்தம் (ஏககாலத்திலேயென்று) பிரிகதிர்ப்படாமே - தப்பிப்போகாதே. ரக்ஷித்தவன் என்னாதே, "உண்ட" என்கிறதென்னென்ன (ரக்ஷணமித்யாதி) தாரகமானாலாயிற்று - "உண்ட" என்னவடுப்பதென்றுகருத்து. (காக்குமென்னவமையும்) "கண்ணன்கண்" இத்யாதிக்கு இதுவே ஹேதுவாகப் போருமிறேயென்றுகருத்து. (ஐயநாவழித்தாளுக்கங்காந்திடவையமேழுங்கண்டாள்பிள்ளைவாயுளே) பெரியாழ்வார்திருமொழி. ம்ருதுவான திருநாக்குவழித்த யசோதைக்கதுக்குடலாகவாயைத்திறக்க, லோகங்களேழையும் பிள்ளையுடையவாய்க்குள்ளே கண்டாளென்கை. த்ருஷ்டி-நிர்வாஹகன். "எம்பெருமான்" என்றிருக்க, "நம்" என்கிறதென்னென்ன; அது ப்ரஸித்திபரமென்கிறார் (க்ருஷ்ண ஏவஹீத்யாதி) மஹாபாரதே ராஜஸூயே பீஷ்ம:, "𑌕𑍃𑌷𑍍𑌣 𑌏𑌵 𑌹𑌿 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌮𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑌪𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯𑌯𑌃 । 𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌕𑍃𑌤𑍇 𑌭𑍂𑌤𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍" (க்ருஷ்ணஏவஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: க்ருஷ்ணஸ்யஹிக்ருதேபூத மிதம்விஸ்வம்சராசரம்) இத்தால்-"உண்ட" என்றதுக்கு - அவாந்தர ப்ரளயாபத்ரக்ஷண விவக்ஷயா, மஹாப்ரளயாபத்ரக்ஷண விவக்ஷயாச பாவத்வயம் ஸூசிதம்.

"ஓர்" என்றதுக்குபாவம் (இவ்வர்த்தத்தையித்யாதி) (இவ்வர்த்தத்தையொழிய) "கண்" என்று - ரக்ஷகமென்னுமிவ்வர்த்தத்தையொழிய. அதாவது-தர்ஸநஸாதநமான சக்ஷுரிந்த்ரியஸ்த்தாநமான கோளகத்தையிறே-"கண்" என்கிறது, தாத்ருஸநிர்வாஹகத்வமில்லாமலிருக்கவும் "பீலிக்கண்" என்று ப்ரயோகிக்கிறதிறே கிஞ்சிதாகாரஸாத்ருஸ்யத்தாலே; அங்ஙனுமிங்குச் சொல்லவொண்ணாது அத்யந்தவைஸாத்ருஸ்யத்தாலே; கிஞ்சிந்நிர்வாஹகத்வமும் தததீநமென்றபடி. பீலிக்கண்ணென்கிறது-மயிற்றோகையிலுண்டானவை. அதுக்கும்-ஸப்தமாத்ரத்துக்கும். கண்-ரக்ஷகன். ப்ரஹ்மாதிகளையும் லோகத்திலே ரக்ஷகராக வ்யவஹரிக்கிறார்களேயென்ன. (மாலையித்யாதி) மாலைக்கண்ணென்றிருப்பார்க்கு - ஸர்வேஸ்வரனை "ரக்ஷகன்" என்றிருப்பார்க்கு. (மாலைக்கண்ணாய்த்தோற்றுமிறே) ராத்ரியில் பதார்த்ததர்ஸநாக்ஷமமான சக்ஷுஸ்ஸுபோலே அரக்ஷகமென்றே தோற்றுமென்றபடி.

ஸம்வாதம் (ஸத்யம்ஸத்யமித்யாதி) ஐதிஹாஸிகபௌராணிகவசநம் "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌸𑌤𑍍𑌯𑌮𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌭𑍁𑌜𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑍇𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌦𑍈𑌵𑌂 𑌕𑍇𑌶𑌵𑌾𑌤𑍍𑌪𑌰𑌮𑍍" (ஸத்யம்ஸத்யம்புநஸ்ஸத்ய முத்த்ருத்யபுஜமுச்யதே। வேதஸாஸ்த்ராத்பரந்நாஸ்திநதைவம்கேஸவாத்பரம்) "அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் பரத்வஞ்சொல்லுகிறாரிங்கு" என்று ப்ரவேஸத்திற்சொன்ன வர்த்தத்தைக்காட்டுகிறார் (நங்கண்ணன்கண்ணித்யாதி) (அந்வயத்தாலேயிதி) வாக்யபேதேதாத்பர்யம். அல்லது-தத்வ்யதிரேகேண. ஓர்கண்-ஒருநிர்வாஹகன்.

திண்ணன்வீடித்யாரப்ய, நங்கண்ணன்கண்; அல்லதோர்கண்ணில்லையே இத்யந்வய:. யத்வா, வீடுமுதலித்யாரப்ய, அல்லதோர் கண்ணில்லையே; திண்ணம் இத்யந்வய:.......................................................................*

# இரண்டாம்பாட்டு.

ஏபாவம்பரமேயேழுலகு
மீபாவஞ்செய்தருளாலளிப்பாரார்
மாபாவம்விடவரற்குப்பிச்சைபெய்
கோபாலகோளரியேறன்றியே.

## ஆருயிரப்படி.

(ஏபாவம்) இஜ்ஜகத்துக்கு வேறுரக்ஷகனில்லையோவென்னில்; "நஹிபாலநஸாமர்த்ய ம்ருதேஸர்வேஸ்வரம்ஹரிம்" (நஹிபாலநஸாமர்த்ய ம்ருதேஸர்வேஸ்வரம்ஹரிம்) என்றுகொண்டு, ருத்ரனுடையமஹாபாபத்தைப்போக்கி அவனைரக்ஷித்தருளின பரமகாருணிகனுயிருந்தகோபாலகோளரியேறன்றி, இந்தஸர்வலோகங்களினுடையபாபத்தைப்போக்கி ரக்ஷிப்பாருளரோ; ரக்ஷிக்கவல்லார்தானுளரோ; இது உபபாதிக்கவேணுமோ வென்கிருர்..................................................... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்ட நிவ்ருத்திக்கு மிஷ்டப்ராப்திக்கும் ஹேது, க்ருஷ்ணனென்கிருர்.

மா - அறப்பெரியதான. பாவம் - குருபாதகம். விட - விட்டுப்போம்படி. அரற்கு - ருத்ரனுக்கு. பிச்சைபெய் - பிக்ஷாப்ரதாநம்பண்ணினவனுய். கோபாலகோள் - கோபகுலத்திற்பிறந்தார்க்குள். அரியேறு-ஸிம்ஹஸ்ரேஷ்ட்டமானக்ருஷ்ணன். அன்றியே - அன்றி. ஏழுலகும் - ஸர்வலோகத்தையும். ஈபாவஞ்செய்து - நஶித்தபாபத்தையுடைத்தாம்படிபண்ணி. அருளால் - தன்க்ருபையாலே. அளிப்பார் - அபிமதங்களைக்கொடுத்து ரக்ஷிப்பார். ஆர் - ஆர். ஏபாவம் - என்னபாவமிருந்தபடி. பரமே - இவனுடைய ஸர்வாதிகத்வஞ்சொல்லுதல் நமக்குபரமாவதே. ஏஎன்று - வெறுப்பைக்காட்டுகிறது....................................*

---

## ஈடு - இரண்டாம்பாட்டு.

"அல்லதில்லை" என்று நீர்சொல்லுவானென், ப்ரஹ்மருத்ரர்களு மீஶ்வரர்களாக அவர்களுக்கும் சிலப்ரமாணங்களுண்டாயன்றேபோருகிறதென்னில்; அவர்கள்நிலைகளை யாராய்ந்துபார்த்தால், தலையறுப்பார் சிலரும், அறுப்புண்டுநிற்பார் சிலரு மாகாநின்றுர்கள்; அவர்களாபத்தைப்போக்கி ரக்ஷியாநின்றுனிவன்; அவர்களோ இவனோ ஈஶ்வரனென்கிருர்.

ஏ என்றது - ஓ வென்றபடி. விஷாதாதிஸூசகமிருக்கிறபடி. (ஏபாவம்) ரத்நகரீக்ஷங்களுக்கு வைஷம்யஞ் சொல்லவேண்டுவதே!, சேதநர் மந்தமதிகளாய் பகவத்பரத்வமுபபாதிக்கவேண்டுவதே! என்று

மின்னுப்பாலே, என்னே! பாவமென்கிறார். (பரமே) பகவத்குணானுப வம்பண்ணுகையொழிய இது நமக்கு பரமாவதே. இதுநமக்கு ஸாத்யமாய் வந்துவிழுவதே. (ஏழுலகும்) ஏழுலகங்களிலு முண்டான சேதநர் இருந்ததே குடியாக பாபங்களைக் கூடுபூரிக்க. (ஈபாவஞ்செய்து) பாபமானது ஈயும்படியாகச்செய்து. அழியும்படியாகப் பண்ணி. இதுதான் சேதநரார்த்திக்க, செய்கையன்றிக்கே (அருளால்) நிர்ஹேதுகக்ருபையாலே. (அளிப்பாரார்) இவர்களை யிரக்கையாலே தடவிரக்ஷிப்பாரார்.

இவர்கள்பண்ணின பாபம் அவனருளாலே போக்கில் போமத்தனையல்லது, தாங்கள் ப்ராயஸ்சித்தம்பண்ணிப் போக்குகையாவது- அவற்றை வர்த்திப்பிக்கையிறே. அளிப்பானிவன் என்னாதே, ஆர்என்கிறது- அவர்களுக்கும் ஸத்வந்தலையெடுத்தபோது, "நீர்சொல்லுகிறவனே" என்றிசையவேண்டும் ப்ரஸித்தியாலே; "வாவநஸ்ஸூவொகாநாஂத்வெவ" (பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவ) "நஹிவாலநஸாமாா்த்யஂ ரூதெ" (நஹிபாலநஸாமர்த்யம்ருதே.)

அவன் ஸர்வவிஷயமாகப் பண்ணின ரக்ஷணங்கிடக்கிடீர், தந்தாங்கால் தாந்தாம்நீட்டி முடக்கவல்லரா யிருக்கிறவர்களுமோரோரளவுகளிலே ஆபந்நரானல் அவற்றைப்போக்கி ரக்ஷிக்கும்படியைப் பார்க்கலாகாதோவென்கிறார் (மாபாவம்விட) ஆனைக்குந்தனக்குத் தக்க வாதமிறே. அல்லாதாரில் ஜ்ஞாநஶக்த்யாதிகளாலே ஓராதிக்யமுண்டிறே அவனுக்கு; அவற்றைக்கொண்டு லோககுருவுமாய்த் தனக்குப் பிதாவுமாயிருக்கிறவன்றலையை யறுத்துப் பாதகியாய்நின்றான், "வாமாஂகுஷ்டநவாக்ரேணச்சிந்நஂ தஸ்யஶிரோமயா" (வாமாங்குஷ்ட்டநகாக்ரேணச்சிந்நம்தஸ்யஶிரோமயா) என்கிறபடியே. மஹாபாபமானது விடும்படியாக.

(அரற்குப்பிச்சைபெய்கோபாலகோளரியேறு) அவன்றான் ஸம்ஹர்த்தாவான வேஷத்தோடே அதிகாரங்குலையாதேநின்று பாபத்தை விளைத்துக்கொள்ள, இவனவனுக்கு துஃகநிவர்த்தகனாயிற்று அங்கேயிங்கே யாவிர்ப்பவித்துத் திரிகிறவிடத்திலேயாயிற்று. இவர்களெத்தனையேனுமுயரநின்றாலு மநர்த்தத்தையேசூழ்த்துக்கொள்ளுமித்தனை, அவனெத்தனையேனுந்தன்னைத் தாழவிட்டாலும் ரக்ஷகனாமென்கையுஞ்சொல்லுகிறது. கோபாலருடைய மிடுக்கை யுடைத்தான ஸிம்ஹபுங்கவமென்றபடி. (கோபாலகோளரியேறு) கோளென்று - மிடுக்காதல், ப்ரதிபக்ஷத்தைக்கொள்ளுமென்னுதல். நித்யஸூரிகளுக்கு நியந்தாவானவன்இடையருக்கு நியாம்யமாகப்பெற்றமேனாணிப்பு. கர்மவஶ்யராயாபந்நரானவிவர்களை "ஈஶ்வரர்கள்" என்போமோ, ஆபத்துக்களைப்போக்கிரக்ஷிக்கிறவிவனை "ஈஶ்வரன்" என்போமோ. ஏறன்றி - அருளாலளிப்பாராரென்றந்வயம். ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (ஏபாவமித்யாதி) " மாபாவம்விடவரற்குப்பிச்சை பெய் " என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகையை ஶங்காபரிஹாரமுகேநாஹ (அல்லதில்லையித்யாதி) (அவர்களுக்கும் சிலப்ரமாணங்களென்றது) " [illegible] " (ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே) " [illegible] " (ஶிவஏவகேவலஃ) " [illegible] " (ஏகஏவருத்ரோநத்விதீயாயதஸ்த்தே) இத்யாதியைநினைத்து. (அவர்கள் நிலைகளையிதி) அர்த்தப்ரகரணாதிகளாலே ஹிரண்யகர்ப்பாதிஶப்தங்களெல்லாம் பரமாத்மபரங்களென்றுபாவம்.

ஓ என்பானென்னென்ன (விஷாதேத்யாதி) " ஏபாவம் " என்கைக்கு - தமக்குவந்ததென்னென்ன (ரத்நேத்யாதி) விவரணம் (சேதநரித்யாதி) (பரமே) இந்தவுபதேஶமித்யத்யாஹார்யம். " பரமே " என்று துஃகிக்கிறீர், உமக்கு பரமேதென்ன (பகவத்குணேத்யாதி) விவரணம் (இதுநமக்கித்யாதி) இது - உபதேஶம்.

ஏழுலகும், ஈபாவஞ்செய்து - நஶித்தபாபத்தை யுடைத்தாம்படிபண்ணி. " உலகு " என்றது - லோகஸ்த்தசேதநபரம்; " [illegible] " (மஞ்சாஃ க்ரோஶந்தி) இதிவத். " உலகும் " என்றஅபிஶப்தம் - ஸாகல்யபரம். இருந்தகுடியாக - எல்லாருமொக்க. கூடுபூரிக்க - உறையைநிறைக்க. " பாவமீசெய்த " என்றவிடத்திலே - " [illegible] " (உபோஷிதஃபூஜிதோவா த்ருஷ்டோவாநமிதோபிவா। ப்ரஸஹ்யஹரதேபாபம்கோநஸேவேத்தரிந்ததஃ) என்றதநுஸந்தேயம். அருளால் - ஈசெய்து என்று கீழேயந்வயித்தர்த்தம் (இதுதானித்யாதி) அருளால் - அளிப்பாரார் என்று மேலேயுங்கூட்டிபாவம் (இவர்களையித்யாதி) " அருளால் " என்றத்தை - " ஈசெய்து " என்றத்தோடேகூட்டிபலிதம் (அவற்றையித்யாதி) தங்கள் ப்ராயஶ்சித்தத்தாலே போக்கவொண்ணாதோவென்ன (இவர்கள்பண்ணினவித்யாதி) " ஈபாவஞ்செய்து " என்றதுக்கு ப்ரமாணம் (பாவநஇத்யாதி) உத்தரஸ்ரீராமாயணே த்வ்யஶீதிதமோ ஸம்ப்ரத்யகஸ்த்யஃ; " [illegible] " (அத்யத்புதமிதம்வாக்யம்தவராமஶுபாக்ஷரம் | பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவரகுநந்தந.) பாவநஃ - பாபநிவர்த்தகஃ. அளிக்கையிலே ப்ரமாணம் (நஹீத்யாதி) ப்ரதமேம்ஶே, " [illegible] " (நஹிபாலநஸாமர்த்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்|ஸ்த்திதௌஸ்த்திதம்மஹாத்மாநம்பவத்யந்யஸ்யகஸ்யசித்.)

தந்தாங்காலித்யாதியாலே - அல்லாதாரைப்பற்ற ருத்ராதிகளுக்கு வ்யாவ்ருத்தி. தங்கள்கால் தாங்கள்நீட்டி முடக்கவல்லராகைஎன்று - அவர்கள்ஶக்தியை நுச்சீகரிக்கிறபடி. " மா " என்றதுக்குபாவம் (ஆணைக்குமித்யாதி) விவரணம் (அல்லாதாரித்யாதி) தலையறுத்ததுக்கு ப்ரமாணம் (வாமாங்குஷ்டேத்யாதி)

மாத்ஸ்யபுராணே, " ததஃக்ரோதபரீதேநஸம்ரக்தநயநேநச " (ததஃ க்ரோதபரீதேநஸம்ரக்தநயநேநச) இதிபூர்வார்த்தம். ஶப்தார்த்தம் ( மஹாபாப மானதித்யாதி. )

" அரற்கு " என்று-அவனுடையபெருமையையும், " கோபாலகோளரி " என்று - இவனுடைய நிஹீநகுலத்திலவதாரத்தையுஞ் சொன்னதுக்கு ப்ரயோஜந மாஹ ( அவன்றனித்யாதி ) ஹரதீதி - ஹரஃ என்றத்தைப்பற்ற (ஸம்ஹார்த்தாவா னவேஷத்தோடேயென்றது ) அங்கேயிங்கேயாவிர்ப்பவித்து என்றது- " கோபா லகோளரி " என்றத்தைப்பற்ற. இந்தஅபதாந மவதாராந்தரத்திலேயாகிலும், இந்தஅபதாந ஸமபிவ்யாஹ்ருதமான இந்தவவதாரம்-அவதாராந்தரத்துக்கு ஸூசக மென்றபடி. பலிதமாஹ ( இவர்களித்யாதி ) பிச்சைபெய் - பிச்சையிடுகிற. ஶப் தார்த்தம் ( கோபாலருடையவித்யாதி ) கோள் - மிடுக்கும், கொள்கையும். " அரியேறு " என்று - எந்தமேணுணிப்பைச்சொல்லுகிறதென்ன ( நித்யஸூரிகளுக்கி த்யாதி ) மேணுணிப்பு - கர்வம். பாட்டுக்குத்தாத்பர்யம் ( கர்மவஶ்யராயித்யாதி ) " ஏறன்றி " என்றதுக்கந்வயங்காட்டுகிறுர் ( அருளாலித்யாதி )

மாபாவம் விட இத்யாரப்ய, ஏறன்றி - அருளால் - ஏழுலகுமீபாவஞ்செய் து, அருளாலளிப்பாரார் ; ஏபாவம், பரமே இத்யந்வயஃ...............................*



## மூன்றும்பாட்டு.

ஏறனைப்பூவனைப்பூமகடன்னை
வேறின்றிவிண்டொழத்தன்னுள்வைத்து
மேறன்னைமீதிடநிமிர்ந்துமண்கொண்ட
மாறனின்மிக்குமோர்தேவுமுளதே.

### ஆறுயிரப்படி.

( ஏறனை ) * அயர்வறுமமரர்கள் தன்னுடைய ஸௌஶீல்யகுண த்தைக்கண்டு தொழுகைக்காக, ஸர்வேஶ்வரியான பெரியபிராட்டியாரோ டொக்க, அத்யந்தமபக்ருஷ்டரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் தன்னையா ஶ்ரயமாகக்கொடுத்துக்கொண்டிருக்கையாலும், ஸர்வலோகங்களும் திரு வடிகளினுள்ளே யடங்கும்படி யளந்தருளுகையாலு மிவனே ஸர்வேஶ் வரன் ; மற்றில்லையென்கிறுர் ..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவனே ஸர்வஸ்மாத்பரனென்கிறுர்.

ஏறனை - ருஷபவாஹநனனருத்ரனையும். பூவனை - கமலாஸநனனப்ரஹ்மா வையும். பூமகடன்னை-பத்மவாஸிநியாய்த் தனக்கஸாதாரணையான பிராட்டியையு ம். வேறின்றி - தன்றிருமார்பில்வைத்ததிற்காட்டில் வேறுதோன்றுதபடி. தன்னு ள்-தன்றிருமேனிக்குள்ளே. விண் - இந்த ஶீலமறிந்தபரமபதவாஸிகள். தொழ-

தன்னைத்தொழும்படி. வைத்து - வைத்து. மேல்தன்னை-ஊர்த்வலோகத்தை. மீதிட-கீழ்த்தும்படி. நிமிர்ந்து-வளர்ந்து. மண்-பூமியை. கொண்ட-அளந்துகொண்ட. மால்தனில்-பெரியவனை. மிக்கும்-மிகுத்திருப்பது. ஓர்-ஒரு. தேவும் - தேவதாதத்வமும். உளதே - உண்டோ.

ஏகாரம் - வினா ........................................................*

---

## ஈ டு - மூ ன் ரு ம் பா ட் டு.

ஸௌஶீல்யத்தாலும், த்ரைவிக்ரமக்ரமணமாகிற அதிமாநுஷசேஷ்டிதத்தாலு மிவனே யீஸ்வரனென்கிறார்.

( ஏறனை ) ஸர்வேஸ்வரன் " கருடவாஹநன் " என்றிருமாந்திருக்குமாபோலே, ஒரு எருத்தைத்தேடிக் கைக்கொள்ளாண்டிகளைப்போலே யிறுமாந்திருக்கும். ( பூவனை ) " திருநாபிகமலத்திலே அவ்யவதாநேநபிறந்தவனன்றோ " என்றிறுமாந்திருக்கும் சதுர்முகனை. அதாவது-பத்மயோநித்வத்தாலே " அஜன் " என்றபிமாநித்திருக்கை. ( பூமகள்தன்னை ) தாமரைப்பூவில் பரிமளமூபாதாநமாகப்பிறந்தவளாய், போக்யதைகவேஷையாய் " உனக்கேற்கும் " என்னும்படியான ப்ராதாந்யந்தோற்றவிருக்கிறவளை. தன்னை என்று-அவர்களிலிவளுக்குண்டான ப்ராதாந்யமிருக்கிறபடி. " ஏறனை, பூவனை " என்கிற அநாதரோக்தியாலும்-இவள் ப்ராதாந்யந்தோற்றுகிறது.

( விண்டொழவேறின்றித் தன்னுள்வைத்து ) அந்யபரரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும், அநந்யையான பெரியபிராட்டியார்க்கு மொக்க முகங்கொடுத்துவைக்கிற ஶீலத்தை யநுஸந்தித்து விண்ணினுள்ளார் தொழாநிற்பர்கள். " ப்ரஹ்மாதிகளெப்போதுந் திருமேனியைப்பற்றியிருப்பர்களோ " என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க; " ஓரோஆபத்துக்களிலே திருமேனியிலே யிடங்கொடுக்கிறான், அந்நீர்மையை விடமாட்டாமையாலே ஆழ்வார்களத்தையே வாய்ப்புலற்றுகிறார்களத்தனையிறே " என்றருளிச்செய்தார். ( வேறின்றி ) " கூறுளுந்தனியுடம்பன் " என்கிறபடியே, வ்யவஸ்த்திதமாக வுடம்பைக்கொடுக்கை. (விண்டொழ) "மஞ்சா:க்ரோஶந்தி" இதிவத். இங்குள்ளார் " ஐஸ்வர்யம் " என்றிருப்பார்கள், அங்குள்ளார் " ஶீலம் " என்று தோற்றிருப்பர்கள். ( மேறன்னைமீதித்யாதி ) மேல்தன்னை-உபரிதநலோகங்களை, " அப்பால் மிக்கு " என்கிறபடியே விஞ்சவளர்ந்து பூமிப்பரப்பெல்லாந் திருவடிகளின்கீழேயிட்டுக்கொண்ட. ( மாறனில் ) இவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தையுடைய ஸர்வேஸ்வரனிற்காட்டில் ( மிக்குமோர்தேவுமுளதே ) ஒக்கப்பரிமாறுகிற்க,

அ

" கட்டக்குடி " என்று கழிக்கலாந்தெய்வந்தானுண்டோ. எல்லார்தலையிலும் காலைவைத்தவனை " ஈஶ்வரன் " என்னவோ, இவன்காலிலேது கையுண்டவர்களை " ஈஶ்வரர்கள் " என்னவோ ..............................*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (ஏறனையித்யாதி) (ஸௌஶீல்யத்தாலுமிதி) ஸௌஶீல்யகுண மீஶ்வரத்வ ஸாதகமென்று கருத்து.

" ஏறனை " என்றத்தை நிருபகமாகச்சொன்னதுக்குபாவம் ( ஸர்வேஶ்வரனித்யாதி ) அபிமாநிகளுக்கு முகங்கொடுக்கையிறே - ஶீலகுணமென்றபடி. இறுமாந்திருக்கும் - கர்வித்திருக்கும். " பூவனை " என்கிறவிடத்திலும்- அபிமாநந்தோன்றுகிறதென்று கண்டுகொள்வது. இறுமாப்புக்கடியேதென்ன (அதாவதித்யாதி) அயோநிஜத்வ மிறுமாப்புக்கடியென்றுகருத்து. ப்ராதாந்யத்துக்குஶப்தமேதென்ன ( தன்னையென்றித்யாதி ) ஸூசகாந்தரம் ( ஏறனையித்யாதி ) ( அநாதரோக்தியாலுமிதி ) " வ்ருஷபவாஹநன், அப்ஜஸம்பவன் " என்றாற்போலே சொல்லிற்றில்லையேயென்றுகருத்து.

வேறின்றி - ஸமமாக. தன்னுள்வைத்து - தன்திருமேனியிலேவைத்து. ப்ரஹ்மாதிகளுக்கு முகங்கொடுக்கிற விதுக்கு விண்ணினுள்ளார் தொழுவானென்னென்ன ( அந்யபரரானவித்யாதி ) ப்ராஸங்கிகம் ( ப்ரஹ்மாதிகளித்யாதி ) "வேறின்றி" என்றதுக்குபாவம் ( கூறுளுமித்யாதி ) " விண்டொழ " என்றால் - விண்ணுளாரைக்காட்டுமோவென்ன ( மஞ்சாஇத்யாதி ) விண்ணினுள்ளாரொழிய மண்ணினுள்ளார் தொழார்களோவென்ன ( இங்குள்ளாரித்யாதி ) ஶீலத்திலே தோற்றிருக்கையாலே - " விண்டொழ " என்றதித்தனை, எல்லாரும் தொழுவர்களென்று கருத்து.

மேறன்னைமீதிடகிமிர்ந்து - உபரிதநலோகங்களைக்கிட்டும்படி மிஞ்சவளர்ந்து. மாறனில்-மால்தன்னில். ஸர்வேஶ்வரனிற்காட்டில். மிக்குமோர்தேவுமுளதே-மிகுத்திருப்பதொருதேவதையுண்டோ இதிஶப்தார்த்தः. " ஏறு " என்றதுக்குபாவம் (ஒக்கவித்யாதி) கட்டக்குடி-கஷ்டப்படுகிறகுடும்பி. அதிநிர்த்தநகுடும்பி. அல்லாதாரோடொக்கப் பரிமாறுநிற்கச்செய்தே, " இறையிறுக்கமாட்டான் " என்று கழிப்புண்ணும் கட்டக்குடிபோலேயென்றபடி. " உளதே " என்றபிரிநிலையேகாரத்துக்கு பாவம் ( எல்லார்தலையிலுமித்யாதி )

க்ரமேணாந்வயः..........................................................*

---

## நான்காம்பாட்டு.

---

தேவுமெப்பொருளும்படைக்கப்
பூவினான்முகனைப்படைத்த
தேவனெம்பெருமானுக்கல்லாற்
பூவும்பூசனையுந்தகுமே.

## ஆருயிரப்படி.

(தேவும்) சதுர்முகாதி ஸகலபதார்த்த ஸ்ருஷ்டிலீலனுய், தன்னுடைய ஸௌந்தர்யகுணத்தாலே யெனக்கு ஸ்வாமியாயிருந்த வெம்பெருமானல்லது ஸர்வேஸ்வரனு மழகியாருமுளரோ வென்கிருர்......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம்,ஆராத்யதைக்கேடான ஆதிக்யமவனுக்கொழியவில்லையென்கிருர்.

தேவும் - தேவஜாதியையும். எப்பொருளும் - மநுஷ்யாதிஸகலபதார்த்தங்களையும். படைக்க - ஸ்ருஷ்டிக்கைக்காக. பூவில் - திருநாபிகமலத்திலே. நான்முகனை - சதுர்முகனுன ப்ரஹ்மாவை. படைத்த - படைத்த. தேவன் - பரதேவதையான. எம்பெருமானுக்கு - என்னுயனுக்கு. அல்லால் - அல்லது. பூவும் - புஷ்பாத்யுபஹாரமும். பூசனையும் - ஆராதநோபசாரமும். தருமே - வேறு சிலர்க்குத் தருமோ.

தகாதென்று கருத்து.......................................................................*

---

## ஈடு-நான்காம்பாட்டு.

ஸௌகுமார்யத்தாலும் முதன்மையாலு மிவனே யீஸ்வரனென்கிருர்,

(தேவுமித்யாதி) தேவஜாதியையும் ஸகலபதார்த்தங்களையு முண்டாக்குகைக்காக, ஒருபூவிலே நான்குபூப் பூத்தாற்போலே சதுர்முகனையுண்டாக்கினவன். (தேவன்) சதுர்முகஸ்ரஷ்டா வாகையால் வந்தத்யுதியைச்சொல்லுதல், இதுதன்னை லீலையாக வுடையவனென்னுதல், ஸௌந்தர்யாதிகளால் வந்தவிளக்கமென்னுதல். (எம்பெருமானுக் கல்லால்) ஸ்ருஷ்ட்யாத்யுபகாரத்தாலும், ஸ்ருஷ்டிக்குறுப்பான குணங்களாலு மென்னை யெழுதிக்கொண்டவனுக்கல்லது.

(பூவும்பூசனையுந்தருமே) சிக்குத்தலையனுக்குப்பூத்தகாது, பிச்சையுண்ணிக்குப் பூசனைதகாது; பூத்தருவது ஸுகுமாரனுக்கு; பூசனை தருவது முதன்மையுடையவனுக்கு; இவனையொழிந்தார்க்குத் தகாதென்கிருர். [ ஸௌஷ்ப்ருதிர்க்காக்ஷஸ்ஸம்பந்தீதேஜநார்த்தநः ] [ ஸௌஷ்ப்ருதிர்க்காக்ஷஸ்ஸம்பந்தீதேஜநார்த்தநः ] என்று ஸ்ரீபீஷ்மர் செடும்போது அவனுடைய பரத்வத்தை யுபபாதித்துக்கொண்டு போந்து, ஸ்ருதிஸித்தமான கண்ணழகையுடையவன் காணுங்களுக்கு மைத்துனனுய்ப் புகுந்திருக்கிருனென்று பரத்வத்தை யவன்றலையிலேமாட்டெறிந்தார்; "அர்ச்யமர்ச்சிதுமிச்சாமஸ்ஸர்வேஸம்மந்துமர்ஹத" (அர்ச்யமர்ச்சிதுமிச்சாமஸ்ஸர்வேஸம்மந்துமர்ஹத) என்ற ஸஹதேவன்றலையிலே புஷ்பவ்ருஷ்ட்டியைப்பண்ணினுர்களிறே. இத்தால் - ஜ்ஞாநத்திற் காட்டில் வைராக்யத்துக்குண்டான ப்ராதாந்யஞ்சொல்லுகிறது. ........... ..........................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (தேவுமித்யாதி) "பூவும்பூசனையும்" என்றத்தைப்பற்றவாதல், "தேவன்" என்ற - காந்தியையும், "எம்பெருமான்" என்றத்தையும் பற்றவாதல் (ஸௌகுமார்யத்தாலும் முதன்மையாலுமென்றது) யத்வா, "பூவில்" என்ற - பத்மநாபத்வத்தாலே, இரண்டும் ஸித்தமாதல். பத்மநாபத்வம் பரத்வாஸாதாரணமிறே.

ப்ரஹ்மாவையென்னுமல், "நான்முகன்" என்றதின் பாவம் (ஒருபூவிலேயித்யாதி) "திவ்ஃக்ரீடாவிஜிகீஷா வ்யவஹாரத்யுதிஸ்துதிமோதமதஸ்வப்நகாந்திகதிஷு" (திவுக்ரீடாவிஜிகீஷா வ்யவஹாரத்யுதிஸ்துதிமோதமதஸ்வப்நகாந்திகதிஷு) என்கிறதாதுவை யுட்கொண்டர்த்தம் (சதுர்முகேத்யாதி) இதுதன்னை - ஸ்ருஷ்டியை. இப்பக்ஷத்தில், தேவன் - க்ரீடாபரன். விளக்கம் - காந்தி; அத்தாலே - காந்தனென்ருய், அதிமனோஹரனென்றபடி. "படைத்த" என்றத்தைப்பற்ற (ஸ்ருஷ்ட்யாதிதி) ஸ்ருஷ்டிக்குறுப்பான குணங்களாலுமென்றது- "நான்முகனைப்படைத்த" என்று - ஸ்ருஷ்டிசொன்னுற்போலே ததுபயுக்தஜ்ஞாநஶக்த்யாதிகுணங்களு மர்த்தஸித்தங்கள்.

"தகுமே" என்ற பிரிநிலை யேகாரத்துக்கு பாவம் (சிக்குத்தலையனித்யாதி) சிக்குத்தலையன் - ப்ரஹ்மா; ஜடாவானுகையாலே. ருத்ரனுதல். ருத்ரபக்ஷே "பூவும்பூசனையுந்தகுமே" என்றது - ருத்ரனுக்கேயர்வயிப்பது - ஆகில், தகுவதார்க்கென்ன (பூத்தகுவதித்யாதி) இத்தால்-தபோநிஷ்டனுகையாலே ஸௌகுமார்யமும், உபாஸகனுகையாலே முதன்மையும் ருத்ரனுக்கில்லையென்று கருத்து. "முதன்மையுடையவனுக்கு" என்றவநந்தரம், ஆகையாலே இத்யத்யாஹார்யம்.

"அல்லதில்லையோர்கண்" "கோளரியேறன்றி யருளாலளிப்பாரார்" இத்யாதியாலே- பலகாலும் வ்யதிரேகநிர்த்தேஶத்தாலே வைராக்யஞ்சொல்லுகிறதுக்குக்கருத்து - ஜ்ஞாநத்திற் காட்டில் வைராக்யத்துக் காதிக்ய ப்ரதர்ஶநார்த்தமென்னுமிடத்தை ஸப்ரமாணமாக வருளிச்செய்கிறர் (ஸஏஷஇத்யாதி) இதம் பாரதே ராஜஸூயே பகவத்பரத்வம் பஹுமுகேநோக்த்வா பீஷ்மஆஹ. தத்ரைவ ஸஹதேவः, "தமிமம்ஸர்வஸம்பந்நமாசார்யம்பிதரங்குரும்। அர்ச்யமர்ச்சிதுமிச்சாமஸ் ஸர்வேஸம்மந்துமர்ஹத" (தமிமம்ஸர்வஸம்பந்நமாசார்யம்பிதரங்குரும்। அர்ச்யமர்ச்சிதுமிச்சாமஸ் ஸர்வேஸம்மந்துமர்ஹத) "மாநிநாம்பலிநாம்ராஜ்ஞாம்மத்யேஸந்தர்ஶிதேபதே। ததோபதத்புஷ்பவ்ருஷ்டிஸ்ஸஹதேவஸ்யமூர்த்தநி" (மாநிநாம்பலிநாம்ராஜ்ஞாம்மத்யேஸந்தர்ஶிதேபதே। ததோபதத்புஷ்பவ்ருஷ்டிஸ்ஸஹதேவஸ்யமூர்த்தநி.) (ஶ்ருதிஸித்தமான) "தஸ்யயதா" (தஸ்யயதா) இத்யாதி ஶ்ருதிஸித்தமான. இது - "ஏஷः" (ஏஷः) என்றிருக்க, "ஸः" என்றதின்தாத்பர்யம். அயம் என்னுமல், "ஏஷः" (ஏஷः) என்றது - ஶப்தமுகேந "ஏஷோந்தராதித்யே" (ஏஷோந்தராதித்யே) இத்யாதிஶ்ருதிப்ரத்யபிஜ்ஞாநார்த்தம். மைத்துனனுய் - அத்தைப்பிள்ளையாய். மாட்டேறிகை - ஏறிடுகை. (அர்ச்யமித்யாதி) தமிமமர்ச்யமிச்சாமः; யூயம்ஸர்வே, அர்ச்சிதும் - அர்ச்சயிதும், ஸம்மந்தும் - ஸம்மதிங்கர்த்தும், அர்ஹதேதியோஜ

நா. "ஊநிநாம" (மாகிநாம்) இத்யாத்யுத்தரஸ்லோகத்தை யுட்கொண்டருளி ச்செய்கிறார் (என்றஸஹதேவனித்யாதி) இத்தால் - பஹுமுகமாக பரத்வத்தை யுபபாதித்த ஜ்ஞாநியான பீஷ்மர்தலையிலே புஷ்பவ்ருஷ்டிகண்டதில்லை; தேவதாந்தரங்கள்பக்கல் ஸரக்கறுத்து "ஊநிநாம" (மாகிநாம்) இத்யாதிப்படியே- நான்சொன்னத்தை ஸம்மதியாதேயிருக்கிறவன்றலையிலே யென்காலை வைக்கிறே னென்று ஸஹதேவன் காலைக்காட்டினபோ தவன்றலையிலே புஷ்பவ்ருஷ்டி யுண்டாயிற்று; ஆகையால், ஜ்ஞாநத்திற்காட்டில், இதரவிஷயத்தில் ஸரக்கறுக்கை யாகிற - வைராக்யம் ஸ்ரேஷ்டமென்றபடி. இத்தால்-புஷ்பவ்ருஷ்டிப்ரதிபாதநத்தால்.

க்ரமேணுர்வயः.........................................................................*



## ஐந்தாம்பாட்டு.

தருஞ்சீர்த்தன்றனிமுதலினுள்ளே
மிகுந்தேவுமெப்பொருளும்படைக்கத்
தருங்கோலத்தாமரைக்கண்ணனெம்மான்
மிகுஞ்சோதிமேலறிவார்யவரே.

### ஆறாயிரப்படி.

(தருஞ்சீர்) தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்துக் குசிதமான கல்யாணகுணங்களை யுடையனாய், ஸ்வஸங்கல்பகல்பிதநிகிலஜகத்தையுடையனாய், தன்னுடைய ஸர்வேஸ்வரத்வோசிதமான அழகியதிருக்கண்களையுடையனாயிருந்த வெம்பெருமானுடைய திருமேனியினழகு ஒருவர்க்கு நினைக்கநிலமோவென்கிறார்............................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்பரத்வஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தை யருளிச்செய்கிறார்.

தரும் - ஸ்ருஷ்ட்யாதிகளுக்குத் தகுதியான. சீர் - ஜ்ஞாநஸக்த்யாதிகளையுடையனான. தன் - தன்னுடைய. தனி - அத்விதியமாய். முதலினுள்ளே-ஜகத்துக்கு மூலமான ஸங்கல்பத்துக்குள்ளே. மிகும் - "ஈஸ்வரன்" என்று ஸங்கிக்கலாம்படி மிக்க. தேவும் - ப்ரஹ்மருத்ராதிதேவஜாதியையும். எப்பொருளும் - மநுஷ்யாதிஸகலபதார்த்தங்களையும். படைக்க -ஸ்ருஷ்டிக்க. தரும் - "இவன்றனக்குத்தகும்" என்னஸூசகமான. கோலம் - அழகிய. தாமரை - தாமரைபோன்ற. கண்ணன்- கண்களையுடைய. எம்மான் - என்ஸ்வாமியானவனைக்காட்டிலும். மிகுஞ்சோதி-பரஞ்ஜ்யோதிஸ்ஸு. மேல் - இதுக்குமேலொருதத்த்வமுண்டென்று. வைதிகரில் அறிவார் - அறிவார். யவர் - ஆர்.

உண்டென்றறிவார் - அவைதிகரென்றுகருத்து.........................................*

## ஈரு - ஐந்தாம்பாட்டு.

புண்டரீகாக்ஷனுகையாலு மிவனேயீஸ்வரனென்கிறார்.

( தருமித்யாதி ) ஸ்ரஷ்ட்ருத்வத்துக் குபயோகியான ஜ்ஞாநஸக்த்யாதிகளையுடையனுன ( தன்தனிமுதலினுள்ளே ) கார்யவர்க்கத்துக்குடைய காரணமான மூலப்ரக்ருதியைச்சொல்லுதல், " பஹுஸ்யாம் " ( பஹுஸ்யாம் ) என்கிற - அதுக்குமடியான ஸங்கல்பஜ்ஞாநத்தைச்சொல்லுதல். ( தனிமுதல் ) ஏககாரணமென்று - பரமாணுகாரணவாதிகளை வ்யாவர்த்திக்கிறது. (மிகுமித்யாதி) தன்னோடு மசக்குப்பரலிடலாம்படியான தேவஜாதியையும். வில்லைவளைத்தபோதாக " அதிகம்மேநிரேவிஷ்ணும் " ( அதிகம்மேநிரேவிஷ்ணும் ) என்னும்படியிறே யிவர்கள்மிகை. ( எப்பொருளும் ) " மற்றுமுண்டான ஸகலபதார்த்தங்களையு முண்டாக்குகைக்குத் தருவானொருவன் " என்னுமிடத்தைத் தெரிவிப்பதாய், ரக்ஷகத்வமில்லையானாலும் தர்ஸநீயமாய்க்குளிர்ந்திருக்கிற திருக்கண்களையுடையனாய், அக்கண்ணழகாலே யென்னையடிமைகொண்டவனே மிக்க தேஜஸ்ஸையுடையான். திருவடிதோற்றதுறையிலே யிவருந்தோற்றது, [ராமः] [ராமः] ஸர்வாங்கஸுந்தரராயிருக்கை. [கமலபத்ராக்ஷः] [கமலபத்ராக்ஷः] அதிலேயொருசுழியாயிற்று அமிழ்ந்துவார்க்குவேண்டுவது. அக்கண்ணழகுக்கெல்லை யென்னென்னில் [ஸர்வஸத்த்வமநோஹரः] [ஸர்வஸத்த்வமநோஹரः] திர்யக்ஜாதீயனுய்ப் பணையோடுபணைதத்தித்திரிகிற என்னெஞ்சையு மபஹரித்ததன்றோ. [ரூபதாக்ஷிண்யஸம்பந்நः ப்ரஸூதः] [ரூபதாக்ஷிண்யஸம்பந்நःப்ரஸூதः] தேஹகுணங்களாலு மாத்மகுணங்களாலுங்குறையற்றதுதான் ஔத்பத்திகமாயிருக்கும். [ஜநகாத்மஜே] " அறவிஞ்சச்சொன்னாய், இனியிங்ஙன்சொல்லலாவாருண்டோ வில்லையோ! " என்று பிராட்டிக்குக்கருத்தாக [ஜநகாத்மஜே] [ஜநகாத்மஜே] பின்னையும்மைச்சொல்லலாம், நீருமுண்டு. (மிகுஞ்சோதி) " பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய, " ( பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ) " நாராயணபரோஜ்யோதிः " ( நாராயணபரோஜ்யோதிः ) என்று, நாராயணநுவாகாதிகளிலே யிவனே பரஞ்ஜ்யோதிஸ்ஸென்றோதப்படுகிறான் (மேலறிவார்யவரோ) " இவனையொழிய நாராயணநுவாக ஸித்தமாயிருப்பதொரு வஸ்துவுண்டு " என்றறிவாராரோனுமுண்டோ. (யவரோ) [வைதிகாः கஃ] [வைதிகஃகஃ] என்னுமாபோலே. அநந்யபரமான நாராயணநுவாகாதிகளிலே ப்ரதிபாதிக்கப்பட்ட வைபவத்தையுடைய வுன்பக்கலிலே பொருமைகொண்டாடியிருப்பானொரு வைதிகனுண்டோ. உண்டாகி லவனைவைதிகனுமித்தனை ; " தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம் " ( தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம் )......................................*

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு. (தருஞ்சீரித்யாதி) "தாமரைக்கண்ணன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (புண்டரீகேத்யாதி)

தன்றனிமுதலினுள்ளே மிருந்தேவுமெப்பொருளும்படைக்க - தருஞ்சீரையுமுடையனாய், தருங்கோலத்தாமரைக்கண்ணையுடையவெம்மான் மிருஞ்சோதிமேலறிவார்யவர் என்றந்வயித்தர்த்தம் (ஸ்ரஷ்ட்ருத்வத்துக்கித்யாதி) இதுவேபாட்டுக்கர்வயம். தன்-தன்னுடைய. (தனிமுதலினுள்ளே) அத்விதீயகாரணமான மூலப்ரக்ருதிக்குள்ளே யென்னுதல், ஸங்கல்பரூபஜ்ஞாநத்துக்குள்ளேயென்னுதல் என்று ஶப்தார்த்தம். அநுக்ரமடி-ப்ரக்ருதி, காரணமாகைக்குமடி, "மயாத்யக்ஷேண ப்ரக்ருதிஸ்ஸூயதே ஸசராசரம்" (மயாத்யக்ஷேண ப்ரக்ருதிஸ்ஸூயதே ஸசராசரம்) என்னக்கடவதிறே. மூலப்ரக்ருதிபரமானபக்ஷத்தி லருளிச்செய்கிறார் (ஏககாரணேத்யாதி) பரமாணுகாரணவாதிகளை - அநேகபரமாணுகாரணவாதிகளையென்றபடி. "அநேகபரமாணுக்கள்கூடி யொருகார்யத்தையுண்டாக்குகிறது" என்றிறே யவர்கள்சொல்லுவது.

அதிஶபஸ்யாவதிமாஹ (தன்னேடித்யாதி) மசக்குப்பரலிடலாம்படி-ஸம்ஶயிக்கும்படி. மசக்கு - ஸம்ஶயம். பரல்-விரை. ஸம்ஶயத்தைப்பண்ணும் விரையென்று ஶப்தார்த்தம். அதாவது - பயல்கள்கோடுகீறி, ஸங்கேதபூர்வகமாக ஆடுகிற புளியின்விரை. அப்படிமிருந்திருப்பார்களோவென்ன (வில்லையித்யாதி) பாலகாண்டே ஜாமதக்ந்யப்ராதுர்ப்பாவாநந்தரோப்ராஸங்கிகதா, "ஜ்ரும்பிதம் தத்தநுர்த்ருஷ்ட்வா ஶைவம் விஷ்ணுபராக்ரமை꞉। அதிகம் மேநிரே விஷ்ணும் தேவாஸ்ஸர்ஷிகணாஸ்ததா" (ஜ்ரும்பிதந்தத்தநுர்த்ருஷ்ட்வா ஶைவம்விஷ்ணுபராக்ரமை꞉। அதிகம்மேநிரேவிஷ்ணுந்தேவாஸ்ஸர்ஷிகணாஸ்ததா.)

(மற்றுமுண்டானவிதி) "படைக்கத்தரும் தாமரைக்கண்ணன்" என்றஸமபிவ்யாஹாரத்தாலே - தருமைக்குப்ரகாஶகங்களான திருக்கண்களென்கிற வர்த்தந்தோற்றுகிறதென்றபடி. "தாமரை" என்றதின்பாவம் (தர்ஶநீயமித்யாதி) ஸமபிவ்யாஹாரஸித்தார்த்தமாஹ (அக்கண்ணழகாலேயித்யாதி) கண்ணழகிலே தோற்றமையை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார். (திருவடியித்யாதி) அப்படி, திருவடி, கண்ணழகிலே தோற்றிருக்குமோவென்ன (ராமஇத்யாதி) இந்த ஶ்லோகம் ஸுந்தரகாண்டத்தில் திருவடிவாக்யம். எடுத்தஶ்லோகத்துக்கர்த்தம் (ஸர்வாங்கேத்யாதி) ரமயதீதி - ராம꞉என்று - ஸர்வாங்க ஸௌந்தர்யங்களாலே யுமீடுபடுத்துமவனென்றுகொண்டு (ஸர்வாங்கஸுந்தரராயிருக்கையென்கிறார்) அதிலே - ஸௌந்தர்யத்திலே. பரபுத்தேரப்ரத்யக்ஷத்வாத் ஸர்வஸத்த்வமநோஹரத்வமெப்படிதோற்றுமென்ன (திர்யகித்யாதி) பணை - சாகை. தத்தி-குதித்து. "ஸம்பந்ந꞉" என்கையாலே (குறையற்றென்றது) ஸம்பந்நஸ்ஸந் - ப்ரஸூத꞉-ஸம்பந்நராய்க்கொண்டே பிறந்தாரென்கையாலே (ஔத்பத்திகமென்கிறது) தேஹகுணங்களாலுமென்றது - சிழ் "ராம꞉" என்கிறவிடத்திற்சொன்ன ஸௌந்தர்யவ்யதிரிக்த ஸௌகந்த்யஸௌகுமார்யாதி தேஹகுணபரம்; அதோநபௌநருக்த்யம். குணதாக்ஷிண்யாபிதாநம் - குணாந்தரோபலக்ஷணம். ஸம்போதிக்கிறவனுடையபா

வத்தை யாகாங்க்ஷாபூர்வகமாக வருளிச்செய்கிறார் ( அறவிஞ்சவித்யாதி ) அறவிஞ்ச - மிகவுமதிகமாக. ( பின்னையும்மைச்சொல்லலாம் ) அடியேதொடங்கி யவனை யபிமுகீகரித்துச்சொல்லாநிற்க, அநபேக்ஷிதமான ஸம்போதநத்துக்கிதுவேகருத்தென்று தாத்பர்யம். உம்மைப்பெற்றவனேயிறே ஜநகனென்றபடி.

"மிகுஞ்சோதி" என்றதுக்குபாவம் ( பரஞ்ஜ்யோதிரித்யாதி ) "[illegible]" ( பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ) இதி சாந்தோக்யே. ( நாராயணபரோஜ்யோதிঃ ) நாராயணঃபரஞ்ஜ்யோதிঃ என்றபடி. விஸர்க்கலோபஶ்சாந்தஸঃ. ( ஆரோனுமுண்டோ ) இல்லையென்றபடி. அந்தப்பிதற்றம் லோகத்தில் பாசுபதாத்யாகமங்களிலே நடையாடாநிற்கிறதேயென்ன; "யவரோ" என்று - எந்தவைதிகனென்று விவக்ஷிதமென்கிறார் ( யவரோயென்று ) இப்படி விவக்ஷித்ததுக்கு ஸம்வாதம் ( வைதிகঃகঃ இத்யாதி ) ஸ்தோத்ரே, "[illegible]" ( ஸ்வாபாவிகாநவதிகாதிஶயேஶித்ருத்வந்நாராயணத்வயிநம்ருஷ்யதிவைதிகঃகঃ ) இதி. எடுத்தஶ்லோகத்துக்கு, "கঃ" என்று - க்ஷேபத்திலேயாய், தாத்பர்யம் ( அநந்யபரமானவித்யாதி ) அநந்யபரமான - தேவதாந்தரபரத்வஸம்பாவநா விதுரமான. "[illegible]" ( வைதிகঃ ) என்று விஶேஷிக்கிறவர்க்கு பாவமாறு ( உண்டாகிலித்யாதி ) வேதாத்யயநம்பண்ணினவர்களை "அவைதிகர்" என்கிறதென்னென்ன ( தஸ்யோத்பத்திரித்யாதி ) விஷ்ணுபக்தியில்லாமையாலே "அவைதிகர்" என்கிறதென்றபடி. பாத்மபுராணே, "[illegible]" ( விஷ்ணுபக்திவிஹீநோயஸ்ஸர்வஶாஸ்த்ரார்த்தவேத்யபி । ப்ராஹ்மண்யம் தஸ்யநபவேத்தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம். ) உத்பத்திநிரூபணம் "[illegible]" ( யঃபுத்ரঃபிதரம்த்வேஷ்டி ) இத்யாதி ஶ்லோகத்திலே கண்டுகொள்வது.

அந்வயঃபூர்வோக்தঃ ........................................................*

---

# ஆறாம்பாட்டு.

யவரும்யாவையுமெல்லாப்பொருளுங்
கவர்வின்றித்தன்னுள்ளொடுங்கநின்ற
பவர்கொள்ஞானவெள்ளச்சுடர்மூர்த்தி
யவரெம்மாழியம்பள்ளியாரே.

## ஆறாயிரப்படி.

( யவரும் ) அஸம்பாதமாகத்தன்னுள்ளே வைக்கப்பட்ட ஸர்வஜகத்தையுமுடையனாய், ஸ்வாபாவிகஸார்வஜ்ஞத்தை யுடையனாய்; *க்ஷீரார்ணவநிகேதநனான வண்டுவரைப்பெருமானே ஸர்வேஶ்வரனென்கிறார்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தருளி னானென்கிறார்.

யவரும் - எல்லாச்சேதநரும். யாவையும் - எல்லாவசேதநங்களு மாகிற. எல்லாப்பொருளும் - ஸமஸ்தபதார்த்தங்களும். கவர்வின்றி - சோர்வின்றி. தன்னுள் - தன்ஸ்வரூபைகதேஶத்திலே. ஒடுங்க - அடங்கும்படியாக. நின்ற - நின்ற. பவர்கொள் - பரப்பையுடைத்தான. ஞானவெள்ளம் - ஞானவெள்ளத்தை. சுடர் - தனக்கு ப்ரபையாகவுடைய. மூர்த்தி - ஸ்வாமிகளான. அவர் - ஸர்வாதிகரானவர். எம் - நமக்குபோக்யமாய். அம் - தர்ஶநீயமான. ஆழி - க்ஷீரார்ணவத்திலே. பள்ளியார் - கண்வளர்ந்தருளுகிறார்.

கவர்வு - சோர்வு. பவர்வு - பரப்பு. சுடர்மூர்த்தி - விக்ரஹமாகவுமாம். *

---

## ஈடு - ஆரும்பாட்டு.

ஆபத்ஸகனாகையாலு மிவனே யீஶ்வரனென்கிறார்.

(யவருமித்யாதி) சேதநவர்க்கத்தையு மசேதநவர்க்கத்தையும், இப்படி யிரண்டுவகையாகச் சொன்னவற்றைக் கூட்டி, இப்படியிருக்கிற ஸகலபதார்த்தங்களும் ப்ரளயாபத்திலே தன் வயிற்றிலே சேரும்படியானபோது. (கவர்வின்றி) கவர்கையாவது - க்ரஹிக்கை. அதாவது-ஹிம்ஸையாய், ஒருவனையொருவர் நெருக்காதபடி.

(தன்னுளொடுங்க நின்ற) "தஸ்யைதஸ்ய ஸர்வம் தஸ்ய குக்ஷௌ மஹாத்மந:" (ததபஶ்யமஹம்ஸர்வம் தஸ்யகுக்ஷௌமஹாத்மந:) என்னக்கடவதிறே. தன்னுள் - தன் ஸங்கல்பைகதேஶத்திலேயென்னவுமாம் (பவர்கொளித்யாதி) இவர்களை ரக்ஷிக்கைக்குறுப்பான பரம்பின ஞானவெள்ளத்தை யுடையனாய், "இப்படி ரக்ஷிக்கப்பெற்றவிடம் தன் பேறு" என்று தோற்றும்படியிருக்கிற திவ்யவிக்ரஹத்தை யுடையரான அவர். (எம்மாழியம் பள்ளியாரே) தாம் ஸம்ஸாரமத்யஸ்த்தரா யிருக்கையாலே யெல்லாரையுங்கூட்டிக்கொண்டு, எங்களுடைய ரக்ஷணார்த்தமாக வந்து ஏகார்ணவத்தை அழகிய படுக்கையாகவுடையரானார். "பாட்டும்பள்ளியும்பாழியும்படுக்கை." இப்படி யாபத்ஸகனாய் அணியனாகையாலு மிவனே யீஶ்வரனென்கிறார். ...... ..............................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (யவருமித்யாதி) "தன்னுளொடுங்கநின்ற" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஆபத்ஸகேத்யாதி)

(யவரும்யாவையுமெல்லாப்பொருளும்) சேதநருமசேதநங்களுமானவெல்லாப்பொருளுமென்று ஶப்தார்த்தம். உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (ததபஶ்

யமித்யாதி) ஆரண்யபர்வணி தர்மபுத்ரம் ப்ரதிமார்க்கண்டேய:, "யச்சகிஞ்சிந்மயாலோகே த்ருஷ்டம்ஸ்த்தாவரஜங்கமம் । ததபஶ்யம்)" (யச்சகிஞ்சிந்மயாலோகே த்ருஷ்டம்ஸ்த்தாவரஜங்கமம் । ததபஶ்யம்) இத்யாதி. "தன்னுள்" என்று - ஸங்கல்பபரமானபோது, "கவர்வின்றி" என்றது - ஒன்றுந் தப்பாதபடி யென்று பொருள்; "ஒடுங்க" என்றது - மஹாஸம்ஹாரபரம்; திருவுதரபரமானபோது, அவாந்தரப்ரளயபரம்.

பவர்கொள் - பரம்புதலையுடைய. "சுடர்" என்றதிலே நோக்காகபாவம் (இப்படியித்யாதி) மூர்த்தியான - அவனொன்றந்வயித்தர்த்தம் (திவ்ய விக்ரஹத்தையுடையரானவவனொன்று) "எம்" என்றபஹுவசனார்த்தம் (தாம்ஸம்ஸாரேத்யாதி) ஏகார்ணவம் - ப்ரளயஜலதி. "பள்ளி" என்று படுக்கையைச் சொல்லுமோவென்ன (பாயலுமித்யாதி) "ஆழியம்பள்ளியார்" என்றத்தைப்பற்ற (அணியனுகையாலுமென்றது)

க்ரமேணாந்வய:.........................................................*

# ஏழாம்பாட்டு.

பள்ளியாலிலையேழுலகுங்கொள்ளும்
வள்ளல்வல்வயிற்றுப்பெருமா
னுள்ளுளாரறிவாரவன்றன்
கள்ளமாயமனக்கருத்தே.

## ஆறாயிரப்படி.

(பள்ளியாலிலை) ஸர்வலோகாவகாஶ ப்ரதத்வபரமௌதார்யத்தையுடைத்தாய், ஸர்வலோகபரண ஸமர்த்தமாயிருந்த தன் வயிற்றிலே ஸர்வலோகத்தையும்வைத்துக்கொண்டு ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகிற இவனுடைய ஸர்வேஶ்வரத்வ சிஹ்நபூத திவ்யசேஷ்டிதங்களுக்கொரு முடிவுண்டோவென்கிறார்...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வடதளஶாயித்வரூபமான அகடிதகடநா ஸாமர்த்த்யத்தாலே அவன் பரத்வம் தரவபோதமென்கிறார்.

பள்ளி - படுக்கை. ஆலிலை - ஆலிலையாக. ஏழுலகும் - எல்லாலோகத்தையும். கொள்ளும் - கொள்ளுகைக் கிடங்கொடுக்கும். வள்ளல் - ஔதார்யத்தையும். வல் - ஶக்தியையுமுடைத்தான. வயிறு - வயிற்றையுடைய. பெருமான் - ஸர்வாதிகனானவனுடைய. கள்ளம் - ஒருவர்க்குந்தோன்றுதே. மாயம் - ஆஶ்சர்யமான. மனக்கருத்து - மாநஸவ்யாபாரம் - ஜகதர்த்தமான ரக்ஷணசிந்தாவ்யாபாரம். உள்ளுள் - மாநஸவ்யாபாரத்தாலே. அறிவார் - அறியுமவர்கள். ஆர் - ஆர்.

எவர்க்குமறியவரிதென்றுகருத்து......................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அகடிதகடநாஸாமர்த்யத்தாலு மிவனே யீஸ்வரனென்கிறார்.

(பள்ளியாலிலை) படுக்கை, பவனாயிருப்பதொரு ஆலந்தளிர். (ஏழுலகுங்கொள்ளும்) இப்படுக்கையிலே ஸப்தலோகங்களையும் வயிற்றிலேவைத்துக்கண்வளரும். (வள்ளல்) புக்கலோகங்களுக் கவ்வருகே "இன்னங்கொடுவா" என்னும்படி யிடமுடைத்தாயிருக்கை. (வல்வயிற்றுப்பெருமான்) உட்புக்கபதார்த்தங்களுக்கு பயப்ரஸங்கமின்றியே யொழியும்படி மிடுக்கையுடைத்தாயிருக்கை. (பெருமான்) இப்படி ரக்ஷிக்கவேண்டிற்றுடையவனுகை. அவனுடைய, உள்ளுளாயகள்ளமாய மனக்கருத்தையாரறிவார் - கண்டதொன்றைச்சொன்ன வித்தனைபோக்கி, உள்ளுள் - இன்னமுள்ளேயுள்ளேயுண்டாய், கள்ளமாய் - ஒருவர்க்குந்தெரியாதபடியாய், மாயமாய் - ஜ்ஞாதாம்ஸமாஸ்சர்யமா யிருக்கிற அவனுடைய, மனக்கருத்து - மநோவ்யாபாரதை, ஒருவராலறியலா யிருக்கிறதோ......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (பள்ளியித்யாதி) "பள்ளியாலிலை" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (அகடிதேத்யாதி) "மண்ணும்விண்ணுமெல்லாமுடனுண்ட" என்றது - இத்திருவாய்மொழியி னர்த்தஸங்க்ரஹ ரூபமாகையாலும், "யவரும்யாவையும்" இத்யாதி - ஆபத்ஸகத்வபரமாகையாலும், "பள்ளியாலிலை" இத்யாதி - அகடிதகடநாஸாமர்த்யபரம்; அதோநபௌநருக்த்யம்.

பவனாயிருப்பது - பவனாயிருப்பது; அப்போதுண்டாயிருப்ப தென்றபடி.

"அவாந்தரப்ரளயத்தில் வயிற்றிலேவைத்தது க்ருதகமான த்ரைலோக்யமாயிருக்க, 'ஏழுலகும்' என்றது - ரக்ஷகத்வப்பாரிப்பாலே; மஹாபலியபஹரித்தது த்ரைலோக்யமாயிருக்க, ஸத்யலோகபர்யந்த மளந்தாற்போலே" என்றருளிச்செய்வர். "வள்ளல்" என்றது - வயிற்றுக்குவிசேஷணம். இவ்விடத்திலே - "இவ்வேழுலகமுண்டுமிடமுடைத்தால்" என்றதநுஸந்தேயம். "வல்" என்ற - வன்மைக்குபாவம் (உட்புக்கவித்யாதி)

அவனுடைய உள்ளுளாயவென்றது - கருத்துக்கு விசேஷணம். நீரறிந்து சொன்னீரோயென்ன (கண்டதொன்றையித்யாதி)

ஆலிலையைப்பள்ளியாகவுடையனாய், ஏழுலகுங்கொள்ளும் வள்ளல் வல்வயிறுடையுடைய பெருமானானஅவன்றன்னுடைய வுள்ளுளாய - கள்ளமாய மனக்கருத்தை - ஆரறிவார் இத்யந்வயஃ.......................................*

---

## எட்டாம்பாட்டு.

கருத்திற்றேவுமெல்லாப்பொருளும்
வருத்தித்தமாயப்பிரானையன்றியாரோ
திருத்தித்திண்ணிலைமூவுலகுந்தம்மு
ளிருத்திக்காக்குமியல்வினரே.

## ஆறாயிரப்படி.

(கருத்தில்) ஸ்ருஷ்ட்டிரக்ஷணங்கள்பிங்கர்த்த்ருகமல்லவோ, இவற்றைப்பரமபுருஷைக கர்த்த்ருகமாகச் சொல்லுவாருண்டோவென்னில்; பெற்றமாதாவேபுத்ரரக்ஷணம்பண்ணுகிறப்போலேஸ்ருஷ்ட்டித்தவனேரக்ஷிக்கப்ராப்தம், ஆதலால்ரக்ஷிக்கிறுன் பரமபுருஷனே. ஸ்ருஷ்ட்டிரக்ஷணங்களிரண்டும் பரமபுருஷைககர்த்த்ருகமென்கிறுர்..................*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், ஸர்வப்ரகாரரக்ஷக னவனேயென்கிறுர்.

கருத்தில் - தன்னினைவாலே. தேவும் - தேவவர்க்கமும். எல்லாப்பொருளும் - மநுஷ்யாதிஸகலபதார்த்தங்களும். வருத்தித்த - ஸத்தைபெற்றுஅபிவ்ருத்தமாம்படியுண்டாக்கின. மாயம் - ஆஶ்சர்யஶக்த்யாதிகளையுடைய. பிரானை - ஈஶ்வரனை. அன்றி - ஒழிய. ஆரோ - ஆர்தான். மூவுலகும் - ஸமஸ்தலோகத்தையும். திண் - திண்ணிதான. நிலை - நிலையையுடைத்தாம்படி. திருத்தி-அநிஷ்ட்டநிவ்ருத்யாதிகளாலேதிருந்தச்செய்து. தம்முள் - தன்னினைவுக்குள்ளே. இருத்தி - அவற்றைப்ரதிஷ்ட்டிதமாக்கி. காக்கும்-ரக்ஷிக்கும். இயல்வினர் - ஸ்வபாவத்தையுடையார். ரக்ஷணைகஸ்வபாவ னவனென்றுகருத்து....................................*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

ஸ்ருஷ்ட்டியும் பாலநமும் ஸ்வாதீநமாகவுடையவனுகையாலே யிவனேயீஶ்வரனென்கிறுர்.

(கருத்திலித்யாதி) தன்னுடையஸங்கல்பத்திலே தேவஜாதியையும் மற்றுமுண்டானஸகலபதார்த்தங்களையும், வர்த்திப்பித்த-உண்டாக்கின. ஸ்ருஷ்ட்டித்த. ஆஶ்சர்யபூதனானஸர்வேஶ்வரனையன்றி, மூன்றுலோகங்களையும் திண்ணிதானஸ்த்திதியை யுடைத்தாம்படியாகத்திருத்தி, தம்முளிருத்தி, அவ்வோபதார்த்தங்களுக் கநுரூபமான ரக்ஷணங்களையும் திருவுள்ளத்தேவைத்து, காக்கும் - “ நஹிபாலநஸாமர்த்ய ” ( நஹிபாலநஸாமர்த்யம் ) என்கிறபடியே ரக்ஷணத்தைப்பண்ணும். ( இயல்வினரே ) இத்தைஇயல்வாக வுடையவர். ஸ்வபாவமாக வுடையவரார். மாயப்பிரானையன்றி - காக்குமியல்வினர் - ஆரென்றந்வயம்.....................*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( கருத்திலித்யாதி ) “ வருத்தித்த, காக்கும் ” என்கிறபதங்களிலேநோக்காக ( ஸ்ருஷ்ட்டியுமித்யாதி )

கருத்தில் - ஸங்கல்பத்தில். வருத்தித்த - வர்த்திப்பித்த.

திண்ணிதானஸ்த்திதி - ஸத்தாநுவ்ருத்தி. திருத்தி - மர்யாதைகளையுண்டாக்கி. தம்முள் - தம்முடையதிருவுள்ளத்திலே. காக்கை - அநிஷ்ட்டநிவர்த்தநேஷ்ட்டப்ராபணங்கள். “ இயல்வினரார் ” என்றத்தால் பலித்தவர்த்தத்துக்கு ப்ரமாணம் ( நஹீத்யாதி )

தேவுமெல்லாப்பொருளும் - கருத்தில் - வருத்தித்தமாயப்பிரானையன்றி - மூவுலகும் திண்ணிலையாகத்திருத்தி - தம்முளிருத்திக்காக்கு மியல்வினர் - ஆர் இத்யர்த்வயஃ....!...............................................................................*

## ஒன்பதாம்பாட்டு.

காக்குமியல்வினன்கண்ணபெருமான்
சேர்க்கைசெய்துதன்னுந்தியுள்ளே
வாய்த்ததிசைமுகனிந்திரன்வானவ
ராக்கினன்றெய்வவுலகுகளே.

### ஆறுயிரப்படி.

(காக்கும்) கேவலம்ஸ்ருஷ்ட்டிமாத்ரமேயென்று பரமபுருஷகர்த்ருகம், ப்ரஹ்மாதிஸ்த்தம்பபர்யந்த ஸர்வஜகத்ஸ்ருஷ்ட்டிஸ்த்திதிஸம்ஹாரங்கள்மூன்றும் பரமபுருஷகர்த்த்ருகம்; ஆதலா லவனே ஸர்வேஶ்வரனென்கிறார்...............................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தரக்ஷணத்தோபாதி ஜகதுத்பத்தி ஸம்ஹாரங்களும் தததீநமென்கிறார்.

காக்குமியல்வினன் - ரக்ஷணத்தைஸ்வபாவமாகவுடைய. கண்ணன் - க்ருஷ்ணனை. பெருமான் - ஸர்வேஶ்வரன். சேர்க்கைசெய்து - ஸம்ஹ்ருதிஸமயத்திலே நாமரூபவிபாகரஹிதமாய், "தமஏகீபவதி" (தமஏகீபவதி) என்கிறபடியேசேரும்படிபண்ணி. தன்னுந்தியுள்ளே - தன்திருநாபிக்குள்ளே. வாய்த்த - ஸ்ருஷ்ட்டிக்குவாய்த்த. திசைமுகன்-சதுர்முகன். இந்திரன் - இந்த்ரன். வானவர் - தேவர்கள். தெய்வவுலகுகள் - அவர்களுக்கு வாஸஸ்த்தாநமான திவ்யலோகங்கள். ஆக்கினன் - இவற்றையுண்டாக்கினன்.

உந்தியுள்ளேபிறந்ததிசை முகனென்றுமாம்..............................*

### ஈடு-ஒன்பதாம்பாட்டு.

ஸ்ருஷ்ட்டிஸ்த்திதி ஸம்ஹாரங்கள்மூன்றும் ஸ்வாதீநமாம்படியிருக்கையாலு மிவனேயீஶ்வரனென்கிறார்.

(காக்குமியல்வினன்) "நஸம்பதாம்ஸமாஹாரே" (நஸம்பதாம்ஸமாஹாரே) என்கிறபடியே பாலநகர்மத்தை ஸ்வபாவமாகவுடையவன். (கண்ணபெருமான்) ரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாய்வந்தவதரித்த ஸர்வேஶ்வரன். (சேர்க்கைசெய்து) ஸம்ஹாரகாலம் வந்தவாறே, கார்யரூப ப்ரபஞ்சமடையத் தன்பக்கலிலேசேர்க்கையாகிற செயலைச்செய்து. (தன்னித்யாதி) தன்னுடைய திருநாபிகமலத்திலே, தான்ஒருகா

ல் " ஸ்ருஷ்டி " (ஸ்ருஷ்ட்டி) என்றுவிட்டால் பின்புதன்னையுங்கேட்கவேண்டாதபடி ஸ்ருஷ்ட்டிக்ஷமனான சதுர்முகன், இந்த்ரன், மற்றுமுண்டான தேவர்களோடேகூட, இவர்களுக்கிருப்பிடமான லோகங்களையும் கட்டளைப்படவுண்டாக்கினான். தன்னுந்தியுள்ளே - ஆக்கினான்..............*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (காக்குமித்யாதி) " சேர்க்கைசெய்து " என்ற - ஸம்ஹாரமொன்று மேகீழ்ப்பாட்டைப்பற்ற இப்பாட்டுக்குவிசேஷம்.

" பாலநமவனது " என்னுமதுக்குப்ரமாணம் (நஸம்பதாமித்யாதி) ஸமாஹாரே - ஸம்பாதநே.

சேர்க்கை - ஸமாஹாரம். அத்தால் - ஸம்ஹாரஞ்சொல்லுகிறது.

" வாய்த்த " என்றதுக்குபாவம் (தானொருகாலித்யாதி) வாய்த்த - ஸமர்த்தனான. திசைமுகன் - திங்முகன். வானவர் - தேவர்களோடேகூட. தெய்வவுலகுகள் - தேவதைகளுக் கிருப்பிடமான லோகங்களை. கட்டளைப்பட - மர்யாதைபடும்படி.

காக்குமியல்வினன் இத்யாரப்ய, வானவர்களோடேகூட - தெய்வவுலகுகளை - தன்னுந்தியுள்ளே - ஆக்கினானித்யந்வயஃ..................................*

---

# பத்தாம்பாட்டு.

கள்வாவெம்மையுமேழுலகுநின்
னுள்ளேதோற்றியவிறைவவென்று
வெள்ளேறனன்முகனிந்திரன்வானவர்
புள்ளூர்திகழல்பணிந்தேத்துவரே.

## ஆறுயிரப்படி.

(கள்வா) இப்படி சதுர்முக பசுபதி ஶதமகப்ரப்ருதிதேவர்களுக்கு மெம்பெருமானே காரணபூதனுமா யீஶ்வரனுமாயிருக்குமென்னுமிடத்தில் ப்ரமாணமென்னென்னில்; அவர்கள் தங்களுடைய வாக்யமே ப்ரமாணமென்கிறார்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனுகையாலே ஸர்வதேவதாஸமாஶ்ரயணீயனவனேயென்கிறார்.

கள்வா - அவதாரமுகத்தாலே யாதிக்யத்தை மறைக்கும் க்ருத்ரிமனே. எம்மையும் - எம்மையும். ஏழுலகும் - ஸமஸ்தலோகங்களையும். நின்னுள்ளே - உன்னுடைய ஸங்கல்பத்துக்குள்ளே. தோற்றிய - தோன்றுவித்த. இறைவ - ஸ்வாமியே. என்று - என்றுகொண்டு. வெள் - வெளுத்த. ஏறன் - ஏற்றையுடைய ருத்ர

னும். நான்முகன் - சதுர்முகனும். இந்திரன் - இந்த்ரனும். வானவர் - ஸ்வர்க்கவாசிகளும். புள்ளூர்தி - கருடவாஹநனுடைய. கழல் - திருவடிகளை. பணிந்து - ப்ரணாமம்பண்ணி. ஏத்துவர் - ஸ்துதியாநிற்பார்கள்.

இத்தால் - தர்மபர்யாய வ்ருஷபவாஹநத்வத்தாலே ருத்ரனுடைய கர்மவஶ்யதையும், வேதமயனானகருடன் வாஹநமாகையாலே யீஶ்வரனுடைய வேதாந்தவேத்யத்வமுந் தோற்றுகிறது..............................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இவ்வளவும்வர, நான் ப்ரதிபாதித்த பரத்வத்தை நீங்களாஶ்ரயணீயராக நினைத்திருக்கிறவர்கள் மேலெழுத்தைக்கொண்டு விஶ்வஸியுங்கோளென்கிறார்.

(கள்வா) ஸர்வேஶ்வரன்பக்கலிலே வந்து வரங்கொள்ளுகிறவிடத்திலே, "தேவரின்னமெனக்கொருவரம் தரவேணும், நீர் தந்தவரம் நிலைநிற்கும்படி யென்பக்கலிலேவந்தொருவரம்பெற்றுப்போகவேணும்" என்றர்த்திக்க, "அப்படியேசெய்கிறோம்" என்றுவிட்டு, "ருக்மணிப்பிராட்டிக்கொருபிள்ளைவேணும்" என்றுசென்றுநின்று, "நமோகண்டாயகர்ணாய" (நமோகண்டாயகர்ணாய) என்றாற்போலேயேத்த, அவனும் "உமயாஸார்த்தமீஶாநஃ" (உமயாஸார்த்தமீஶாநஃ) என்கிறபடியேபுறப்பட்டு, "நீகறுப்புடுத்துத்தாழநின்றநிலையிலே யிச்செயலைச்செய்தால் இத்தைநாட்டார் 'மெய்' என்றிருப்பர்களோகள்வா" என்பர்கள். தன்ஸ்வாதந்த்ர்யத்தைமறைத்து பரதந்த்ரனாய் நிற்கையிறே - களவாகிறது. கைலாஸயாத்ரையிலே "நமோகண்டாயகர்ணாய நமஃகடகடாயச" (நமோகண்டாயகர்ணாயநமஃகடகடாயச) என்றுஸ்தோத்ரம்பண்ணினபடியைக்கேட்ட ப்ராஹ்மணன், "இதுக்குமுன்பொருவரை ஸ்தோத்ரம்பண்ணியறியாத வாயானவாறே மீன்துடிக்கிறபடிபாராய்" என்றான். "நாத்தழும்பநான்முகனு மீசனுமாய் முறையாலேத்த" என்கிறபடியே-ஸ்தோத்ரம்பண்ணிநாத்தழும்புபட்டுக் கிடக்கிறதன்றே. "இவன்தாழநின்றநிலையும் ஸ்தோத்ரம்பண்ணினநிலையும்களவு" என்னுமிடத்தை [யுபபாதிக்கிறதுமேல் (எம்மையுமித்யாதி) நீயிவற்றைமனைகிறபோது, எங்களையும்மனைந்து பின்னையன்றோதிர்யக்ஜாதிகளை யுண்டாக்கிற்று. (இறைவ) இறைவ என்னாநிற்பர்கள். இங்ஙனேசொல்லுகிறவர்கள் தாமாரென்னில் (வெள்ளேறனித்யாதி) ராஜஸேவைபண்ணுவார் தந்தாமடையாளங்களோடே சட்டையும்பிரம்புமாய் ஸேவிக்குமாபோலே, இவர்களுந்தந்தாமடையாளங்களோடே யாயிற்றுவந்துஸேவிப்பது. "இரவியர் மணிநெடுந்தேரொடும்" இத்யாதி.

(புள்ளூர்திகழல்பணிந்தேத்துவரே) ஸர்வேஶ்வரன், பெரியபிராட்டியாருந் தானுமாயிருக்கிறவிருப்பில் புகப்பெறுமையாலே, திருப்பாற்கடலுக் கிவ்வருகேகூப்பிட்டால், இவர்களுக்குக் காட்சிகொடுக்கைக்காகத் திருவடிதிருத்தோளிலே யேறிப்புறப்படும். ஆட்டத்துவெளியிலே யானைக்காலிலே துகைபுண்ணுநிற்பர்கள்...... .......................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (கள்வாவித்யாதி) கீழெல்லாம் ப்ரதிபாதித்த வர்த்தத்தை யிதிலே த்ருடீகரிக்கிறானென்கிறார் (இவ்வளவுமித்யாதி) மேலெழுத்தென்றது-பூர்வார்த்தத்திற் சொன்னவவர்கள் பாசுரம்.

பராவஸ்த்தையில் வரங்கொள்ளாதே தான்தாழநின்று வரங்கொள்ளுகைகளைவென்றுவிவக்ஷித்து இதுக்குஹேதுவேதென்ன (ஸர்வேஶ்வரனித்யாதி) "தேவரீரின்னமெனக்கொரு வரந்தரவேணும்" என்கிறவிடத்திலே - மஹாமேதத்திலேருத்ரன், தன்றலையையறுத்து ஹோமம்பண்ண வுத்யோகித்தபோது, ஸர்வேஶ்வரன்வந்து தோற்றிச் சிலவரங்கள்கொடுத்து, "இன்னமெதுவேணும்" என்றவளவிலே, "𑌅𑌨𑍍𑌯𑌂 𑌦𑍇𑌹𑌿 𑌵𑌰𑌂 𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌸𑌰𑍍𑌵𑌜𑌨𑍍𑌤𑍁𑌷𑍁 । 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑌵𑌾𑌨𑍇𑌵 𑌮𑌾𑌮𑌾𑌰𑌾𑌧𑌯 𑌕𑍇𑌶𑌵 । 𑌮𑌾𑌂 𑌵𑌹𑌸𑍍𑌵 𑌚 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌵𑌰𑌂 𑌮𑌤𑍍𑌤𑍋 𑌗𑍃𑌹𑌾𑌣 𑌚 । 𑌯𑍇𑌨𑌾𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑍂𑌜𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑌰𑍋 𑌭𑌵𑌮𑍍" (அந்யந்தேஹிவரந்தேவப்ரஸித்தம்ஸர்வஜந்துஷு|மர்த்த்யோபூத்வாபவாநேவமாமாராதயகேஶவ । மாம்வஹஸ்வசதேவேஶவரம்மத்தோக்ருஹாணச । யேநாஹம்ஸர்வபூதாநாம்பூஜ்யாத்பூஜ்யதரோபவம்) என்றதநுஸந்தேயம் [𑌵𑌹𑌸𑍍𑌵] (வஹஸ்வ) வஹித்ததுமேகமாய்; வராஹபுராணே ருத்ரகீதாயாம்பகவாந், "𑌦𑍇𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌵𑌤𑌾𑌰𑍇𑌷𑍁 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌤𑍍𑌵𑌮𑍁𑌪𑍇𑌯𑌿𑌵𑌾𑌨𑍍 । 𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵𑌾𑌰𑌾𑌧𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌰 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌰𑌦𑍋 𑌭𑌵 । 𑌸𑍋𑌽𑌹𑌂 𑌵𑌹𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍇𑌵 𑌮𑍇𑌘𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌶𑌤𑌂 𑌸𑌮𑌾𑌃 । 𑌏𑌵𑌮𑍇𑌵𑌾𑌹𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌃 । 𑌵𑌰𑌦𑍋𑌽𑌭𑍂𑌤𑍍𑌪𑌰𑍋 𑌮𑌹𑍍𑌯𑌂 𑌤𑍇𑌨𑌾𑌹𑌂 𑌦𑍈𑌵𑌤𑍈𑌰𑍍𑌗𑌤𑌃." (தேவகார்யாவதாரேஷுமநுஷ்யத்வமுபேயிவாந் | த்வாமேவாராதயிஷ்யாமிஹரத்வம்வரதோபவ । ஸோஹம்வஹாமித்வாம்தேவமேகோபூத்வாஶதம்ஸமா:|ஏவமேவாஹிர்த்தேவஸ்ஸர்வேஶஸ்ஸர்வபாவந:| வரதோபூத்பரோமஹ்யம்தேநாஹம்தைவதைர்க்கத:.) "மேகமாய்த்தாங்கினான் திருமால்காண்சாழலே" என்றிறேயவர்கள் சொல்லுவது. கறுப்புடுக்கை - பரத்வத்தைமறைக்கை. இச்செயலைச்செய்தால் - ஸ்தோத்ரம்பண்ணுகை வரங்கொள்ளுகை முதலானசெயலைச்செய்தால். மெய்யென்றிருப்பர்களோவென்றது - "வரங்கொடுத்தவனுக் காகச்செய்தான்" என்றிறே யிருப்பர்களென்றபடி. (கள்வாவென்பர்கள்) ருத்ராதிகளென்று கூட்டுவது. தாழநிற்கைகளவோவென்ன (தன்ஸ்வாதந்த்ர்யத்தையித்யாதி) ப்ராஸங்கிகம் (கைலாஸேத்யாதி) கேட்டப்ராஹ்மணன் - புராணஶ்ரவணவேளையாம் கேட்டப்ராஹ்மணன். (மீன்துடிக்கிறபடி) மீன்துடிக்கிறப்போலே நாக்குத்துடிக்கிறபடி. (நமோகண்டாயேதி) ஸ்ரீஹரிவம்ஶே கைலாஸயாத்ராயாம்.தத்ரைவ, "[illegible]

𑌷𑍍𑌣𑍁𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌸𑍍𑌯𑌶𑌙𑍍𑌕𑌰𑌃 । 𑌉𑌮𑌯𑌾𑌸𑌾𑌰𑍍𑌧𑌮𑍀𑌶𑌾𑌨𑍋𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌂𑌵𑌕𑍍𑌤𑍁𑌮𑍈𑌹𑌤 " ( அஞ்ஜலிம்ஸம்புடம்க்ருத்வாவிஷ்ணுமூர்த்திஸ்யஶங்கரஃ | உமயாஸார்த்தமீஶாநோ மாஹாத்ம்யம்வக்துமைஹத. ) அப்படிஸ்தோத்ரம்பண்ணி யறியாரென்ன ( நாத்ரமுழும்பவித்யாதி) திருமொழி. நாக்கானது தழும்பேறும்படியாக சதுர்முகனும், ருத்ரனும், முறையாலே - ஶேஷித்வப்ராப்தியாலே ஸ்தோத்ரம்பண்ணவென்கை. தழும்புபட்டு - தகணேறி.

"எம்மையும் ஏழுலகும்" என்றக்ரமத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் ( நீயிவற்றையித்யாதி ) மனைகை - ஸ்ருஷ்டிக்கை. நின்னுள்ளே - உன்ஸங்கல்பத்திலே. இறைவ - ஸ்வாமீ.

ஸ்வாமிஸந்நிதியிலே வாஹநங்கொண்டு வரலாமோவென்ன ( ராஜஸேவையித்யாதி ) அவன்கொடுத்த வரிசையோடேவந்தால் விரோதமில்லையென்றபடி. உக்தத்துக்கு ப்ரமாணம் ( இரவியரித்யாதி ) திருப்பள்ளியெழுச்சி. த்வாதஶாதித்யர்கள், விலக்ஷணமான பெரியதேரோடேவந்தார்களென்கை.

" புள்ளூர் திகழல் பணிந்தேத்துவர் " என்றுவிஶேஷிப்பானென்னென்ன ( ஸர்வேஶ்வரனித்யாதி ) ஆட்டத்துவெளி - வையாளிவெளி. ராஜாக்களுடைய வையாளி வெளியிலே யானைக்காலிலே ஸாமந்தராஜாக்கள் நிரயிமாநராய்த் தொகையுண்பர்களிறே ; அப்படியேயிங்கும் நிரயிமாநராய் ஸ்தோத்ரம்பண்ணு நிற்பர்களென்றபடி.

வெள்ளேற லித்யாரப்ய, கழல்பணிந்து - கள்வாவெம்மையு மித்யாரப்ய தோற்றியவிறைவவென்று - ஏத்துவரித்யந்வயஃ..................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

ஏத்தவேழுலகுங்கொண்டகோலக்
கூத்தனைக்குருகூர்ச்சடகோபன்சொல்
வாய்த்தவாயிரத்துள்ளிவைபத்துட
னேத்தவல்லவர்க்கில்லையோரூனமே.

## ஆறாயிரப்படி.

( ஏத்தவேழுலகும் ) ஸர்வலோகங்களுந் தன்னுடைய விஜயத்தைச் சொல்லிக்கொண்டு நின்றேத்த ஏழுலகுங் கொண்டருளின இது தொடக்கமாகவுள்ளதிவ்யசேஷ்டிதங்களாலே யெம்பெருமானுடையஸர்வேஶ்வரத்வத்தை ப்ரதிபாதிக்கிற இந்தத்திருவாய்மொழியை யிந்தபாவனையோடேகூட ஏத்தவல்லார்க் கினி யொருநாளு மெம்பெருமானோடு விஶ்லேஷ மில்லையென்கிறார்..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸர்வப்ரகார வைகல்யராஹித்யத்தை யருளிச்செய்கிறார்.

ஏத்த - லௌகிகரோத்துகிற விரூவேவினீராக. ஏழுலகும் - ஸமஸ்த லோகத்தையும். கொண்ட - அளந்துகொண்ட. கோலம் - வடிவழகையும். கூத்தனை - வல்லாராடினாற்போலே அளந்தநாயாஸத்தையு முடையவனை. குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார். சொல் - அருளிச்செய்த. வாய்த்த - லோகத்துக்கலப்யலாபமான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவைபத்து - இவைபத்தையும். உடன் - அர்த்தத்தோடே யுடன்பட்டு. ஏத்த - ஸ்துதிரூபமாகச்சொல்ல. வல்லவர்க்கு - வல்லவர்க்கு. ஒருனம் - தேவதாந்தரங்களினுடைய வுத்கர்ஷபுத்தியும், அவர்களோடுண்டான ஸாம்யபுத்தியும், அவர்களில் நிகர்ஷபுத்தியுமாகிற குறைவுகளொன்றும். இல்லை - இல்லை.

ஊனம் - குறைவு. சொல்வாய்த்தவென்று- அர்த்தப்ரதிபாதநஸாமர்த்யமாகவுமாம். ஏழுலகென்று - கீழும்மேலுங்கூட்டுகிறது. இது கலிவிருத்தம்......*

---

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்களுக்கு, தேவதாந்தரங்கள்பக்க லீஸ்வரத்வபுத்தி பண்ணுகையாகிற ஊனமில்லையென்கிறார்.

( ஏத்தவேழுலகுங்கொண்ட ) " ஸஹ்ஸஹ்ஸா—ஸாணாம் " ( ஸங்கைஸ்ஸுராணும் ) என்கிறபடியே ஏத்த, அந்த ஹர்ஷத்தாலே ஸகலலோகங்களையும் திருவடிகளின் கிழே யிட்டுக்கொண்ட. ( கோலக்கூத்தனை ) திருவுலகளந்தருளினபோது வல்லாராடினாற்போலேயாயிற்றிருப்பது. அப்போதைவடிவழகையநுபவிக்குமதொழிய, இந்த்ரனைப்போலே ராஜ்யஸ்ரத்தை யில்லையேயிவர்க்கு. ( குருகூர்ச்சடகோபன்சொல் ) ஆப்திக்கு " இன்னார்சொல்லிற்று " என்னக்கடவதிறே. ( சடகோபன் ) வேதாந்தத்திற்காட்டில் ஆழ்வார்பக்கலிலே பிறந்த ஆபிஜாத்யம் ( வாய்த்தவாயிரம் ) இத்தனைபோதிவர் ப்ரதிபாதித்த பரவஸ்து நேர் பட்டாற்போலேயாயிற்று இப்ப்ரபந்தமும் நேர்பட்டபடி. வாச்யத்திற்காட்டில் வாசகம் நேர்பட்டபடியென்றுமாம். அதாவது - விஷயத்தை யுள்ளபடி பேசவற்றாயிருக்கை.

( இவை பத்துடனேத்த வல்லவர்க்கு ) இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக ஏத்தவல்லவர்களுக்கு. ( இல்லையோரூனமே ) இவ்வாத்மாவுக்கூனமாவது - அபரதேவதைகள்பக்கலிலே பரத்வப்ரதிபத்திபண்ணுகையும், பரதேவதைபக்கல் பரத்வப்ரதிபத்தி பண்ணாமையும். இப்படி வரக்கடவதானவூனம் இதுகற்றார்க்கில்லை.

முதற்பாட்டில் - மேல்பரக்கவருளிச்செய்கிற இத்திருவாய்மொழியிலர்த்தத்தை ஸங்க்ரஹேண வருளிச்செய்தார். இரண்டாம்பாட்டுமுதல் - துஃகநிவர்த்தகனாகையாலும், ஶீலவானாகையாலும், ஸுகுமாரனாகையாலும், புண்டரீகாக்ஷனாகையாலும், ஆபத்ஸகனாகையாலும், அகடி

லே பிராட்டி, இவருக்கும் தனியாயிருக்குமிறே ஸம்ஸாரத்திலிருப்பு. (பொழிலித்யாதி) தனிமையிலேவந்நுதவும்படியைச் சொல்லுகிறது. அத்விதியமஹாவராஹவேஷத்தை பரிக்ரஹித்து, ப்ரளயங்கொண்டபுவனங்களேழையுமெடுத்து. (துனிபார்கோட்டில்வைத்தாய்) துனியென்று-கூர்மை. ஆர்கை-மிகுதி. கூர்மைமிக்ககோட்டிலே வைத்தாயென்றபடி. இத்தால் - ரக்ஷ்யவர்க்கத்தினளவல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பைச்சொல்லுகிறது. (இனியுனபாதஞ்சேர்ந்தேனே) ப்ரளயங்கொண்டபூமியையெடுத்தாற்போலே ஸம்ஸாரப்ரளயங்கொண்டவென்னை யெடுத்தபோதே, தேவர்திருவடிகளை நான்கிட்டினேனேயன்றோ. "இமையோர்தலைவா - இங்கின்றநீர்மையினியாருருமை" என்னும்படி, அறிவைத்தந்தபோதே யுன்திருவடிகளைப்பெற்றேனேயன்றோ.........................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு. (இனியாரித்யாதி) "தனியேன்வாழ்முதலே, இனியுனபாதஞ்சேர்ந்தேனே" என்றபதங்களைக்கடாக்ஷித்*திரண்டாம்பாட்டோடே ஸங்கதி (ஜ்ஞாநலாபமேயித்யாதி) "அறியாதனவறிவித்து" என்று ஜ்ஞாநலாபமுண்டாயிற்றென்றபடி.

இனிமேலே யன்வயமென்றது "இனி" என்றதுக்கு - "உனபாதஞ்சேர்ந்தேன்" என்றத்தோடே யன்வயமென்றபடி. ஆர்ஞானங்களால் - ஆருடையஜ்ஞாநங்களாலும். ஆரென்று-உத்க்ருஷ்டபுருஷவாசி. எடுக்கலெழாதவெந்தாய் - எடுக்கைக்கெடுப்புண்ணாத வென்ஸ்வாமீயென்று ஶப்தார்த்தம். பேர்க்கப்போகாதிருக்கிற-சலிப்பிக்கச்சலியாதேயிருக்கிற. அதாவது - பரிச்சேதித்தறியப்போகாதிருக்கிறவென்றபடி. எடுக்கப்பார்க்குமன்றெடுக்கப்போகாதிருக்கிற என்று கூட்டிக்சொல்வது. "ஞானங்களால்" என்றது - சக்திக்குமுபலக்ஷணம். "எடுக்கலெழாத" என்றது-அறியப்போகாமைக்கு முபலக்ஷணம். விவரணம் (அதாவதித்யாதி)

வீடு-மோக்ஷமும், க்ருஹமும். மோக்ஷஸாதகமானவன் - மோக்ஷஸாதகத்தைக்கொடுக்குமவன். வீட்டிலேவந்தானந்தத்தைவிளைக்குமவனென் றிரண்டாமர்த்தம். (தொல்லையித்யாதி) பெருமாள்திருமொழி. பழையதான வாநந்தத்தினுடையவெல்லைகண்டாளேயென்றபடி.

(கடற்படாவமுதே) படுகை-உண்டாகை. "கடற்படாவமுது" என்கையாலே - ப்ராப்யத்வஞ்சொல்லிற்று. அவ்விரண்டுகோடியிலுமென்றது - ஶத்ருக்களான ராவணாதிகளுடையவும், அதிஶயிதபக்திமான்களான யசோதாதிகளுடையகோடியிலுமென்றபடி. எனக்கு - அத்வேஷமாத்ரமுடைய வெனக்கு.

வாழ்முதலே - வாழ்ச்சிக்குமுதலானவனே. இவர்க்குவாழ்ச்சி-பகவதநுபவமிறே. ஸம்ஸாரிகளிருக்க, "தனியேன்" என்கிறதென்னென்ன (ஏகாக்ஷீத்யாதி) பிராட்டிக்கு ஏகாக்ஷ்யேக கர்ணிகள் நடுவிருப்புப்போலே, இவர்க்கும் ஸம்ஸாரத்திலிருப்புத்தனியாயிருக்குமென்றபடி. "ப்ரியஜ்ஜநமபஶ்யந்தீம்" (ப்ரியஞ்ஜநமபஶ்யந்தீம்) இத்யாதி.

தனிமையிலே-ரக்ஷகாபேக்ஷாதசையிலே. இத்தால் - " நனியார் " என்கிறவித்தால்.

பூர்வவாக்யார்த்தத்தை த்ருஷ்டாந்தீகரித்துக்கொண்டு, " அறியாதனவறிவித்த " என்றத்தைக்கடாக்ஷித்து " இனி " என்றதுக்குபாவம் ( ப்ரளயங்கொண்டவித்யாதி ) * பொய்ந்நின்றஞானத்தில் விசேஷகடாக்ஷபரமாக தாத்பர்யாந்தரம் ( இமையோர்தலைவாவித்யாதி ) திருவிருத்தம். நித்யஸூரிகளுக்குத் தலைவனானவனே, இவற்றில் நிலைநின்றுபோந்த வாஸநாருசிகளாகிற ஸ்வபாவவிசேஷங்களை, உன்கடாக்ஷம்பெற்ற நாங்களடையாதபடியித்யர்த்தஃ. மேலிற்பாட்டிலே "முதன்முன்னமே" என்றபதத்தின் மூன்றுமர்த்தத்துக்குச்சேர, " இனி " என்றதுக்கும் மூன்றுமர்த்தமாக ஒன்றுமொரர்த்தமத்யாஹரித்துக்கொள்வது. அதாவது - * வாயுந்திரையுகளில் வ்யஸநந்திர, * ஊனில்வாழுயிரிலே ஸம்ஶ்லேஷித்தபோதே, உனபாதஞ்சேர்ந்தேனேயன்றோவென்று. ஆக, " இனி " என்றதுக்கு - மூன்றர்த்தம், அர்த்தத்வயம்வா.

ஆர் ஞானங்களால்தொடங்கி. வாழ்முதலே - ஓனேமாய்-பொழிலேழும்-நனியார் கோட்டில்வைத்தா யினியுனபாதஞ்சேர்ந்தேனே இத்யந்வயஃ. " என்கடற்படாவமுது " என்கையாலே-ப்ராப்யத்வமும், " தனியேன்வாழ்முதல் " என்கையாலே - ப்ராபகத்வமுஞ்சொல்லிற்று........................................*

---

## ஆறாம்பாட்டு.

சேர்ந்தார்தீவினைகட்கருநஞ்சைத்திண்மதியைத்
தீர்ந்தார்தம்மனத்துப்பிரியாதவருயிரைச்
சோர்ந்தேபுகல்கொடாச்சுடரையரக்கியைமூக்
கீர்ந்தாயையடியேனடைந்தேன்முதன்முன்னமே.

### ஆறாயிரப்படி.

( சேர்ந்தார் ) " போனகாலமும் ஸம்ஶ்லேஷித்தோம் " என்று தமக்குத்தோற்றும்படி யெம்பெருமானோடே தாம்ஸம்ஶ்லேஷிக்கையாலே ; ஆஶ்ரிதருடைய ஸ்வவிஷயதிவ்ய ஜ்ஞாநவிரோதிபாபங்களுக்கு நஞ்சாய், அவர்களுக்கு ஸ்வவிஷயத்ருடஜ்ஞாநப்ரதனாய், இப்படி தன்னுடையப்ரஸாதத்தாலே லப்தஜ்ஞாநராகையாலே * ஸம்யக்வ்யவஸிதராயிருந்தவர்களை ஸம்ஸாரத்திற்புகவிடாதே யவர்களோடுபிரியாதே ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனுமாய், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனுமாயிருந்த உன்னேடின்றோவடியேன் ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றது, இவ்வாத்மாவுள்ளளவன்றே பெற்றேனன்றோவென்கிறார்...............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தப்ராப்தி, ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே அநாதிஸித்தமன்றோ வென்கிறார்.

சேர்ந்தார் - உன்னையடைந்தவர்களுடைய. தீ - க்ரூரமான. வினைகட்கு- பாபங்களுக்கு. அரு - காற்றவரிய. நஞ்சை - நஞ்சாய். திண்மதியை - திண்ணி தானமதியாகிற - வ்யவஸாயந்தானுய்நிற்கிறுனென்னலாம்படி யதுக்குத்பாதகனு ய். தீர்ந்தார்தம் - அந்தவ்யவஸாயத்தை யுடையவர்களுடைய. மனத்து - மநஸ் ஸிலே. பிரியாது - விடாதே. அவருயிரை - அவர்களாத்மவஸ்துவை. சோர்ந்தே- என்றும்விஷயாந்தரங்களிலேபுக்குச்சோர்ந்து. புகல்கொடா - போகக்கொடாதே. சுடரை-தன்வடிவையே யவர்களுக்குவிஷயமாக்கு முஜ்ஜ்வலஸ்வபாவனுய். அவர் கள்விஷயருசியை-அரக்கியை - சூர்ப்பநகியை. மூக்கீர்ந்தாயை - அழித்தாற்போ லே யறுத்துக்கொடுக்கவல்லவுன்னே. அடியேன் - உனக்குஶேஷபூதமான ஸ்வரூ பத்தையுடையனான். முதன்முன்னமே - முதலுக்குமுன்னே. அடைந்தேனே - அ டைந்தேனல்லவோ.

* மயர்வற மதிநல மருளுவதற்குமுன்னேப்ராப்தி யுண்டல்லவோவென்று கருத்து.......................................................................................*

---

## ஈடு - ஆரும்பாட்டு.

" இனியுனபாதஞ்சேர்ந்தேனே " என்றார்; " இனி " என்று விஶேஷிக்கவேணுமோ, * பொய்நின்றஞானத்திலே நீவிஶேஷகடாக்ஷ ம்பண்ணினபோதே கிட்டிற்றிலேனோவென்னுதல்; அன்றிக்கே, ஸ்வரூ பத்தையநுஸந்தித்தவாறே ஸ்வாபாவிகஶேஷத்வமேயாய் நிலைநின்றவா காரம், நடுவுள்ளது வந்தேறியாய்த்தோற்றுகையாலே சொல்லுகிறாராக வுமாம்.

சேர்ந்தாருண்டு - " ஷ்யாஹஜெ௱யஊவெ௱வ நநஜெய நூஈக ஸ௱விசு " ( த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயந்துகஸ்யசித் ) என்னும் நிர்ப்பந்தமில்லாதவர்கள். ( சேர்ந்தார் ) கெடுமரக்கலம்கரைசேர்ந்தாற் போலே யிவனைக்கிட்டினவர்கள். அநாதிகாலம் ஸம்ஸரித்துப்போந்த ஆ த்மா ஸர்வேஸ்வரனைக் கிட்டுகையாவது-கரைசேர்கையிறே. * இக்கரை யேறினர்களிறே யவர்கள். ( தீவினைகட்கருநஞ்சை ) அவர்களுடையப் ராப்தி ப்ரதிபந்தககர்மங்களுக்குக் காற்றவொண்ணுத நஞ்சானவனே.

( திண்மதியை ) முன்பேசேர்ந்திருக்கு மவர்களுக்குத் திண்ணிய தானமதியைக்கொடுக்குமவனே. அம்பரீஷன், தபஸ்ஸுபண்ணுநிற்க, ஸர் வேஸ்வரன் இந்த்ரவேஷத்தை தரித்துக்கொண்டுசென்று, " உனக்கு வேண்டியவற்றைவேண்டிக்கொள் " என்ன, " நானுன்னையாராதிக்கு மவனல்லேன்காண், என்னைஸமாதி பங்கம்பண்ணுதே போகவல்லையே, உன்னைக்கும்பிடுகிறேன் " என்றானிறே - " நாஹஊாராயயாமி௱ாஂத வஸ௱ஹாயஊஜ்லிஃ " (நாஹமாராதயாமித்வாம்தவபத்தோயமஞ்சலிஃ) எ ன்றுதானே யழிக்கப்பார்க்குமன்று மழிக்கவொண்ணுதபடியான திண் ணியமதியைக் கொடுக்குமவனே. ( தீர்ந்தாரித்யாதி ) " ஜவாநூதூ௱ாவி

வொஜ்ஜ்ரதள " (ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) என்றுதன்னைப் பிரியமாட்டாதே யிருக்குமவர்கள் நெஞ்சைவிட்டுப்போகமாட்டாதே, அவர்களுயிர் தன்னைப்பிரிந்து த்ரவீபூதமாய் மங்கிப்போகக்கொடாதே, " அதுதன்பேறு " என்னுமிடம் வடிவிலேதோன்ற இருக்குமவனை. தீர்ந்தாருண்டு - உபாயத்தில் துணிவுடையார். அவர்களாகிறார் - " ப்ராப்யப்ராபகங்களிரண்டுமவனே " என்றிருக்குமவர்கள். அவர்கள் தன்னைப்பிரிந்து நோவுபடாதபடி அவர்கள் நெஞ்சிலேயிருக்கு மவனென்றுமாம். (அரக்கியைமூக்கீர்ந்தாயை) பிராட்டியோட்டை ஸம்ஸ்லேஷவிரோதியைப் போக்குமாபோலேயாயிற்று அவர்களுடைய விரோதிகளைப்போக்கும்படியும். ஆனால், இவனோபின்னையவள் மூக்கறுத்தானென்னில்; ஆம்; கையாலேயறுக்கவேணுமே, " ராமஸ்ய தக்ஷிணோபாஹு: " (ராமஸ்யதக்ஷிணோபாஹு:) என்னக்கடவதிறே. (அடியேனித்யாதி) சேஷபூதனானான் பண்டேயடைந்தேனேயன்றோ. (அடியேனடைந்தேன் முதன்முன்னமே) அநாதிகாலமிழந்த இழவைமறக்கும்படிவந்து கலக்கையாலே; இன்றோபெற்றது, இவ்வாத்மாவுள்ளவன்றே பெற்றேனல்லேனோவென்றுமாம். * வாயுந்திரையுகளில் - கீழ் ஸம்ஸ்லேஷித்ததேற்றம் போய்க்கலங்கி விஸ்லேஷமேயாய்ச் சென்றாற்போலே, இங்கு - கலவியின்மிகுதியாலே யத்தைமறந்து முன்பேபெற்றேனல்லேனோ வென்கிறாரென்றுமாம். முதன்முன்னமே - பழையதாகவென்றபடி...... .....*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (சேர்ந்தாரித்யாதி) கீழிற்பாட்டில், " இனி " என்றதினர்த்தத்வயாநுகுணமாக வவதாரிகாத்வயம் (இனியுனபாதமித்யாதி) (இனி என்று விஶேஷிக்கவேணுமோ) " அறியாதனவறிவித்த " என்று விசேஷிக்கவேணுமோ வென்றபடி. " கிட்டிற்றிலேனோ " என்ற வநந்தரம் - என்கிறாரென்றுஶேஷம். (அன்றிக்கேயித்யாதி) இவ்வவதாரிகையிலே, இனியென்று விசேஷிக்கவேணுமோ வென்கிறது - * பொய்ந்நின்றஞானத்திலே * மயர்வறமதிநலமருளினபோதே பெற்றேனேயன்றோவென்று விசேஷிக்கவேணுமோ வென்றபடி. நிலைநின்றவாசாரம் (ஸ்வாபாவிகசேஷத்வமேயாய்) என்றந்வயம். ஸ்வரூபத்தையநுஸந்தித்தவாறே, ஸ்வாபாவிகாகாரம் சேஷத்வமேயாய், நடுவுள்ளதுவந்தேறியாய்த்தோற்றுகையாலே, பண்டேயடைந்தேனேயன்றோ வென்கிறாரென்றபடி.

மேலே, " தீர்ந்தார் " என்றுசொல்லுகையாலே, அத்தோடேபுநருக்தமாகாமைக்காக, " ஆமுமுக்ஷமுடையவர்கள் " என்றர்த்தம் (சேர்ந்தாருண்டித்யாதி) நிர்ப்பந்தமில்லாதவர்கள் - அத்வேஷாதிகளுடையவர்கள். யுத்தகாண்டேஷட்த்ரிம்ஶோரவண:, " த்வியாஹஜ்ஜ்யம் " (த்விதாபஜ்யேயம்) இத்யாதிபூர்வமேவலிகிதம். இவர்களை " சேர்ந்தார் " என்கிறதென்னென்ன (கெடுமரக்கலமித்யாதி) கெடுமரக்கலம் - வழிதப்பினவோடம், கரைசேர்ந்தாற்போலே யானப

டியென்னென்ன (அநாதிகாலமித்யாதி) இத்தைப்ரமாணமுகேந வருளிச்செய்கிருர் (இக்கரையித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. " அக்கரையென்னும் " இத்யாதி-பாட்டடி. அக்கரை-ஸம்ஸாரம். இக்கரை-பரமபதம். காற்றவொண்ணுத-ப்ரத்யௌஷதமிட்டுக்காக்கவொண்ணுத. திண்ணிதானமதி-த்ருடாத்யவஸாயம். " திண்மதியை " என்கிறஸாமாநாதிகரண்யம்-ஜந்யஜநகபாவநிபந்தநம். அப்படிகொடுத்தவிடமுண்டோவென்ன (அம்பரீஷனித்யாதி) உக்தார்த்தேப்ரமாணம்வதந், ஏதேநபலிதார்த்தஞ்சாஹ (நாஹமித்யாதி) ஸ்ரீவிஷ்ணுதர்மேத்விதீயேத்யாயே, "வரார்த்திநாம் த்வம் வரத ப்ரயச்சாபிமதாந் வராந்" (வரார்த்திநாந்த்வம்வரதப்ரயச்சாபிமதாந்வராந்) இத்யுத்தரார்த்தம்.

" தீர்ந்தார் " என்றதுக்கர்த்தத்வயம் - ப்ராப்யத்வராநிஷ்டரென்னுதல், ப்ராப்யப்ராபகநிஷ்டரென்னுதல். ப்ரதமார்த்தம் (ஜலாந்மத்ஸ்யாவித்யாதி) "சோர்ந்தேபுகல்கொடா" என்கிறதுக்கர்த்தம் த்ரவீபூதமாய் மங்கிப்போகக்கொடாதேயென்று) " சுடர் " என்றதின் தாத்பர்யம் (அதுதன்பேறித்யாதி) த்விதீயார்த்தம் (தீர்ந்தாருண்டித்யாதி) துணிவு - அத்யவஸாயம். தடஸ்தஶங்கையை யநுவதித்துபரிஹரிக்கிருர் (ஆனுலித்யாதி) (ராமஸ்யேத்யாதி) ஆரண்யகாண்டே த்வாத்ரிம்ஶோவணம் ப்ரதிசூர்ப்பணகா, " ப்ராதா சாஸ்ய " (ப்ராதாசாஸ்ய) இத்யாதி, "லக்ஷ்மணோ நாம வீர்யவாந் | அமர்ஷீ துர்ஜயோ ஜேதா விக்ராந்தோ புத்திமாந் பலீ | ராமஸ்ய தக்ஷிணோ பாஹுர் நித்யம் ப்ராணோ பஹிஶ்சர:. (லக்ஷ்மணோநாமவீர்யவாந் | அமர்ஷீதுர்ஜயோஜேதாவிக்ராந்தோபுத்திமாந்பலீ | ராமஸ்யதக்ஷிணோபாஹுர்நித்யம்ப்ராணோபஹிஶ்சர:.

த்விதீயாவதாரிகைக்குச்சேர வருளிச்செய்கிருர் (ஶேஷபூதனுனவித்யாதி) ப்ரதமாவதாரிகைக்குச்சேர; அறியாதன வறிவித்தபின்பு என்று விஶேஷிக்கவேணுமோ, * பொய்ந்நின்றஞானத்திலே விஶேஷகடாக்ஷம்பண்ணினபோதே கிட்டிற்றிலனோவென்று த்விதீயார்த்தங்கண்டுகொள்வது. கீழிற்பாட்டில் "இனி" என்றதின் மூன்ருமர்த்தத்துக்குச்சேர மூன்ருமர்த்தம் (அநாதிகாலமித்யாதி) இத்தைத்ருஷ்டாந்தபூர்வகமாக விவரிக்கிருர் (வாயுந்திரையித்யாதி) முழுச்சொல்லென்று காட்டுகிருர் (பழையதாகவென்றபடியென்று) ஆக " இனி " என்றதுக்கு - அறியாதனவறிவித்தபோதே பெற்றேனேயன்ருேவென்றும், * பொய்ந்நின்றஞானத்தில் விஶேஷகடாக்ஷம்பண்ணினபோதே பெற்றேனன்ருேவென்றும், * வாயுந்திரையுகளிலார்த்திரே ஸம்ஶ்லேஷித்தபோதே யுனபாதஞ்சேர்ந்தேனேயன்ருேவென்று மிப்படிமூன்றர்த்தமானபோது, " முதன்முன்னமே " என்றதுக்கும் மூன்றர்த்தம். அதாவது - " இனி " என்று - * பொய்ந்நின்றஞானத்திலே விஶேஷகடாக்ஷம்பண்ணினபோதே பெற்றேனென்று விஶேஷிக்கவேணுமோ, அநாதிகாலமே பிடித்துப்பெற்றேனே யன்ருேவென்னுதல்; இனியென்று - அறியாதனவறிவித்தபோதே பெற்றேனேயன்ருேவென்று விஶேஷிக்கவேணுமோ, * பொய்ந்நின்றஞானத்தில் நீவிஶேஷகடாக்ஷம்பண்ணினபோதே பெற்றேனென்னுதல்; இனியென்று - * வாயுந்திரையுகளிலார்த்திரக்கலந்தபோதே பெற்றேனென்று வி

ஶேஷிக்கவேணுமோ, அநாதிகாலந்தொடங்கி விஶ்லேஷமின்றிக்கே ஸம்ஶ்லேஷமாயன்றோ நமக்குச்செல்லுகிறதென்னுதலென்று. "இன்" என்றதுக்கர்த்தத்வயமானபோது, ததநுகுணமாக வவதாரிகாத்வயம்; அதில் ப்ரதமாவதாரிகாநுகுணபாவபரம் (ஶேஷபூதனனவித்யாதிவாக்யம்) த்விதீயாவதாரிகாநுகுண பாவபரம் (அநாதிகாலமித்யாதிவாக்யம்) வாயுந்திரையித்யாதிவாக்யம்- தத்விவரணபரமென்று. இப்படியே "முதன்முன்னமே" என்றதுக்கு மர்த்தத்வயம். இரண்டர்த்தமென்றால் நன்றாயிருக்கும். இந்தபக்ஷத்தில், பண்டேயென்றது - * பொய்ந்நின்ற ஞானத்தில் விசேஷகடாக்ஷம்பண்ணினபோதேயென்றபடி. "என்றுமாம்" என்கிறபதஸ்வாரஸ்யத்தாலே, *வாயுந்திரையுகளிலித்யாதிவாக்யம்-மூன்றும்பாவபரமாகவுமாம். இப்போது, "முதன்முன்னமே" என்றதுக்கர்த்தத்ரயம்; * பொய்ந்நின்றஞானத்தில் விசேஷகடாக்ஷம்பண்ணினபோதே யிதிப்ரதமஃ, அநாத்யாகவேயிதித்விதீயஃ, * வாயுந்திரையுகளிலார்த்திக்குமுன்னே தானே யிதித்ருதீயஃ.

க்ரமேணார்வயஃ.............................................................*

---

# ஏழாம்பாட்டு.

முன்னல்யாழ்பயினூனரம்பின்முதிர்சுவையே
பன்னலார்பயிலும்பரனேபவித்திரனே
கன்னலேயமுதேகார்முகிலேயென்கண்ணா
நின்னலாவிலேன்காணென்னைநீகுறிக்கொள்ளே.

## ஆறாயிரப்படி.

(முன்னல்) ஸர்வ காரணங்களுக்கும் நிரவதிக போக்யபூதனாய், உன்திருவடிகளுக்கு நல்லராயிருப்பா ரெல்லாருக்கு முன்னைக்கொடுக்கும் ஸ்வபாவனாய், அவர்களுடைய த்வதநுபவவிரோதி ஸர்வதோஷநிரஸநஸ்வபாவனாயிருந்த வுன்னை யெனக்கு நிர்ஹேதுகமாகத் தந்தருளினாய்; நீயல்லது எனக்கொரு தாரகமில்லை; இனியென்னைக் கைவிடாதே கிடாய் என்று கொண்டு, "எம்பெருமானோடு தமக்கு வ்ருத்தமான ஸம்ஶ்லேஷத்துக்கு பங்கம்வருகிறதோ" என்னுமதிஶங்கையாலேயெம்பெருமானையபேக்ஷிக்கிறார்..............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி யுபகரித்த நிரதிஶயபோக்யனான வுன்னை யொழிந்தாலெனக்கு ஸத்தையுண்டோவென்கிறார்.

முன் - அநாதியாய். நல் - விலக்ஷணமாய். யாழ்-யாழைப்பற்றியிருப்பதாய். பயில் - வ்யுத்பத்திஸூக்களாலே பயிலப்படுவதான. நூல் - கீதஶாஸ்த்ரத்தில் லக்ஷணந்தப்பாத. நரம்பில் - நரம்பிலேகிளர்ந்த. முதிர் - முதிர்ந்த. சுவையே-கீ

தாஸம்போலே நிரதிஶயபோக்யபூதனாய். பல் - இந்தரஸஜ்ஞராய் பஹுவிதராயிருக்கிற. நலார் - அஸ்கலிதஜ்ஞாநாதி வைலக்ஷண்யத்தை யுடையார். பயிலும்-நித்யாநுபவம்பண்ணுவதற்கு. பரனே - மேலாயிருக்குமவனாய். பவித்திரனே - இந்தரஸஜ்ஞரல்லாதார்க்கு மஜ்ஞாநாதி தோஷங்களைப்போக்கி புஜிப்பிக்கும்பாவநபூதனாய். கன்னலே - இக்ஷுரஸம்போலே பர்வந்தோறும் நிரதிஶயபோக்யபூதனாய். அமுதே - அழிந்தாரையுமாக்குவதான அம்ருதரஸமாய். கார்முகிலே - ஏவம்விதஸாரஸ்யத்துக் காஶ்ரயமான கார்காலத்தில்மேகம்போலே உதாரவிக்ரஹயுக்தனாய். என் - உவ்வடிவழகோடே யெனக்கநுபாவ்யனாகைக்கு. கண்ணா - க்ருஷ்ணனானவனே. நின்னலால் - இப்படி நிரதிஶயபோக்யபூதனான வுன்னையொழிந்தால். இலேன்காண் - எனக்கு ஸத்தையில்லைகாண். என்னை - வ்யதிரேகத்திலழியும்படியானவென்னை. நீ- வ்யதிரேகத்திலழிக்கும்படியான போக்யதையையுடையநீ. குறிக்கொள் - இரண்டுதலையையுமறிந்து திருவுள்ளம்பற்றவேணும்..........*

---

## ஈடு - ஏழாம்பாட்டு.

இப்படிதாம்பெற்ற பேற்றின்கனத்தையு மநுஸந்தித்து, இவ்விஷயத்தினுடைய போக்யதையையுமநுஸந்தித்து, "இதிருந்தபடிகண்டோமுக்குத் தொங்காதுபோலேயிருந்தது" என்றதிஶங்கைபண்ணி, தேவரொன்னைக்கைவிடில் நானுளேனாகேன், என்னைக்கைவிடாதொழியவேணுமென்கிறார்.

(முன்னலித்யாதி) "முன்னல்" என்கிறவொற்றைப்போக்கி-முனலாக்கி, முரலாக்கி நிர்வஹிப்பாருமுண்டு. அன்றிக்கே, முன்னலென்றது-உன்னலாய், உன்னல்-நினைத்தலாய், இனிமையாலே "அதுவது" என்று வாய்புலற்றும்படியிருக்கை. அன்றிக்கே, முன் - ஶாஸ்த்ரத்தினுடைய பழமையாய், ஆதியிலேயுண்டாய், நல் - அதுதான் நன்றாய், யாழ்பயில்நூல் - யாழ்விஷயமாக அப்யஸிக்கப்படுவதானநூலுண்டு - ஶாஸ்த்ரம். அந்தஶாஸ்த்ரோக்தமான்படியே. (நரம்பின்முதிர்சுவையே) நரம்பிலே தட்டவப்பட்ட-அதிலேபிறந்த பண்பட்டரஸம்போலே போக்யனானவனே. மிடற்றைச்சொல்லாதொழிந்தது - கர்மாநுகுணமாகப்போது செய்யுமதுண்டாகையாலே யதுக்கு. இப்படிபோக்யதைகுறைவற்றால் போக்தாக்கள்வேணுமே, அவர்களைச்சொல்லுகிறதுமேல் (பன்னலார் பயிலும்பரனே) "தெள்ளியார்பலர்கைதொழுந்தேவனார்" என்கிறபடியே - தாங்கள்பலராய், பகவத்குணங்களுக்கு தேஶிகராயிருந்துள்ள நித்யஸூரிகள் ஸதாநுபவம்பண்ணாநின்றாலும், அநுபூதாம்ஶ மளவுபட்டு அநுபாவ்யாம்ஶமே பெருத்திருக்கை. (பவித்திரனே) நித்யஸம்ஸாரிகளுக்கும் நித்யஸித்தரோபாதியுன்னை யநுபவிக்கைக்கு யோக்யராம்படியான சுத்தியைப்பிறப்பிக்குமவன். அன்றிக்கே, பன்னலாரென்று - முமுக்ஷுக்களையாக்கி,அவர்களைப்போது மநுபவியாநின்றாலும் தொலையாதபோக்யதையை யுடையையாய், அவர்களுக்கு த்வதநுபவவிரோதியைப்போக்

கும் சுத்தியோகத்தையுடையவனே யென்றுமாம். ( கன்னலே ) எனக்கு நிரதிஶயபோக்யனானவனே. ( அமுதே ) என்னைச்சாவாமல் ஜீவிப்பித்துக்கொண்டு போருகிறவனே. ( கார்முகிலே ) ஔதார்யத்தைப்பற்ற. ( என்கண்ணா ) தன்னைக்கொடுத்தபடி. இவ்வளவு மிவருடையஸங்காஹேது. ( நின்னலாலிலேன்காண் ) உன்னையொழிய அரைக்ஷணம் ஜீவிக்கமாட்டேன். உன்னையொழிய ரக்ஷகரையுடையேனல்லேனென்றுமாம். ( என்னை நீகுறிக்கொள்ளே ) என்னைப்பார்த்தருளவேணுமென்னுதல், என்னைத்திருவுள்ளம்பற்றவேணுமென்னுதல். ( என்னை ) உன்னையொழிந்தவன்று அசித்ப்ராயனானவென்னை. ( நீ ) இதுக்குதாரகனானநீயென்றுமாம்.......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( முன்னலித்யாதி ) பேற்றின்கனத்தையுமென்றது-கீழ்ப்பாட்டுக்களெல்லாவற்றையுங்கடாக்ஷித்து. போக்யதையுமென்றது-இப்பாட்டில் பதங்களைக்கடாக்ஷித்தாதல், “ வீட்டின்பமே-கடற்படாவமுதே ” என்றத்தைப்பற்றவாதல். கண்டோமுக்கு-கண்டநமக்கு. தொங்காதுபோலே - நில்லாதுபோலே. உளேனாகேன்-ஸத்தாவானாகேன்.

( ஒற்றைப்போக்கி ) ஒற்று - ஸம்யுக்தாக்ஷரம். முனலாக்கி முரலாக்கியென்றது - “ ஈராலாம் ” என்கிறலக்ஷணத்தினாலே ரேபனகாரங்களுக்கு பேதமில்லாமையைப்பற்ற. முனலுகை - முரலுகை. அதாவது-ஶப்திக்கை. முந்தினவர்த்தத்துக்கு, ஶப்தியாநின்றுள்ள யாழ்விஷயமாக வ்யவஹிக்கப்படாநின்றுள்ள ஶாஸ்த்ரோக்த க்ரமத்திலே நரம்பிலேதடவப்பட்ட-அதிலேபிறந்த பண்பட்டரஸம்போலேயிருக்கிறவனேயென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு “ முன்னல் ” என்றது னுலுக்குவிஶேஷணம். ஶாஸ்த்ரத்தினுடைய - காந்தர்வஶாஸ்த்ரத்தினுடைய. “ நரம்பிலேதடவப்பட்ட ” என்றதுக்குவிவரணம் ( அதிலேபிறந்தவென்று ) நரம்பிலே தடவுகையாலே பிறந்தவென்றபடி. பட்ட-பிறந்த. பண்பட்டவென்றது - “முதிர்” என்றதினர்த்தம். யாழ்-வீணை. மிடற்றிலுண்டானகானத்தைச்சொல்லாதொழிவானென்னென்ன ( மிடற்றையித்யாதி ) போதுசெய்யுமது - ஶ்லேஷ்மாதிகளாலே விகரிக்குமது.

( பன்னலாரித்யாதி ) பலராய் தேஶிகரான நித்யஸூரிகளுக்கு மளவிறந்தவனென்று விவக்ஷித்து அதுக்குப்ரமாணம் ( தெள்ளியாரித்யாதி ) நாய்ச்சியார் திருமொழி. தெளிவுடையார் பலர்கைதொழும்படியிருக்கிற தேவரானவனென்கை. நன்மைக்கர்த்தம் ( தேஶிகராயிருந்துள்ளவென்றது ) “ பயிலும் ” என்றவர்த்தமானார்த்தம் ( ஸதாநுபவமித்யாதி ) பவித்ரம்-ஸ்வதஶ்ஶுத்தமாய், சுத்த்யாபாதகமுமாயிருக்குமது. அதில், சுத்த்யாபாதகத்வத்தை யருளிச்செய்கிறார் ( நித்யஸம்ஸாரிகளுக்குமித்யாதி ) தொலையாத-பரிச்சிந்நமாகாத. சுத்தியோகத்தை யருளிச்செய்கிறார் ( அவர்களுக்கித்யாதி )

கன்னல் - வெல்லம். என்னைச்சாவாமலித்யாதியாவது - *வாயுந்திரையுகளிலே விஶ்லேஷித்து முடியாதபடி ஜீவிப்பித்தவனேயென்றபடி. நிறத்தைப்பற்றவுஞ்சொல்லலாமாகையாலே யத்தை நிவர்த்திப்பிக்கிறார்.

( ஔதார்யத்தைப்பற்றவென்று ) ஔதார்யசரமாவதி ( தன்னைக்கொடுத்தபடியென்று )

குறிக்கொள்ளுகையாவது-மெய்க்காட்டைக்கொள்ளுகையாய், பார்க்கையைச்சொல்லுகிறது. "குறிக்கொள்" என்றதினர்த்தத்வயத்துக்கும் சேரவர்த்தத்வயம் ( உன்னையித்யாதி ) இதுக்கு - இவ்வாத்மவஸ்துவுக்கு. "இதுக்குதாரகனுனநீயென்றுமாம்" என்றிருக்கையாலே - "நின்னலாலிலேன்" என்றதினர்த்தத்வயாநுகுணமாக "என்னை, நீ" என்கிறவிடத்திலு மர்த்தத்வயபரமானவாக்யங்கள் சிலஸ்ரீகோஶங்களிலேயில்லாதபோது, "ரக்ஷகனுனநீரக்ஷ்யமானவென்னை" என்று மோரர்த்தமத்யாஹரித்துக்கொள்வது.

"முன்னல்யாழ்"இத்யாதிக்கு (அன்றிக்கே, முன்னலென்றது-உன்னலாய், உன்னல்-நினைத்தலாய், இனிமையாலே "அதுவது" என்றுவாய்புலற்றும்படியிருக்கை ) என்றுமோரர்த்தம் சிலஸ்ரீகோஶங்களிலே யிருக்கிறது ; இந்தவாக்யத்திலே, நினைத்தலாயென்றது - தத்கார்யமானவாய்புலற்றலைலக்ஷித்து, இனிமையாலே வாய்புலற்றும்படியிருக்குமென்று யாழுக்கு விஶேஷணமாதல், நூலுக்குவிஶேஷணமாதல்.

க்ரமேணுந்வயः.........................................................................*



# எட்டாம்பாட்டு.

குறிக்கொள்ஞானங்களாலெனையூழிசெய்தவமுங்
கிறிக்கொண்டிப்பிறப்பேசிலநாளிலெய்தினன்யா
னுறிக்கொண்டவெண்ணெய்பாலொளித்துண்ணுமம்மான்பின்
னெறிக்கொண்டநெஞ்சனுய்ப்பிறவித்துயர்கடிந்தே.

## ஆருயிரப்படி.

( குறிக்கொள் ) தாமிப்படி யெம்பெருமானை யபேக்ஷிக்க, அவனும், "நாம்விஶ்லேஷிக்க ப்ரஸங்கமென்" என்றருளிச்செய்ய, தாமும் நிவ்ருத்தாதி ஶங்கராய்க்கொண்டு ; அதிதுஷ்கரமாய் அநேககாலஸாத்யமான கர்மயோகஜ்ஞாந யோகஸஹக்ருதபக்தியோகஸாத்யமான ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகபகவததநுபவத்தை யிஜ்ஜந்மத்திலே யல்பகாலத்திலே அயத்நேந நான்பெற்றேனென்று தாம்பெற்ற ஸம்ருத்தியைச்சொல்லி யநுபவிக்கிறார்...................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம் இவ்வநுபவம் தமக்குக்கைவந்தபடியை யருளிச்செய்கிறார்.

உறி - உறியிலே. கொண்ட - சேமித்துவைத்துக்கொண்ட. வெண்ணெய் - வெண்ணெயையும். பால் - பாலையும். ஒளித்து - உடையவர்களறியாமல்க்ருத்ரிமத்தாலேபுக்கு. உண்ணும் - அமுதுசெய்தசெயலாலே. அம்மான் - அடிமைகொண்டஸ்வாமியான க்ருஷ்ணனுடைய. பின் - பின்னே. அவ்வபதாநத்துக்குத்தோற்று

நெறி - அவன்போனவழியே. கொண்ட - போய்த்திரிகிற. நெஞ்சனாய் - நெஞ்சை யுடையேனாய். பிறவித்துயர் - ஜந்மப்ரயுக்ததுரிதங்களை. கடிந்து-ஈரற்கடைக்கொண்டநாதரித்து. குறிக்கொள் - கர்த்ருத்வாதித்யாகத்தாலும்யமநியமாதிகளாலும் குறிக்கொள்ளப்படுவதான. ஞானங்களால் - வேதநத்யாநோபாஸநரூபபர்வபேதங்களாலும், ஸத்வித்யாதஹரவித்யாதி வ்யக்திபேதங்களாலும் பலவகைப்பட்ட ஜ்ஞாநயோகங்களாலே "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு) "பஹூநாம்ஜந்மநாமந்தே" (பஹூநாம்ஜந்மநாமந்தே) என்கிறபடியே. எனையூழி - அநேககாலங்களிலே. செய் - செய்யப்பட்ட. தவமும் - பக்தியோகமாகிறதபஸ்ஸினுடைய பலத்தை. கிறிக்கொண்டு - பகவத்க்ருபையாகிற நல்விரகைக்கொண்டு. இப்பிறப்பே - இஜ்ஜந்மத்திலே. சிலநாளில் - அல்பகாலத்திலே. யான் - அநுபவத்துக்கடைவில்லாதநான். எய்தினன் - கிட்டப்பெற்றேன்.

கிறி - விரகு..............................................................*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

"என்னைநீகுறிக்கொள்ளே" என்றவாறே அவன்குளிரக்கடாக்ஷித்தான், அத்தாலே ஸகலவ்யஸநங்களும்போய் அவனை யநுபவிக்கிறார்.

(குறிக்கொள்ஞானங்களால்) யமநியமாத்யவஹிதராய்க்கொண்டு ஸம்பாதிக்கவேண்டும் ஜ்ஞாநவிசேஷங்களாலே. அவையாவன - வேதநத்யாநோபாஸநாத்யவஸ்த்தாவிசேஷங்கள். (எனையூழிசெய்தவமும்) அநேககல்பங்கள்கூடி ஸ்ரவணமாய் மநநமாய்த்ருவாநுஸ்ம்ருதியாய், இங்ஙனே வரக்கடவதான தபஃபலத்தை. (கிறிக்கொண்டு) ஒருயத்நமின்றிக்கேயிருப்பதொரு விரகைப்பெற்று. அதாவது - அவன்றன்னையே கொண்டென்றபடி. கிறிஎன்ன - அவனைக்காட்டுமோவென்னில்; "பெருங்கிறியார்" என்னக்கடவதிறே. இதுதானெத்தனை ஜந்மங்கூடியென்னில் (இப்பிறப்பே) இஜ்ஜந்மத்திலே. இஜ்ஜந்மமெல்லாங்கூடியோவென்னில் (சிலநாளில்) அல்பகாலத்திலே. அழகிது, ப்ராபிக்கக்கடவீராய் நின்றீரோவென்ன (எய்தினன்) ப்ராபித்தேன். (யான்) இப்பேற்றுக்கொருயத்நம்பண்ணாதநான். (உறிக்கொண்டவித்யாதி) "தவமெய்தினன்" என்கிற - பலத்தைச்சொல்லுகிறதாதல், "கிறிக்கொண்டு" என்கிற - உபாயத்தைச்சொல்லுகிறதாதல். (உறியித்யாதி) உறிகளிலே சேமித்துக்கள்ளக்கயிறுருவிவைத்த வெண்ணெயையும் பாலையும் "தெய்வங்கொண்டதோ" என்னும்படி மறைத்தமுதுசெய்தவச்செயலாலே ஜகத்தை யெழுதிக்கொண்டவனுடைய. (பின்னெறிக்கொண்டநெஞ்சனாய்) அவன்பின்னேநெறிப்பட்ட நெஞ்சையுடையனாய்; "யேநயேநதாதா கச்சதி தேநதேந ஸஹகச்சதி" (யேநயேநதாதாகச்சதிதேநதேந ஸ்ஹகச்சதி) என்கிறபடியே - அன்றியே, பின்னெறிக்கொண்டவென்கிறது - ப்ரபத்தியை. பின்னெறிஎன்கிறது - பின்னே சொன்னநெறியென்

றபடி. நெறி - வழி. ( பிறவித்துயர்கடிந்தே ) பலத்தைச்சொன்னவிடத்திலே விரோதிநிவ்ருத்தியையுஞ் சொல்லிக்கிடந்ததிறே, அத்தைச்சொல்லுகிறது. அன்றியே, ( பின்னெறிக்கொண்டநெஞ்சனாய் ) பாரதஸமரத்திலே அர்ஜுநனுக்கோரவஸ்த்தையைப் பிறப்பித்திறே யுபாயத்தையுபதேசித்தது ; இவர்வெண்ணெய் களவுகாணப்போனவிடத்திலே அடியொற்றிக்கொண்டுசென்று அவன்புக்க க்ருஹத்திலே படலைத்திருகிவைத்தாயிற்று கேட்டுக்கொண்டது. ( பிறவித்துயர்கடிந்தே ) " ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி "( ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி ) என்றேவைத்தானிறே ..............................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( குறிக்கொள்ளித்யாதி ) " பிறவித்துயர்கடிந்து தவமெய்தினன் " என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( என்னைநீயித்யாதி )

குறி - குறிப்பு, ஸாவதாநதை. இத்தால் - யமநியமாத்யவஹிதத்வத்தைச் சொல்லுகிறது. எனையூழி - குறிக்கொள்ஞானங்களால் - செய்தவமும் ,, என்றநவயம் திருவுள்ளம்பற்றி, கீழேசொன்ன " வேதந " இத்யாதியை விவரிக்கிறார் (அநேககல்பங்களித்யாதி ) வேதநத்தால் - ஶ்ரவணமநநங்களையும், த்யாநோபாஸநங்களாலே - நிதித்யாஸநத்தையும் அதினுடைய வுத்தரோத்தராவஸ்த்தையையும், ஆதிஶப்தத்தால் - தர்ஶநரூபதையையுஞ்சொல்லுகிறது. ( இங்ஙனேவரக்கடவதான தபஃபலத்தை ) இங்ஙனே வரக்கடவதாயிருக்கிற யாதொருதபஸ்ஸுண்டு அதினுடைய பலத்தையென்றபடி. " தபஆலோசநே " (தபஆலோசநே) என்கிற தாதுவாலும், " யஸ்யஜ்ஞாநமயந்தபஃ " (யஸ்யஜ்ஞாநமயந்தபஃ) என்கிறந்யாயத்தாலும், தபஶ்ஶப்தம்-ஜ்ஞாநாவஸ்த்தாவிஶேஷமான பரபக்த்யாதிபரம். " தவம் " என்றது - தபஃபலமென்றபடி. பகவத்ப்ராப்தி ரூபபலலக்ஷண -" குறிக்கொள் " இத்யாதி - அநேககாலங்களிலே யமநியமாத்யவஹிதங்களான ஶ்ரவணமநநாதிரூபஜ்ஞாநங்களாலே வரக்கடவ பரபக்த்யாதிகளாகிற தபஸ்ஸினுடைய பலத்தை யென்று ஶப்தார்த்தம்.

கிறி - உபாயம். ( அவன்றன்னையேகொண்டு ) அவன்றன்னையே யுபாயமாகக்கொண்டு. தடஸ்த்தஶங்கையையநுவதித்து பரிஹரிக்கிறார் (கிறியென்னவித்யாதி ) பெருங்கிறியார் - பெருவிரகர், மஹோபாயசாலிகளென்றபடி.

" பின்னெறிக்கொண்டநெஞ்சனாய் " என்றதுக்கர்த்தத்வயம். பலபரமாகவும் உபாயபரமாகவுங்காட்டுகிறார் ( தவமெய்தினனித்யாதிவாக்யத்வயத்தாலே ) பலபரயோஜநை ( உறிகளிலேயித்யாதி ) " கொண்ட " என்றதினர்த்தம் ( சேமித்திரித்யாதி ) * ஒளித்தினர்த்தம் ( மறைத்தென்றது ) அவன்பின்னெறிப்பட்டநெஞ்சையுடையனாய் ) அவன்பின்னேவழிப்படும்படியான நெஞ்சையுடையனாய். அதாவது - கைங்கர்யத்திலேயந்வயித்த நெஞ்சையுடையனாயென்றபடி. உபாயபரயோஜநாமாஹ ( அன்றியே யித்யாதி ) பின்னெறிக்கொண்டநெஞ்சனாய் - பின்பு சொன்ன சரமஶ்லோகோக்தமான வுபாயத்திலே யந்வயித்தநெஞ்சையுடையனா

யென்றிரண்டாமர்த்தம். பலஞ்சொல்லுகிறவிடத்திலே விரோதிநிவ்ருத்தியைச் சொல்லுவானென்னென்ன (பலத்தையித்யாதி) அதாவது - பலபரமானசரமஸ்லோகத்திலுத்தரார்த்தத்திலேயென்றபடி. "வராஂஸாஹூஂமெதி" (பரமம்ஸாம்யமுபைதி) என்றவிடத்திலே, "புணூவாவெவிய-ய" (புண்யபாபேவிதூய) என்றுஞ்சொல்லிக்கிடந்ததிறே; அப்படியே யிங்கும் "பிறவித்துயர்கடிந்து" என்றுவிரோதிநிவ்ருத்தியைச்சொல்லுகிறதென்றபடி. இந்தவாக்யம்-பலபரபூர்வயோஜநாசேஷம். "உறிக்கொண்ட" இத்யாதிக்கு ரஸமாகத்ருதியதாத்பர்யம் (பாரதஸமரேத்யாதி) உறிக்கொண்டவெண்ணெயும் பாலையுமொளித்துண்ணுநிற்கிறவம்மான்பின்சென்று, நெறியான ப்ரபத்த்யுபாய ப்ரதிபாதக சரமஸ்லோகத்தை க்ரஹித்தநெஞ்சையுடையனுயென்று ஸப்தார்த்தம். ஓரவஸ்த்தையைப்பிறப்பித்து-சோகயுக்தாவஸ்த்தையைப்பிறப்பித்து. இவர்-ஆழ்வார். அடியொற்றிக்கொண்டுசென்று - அடிபிடித்துக்கொண்டுபோய். பின்னேசென்றென்றபடி. "பலத்தைச்சொன்னவிடத்திலே" இத்யாதிவாக்யவிவரணம் (ஸர்வபாபேப்ய இத்யாதி) இவ்விடத்தில் ததிபாண்டன் கதையைநினைப்பது.

யான், உறிக்கொண்ட இத்யாரப்ய, நெஞ்சனுய்ப் பிறவித்துயர்கடிந்து - எனையூழி-குறிக்கொள்ஞானங்களால் - செய்தவமும் கிறிக்கொண்டிப்பிறப்பே சில நாளிலெய்தினனென்றந்வயம்.......................................................*



## ஒன்பதாம்பாட்டு.

கடிவார்தண்ணந்துழாய்க்கண்ணன்விண்ணவர்பெருமான்
படிவானமிறந்தபரமன்பவித்திரன்சீர்ச்
செடியார்நோய்கள்கெடப்படிந்துகுடைந்தாடி
யடியேன்வாய்மடுத்துப்பருகிக்களித்தேனே.

### ஆறாயிரப்படி.

(கடிவார்) நிரவதிகபோக்யபூதனுய், * அயர்வறுமமரர்க ளதிபதியாய், திருநாட்டிலுங்கூடத் தன்னேடொத்தாரையும்மிக்காரையுமுடையவனல்லாமையாலே பரமனுய், ஸ்வாஸ்ரிதருடைய ஸ்வஸம்ஸ்லேஷ விரோதிஸர்வதோஷங்களையும்போக்கும் ஸ்வபாவனுயிருந்த வெம்பெருமானுடைய கல்யாணகுணங்களாகிற வம்ருதவெள்ளத்திலே யென்னுடைய விடாயெல்லாங்கெடும்படிபோய்ப் புக்குப்படிந்துகுடைந்தாடி வாய்மடுத்துப்பருகிக் களித்தேனடியேனென்கிறுர்...................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படியவன் குணங்களையநுபவித்து ஆநந்தியானேனென்கிறுர்.

கடி - பரிமளம். வார் - ப்ரவஹியாநிற்கிற. தண்ணந்துழாய் - செவ்வித்திருத்துழாயையுடையனுய்க்கொண்டு; கண்ணன் - ஆஸ்ரிதபவ்யனுனக்ருஷ்ணனுய்.

விண்ணவர்பெருமான் - இவ்வடிவழகையநுபவிக்கிறபரமபதவாசிகளுக்கவ்வருகானமேன்மையையுடையதனக்கு. வானம் - பரமபதத்திலும். படி - ஒப்பு. இறந்த- இல்லையாகையாலே. பரமன் - தனக்குமேலில்லையானபெரியவனாய். பவித்திரன்- இப்பெருமையறியாதாரறிவுகேட்டையும் போக்கியநுபவிப்பிக்கும் பாவநபூதனுடைய. சீர் - பரத்வஸௌலப்யபோக்யத்வபாவநத்வ ப்ரகாசகமானகுணங்களிலே. செடியார் - ஒன்றோடொன்றுமிடைந்து தூறுமண்டினாற்போலேயிருக்கிற. நோய்கள் - விஷயருசிதொடக்கமான மஹாவ்யாதிகள். கெட - நசிக்கும்படி. படிந்து - கிட்டி. குடைந்து - எங்குமுட்புக்கு. ஆடி - முழுகி. அடியேன் - அவனையொழியச்செல்லாதபடி அநந்யார்ஹனானநான். வாய்மடுத்து - புஜிக்கைக்குபகரணமான அபிநிவேஶமாகிறவாயைமடுத்து. பருகி - பெருவிடாயன் தண்ணீர்குடித்தாற்போலே நிரம்பபுஜித்து. களித்தேன் - நிரதிஶயமான வாநந்தத்தைப்பெற்றேன்.

படிவானமிறந்தவென்று - வடிவழகுக்கு மேகமொப்பல்லவென்றுமாம்...*

---

## ௯-ஒன்பதாம்பாட்டு.

“ ஸோஸ்நுதேஸர்வாந்காமாந் ஸஹப்ரஹ்மணாவிபஶ்சிதா ” ( ஸோஸ்நுதேஸர்வாங்காமாந் ஸஹப்ரஹ்மணாவிபஸ்சிதா ) என்கிறபடியே, என்னுடைய ஸகலதுரிதங்களும்போம்படி ஸர்வேஸ்வரனை யநுபவிக்கப்பேற்றேனென்று ஹ்ருஷ்டராகிறார்.

( கடிவார்தண்ணந்துழாய்க்கண்ணன் ) பரிமளப்ரசுரமான திருத்துழாய் மாலையையுடைய க்ருஷ்ணனென்னுதல்; மது, ஸ்யந்தியாநின்றுள்ள திருத்துழாயையுடையவனென்னுதல். (விண்ணவர்பெருமான்) இவ்வொப்பனையழகாலே யெழுதிக்கொள்வது, அநந்தவைநதேயாதிகளையாயிற்று.

( படிவானமிறந்தபரமன் ) தன்படிக்கு வானிலுள்ளாரொப்பாகாதபடி யிருக்கிறபரமன். பரமஸாம்யாபந்நரான நித்யஸூரிகளும் தன்படிக்கொப்பாகாதபடியான மேன்மையையுடையவனென்னுதல் ; தன்றிருமேனிக்கு, வானமுண்டு - மேகம், அதொப்பாகாதபடியிருக்கிறவனென்னுதல். ( பவித்திரன் ) இவ்வடிவழகை ஸம்ஸாரிகளு மநுபவிக்கைக்கு யோக்யராம்படிபண்ணும் சுத்தியையுடையவனுடைய. சீருண்டு-கல்யாணகுணங்கள். அவற்றை, அடிகாணவொண்ணாதபடி தூறுமண்டிக்கிடக்கிற ஸாம்ஸாரிக ஸகலதுரிதங்களும்போம்படிவந்துகிட்டி, நாலுமூலையும்புக்கு, அவகாஹித்து, அநந்யார்ஹனானநான் மூழுமிட்டுசெய்தநுபவித்து, யமாதிகள்தலையிலேயும் அடியிட்டுக்களிக்கப்பெற்றேன். படிந்து- கிட்டி. குடைந்து - எங்கும்புக்கு. ஆடி - அவகாஹித்து. அடியேன், வாய்மடுத்துப்பருகி - பெருவிடாயோடே யநுபவித்து. ( களித்தேனே ) இதரவிஷயஸ்பர்ஶம் துஃகமேயானாற்போலே, பகவத்குணாநுபவம் களிப்பேயாகக்கடவது ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( கடிவாரித்யாதி ) " செடியார்நோய்கள்கெட - சீர் - வாய்மடுத்துப்பருகிக்களித்தேன் " என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( ஸோஸ்நுதேஇத்யாதி ) துரிதங்களும் - துஃகங்களும்.

கடி - பரிமளமும், மதுவும். வார்தல் - ம்ருதியும், ஒழுகுதலும். கிழோடே கூட்டியர்த்தம் ( இவ்வொப்பனையித்யாதி )

படி - ஸ்வபாவமும், விக்ரஹமும். வானமென்றது - "மஞ்சாஃக்ரோஶந்தி" (மஞ்சாஃக்ரோஶந்தி) இதிவத், வானிலுள்ளாரைச்சொல்லுதல் ; மேகத்தைச்சொல்லுதல். இறந்த - ஒப்பாகாத. " ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ " ( ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ ) இத்யத்ர ப்ரஸங்கம் ஸம்பாதயதி ( பரமஸாம்யேத்யாதி ).

"செடியார்" என்றதினர்த்தம் ( தூறுமண்டிக்கிடக்கிறவென்று ) தூறுவது - அவித்யாதிகள். ஆர்தல் - பூர்த்தி. " படிந்து, குடைந்து, ஆடி, " என்கிறபதத்ரயத்துக்கும் க்ரமேணார்த்தம் ( கிட்டிஇத்யாதி ) வாய்மடுத்துப்பருகி - ( முழுமிடறுசெய்தநுபவித்து ) மிடறுநிறையக்குடித்தென்றபடி. வாய்மடுத்துக்குடித்தென்று ஶப்தார்த்தம். மடுத்து - மடக்கிட்டு. பாநபாத்ரமாக்கியென்றபடி. ஆநந்தஸ்யசரமாவதிமாஹ ( யமாதிகளித்யாதி ) " வாய்மடுத்து " என்றதுக்குபாவம் (பெருவிடாயோடேயென்று) " களித்தேனே " என்றஏவகாரார்த்தம் ( இதரவிஷயேத்யாதி ) ஏவகாரம் - அந்யயோக வ்யவச்சேதபரமென்றபடி.

க்ரமேணாந்வயஃ..........................................................................*

---

## பத்தாம்பாட்டு.

களிப்புங்கவர்வுமற்றுப்பிறப்புப்பிணிமூப்பிறப்பற்
றொளிக்கொண்டசோதியுமாயுடன்கூடுவதென்றுகொலோ
துளிக்கின்றவானிந்நிலஞ்சுடராழிசங்கேந்தி
யளிக்கின்றமாயப்பிரானடியார்கள்குழாங்களையே.

### ஆறுயிரப்படி.

( களிப்பும் ) இப்படியெம்பெருமானுடைய குணங்களாகிற அம்ருதத்தை புஜிக்கிறவாழ்வார் ; இந்தவம்ருதத்தை, நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகனாய்க்கொண்டு பகவத்குணைகபோகரான நித்யஸித்தபுருஷர்களுடைய திவ்யபரிஷத்திலேசென்று அவர்களோடேகூட நான்புஜிப்பதென்றோவென்கிறார்..........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஏவம்விதபோகாநந்தத்துக்கு முக்யபோக்தாக்கள் ஸூரிகளாகையாலே, அவர்களோடுகூடுகையை யர்த்திக்கிறார்.

களிப்பும் - விஷயலாபத்தில்களிப்பும். கவர்வும் - ததலாபத்திலபிநிவேஶமும். அற்று - அற்று. பிறப்புப்பிணிமூப்பிறப்பற்று - அதுக்கடியானஜந்மவ்யாதி

ஜராமரணங்களுமற்று. ஒளிக்கொண்ட - ஆவிர்ப்பூதமானஜ்ஞாநாதிகளாகிறஒளிகளுக்குப்ரகாசகமான. சோதியுமாய் - ஜ்யோதிர்மயவிக்ரஹத்தையுடையோமாய்க்கொண்டு. துளிக்கின்ற - வர்ஷிக்கிற. வான் - ஆகாசத்தையும். இ - அத்தாலேதரிக்கிற. நிலம் - பூமியையும். பாதகரஹிதமாம்படி - சுடர் - பேரொளியையுடைய. ஆழி - திருவாழியையும். சங்கு - திருச்சங்கையும். ஏந்தி - ஏந்தி. அளிக்கின்ற - ரக்ஷித்தருளுகிற. மாயப்பிரான் - மஹோபகாரகனுடைய. அடியார்கள் - நித்யதாஸ்யைகநிரூபணீயரானஸூரிகளுடைய. குழாங்களை - ஸங்கங்களை. உடன் - ஒருசீராம்படியுடன்பட்டு. கூடுவது - கூடுவது. என்றுகொலோ - என்றோ.

ஸமஸ்தவிரோதி நிவ்ருத்திபிறந்து ஆவிர்ப்பூதஸ்வரூப ஸ்வபாவரானவர்க்கு ப்ராப்யம் அடியாரான ஸூரிகளென்றுகருத்து.......................................*

---

## ஈடு - பத்தாம்பாட்டு.

"களித்தேனே" என்று, திரியட்டும் ஸம்ஸாரிகளோடே யிருக்கையன்றியே, இவ்வநுபவத்துக்கு தேசிகரான நித்யஸூரிகள் திரளிலே போய்ப் புகுவதெப்போதோவென்கிறார்.

(களிப்பும்) இதரவிஷயாநுபவத்தாலே வரும்களிப்பும் (கவர்வும்) அவைபெறுதபோது ஆசைப்பட்டுவரும் க்லேசமும். (அற்று) போய், இவையிரண்டுக்கு மடியானஜந்மம், அதுபுக்கவிடத்தே புகக்கடவதானவ்யாதி, அநந்தரம் வரும்ஜரை, "இத்தோடேயாகிலு மிருந்தாலாகாதோ" என்று நினைத்திருக்கச்செய்தேவரும் நிரந்வயவிநாசம், இவையடையவற்று. (ஒளிக்கொண்டசோதியுமாய்) ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசினவிந்த சரீரம்போலன்றியே, சுத்தஸத்வமயமாய் நிரவதிகதேஜோரூபமான சரீரத்தையுடையோமாய். (உடன்கூடுவதென்றுகொலோ) "நான், எனக்கு" என்றகலவேண்டாத இவ்வுடம்புடையார் திரளிலே போய்ப்புக்கு நெருக்கப்பெறுவதென்றோ. (துளிக்கின்றவித்யாதி) வர்ஷிக்கையே ஸ்வபாவமாகவுடைத்தான வாகாசம், அத்தாலேவிளையக்கடவதானஇந்தப்பூமி,இவற்றைக்கடற்கரைவெளியிலேநோக்கினாற்போலே, திவ்யாயுதங்களைத்தரித்துநோக்குகிற ஆஶ்சர்யபூதன். (சுடராழிசங்கேந்தியளிக்கின்றமாயப்பிரான்) பரமபதத்திலாபரணமாய்க் காட்சிதரும், இங்காயுதமாயிறேயிருப்பது. இப்படிரக்ஷிக்கிறவனுடைய அந்தரக்ஷணத்திலே தோற்றிருப்பாராய், அவன்றன்னோடொக்க ப்ராப்யருமாய், பகவத்குணங்களுக்கு தேசிகராயிருப்பாருமாய், * போதயந்த: பரஸ்பரத்துக்குத் துணையாயிருக்கிறவர்களுடைய குழாங்களை. கவியர் "கலவரிசிச்சோறுண்ண" என்னுமாபோலே, அத்திரள்களிலேபோய்ப்புகப்பெறுவதெப்போதோவென்கிறார்.......................................*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (களிப்புமித்யாதி) "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்றுகொலோ" என்றபதங்களைக்கடாக்ஷித் தவதாரிகை (களித்தேனே யித்யாதி) திரியட்டும் - மீளவும்.

கவர்வு - க்லேசம். பிணி - வ்யாதி. நிரந்வயவிநாசம் - சரீராந்வயாபாவரூ பவிநாசம். சரீரஸம்பந்தா பாவரூபவிநாசம். மரணமென்றபடி. ஸாந்வயவிநாசமா வது - சைசவயௌவநாத்யவஸ்த்தைகள். சப்தார்த்தம் (ரஜஸ்தமஸ்ஸூக்களித்யா தி) "ஒளிக்கொண்டசோதி" என்றத்தால்பலிதம் (சுத்தஸத்வமயமாயென்றது)

"அடியார்கள்" என்றத்தைப்பற்ற (நானெனக்கென்றித்யாதி) "பாக வதஸமுதாயம்ப்ராப்யம்" என்றறியாநிற்கச்செய்தேயும், அஹங்கார மமகாரங்க ளாலே யகலவேண்டாநின்றதிறே; அப்படியகலவேண்டாத ஸம்பந்தஜ்ஞாநமுடை யவர்களென்றபடி. இவ்வுடம்புடையார் - சுத்தஸத்வமயமான வுடம்புடையார். கூடுவதென்றுகொலோஎன்னுதே, "உடன்" என்கையாலே (நெருக்கப்பெறுவ தென்றேவென்றது)

"துளிக்கின்ற" என்றவர்த்தமாநார்த்தம் (வர்ஷிக்கையே ஸ்வபாவமாக வென்றது) "கடற்கரை" என்றவிடத்திலே - "ராமலக்ஷ்மணகுப்தாஸா" (ராமலக்ஷ்மணகுப்தாஸா) இத்யாத்யநுஸந்தேயம். அளிக்கின்ற - ரக்ஷிக்கிற. போக்யமானதிருவாழி திருச்சங்குகளை ரக்ஷணத்துக்குப் பரிகரமாகச்சொல்லுவா னென்னென்ன (பரமபதத்திலித்யாதி) போக்யமென்றது - "சுடர்" என்றும், "ஏந்தி" என்றுமிருக்கையாலே. ஸமூஹபாஹுள்ய கதநத்துக்குத்தாத்பர்யம் (க லியரித்யாதி) கலியர் - பசித்தவர். ஆற்றாமையின்மிகுதி யிப்படிசொல்லப்பண் ணுமென்று கருத்து.

உத்தரார்த்தபூர்வகம பூர்வார்த்தாநுஸந்தாநமந்வய: ............ .........*



# பதினொன்றாம்பாட்டு.

குழாங்கொள்பேரரக்கன்குலம்வீயமுனிந்தவனைக்
குழாங்கொடென்குருகூர்ச்சடகோபன்றெரிந்துரைத்த
குழாங்கொளாயிரத்துளிவைபத்துமுடன்பாடிக்
குழாங்களாயடியீருடன்கூடிநின்றாடுமினே.

## ஆறாயிரப்படி.

(குழாங்கொள்) ஸபுத்ரஜநபாந்தவமாக ராவணன் மடியும்படி சிவந்தவனையுள்ளபடிகண்டுசொன்ன இத்திருவாய்மொழியை பகவதேக போகராயிருப்பாரெல்லாருங்கூடி புஜியுங்களென்கிறார்................ ..*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், இத்திருவாய்மொழியைப்பாடி பரஸ்பரஸங்கதராய் ஸங்கீப வித்து ப்ரீதிப்ரேரிதராய் வர்த்தியுங்கோளென்று பலத்தையருளிச்செய்கிறார்.

குழாங்கொள்-பாதகரானராக்ஷஸரைத் திரள்திரளாகவுடையனாயிருக்கிற. பேர் - பெருமையையுடையனானராவணனாகிற. அரக்கன்-ராக்ஷஸனுடைய. குலம்

குலமகப்பட. வீய-நசிக்கும்படி. முனிந்தவனே-முனிந்தருளினவனே. குழாங்கொள்-ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளேயுடைத்தான. தென்குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். தெரிந்து-ஆராய்ந்து. உரைத்த - அருளிச்செய்த. குழாங்கொள்-பத்தானதிரள்களைவடிவாகவுடைத்தான. ஆயிரத்துள்-ஆயிரம் திருவாய்மொழியிலும். இவைபத்தும்-இவைபத்தையும். உடன் - அர்த்தத்தோடேயுடன்பட்டு. பாடி-ப்ரீதிக்குப்போக்குவீடாகப்பாடி. குழாங்களாய்- பரஸ்பரஸம்ஶ்லிஷ்டராய்க்கொண்டுபலதிரளாய். அடியீருடன் - அடியாரானவுங்கள் ஸ்வரூபத்துக்கநுரூபமாம்படி ஏககண்டராய். கூடி-ஸம்ஶ்லேஷித்து. நின்று-இடைவிடாதேநின்று. ஆடுமின்-ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணப்பாருங்கோள்.

இது-கலிவிருத்தம்........................................................*

---

## ஈடு _ பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை, பகவதேகபோகராயிருப்பாரொன்னைப்போலே தனிப்படாதேதிரளாகவநுபவியுங்கோளென்கிறார்.

(குழாங்கொளித்யாதி) புத்ரபௌத்ராதிகளும் பந்துக்களுமான விவர்களாலே குழாம்கொண்டு, வரபலபுஜபலத்தாலே தழைத்து வேரூன்றின ரக்ஷஸ்ஸினுடைய ஜாதியாகக்கிழங்கெடுத்த சக்ரவர்த்திதிருமகனே; "கரிஷ்யெ மைதிலீஹேதொரபிஶாசமராக்ஷஸம்" (கரிஷ்யேமைதிலீஹேதோரபிஶாசமராக்ஷஸம்) என்கிறபடியே. (குழாங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்) ஜநஸ்த்தாநமடியறுப்புண்டபின்பு தண்டகாரண்யங்குடியேறினாற்போலே, "* வாயுந்திரையுகளுக்குத்தப்பின ஆழ்வாரைக்காணவேணும்" என்று ஸ்ரீவைஷ்ணவர்களுடையத்திரண்டதாயிற்று; * நல்லார்நவில்குருகூரிறே. ஸத்துக்களிருந்தவிருந்தவிடங்களிலே வாய்புலற்றும்படியானதேசமானால், அத்தேசத்திலுள்ளார் திரளச்சொல்லவேண்டாவிறே. (தெரிந்துரைத்த) உள்ளபடியநுஸந்தித்துச் சொன்ன-இவைபத்தும். திரண்டவர்களுக்கு ஜீவநம்வேணுமே (குழாங்கொளாயிரம்) "தொண்டர்க்கமுதுண்ண" என்கிறபடியே. பத்துப்பாட்டொரு திருவாய்மொழியாய், பத்துத்திருவாய்மொழியொருபத்தாய், இப்படிபத்துப்பத்தானவாயிரம். திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஜீவநம் வேணுமே. (இவைபத்துமுடன்பாடி) ஸாபிப்ராயமாகவப்யஸித்து. (குழாங்களாய்) என்னைப்போலே, "பருகிக்களித்தேனே" என்று, குழாங்தேடவிராதே, முற்படவேதிரளாக இழியப்பாருங்கோள். (அடியீருடன்கூடிநின்றுடுமினே) அவன்பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கிற நீங்கள் நால்வரிருவரிங்கிருக்கும் நாலுநாளும், த்யாஜ்யமான அர்த்தகாமங்களைப்பற்றி "சீறு, பாறு" என்னாதே, நம்பெரியகுழாத்திலேபோய்ப்புகுமளவு மொருமிடறாயநுபவிக்கப்பாருங்கோள்.

முதற்பாட்டில்-திருவுள்ளத்தைக்கொண்டாடினார்; இரண்டாம்பாட்டில்-அத்தையுமிசைவித்த ஸர்வேஶ்வரனைக்கொண்டாடினார்; மூன்றாம்

பாட்டில்-தம்நெஞ்சிற்பட்டதொரு உபகாரத்தைச்சொன்னார்; நாலாம்பாட்டில்-அதுக்குப்ரத்யுபகாரமாக ஆத்மஸமர்ப்பணம்பண்ணி "அதுதனக்கநுஶயித்தார்; அஞ்சாம்பாட்டில்-எனக்குப்ரதமஸுக்ருதமும் நீயேயானபின்பு உன்றிருவடிகளைக்கிட்டினேனேயன்றோவென்றார்; ஆறும்பாட்டில்-இன்றோகிட்டிற்று, தேவரெனக்கு விசேஷகடாக்ஷம்பண்ணினவன்றே பெற்றேனேயல்லேனோவென்றார்; ஏழாம்பாட்டில்-அவனுடையபோக்யதையை யநுஸந்தித்து, உன்னைப்பிரியில் தரியேனென்றார்; எட்டாம்பாட்டில்-இப்படி நிரதிஶயபோக்யனானவனை எளியதொருவிரகாலே லபிக்கப்பெற்றேனென்றாராதல்; அன்றியே, அநேககாலங்கூடிப்பண்ணி லபிக்கக்கடவ தபஃபலத்தை அவனைப்பின்சென்று எளிதாகலபித்தேனென்னுதல்; ஒன்பதாம்பாட்டில்-என்னுடைய ஸகலக்லேஶங்களும் போம்படி யநுபவித்துக்களித்தேனென்றார்; பத்தாம்பாட்டில்-இப்படியிவனை யநுபவித்துக்களிப்பார் திரளிலேபோய்ப்புகப்பெறுவ தெப்போதோவென்றார்; நிகமத்தில்-இத்திருவாய்மொழியை ஸாபிப்ராயமாக வப்யஸித்து, நாலுநாளும் நால்வரிருவருள்ளார் கூடியிருந்தநுபவிக்கப்பாருங்கோளென்கிறார்......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (குழாங்கொளித்யாதி) "இவைபத்தும் - குழாங்களாய் - உடன்கூடிநின்றாடுமினே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியையித்யாதி) கூட்டமாக விந்தத்திருவாய்மொழியை யநுபவிக்கையே பலமென்றுகருத்து.

இவர்களாலேகுழாங்கொண்டு - இவர்களாலேதிரண்டுகொண்டு. பெருமையேதென்ன (வரபலபுஜபலத்தாலே தழைத்துவேரூன்றினவிதி) தழைத்து - ஸம்ருத்தமாய். முனிந்தமைக்குப்ரமாணம் (சுரிஷ்யேஇத்யாதி) ஆரண்யகாண்டே சதுஷ்ஷஷ்டிதமே, "ஆகர்ண பூர்ணைரிஷுபிர்ஜீவலோகதுராஸதை:" (ஆகர்ணபூர்ணைரிஷுபிர்ஜீவலோகந்துராஸதை:) இதிபூர்வார்த்தம்.

(ஜநஸ்த்தாநமிதி) ரகுவம்ஶேத்ரயோதஶே, "அமீஜநஸ்த்தாநமபோடவிக்நம் மத்வாஸமாரப்தநவோடஜாநி। அத்யாஸதே சீரப்ருதோயதாஸ்வம் சிரோஜ்ஜிதாஶ்ரமமண்டலாநி" (அமீஜநஸ்த்தாநமபோடவிக்நம்மத்வாஸமாரப்தநவோடஜாநி। அத்த்யாஸதேசீரப்ருதோயதாஸ்வஞ்சிரோஜ்ஜிதாங்யாஶ்ரமமண்டலாநி) இதிப்ரதிப்ரயாணஸர்க்கோக்தம் காளிதாஸவாக்யமத்ரத்ரஷ்டவ்யம். அடியறப்புண்டபின்பு - ஸம்ஹ்ருதமானபின்பு. ஸ்ரீவைஷ்ணவர்கள் எங்கேதிரண்டிருப்பர்களோவென்ன (நல்லாரித்யாதி) திருவிருத்தம். நவிலுகையாவது - வாய்புலற்றுகையன்றே, இதுதிரளுகைக்கு ப்ரமாணமோவென்ன (ஸத்துக்களித்யாதி) வாய்புலற்றும் - பலகாற்சொல்லுமென்றபடி.

"குழாங்கொளாயிரம்என்று" விஶேஷிக்கவேணுமோவென்ன (திரண்டவர்களுக்கித்யாதி) அதாவது - கீழே "குழாங்கொள்தென்குருகூர்" என்கை

யாலே, " அந்தத்திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஜீவநம்வேணும் " என்றருளிச்செய்தாரென்றபடி. இதுஜீவநமோவென்ன (தொண்டர்க்கமுதித்யாதி) ஆயிரமும் குழாங்கொண்டிருக்கும்படியென்னென்ன (பத்துப்பாட்டித்யாதி) (திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கிதி) ஆயிரம்பாட்டும் ஜீவநமென்றபடி. கீழேதிரண்டவர்களுக்கு ஜீவநம்வேணுமேயென்றது-பத்துப்பாட்டும் ஜீவநமென்றபடி. யத்வா, "திரண்டவர்களுக்கு" இத்யாதிவாக்ய விவரணமாதல். குழாங்கொள் தென்குருகூர்ச்சடகோபன் தெரிந்துரைத்த - பத்தென்றுதல், குழாங்கொளாயிரமென்றுதலந்வயமென்றபடி. இதுமுந்தினபக்ஷத்திலே.

" குழாங்களாய் " என்றுவைத்து, பின்னையும் " உடன்கூடி " என்றதுக்குக் கருத்தென்னென்ன (அவன்பக்கலிலேயித்யாதி) நீங்களென்றது - " அடியீர் " என்றஸம்போதாஸித்தம். நால்வரிருவரொன்றது - அநுகூலர் கிடையாமையாலே. நம்பெரியகுழாத்திலே - * அந்தமில்பேரின்பத் தடியவர்குழாத்திலே. உடன் ஸஹ்ருதயமாக. ஆடுகை - அவகாஹிக்கையாய், அத்தாலே - (அநுபவிக்கப்பாரும் கோளென்கிறார்)

பத்துப்பாட்டினர்த்தநிகமநம் (முதற்பாட்டில் திருவுள்ளத்தையித்யாதி) இப்படிநிரதிசயபோக்யனை வித்யாதிவாக்யத்வயமும் - "உறிக்கொண்ட" இத்யாதிக்கு உபாயோபேயபர யோஜநாத்வயத்தைப்பற்றவென்று கண்டுகொள்வது. " எளிதாகலபித்தேன் " என்றவநந்தரம் - என்கிறொன்றுஶேஷம்.

க்ரமேணார்வட8.............................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( ஊனில்வாழுயிரே. )

சித்ராஸ்வாதாநுபூதிம் ப்ரியமுபக்ருதிபிர்தாஸ்யஸாரஸ்யஹே
தும் ஸ்வாத்மந்யாஸார்ஹம்ருத்யம் ஸஹஜஸுஹ்ருதம் ஸத்விதைகஹோமம்
ஸர்வாக்ஷப்ரீணநார்ஹம் ஸகலபலதம் ஸ்நேஹஸாத்ம்யாத்மஸீமம்
ஸௌஹார்த்தைக்யைகநிர்விஶ்யநவாஸ்ரேஷ்டநிர்வேசஸீமம்॥ (கரு)

( சித்ராஸ்வாதாநுபூதிம் ) தேனும்பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்தே-மதுரங்களான மதுக்ஷீராதிபதார்த்தங்களுடைய ரஸத்தையுடைத்தான வநுபவத்தையுடையனுமாய் ; ( ப்ரியமுபக்ருதிபி: ) பெற்றவத்தாயாய்த் தந்தையாயறியாதனவறிவித்தவத்தா-மாதாவும் பிதாவு மாசார்யனும்பண்ணு முபகாரங்களையெல்லாந்தானேபண்ணி, அத்தாலே யாஶ்ரிதருக்கு ப்ரியனுமாய் ; ( தாஸ்யஸாரஸ்யஹேதும் ) அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து - அறிவுநடையாடாதகாலத்திலே தாஸ்யரஸத்தையுண்டாக்கினவனுமாய் ; ( ஸ்வாத்மந்யாஸார்ஹ

க்ருத்யம் ) எனதாவியுள்கலந்த பெருநல்லுதவிக்கைம்மாறெனதாவிதந்தொழிந்தேன் - ஆத்மாவை ஸமர்ப்பிக்கும்படிக்கிடாக வாத்மாவினுள்ளே கலந்திருந்த மஹோபகாரத்தையுடையனுமாய்; ( பஜதம்ருதரஸம் ) என்கடற்படாவமுதே-ஆஶ்ரிதர்க்கம்ருதம்போலே போக்யனுமாய்; ( புக்தசித்தைகபோக்யம் ) தீர்ந்தார்தம்மனத்துப்பிரியாது - "ப்ராப்யப்ராபகங்களிரண்டுந்தானே" என்றிருக்குமவர்கள் மநஸ்ஸைவிட்டுப்பிரியமாட்டாதிருக்குமவனுய்; ( ஸர்வாக்ஷப்ரீணநார்ஹம் ) யாழ்பயினூலித்யாதி-சக்ஷுஶ்ஶ்ரோத்ராதிஸர்வேந்த்ரிய ப்ரீணநயோக்யமானபோக்யதையையுடையனுமாய்; ( ஸபதிபஹுபலஸ்நேஹம் ) குறிக்கொள் ஞானங்களாலித்யாதி - "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" இத்யாதிகளிற்படியே சிரகாலஸாத்யதபோத்யாகஸமாதிபலமான பக்தியோகத்தைத் தனக்கபிமதரிடத்திலே ஜடிதியுண்டாக்குமவனுய் ; ( ஆஸ்வாத்யஶீலம் ) பவித்திரன்சீர்-படிந்துகுடைந்தாடி அடியேன் வாய்மடுத்துப்பருகி-அத்யந்தம்போக்யத்வேநாநுபாவ்யங்களான கல்யாணகுணங்களையுடையனுமாய்; ( ஸப்யைஸ்ஸாத்யைஸ்ஸமேதம் ) மாயப்பிரானடியார்கள் குழாங்களையே-ஸவயஸ்ஸுக்களான நித்யஸூரிகளோடே ஸஹிதனுமாயிருக்கிற வெம்பெருமானை, மதுரங்களான ஸர்வபதார்த்தங்களினுடைய ரஸத்தையுமுடைத்தான போக்யதையையுடையனுக "ஊனில்வாழுயிரோ" என்கிறதஶகத்திலேயாழ்வாரநுபவித்தாரென்கிறார்.............................................*

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

ஊனமறவேவந்துள்கலந்தமாலினிமை
யானதனுபவித்தற்காந்துணையா - வானி
லடியார்குழாங்கூடவாசையுற்றமாற
னடியாருடனெஞ்சேயாடு. (கரு)

( ஊனமறவேவந்து ) இதில் எம்பெருமான் "ஏகதத்வம்" (ஏகதத்த்வம்) என்னும்படி ஸம்ஶ்லேஷிக்க, ததநுபவஸஹகாரிஸாபேக்ஷராயருளிச்செய்தபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படிப்ராஸங்கிகமான பரோபதேஶத்தைத்தலைக்கட்டினவநந்தரம், கீழ், தம்முடையவார்த்திதீரவந்து கலந்த எம்பெருமானுடைய ஸம்ஶ்லேஷரஸத்தைப்பேசவொருப்பட்டு, எப்பேர்ப்பட்ட இனிமையும் விளையும்படி தம்முடனே அவன்வந்து "ராமஸ்தஸீதயாஸார்த்தம்" (ராமஸ்தஸீதயாஸார்த்தம்) இத்யாதிப்படியே "ஏகதத்வம்" ( ஏகதத்த்வம் ) என்னலாம்படிகலந்தபடியையும், அந்தக்கலவியால்வந்தரஸம் தமமொருவராலு முண்டறுக்கவொண்ணுதபடி யளவிறந்திருக்கிறபடியையு மநுஸந்தித்து, தனித்தேட்டமான இதரவிஷயங்கள்போலன்றிக்கே துணைத்தேட்டமாய், அதுக்கிவ்விபூதியிலாளில்லாமையாலே, "இவ்வநுபவத்தில் நிலைநின்ற நித்யஸூரி

கள் திரளிலேபோய்ப்புக்கநுபவிக்கப்பெறுவதெப்போதோ" என்று ப்ரார்த்திக்கிற * ஊனில்வாழிலர்த்தத்தை, "ஊனமறவேவந்து" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

(ஊனமறவேவந்துள்கலந்தமாலினிமையானது) அதாவது - "நித்யஸம்ஸாரி" (நித்யஸம்ஸாரி) என்று ஸங்கோசியாமல், ஸங்கோசமற ஸர்வேஸ்வரன் வந்து "தானும்யானுமெல்லாந் தன்னுள்ளேகலந்தொழிந்தோம் தேனும்பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்தே" என்றும், "எனதாவியுள்கலந்த பெருநல்லுதவி" என்றும், "கனிவார்வீட்டின்பமே" என்றும், "அடியேன்வாய்மடுத்துப்பருகிக்களித்தேனே" என்று மிப்படி ஸர்வரஸங்களுமுண்டாம்படி அந்தரங்கமாகக் கலந்த கலவியினினிமையானது-ஸஹ்ருதயமாக ஸம்ஶ்லேஷித்தஸாரஸ்யமானது. (அநுபவித்தற்காந்துணையா) ஏவம்விதரஸ்யதையை யநுபவிக்கைக்கு "அடியார்கள்குழாங்களையுடன்கூடுவதென்றுகொலோ" என்று - அநுகூலஸஹவாஸமபேக்ஷிதமாய். (வானிலடியார்குழாங்கூடவாசையுற்றமாறனடியாருடன்நெஞ்சேயாடு) * வையத்தடியவர்களன்றிக்கே, அநுபவத்துக்கு தேஶிகரான வானிலடியார்குழாங்களுடனே கூடவேணுமென்றபிநிவேஶத்திலே யூன்றின ஆழ்வாரடியாரானவிங்குத்தை ஸ்ரீவைஷ்ணவர்களோடே நெஞ்சேகூடியாடு. அன்றிக்கே, அக்குழாத்திலேமுழுகி யநுபவிக்கப்பாரொன்றுமாம். "அடியீருடன்கூடிநின்றாடுமினே" என்றாரிறே.......................................................................*

இரண்டாம்பத்தில் மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - கங—பாட்டு - கசங.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### ஆடியாடி - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(ஆடியாடி) இப்படிநித்யபுருஷர்களோடேகூட வெம்பெருமானை யநுபவிக்க ஆசைப்பட்டவாழ்வார், அப்போதே யப்படியநுபவிக்கப் பெறாமையாலே வந்தநிரதிசயாவஸாதத்தாலே யொருக்ஷணமாத்ரமு மாத்மதாரணம்பண்ண வொண்ணாத தயநீயதசாபந்நராய், அந்தத்தசாநுகுணமாக வெம்பெருமானைக்குறித்துத் தாம்சொல்லுகிறவார்த்தைகளையுஞ் செய்கிறசேஷ்டிதங்களையுங்கண்டு தம்மோடுஸமாநஶோகரான தம்முடையபந்துக்க ளெம்பெருமானைநோக்கித் தம்முடையதசையை விண்ணப்பஞ்செய்து சொல்லுகிறபடியை யநுஸந்தித்து; இப்பொருளை, எம்பெருமானை யாசைப்பட்டு அத்யந்தமவஸந்நையா யிருந்தாளொரு பிராட்டியுடைய திருத்தாயாரவளுடைய தசையைவிண்ணப்பஞ்செய்துகொண்டு, "இவள்முடிவதற்குமுன்பேயீண்டென வந்துவிஷயீகரித்தருளவேணும்" என்றுகொண்டெம்பெருமானை யபேக்ஷிக்கிற வாக்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார்.......................................*

### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், இப்படிதாமாசைப்பட்டபடியை யநுபவிக்கப்பெறாமையா லவஸந்நராய்," தமக்குப்பிறந்த ஆர்த்த்யதிசயத்தை சமிப்பிக்கைக்கு, ஸர்வரக்ஷகனாய் போக்யபூதனானவவனையொழிய இல்லை" என்றறுதியிட்டு; அவன்ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதனுக்குதவினபடியையும், அநிருத்தனுக் குதவினபடியையும் அபிமதையானபிராட்டிக் குதவினபடியையும், நாட்டுக்குதவினபடியையும், சுத்தபாவத்தையையும், நிரதிசயபோக்யதையையும், ரக்ஷணார்த்தமான ஆஸத்தியையும், ஆஸந்நஜநங்களுக்கு மநுபவவிரோதிகளைப்போக்கின படியையும், ரக்ஷணோபகரணவத்தையையும், விரோதிமிகுத்தாலும் வெந்துவிழப்பண்ணும் வீரப்பாட்டையுமநுஸந்தித்து, தம்முடைய ஆர்த்தியைப்பரிவர்முகத்தாலே யவனுக்கறிவித்தபடியை, பிரிந்ததலை மகளாற்றாமைக்கு நற்றாயிரங்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.......................................*

ஈடு.

கீழ்த்திருவாய்மொழியிலே- "பருகிக்களித்தேனே" என்று ஹ்ருஷ்டராய், "அதுதன்னைப்பாகவதர்களோடே உசாவித்தரிக்கவேணும்" என்றுபாரித்து, அதுக்கிவ்விபூதியிலாளில்லாமையாலே, நித்யவிபூதியிலே நித்யஸூரிகள் திரளிலேபோய்ப்புக்கு * போதயந்தஃ பரஸ்பரம்பண்ணி யநுபவிக்கக்கோலி ; நினைத்தபோதே யத்திரளிலேபோய்ப்புக் கநுபவிக்கப்பெறுமையாலே மிகவுமவஸந்நராய், தம்முடையதசையை ஸ்வகீயரான ஸ்ரீவைஷ்ணவர்க ளெம்பெருமானுக் கறிவிக்கிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். * அஞ்சிறையமடநாரையில் - தூதுவிடக்ஷமரானார் ; * வாயுந்திரையுகளில் - கண்ணுற்கண்ட பதார்த்தங்களுடைய பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாகக்கொண்டு அவற்றுக்குமாகநோவுபடக்ஷமரானார் ; அவ்வளவன்றிக்கே யாற்றாமைகரைபுரண்டு, தாமானதன்மையழிந்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், அதுதன்னிலும்தன் தசைதான் வாய்விட்டுப்பேசமாட்டாதே பார்ஶ்வஸ்த்தரறிவிக்க வேண்டும்படியாய், ஸ்த்திதிகமநசயநாதிகளி லொருநியதியின்றியிலே அரதியாய்நோவுபட, இப்பெண்பிள்ளைதசையை யநுஸந்தித்த திருத்தாயார், "ராமக்ருஷ்ணத்யவதாரங்களைப்பண்ணி ஆர்த்தரானாரார்த்தியெல்லாம் பரிஹரிக்கக்கடவ ஸ்வபாவரானநீர் உம்மையாசைப்பட்டவிவள் நோவுபடப்பார்த்திருப்பதே" என்று, எல்லாவளவிலுமவனை யிட்டுப்பரிஹரித்துக்கொள்ளுங் குடியாகையாலே அவன்றிருவடிகளிலேபொகட்டு, "இவளிடையாட்டத்தில் நீர்செய்யநினைத்திருக்கிறதென்" என்று கேட்கிறபாசுரத்தாலே தம்முடையதசையை யருளிச்செய்கிறார். காசையிழந்தவனுக்கும், பொன்னையிழந்தவனுக்கும், ரத்நத்தையிழந்தவனுக்கு மொத்திராதிறேக்லேஶம் ; அவதாரத்திலே * பெருநிலங்கடந்த நல்லடிப்போதை யநுபவிக்கவாசைப்பட்டுக் கிடையாமையாலே வந்தவாற்றாமை - * அஞ்சிறையமடநாரையில், "நம்பியைத்தென்குறுங்குடிநின்ற" என்றர்ச்சாவதாரத்திலே யநுபவிக்கவாசைப்பட்டுக் கிடையாமையாலே வந்தவாற்றாமை - * வாயுந்திரையுகளில், இதில் - அவன்றனக்கும் ப்ராணபூதரான நித்யஸூரிகளை யநுபவிக்கவாசைப்பட்டுக் கிடையாமையாலே வந்தவாற்றாமையாகையாலே அவற்றிலுமிதுக்காற்றாமை விஞ்சியிருக்கும், நித்யஸூரிகள் திரளிலேபோய்ப் புக்கநுபவிக்கப் பெறுமையாலே நோவுபடுகிறதாகில், பின்னையவர்களைச் சொல்லிக்கூப்பிடாதே அவனைச்சொல்லிக்கூப்பிடுவானென்னென்னில்; எங்கேனுமொருகாட்டிலே ரத்நங்கள் பறியுண்டாலும்,நாட்டிலே ராஜாவின்வாசலிலே யவன்பேர்சொல்லியிறே கூப்பிடுவது ; அவர்களோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கும் கடவனவனாகையாலே அவனைச்சொல்லிக்கூப்பிடுகிறது. பகவத்விஶ்லேஷத்திலே யுட்புகரி

ன்றுவிறே பாகவதவிஶ்லேஷந்தான்தெரிவது ; [ 𑌕𑌥𑌾 𑌨𑍍𑌵𑌹𑌂𑌸𑌮𑍇𑌷𑍍𑌯𑌾𑌮𑌿𑌭𑌰𑌤𑍇𑌨𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 । 𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑍇𑌨𑌚𑌵𑍀𑌰𑍇𑌣𑌤𑍍𑌵𑌯𑌾𑌚𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 " ( கதாங்வஹம்ஸமேஷ்யாமிபரதேநமஹாத்மநா । ஶத்ருக்நேநசவீரேண த்வயாசரகுநந்தந ) ஸ்ரீபரதாழ்வானோடும் ஸ்ரீஶத்ருக்நாழ்வானோடும் கூடப்பெறாத கிழிக்குறையாலே, கூடநிற்கிற விளையபெருமாளோடும் கூடிற்றுய்த்தோற்றிற்றில்லையிறே பெருமாளுக்கு ; [ 𑌗𑍁𑌹𑍇𑌨𑌸𑌹𑌿𑌤𑍋𑌰𑌾𑌮𑍋𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍇𑌨𑌚𑌸𑍀𑌤𑌯𑌾 ] ( குஹேநஸஹிதோராமோலக்ஷ்மணேந சஸீதயா ) கூடப்போன இளையபெருமாளோடும் பிராட்டியோடும் கூடிற்றுய்த்தோற்றிற்று ஸ்ரீகுஹப்பெருமாளோடு கூடினபின்பிறே ; இப்படியிறே யவன்றனக்கு மங்வயவ்யதிரேகங்க ளிருக்கும்படி ; ததீயஸம்ஶ்லேஷத்தையாசைப்பட்டுப்பெறாமையாலே வந்தஇழவு, பெற்றபகவத்ஸம்ஶ்லேஷமிழந்து அடியேபிடித்துப்ப்ரார்த்திக்கவேண்டும்படியாய் வந்துவிழுந்தது. * வாயுந்திரையுகளி லார்த்திதீரவந்து ஸம்ஶ்லேஷித்தஸம்ஶ்லேஷம் முற்றுவதற்குமுன்னேவந்த பிரிவாகையாலும் ஆற்றவொண்ணாதிறே.........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆடியாடிப்ரவேஶ, வ்ருத்தாநுவாதபூர்வகமாக இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி ( கீழ்த்திருவாய்மொழியிலேயித்யாதி ) பருகிக்களித்தேன் - பாநம்பண்ணி யாநந்தித்தேன். அதுதன்னை - ஹ்ருஷ்டரானமையை. உசாவி-பரஸ்பரஞ்சொல்லிக்கொண்டு. அதுக்கு - அப்படிதரிக்கைக்கு. " மாதாவஞ்சிமுறைப்பட்டுமுறையிடுகிற வெழிலத்யவஸாயம் " என்றுசார்யஹ்ருதயத்திலும், * கடல்ஞாலாதிகளிலும், " தாயாராவது-உபாயாத்யவஸாயதசை " என்றுசொல்லியிருக்க, இங்கே-ஸ்ரீவைஷ்ணவர்களாக ஸ்வாபதேசமருளிச்செய்தது - யோஜநாந்தராபிப்ராயமென்று கண்டுகொள்வது.

அந்யாபதேசத்தில், கீழ்த்திருவாய்மொழிகளில் வ்யாவ்ருத்திகதநமுகேந விஸ்தரஸங்கதி ( அஞ்சிறையவித்யாதி ) தாமானதன்மை - புருஷஸ்வபாவம். (தன்தசைதான் வாய்விட்டுப்பேசமாட்டாதே பார்ஶ்வஸ்த்தரறிவிக்கவேண்டும்படியாயிற்று ) பார்ஶ்வஸ்த்தர்வார்த்தையும் தம்முடையபாசுரமேயாயிருக்க, இதுதான் கூடினபடியெங்ஙனேயென்னில் ; ஈஶ்வரனாழ்வார்க்கு, தந்தசையைத்தாமறிவிக்கமாட்டாதபடி பிறந்த வவஸாதாதிசயத்தைக்கண்டு, இவர்தரிக்கைக்காக, பரிஸரத்தில்வர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களிவர்தசையைத்தனக்கறிவித்ததாக இவர்க்கொருபுத்திவிசேஷத்தைப் பிறப்பிக்க, அத்தாலே தரிப்புண்டாய் அவர்கள் பாசுரத்தாலே தாம்பேசுகிறாரென்று கருத்து. " ஆடியாடி " என்றத்தைப்பற்ற ( ஸ்த்திதிகமநஶயநாதிகளி லொருநியதி யின்றியிலேயென்றது ) அரதி - விஶ்லேஷவ்யஸநம். " இலங்கைசெற்றீர் " " வாணனாயிரந்தோள்துணித்தீர் " என்றத்தைப்பற்ற (ராமக்ருஷ்ணாத்யவதாரங்களென்றது) ஆதிஶப்தத்தால் - நரஸிம்ஹாவதாராதிகள், " பார்த்திருப்பதே ". என்றுஅவனைச்சொல்லுகிறதென், தான்பரி

ஹரிக்கவொண்ணுதோவென்ன (எல்லாவளவிலுமித்யாதி) (கேட்கிறபாசுரத்தாலேயென்றது) "நுமதிட்டமென்சொல்" இத்யாதியைப்பற்ற. "அஞ்சிறையமடநாரை" "வாயுந்திரையுகள்" இவற்றைப்பற்றஇதில் வ்யஸநமதிஶயிக்கைக்கடியேதென்ன (காசையித்யாதி) காசுஎன்கிறது - அவதாரங்களை. பொன்என்கிறது- அர்ச்சாவதாரத்தை. ரத்நம்என்கிறது-நித்யஸூரிகளை. "காசினைமணியை" "செம்பொனேதிகழும்" "செழுமாமணிகள்சேரும்" என்னக்கடவதிறே. "காசு, பொன்," இரண்டுமொன்றுனல், (காசையிழந்தவனுக்கும் பொன்னையிழந்தவனுக்குமென்று) க்லேஶதாரதம்ய ஹேதுவாகச்சொல்லுகைக்கடி - அவற்றினுத்கர்ஷாபகர்ஷஹேதுவான மாற்றில்தாரதம்யம். அப்படியேயவதாரங்களுக்கும், அர்ச்சாவதாரத்துக்கும் ஸௌலப்யாதிதாரதம்யங்கண்டுகொள்வது. யத்வா, காசு-காசாதல். அத்யல்பகாலீநத்வத்தையும் காலாந்தராநுபயோகித்வத்தையும்பற்ற - த்ரிவிக்ரமாவதாராதிகளைக் காசுஸ்த்தாநத்திலேவைத்தார்; ஸர்வகாலமநுபாவ்யத்வத்தையும், "செம்பொனேதிகழுந்திருமூர்த்தியை" என்றத்தையும்பற்ற - அர்ச்சாவதாரமான நம்பியைஸ்வர்ணஸ்த்தாநத்திலேயாக்கினர், சரமபர்வத்வத்தையும், "செழுமாமணிகள்" என்றப்ரயோகத்தையுமுட்கொண்டு-ஸூரிகளை ரத்நஸ்த்தாநத்திலேயாக்கினர்; "செழுமாமணிகளாவார் - திருமழிசைப்பிரான்போல்வார்" என்றிறேவ்யாக்யாநம்பண்ணிற்றென்று - "காசையிழந்தவனுக்கும்" இத்யாதிவாக்யத்துக்குத் தாத்பர்யம். உபபாதகம் (அவதாரத்திலேயித்யாதி) ப்ராணபூதரானவென்றது - "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" (ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்) என்றத்தைப்பற்ற.

தடஸ்த்தஶங்கையை யநுவதித்துப்பரிஹரிக்கிருர் (நித்யஸூரிகளித்யாதி) "நரசிங்கா" "இலங்கைசெற்றவனே" என்று - அவனைச்சொல்லிக் கூப்பிடுவானேனென்றபடி. "கூப்பிடுவது" என்றவநந்தரம் - அப்படியேயென்று கூட்டுவது. பரிஹாராந்தரம் (பகவத்விஶ்லேஷத்திலேயித்யாதி) அதாவது - பாகவதவிஶ்லேஷ வ்யஸநாதிஶயந்தெரிவது,பெற்றபகவத்ஸம்ஶ்லேஷமும்போய், அதுவும் ப்ரார்த்த்யமாம்படி யுட்புகநின்றுல்றே; இல்லையாகில், பாகவதவிஶ்லேஷமாகாது; ஆகையாலே, இவர் பாகவதவிஶ்லேஷத்திலே யுட்புகநின்றவராகையாலே, அதிவர்க்த பகவத்விஶ்லேஷபர்யந்தமாய், அவன்றன்னையடியேபிடித்து ப்ரார்த்தித்துக் கூப்பிடுகிருரென்றபடி.

அப்படி, பெற்றது அஸத்கல்பமாகத் தோற்றுமோவென்ன (கதாங்வஹமித்யாதி) ஆரண்யகாண்டே ஷோடஶலக்ஷ்மணம் ப்ரதிராம꞉. ஸங்க்ஷேபே, "குஹேந ஸஹித꞉" (குஹேநஸஹித꞉) இத்யாதி. கிழிக்குறை - சாளிகைக்குறை. கிழி - சாளிகை. (கூடியதாய்த்தோற்றிற்றில்லையிறே) கூடியிருக்கச்செய்தேயும் கூடிற்றய்த்தோற்றிற்றில்லையிறேயென்றபடி. எப்படியென்னில், த்ருஷ்டாந்தம் (கிழிக்குறையாலேயென்றது) அதாவது - தநுப்பத்தனுக்கொருமுடிச்சீலையிலே சிலகுறைந்தால், ஶேஷமிருந்தது இருக்கிறதாய்த்தோன்றுதிறே; அப்படியென்றுகருத்து. அந்வயத்திற்கூடினதா யிருக்குமென்னுமதுக் குதாஹரணம் (குஹேநேத்யாதி) (அவன்றனக்கும்) "ந மே த்வேஷ்யோ'ஸ்தி ந ப்ரிய꞉" (நமேத்வேஷ்யோஸ்திநப்ரிய꞉) என்னுமவனுக்கும். அவனுக்குமிப்படியானல் இவர்க்குச்சொல்லவேண்டாவிறே யென்றுகருத்து. "பகவத்விஶ்லேஷத்திலே" இத்

யாதி வாக்யவிவரணம் ( ததீயஸம்ஸ்லேஷத்தையித்யாதி ) ஏதத்வாக்யாத்பூர்வம்-அப்படியேயித்யத்யாஹார்யம்.

" இதிலவன்றனக்கும்ப்ராணபூதரான " இத்யாதிவாக்யத்திலே - விஷய வைலக்ஷண்யத்தாலே யாற்றாமைவிஞ்சியிருக்குமென்றார் ; அவ்வளவன்றிக்கே, ஸ்வஸ்வபாவத்தாலு மாற்றாமைவிஞ்சியிருக்குமென்கிறார் ( வாயுந்திரையுகளிலித்யாதி ) முடிவிலேயிருக்கிற இந்தவாக்யம் - " இதிலவன்றனக்கும் ப்ராணபூதரான " இத்யாதிவாக்யாநந்தர மநுஸந்தேயம்..........................................................*

## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

ஆடியாடியகங்கரைந்திசை, பாடிப்பாடிக்கண்ணீர்மல்கியெங்கு
நாடிநாடிநரசிங்காவென்று, வாடிவாடுமிவ்வாணுதலே.

### ஆறாயிரப்படி.

எம்பெருமானைப்பிரிந்த வ்யஸநத்திலே தன்னைக்கொண்டு தரிக்க மாட்டாமையாலே தன்னுடைய ஆஶ்வாஸார்த்தமாக அவனுடையகுண சேஷ்டிதங்களைப்பாடியாடினவிடத்திலும் அதுதனக் காஶ்வாஸகரமாகாதே யவஸாதகரமேயாக, " இனியவனைக்கண்டாலல்லது தரிக்கமுடியாது " என்றுபார்த்து அவனையெங்குந்தேடி, ஆஶ்ரிதருடைய துர்த்தசைகளில் ஸஹஸைவதோன்றிக்கொண்டுநிற்கும் ஸ்வபாவனானவனேயென்றழைத்துப் பின்னையுங்கண்டாலுந் தேறாததொருபடியறவாடிப்போயறவாடினாளிவ்வாணுதலென்று திருத்தாயார்ப்ரலாபிக்கிறாள்.

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், " ப்ரஹ்லாதனுக்குதவினாற்போலே வந்துதவுகிறிலன் " என்று இவள் தளராநின்றாளென்கிறாள்.

இவ்வாணுதல் - ஒளிவிடுகிறநெற்றியையுடையளானவிவள். ஆடியாடி - வல்லாராடினாற்போலே தர்ஶநீயமாம்படி, தன்னாற்றாமையாலேநின்றவிடத்தில் நில்லாதேபலகாலுமுலாவி. அகங்கரைந்து - மநஸ்ஸைதில்யம்பிறந்து. இசைபாடிப்பாடி. அந்தக்லேஶமடியாக, இசையிலேபலகாலும்பாடுவாரைப்போலேப்ரலாபித்து. கண்ணீர்மல்கி-கரைந்தநெஞ்சு ப்ரவஹிக்குமாபோலே கண்கள்நீர்மல்கி. எங்கும்-ஸர்வதேஶத்திலும். நாடிநாடி - அவன்வரவையாராய்ந்து பலகாலும்பார்த்து. நரசிங்காவென்று-எங்குந்தோற்றவல்ல நரஸிம்ஹரூபத்தையுடையவனேயென்று. வாடிவாடும்-அவ்வளவிலும் வரக்காணாமையாலே வாட்டத்தின்மேல் வாட்டமாம்படி தளராநிற்கும்...........................................................*

## ஈடு - முதற்பாட்டு.

முதற்பாட்டில், ஆபத்தே செப்பேடாக ஆஸ்ரிதன் ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே வந்துதவும் ஸ்வபாவனானவனைச்சொல்லிக் கூப்பிடாநின்றாளென்கிறாள்.

(ஆடியாடி) ஸ்த்திதிகமநஸயநாதிகளிலொரு நியதியின்றிக்கே அரதியாலேபடுகிறபாடுதான், திருத்தாயார்க்கு ஆகர்ஷகமாயிராநின்றதாயிற்று; ஸ்ரீகௌஸல்யையார் பெருமாளைப்பிரிந்து துடிக்கிறதுடிப்பை "நந்ருத்யந்தீமிவமாதரம்" (ந்ருத்யந்தீமிவமாதரம்) என்றாளிறே; வடிவழகியார் வ்யாபாரங்களெல்லா மினிதாயிருக்குமிறே, பிரிந்தழகழிந்திருக்கிற ஸமயத்திலேயிறே "ஸுபாம்" (ஸுபாம்) என்றது. (ஆடி) முதல் "ஆடி" என்றதுக்கவ்வருகே யொருநிலையிறே-இரண்டாமாடி. முதலிலே ஸஞ்சாரமரிதாம்படியிருக்கச்செய்தே, ஆற்றாமைப்ரேரிக்க ஸஞ்சரியாநிற்கும், குணுதிகவிஷயமாகையாலே முடிந்துபிழைக்கவுமொட்டாதே. [ராமாகமநகாங்க்ஷயா] [ராமாகமநகாங்க்ஷயா] "இன்னமொருகாலவர்முகத்திலே விழிக்கலாமாகில் அருமந்தப்ராணனைப் பாழேபோக்குகிறதென்" என்று ராஜ்யத்தையும் தொட்டுக்கொண்டுகிடந்தானிறே. முதல் "ஆடி" என்கிறதிற்காட்டில், இருகால்மட்டு "ஆடி" என்றதில்-அவஸாதத்தின் மிகுதி, தாளங்கொண்டறியுமித்தனை. (அகங்கரைந்து) ஸஞ்சாரம்செல்லாநிற்கச்செய்தே ஸஞ்சாரமடியற்றிருக்கும். இவள் வ்யாபாரம் கண்ணுக்கிலக்கானாற்போலே, அகவாயுமிவள் நெஞ்சுக்கிலக்காயிருக்கிறபடி. மநஸ்தத்வம் நீராயுருகிப்போயிற்றென்கிறாள் (இசைபாடிப்பாடி) "மநஃபூர்வோவாகுத்தரஃ" (மநஃபூர்வோவாகுத்தரஃ) என்கிற க்ரமநியமமில்லை. ஆற்றாமையாலே கூப்பிடுகிற கூப்பீடுதான்பாட்டாய்த் தலைக்கட்டுகிறவித்தனை; * பண்ணைவென்றவின்சொன்மங்கையிறேயிவள்தான், "மதுராமதுராலாபா" (மதுராமதுரர்லாபா) ஆற்றாமையாலே துடித்ததுடிப்பு ஆடலானாற்போலே, ஆற்றாமையாலே கூப்பிட்ட கூப்பீடும்பாட்டாய்விழாநின்றது. முதல்கூப்பீடுபோலன்றிக்கே, இரண்டாங்கூப்பீடுதளர்ந்திருக்குமிறே. (கண்ணீர்மல்கி) உருகினமநஸ்தத்வம், இசையாய்ப்ரவஹித்து மிக்கதுகண்ணீராய்ப்ரவஹிக்கிறபடி; நெஞ்சொழியப்பாய்கிறகண்ணீரிறே. (மல்கி) மிக்கு. [கிமர்த்தம்தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிஸோகஜம்] [கிமர்த்தம்தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிஸோகஜம்] "ஆநந்தாஸ்ருவுக்குயோக்யமானகண்களாலேஸோகாஸ்ருப்ரவஹிக்கிறது ஆர்குடிவேர" என்றுபட்டரருளிச்செய்யும்படி; அன்றிக்கே, பிள்ளான், "ஆணாச்சேதநராக்கக்கொண்டு" என்றுபணிக்கும். [புண்டரீகபலாஸாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம்] [புண்டரீகபலாஸாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம்) பாவியேன், இவ்வரவுடையபெருமாள் வரவாய்க்காணப்பெ

ற்றதில்லை. ( எங்கும்நாடிநாடி ) தன்னைப்பத்தேசெப்பேடாக, வரஸம்பாவ னையில்லாததிக்கையும்பார்க்கும். [ ஸாதிர்யகூர்த்வஞ்சததாப்யதஸ்தாத் ] [ ஸாதிர்யகூர்த்வஞ்சததாப்யதஸ்தாத் ] நினைவின்றிக்கே யிருக்கச்செய் தே வாராத்திருநாமம்செவிப்பட்டவாறே, விலங்கப்பார்ப்பதுமேலேபார் ப்பது கீழேபார்ப்பதானுள். கீழ்ப்பார்த்ததுக்குக் கருத்தென்னென்னில்; "பூமியைப்பிளந்துகொண்டு புறப்பட்டு ஒருவன் திருநாமஞ்சொல்ல ஸம்பாவனையுண்டாகில், அல்லாததிக்குகளிலுமுள்ளது" என்றுபார்த் தாள்; அன்றிக்கே, மாஸோபவாஸிகள், "சோறு" என்றவாறே அல மாக்குமாபோலே பார்த்தாளென்னுதல்; அங்ஙனன்றிக்கே, ஶிம்ஶபா வ்ருக்ஷத்தை யெங்குமொக்கப்பார்த்தாளென்னுதல். [ தமசிந்த்யபுத்திம்ததர்ஶ ] [ தமசிந்த்யபுத்திம்ததர்ஶ ] அவன்வடிவுகாண்பதற்குமுன்னே அகவாயையாயிற்றுபரிச்சேதித்தது, "இந்நிலத்திலேபுகுந்திடங்கொண்டு நாமிருந்தவிடந்துருவிநிலைகுத்தவல்ல நெஞ்சையுடையவனன்றோ" என் று. [ பிங்காதிபதேரமாத்யம் ] [ பிங்காதிபதேரமாத்யம் ] "இவன்ஸ் வதந்த்ரனல்லன், ராஜகார்ய மிவன்கையிலேயுண்டு" என்றறிந்தாள். [ வாதாத்மஜம் ] [ வாதாத்மஜம் ] பெருமாளுக்கு ப்ராணஹேதுவான்பிரா ட்டிக்கு ப்ராணங்களைக்கொடுக்கையாலே "இவன்ஸர்வர்க்கும் ப்ராண ஹேதுவான வாயுபுத்ரன்" என்றுதோற்றவிருந்தான். [ ஸூர்யமிவோதயஸ்தம் ] [ ஸூர்யமிவோதயஸ்தம் ] லங்கையிலும் கிழக்குவெளுக்கவ டியிட்டது. "பெருமாளாகிற ஆதித்யோதயத்துக்கருணோதயம்" என்ன லாம்படியிருந்தான்; ஆகையிறே லங்கைநாலுமதிலுக்குநடுவு"ஹரிஹரி" என்றபடியேயிருக்கிறது. இப்படிவருகைக்கு ஸம்பாவனையில்லாததிக்கி லுந் தேடுவானென்னென்னில்; ஸம்பாவனையில்லாதவிடத்தேயும்வந்து தோற்றுமவனுகையாலே. * பத்துடையடியவர்க்குப்பின்பவதாரத்துக்க வ்வருகு இவர்போகமாட்டார். "(எங்கும்நாடிநாடி) தன்கொய்சகமுட் படப்பாராநின்றாள்" என்று பட்டரருளிச்செய்யும்படி. அதுக்குக்கருத் து - "கண்ணனென்னுக்கலையானே" என்று அவனிருந்தப்ரதேஶமா கையாலே. ( நரசிங்காவென்று ) ப்ரஹ்லாதனைப்போலே யொருதம்பமி ல்லாதபடியிருக்கையாலேவாடும். "'மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்' (மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம்) என்னும்தெளிவுடையவனுக்குத் தோற்றினவன் கலங்கின அபலைக்குத்தோற்றுன், ஓ!" என்னுமத்தாலே. தமப்பன்பகையானுலோ உதவலாவது, நீர்பகையானுலுதவலாகாதோ; ஜ்ஞாநநிஷ்ட்டர்க்கோ உத வலாவது, பக்திநிஷ்ட்டர்க்குதவலாகாதோ; ஆண்களுக்கோ உதவலாவ து, பெண்களுக்குதவலாகாதோ; சேராதவடிவுசேர்த்துதவிலோ உதவ லாவது, இருந்தபடியே உதவலாவார்க்குதவலாகாதோ; ஒரு அதிகாரிநி யதி, ஒருகாலநியதி, ஒரு அங்கநியதி, என்கிற நிர்ப்பந்தம்வேணுமோ இ

வளுக்கு; இவளுடையரக்ஷணத்துக்கு மேதேனும் முகம்பண்ணவேணு மோ. (வாடிவாடும்) கொம்பையிழந்ததளிர்போலேவாடும். "முதல் வாட்டம் - தளிர்" என்னும்படியிறே அநந்தரத்தில்வாட்டம். (வாடும்) தர்மிலோபம்பிறந்ததில்லை, "வரும்" என்னுமாசையாலே முடியப்பெறு கிறிலள். (இவ்வாணுதலே) ஒளியுடன்கூடினநுதலையுடையவிவள். இ வ்வழகுக்கிலக்கானார் படுமத்தை யிவள்படுவதே. இவள்முடிந்தால், உம் முடையமேன்மையாலே "இன்னமிப்படியிருப்பதொரு வ்யக்தியையுண் டாக்கலாம்" என்றிருக்கிறீரோ. "யாதாயயாவ-ஹுகேஷு யக" (தா தாயதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே ஸ்ருஷ்டிக்கலாமென்றிருக்கிறீ ரோ. * ஊனில்வாழுயிரில் கலவியாலுண்டானபுகரின்ன மழிந்ததில்லைகா ணும். அம்புபட்டுமுடிந்தாரையும் நீரிலேபுக்குமுடிந்தாரையும் முகத்தி லேதெரியுமிறே; குணாதிகவிஷயவிரஹத்தாலேவந்த இழவென்னுமிடம் முகத்திலெழிலிலே தெரியாநின்றதுகாணும்...................... ...........*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (ஆடியாடியித்யாதி) "நரசிங்கா" என்றத்தைப்பற்ற (ஆபத் தேயிதயாத்) செப்பேடு-தாம்ரசாஸநம். ப்ராபகமென்றபடி. (ஆபத்தேசெப்பே டாக ஆஶ்ரிதன்) பண்ணின (ப்ரதிஜ்ஞை) இத்யந்வய:. "இந்தவாபத்தி லவனு தவாநிரான்" என்று விஶ்வஸித்துப்பண்ணின ப்ரதிஜ்ஞையென்றபடி.

ஆதியாலே அடியாகிற்க, "ஆடி" என்கிறதென்னென்ன (ஸ்த்திதிகமநே த்யாதி) இப்படிசொன்னபேருண்டோவென்ன (ஸ்ரீகௌஸல்யையாரித்யாதி) (என்றுணிறே) வால்மீகியென்றுசேஷம். (ந்ருத்யந்திமிதி) அயோத்யாகாண்டே வநகமநார்த்தமபிவாதயப்ரஸ்த்திதேஸதிராமேகௌஸல்யா, "ராமலக்ஷ்மணஸீ தார்த்தம் ஸ்ரவந்தீம் வாரிநேத்ரஜம் । அஸக்ருத்ப்ரேக்ஷமாணா ஸா ந்ருத்யந்தீவ சா தரம்." (ராமலக்ஷ்மணஸீதார்த்தம் ஸ்ரவந்திம்வாரிநேத்ரஜம் । அஸக்ருத்ப்ரை க்ஷததாந்ருத்யந்திமிவமாதரம்.) ஆகர்ஷகத்வஹேதுவேதென்ன (வடிவழகியாரி த்யாதி) "ஸரஸிஜமநுவித்தம் ஶைவலேநாபி ரம்யம்" (ஸரஸிஜமநுவித்த ம் ஶைவலேநாபிரம்யம்) இத்யாதி, "ரம்யாணாம் விக்ருதிரபி ஶ்ரியம் தநோதி" (ரம்யாணும்விக்ருதிரபிஶ்ரியந்தநோதி) என்னக்கடவதிறே. பிரிந்தழகழிந் திருக்கிறஸமயத்தில் வ்யாபாரம் தர்ஶநீயமாமோவென்ன (பிரிந்தித்யாதி)(ஶோபா மிதி) ஸுந்தரகாண்டே ஏகோநத்ரிம்ஶே, "ததோ மதாநாம் வ்யதிதாநிநிந்திதாம் வ்யபேதஹர்ஷாம் பரிதீநமாநஸாம் । ஶுபாம் நிமித்தாநி ஶுபாநி பேஜிரே நரம் ஶ்ரியா ஜுஷ்டமிவோபஜீவிந:." (ததாகதாந்தாம்வ்யதிதாம நிந்திதாம்வ்யபேதஹர்ஷாம்பரிதீநமாநஸாம் । ஶுபாந்நிமித்தாநிஶுபாநிபேஜி ரேநரம் ஶ்ரியாஜுஷ்டமிவோபஜீவிந:.) புநஶ்ச "ஆடி" என்கிறதெதுக்காகவெ ன்ன; அவஸாதாதிசயத்தாலேயென்கிறார் (முதலாடியித்யாதி) "ஆடி" என்று-

அதிஞகர்ஷகத்வஞ்சொல்லும்போது ஸஞ்சாரம் ஸித்தமாகவேணுமே, மோஹித்திருக்கிறவிவளுக்கு ஸஞ்சாரமுண்டோவென்ன (முதலிலேயித்யாதி) ஆனால் க்லேசிப்பானேன், முடியவொண்ணாதோவென்ன (குனுதிகேத்யாதி) ஏதத்த்ருஷ்டாந்தம் (ராமாகமநேத்யாதி) “ நந்திக்ராமேஸுரோத்ராஜ்யம்ராமாகமநகாங்க்ஷயா” (நந்திக்ராமேகரோத்ராஜ்யம்ராமாகமநகாங்க்ஷயா) இதி ஸங்க்ஷேபே. இதுக்கர்த்தம் (இன்னமித்யாதி) அருமந்த-ஶ்லாக்யமான. பாழே-வ்யர்த்தமே. “முதலாடியென்றதுக்கவ்வருகே” என்றவாக்யவிவரணம் (முதலாடியென்கிறதிலித்யாதி) (தாளங்கொண்டு) வெண்கலத்வநிபோலே யொருகாலுக்கொருகாலோய்ந்து வருகிறதென்றபடி.

* யத்திமநஸாத்யாயதி தத்வாசாவததி தத்கர்மணுகரோதியன்றே, அகங்கரைந்தா லாடுகிறபடியெங்ஙனேயென்ன (ஸஞ்சாரமித்யாதி) ஸஞ்சாரம் செல்லாநிற்கச்செய்தே - யாதாயாதங்கள் நடவாநிற்கச்செய்தே. அவஸாதாதிசயமே ஸஞ்சரிப்பிக்குமென்றபடி. மநஸ்ஸிறேப்ரவ்ருத்திக்கடி, அதுகரைகையாலே யடியற்றிருக்குமென்றபடி. பரபுத்தேரப்ரத்யக்ஷத்வாத் அகங்கரைந்ததறிந்தபடி யென்னென்ன (இவள்வ்யாபாரமித்யாதி) காயிகவ்யாபாரத்தைக் கொண்டனுமிக்கிறுளென்றபடி. ஶப்தார்த்தம் (மநஸ்தத்வமித்யாதி)

அகங்கரைந்தால் பாடக்கூடுமோ, மந:பூர்வகமன்றே வாக்ப்ரவ்ருத்தியென்ன (மந:பூர்வஇத்யாதி) “மாநிஷாத” (மாநிஷாத) இத்யாதிஶ்லோகவதிதிபாவ:. கூப்பீட்டை - “பாடி” என்னலாமோவென்ன (ஆற்றாமையாலேயித்யாதி) “நசைவதேவீவிரராமகூஜிதாத்” (நசைவதேவீவிரராமகூஜிதாத்) என்னக்கடவதிறே. கூப்பீடுபாட்டாகைக்கு ஹேதுவேதென்ன (பண்ணியித்யாதி) காநத்தைஜயித்த இனியபேச்சையுடைய மங்கையென்றபடி (மதுரோதி) ஸுந்தரகாண்டே ஷட்ஷஷ்டிதமேமாருதிம் ப்ரதிராம:, “மதுராமதுராலாபாகிமாஹமமபாமிநீ । மத்விஹீநாவராரோஹாஹநுமந்கதயஸ்வமே” இதி. பலிதம் (ஆற்றாமையாலேயித்யாதி) வீப்ஸைக்குபாவம் (முதற்கூப்பீடித்யாதி)

“அகங்கரைந்து” என்றுதொடங்கி பதச்சேர்த்திக்குபாவம் (உருகினவித்யாதி) அகங்கரைந்தால்கண்ணீர்மல்கக்கூடுமோவென்ன (நெஞ்சொழியவித்யாதி) அதாவது - * முடியானேயிற்கரணங்களாகையாலே கூடுமென்றபடி. ஆகையால் “மல்கி” என்கிறுளென்றபடி. புத்திபூர்வகமாகில்றே ததநுகுணமான தாரதம்யமுண்டாவது, அதில்லாமையாலே யபரிச்சிந்நமென்றுகருத்து. “ஆடியாடி” இத்யாதியாலே ஸஞ்சாராதிகளுக்காகர்ஷகத்வஞ்சொல்லிக்கொண்டு வருகிறப்ரகரணபலத்தாலே கண்ணீருக்கு மாகர்ஷகத்வத்தை ஸித்தவத்கரித்து இதுக்குத்ருஷ்டாந்தம் (கிமர்த்தமித்யாதி) ஸுந்தரகாண்டே த்ரயஸ்த்ரிம்ஶே ஸீதாம்ப்ரதிஹநுமாந், “கிமர்த்தம்” (கிமர்த்தம்) இத்யாதி. “ஶோகஜம்” (ஶோகஜம்) என்றதிலே நோக்காக பட்டர்நிர்வாஹம் (ஆநந்தாஶ்ருவுக்கித்யாதி) “கிமர்த்தம்நேத்ராப்யாம்வாரிஸ்ரவதி” (கிமர்த்தம்நேத்ராப்யாம்வாரிஸ்ரவதி) என்று ப்ரஶ்நம் பூர்ணமாகையாலே, “தவநேத்ராப்யாம்ஶோகஜம்” (தவநேத்ராப்யாம்,

ஶாகஜம் ) என்றதுக்குபாவம் - உன்னுடையகண்ணுக்கிது யோக்யமோ, ஆநந்தாஶ்ருவன்றோ யோக்யம்என்றிறே தோற்றுகிறதென்றுகருத்து. ( ஆர்குடி ) ராவணன்குடிவேர்பறியவோ, " 𑌅𑌪𑌿𑌶𑌾𑌚𑌮𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 " ( அபிஶாசமராக்ஷஸம் ) என்றவர்களெல்லார் குடியும்வேர் பறியவோவென்றபடி. " 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌪𑌲𑌾𑌶𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 " ( புண்டரீகபலாஶாப்யாம் ) என்றதிலே நோக்காகப்பிள்ளான் நிர்வாஹம். ( அன்றிக்கேபிள்ளானித்யாதி ) ( ஆரைச்சேதநராக்கக்கொண்டு ) சேதநன்-போக்தா. ஆருடையபோகார்த்தமென்றபடி. இந்தயோஜநையில், கிம் - க்ஷேபே. தாமரையிதழிலே முத்துப்பட்டாற்போலே யிருக்கிறவிந்த ஸௌந்தர்யத்தை யநுபவிக்கைக்கர்ஹரான பெருமாளருகேயின்றிக்கே யிருக்க, இதுக்கு ப்ரயோஜநமென்னென்றபடி. " பட்டர்நிர்வாஹத்தைப்பற்ற, பிள்ளான்நிர்வாஹமே யுத்தரார்த்தத்துக்குச் சேர்ந்திருப்பது "என்னுமிடந்தோன்ற வுத்தரார்த்தோபாதாநம் பண்ணுகிறார் (புண்டரீகேத்யாதி) பிள்ளான்நிர்வாஹவிவரணம் ( பாவியேனித்யாதி ) இவ்வரவு - நான்வந்தவரவு. உடைய - ப்ராப்தரான - ஆக, " கண்ணீர்மல்கி " என்றதுக்குபாவத்வயம் - ஆநந்தாஶ்ருவுக்கு யோக்யமான கண்களினின்றும் சோகாஶ்ரு ப்ரவஹிக்கிறதென்று முந்தினது, கண்ணீரோடே யிருக்கிற விருப்பத்யாகர்ஷகமா யிருக்கையாலே யிந்தவழகை ப்ராப்தஶேஷியன்றோ வநுபவிக்க யோக்யனென்றிரண்டாவது.

" எங்கும்நாடிநாடி " என்கிறதுக்கு - " நரசிங்கா " என்கிறபர்யந்தத்துக்கு பாதாநம். " எங்கும் " என்றபதத்துக்கு - ஸம்பாவநை யில்லாததிக்கையும் தேடுமென்றர்த்தம் விவக்ஷித்து, அத்தைஹேதுபூர்வகமாக வருளிச்செய்கிறார் ( தன்னுபத்தேயித்யாதி ) செப்பேடு - தாம்ரஶாஸநம். ( ஆபத்தேசெப்பேடாக )ஆபத்தேப்ராபகமாக நினைத்தென்றபடி. இப்படிபார்த்தபேருண்டோவென்ன (ஸாதிர்யகூர்த்வமித்யாதி ) தத்ரைவைகத்ரிம்ஶ ஹநுமத்வாக்ய ஶ்ரவணாநந்தரம்ஸீதா, " 𑌸𑌾 𑌤𑌿𑌰𑍍𑌯𑌗𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌚 𑌤𑌥𑌾𑌪𑍍𑌯𑌧𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑌾 𑌤𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 । உஉ 𑌦𑌦𑌰𑍍𑌶𑌪𑌿𑌙𑍍𑌗𑌾𑌧𑌿𑌪𑌤𑍇𑌰𑌮𑌾𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾𑌤𑌾𑌤𑍍𑌮𑌜𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌮𑌿𑌵𑍋𑌦𑌯𑌸𑍍𑌥𑌂 " ( ஸாதிர்யகூர்த்வஞ்சததாப்யதஸ்தாந்நிரீக்ஷமாணாத்மசிந்த்யபுத்திம் । ததர்ஶபிங்காதிபதேரமாத்யம் வாதாத்மஜம்ஸூர்யமிவோதயஸ்தம்) இதில் " 𑌅𑌧𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 " ( அதஸ்தாத் ) என்கிறதுபயுக்தம். (விலங்கப்பார்ப்பது) இலங்கையைச்சுற்றும்பார்ப்பது. ( பூமியையித்யாதி ) அயோக்யதாபுத்தி, ஸர்வத்ராவிஶிஷ்டமாகையாலும், ஶப்தம் ஶ்ரவிக்கையாலு மெங்கும்பார்த்தாளென்றபடி. த்விதீயபரிஹாரம் ( அன்றிக்கேமாஸோபவாஸிகளித்யாதி ) முன்னேசொன்ன வபிஸந்தியின்றிக்கே, அலமாப்புத்தானே இப்படிபார்க்கைக்குஹேதுவென்றுகருத்து.அலமாப்பு-அதிக்லேஶம். மூன்றும்பரிஹாரம் ( அங்ஙனன்றிக்கே ஶிம்ஶபேத்யாதி ) அலமாக்குமாப்போலே-தடுமாறுமாப்போலே. " 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂, 𑌵𑌾𑌤𑌾𑌤𑍍𑌮𑌜𑌂 " ( அசிந்த்யபுத்திம்,வாதாத்மஜம்) என்கிற பௌர்வாபர்யத்துக்குபாவம் ( அவன்வடிவித்யாதி ) ததேவ விஶதயதி (இந்நிலத்திலேயித்யாதி) தருவிநிலேகுத்துகை-தேடிநிக்ஷேபமுள்ளவிடத்திலே குத்துகை. களவுபோனவஸ்துவை யடையாளமறிந்து பிடிக்கையாதல். ( இவன் ஸ்வதந்த்ரனல்லனிதி ) ஸ்வதந்த்ரனாகிலிந்த வதிஸங்கடஸ்த்தலத்திலேவருவனோ, பரதந்த்ரனாகையாலே " நிவ்ருத்தியில் ஸ்வாமிதண்டம்வரும் " என்கிற புத்தியுடையவனே யிங்குவரயோக்யனென்று தாத்பர்யம். ( ராஜகார்யமித்யாதி )

" அமாத்யன் " என்று அறிகைக்கு ஹேதுவில்லாமையாலே யிதுவேகருந்தென்றபடி. ( தோற்ற ) தடஸ்த்தர்க்கென்றபடி. ஸூர்யஶப்தம்-அருணவாசி. " ஸூர்யோகர்த்தேருணேபாரௌ " ( ஸூர்யோகர்த்தேருணேபாரௌ ) என்னக்கடவதிறே. ரஸோக்தி ( லங்கையிலுமித்யாதி ) ( பெருமாளாகிறவாதித்யோதயத்துக்கிதி ) " ராஜாஶ்ரமம்ஸம்ப்ராப்ய ரகுநந்தனவர்த்தநம் ஸூர்யமிவோதிதம் " (ராஜாலாம் ஶ்ரமாஞ்சூரக்ஷபேராமநிவாகரக்ஷ ) என்றதநுஸந்தேயம். உதயஸ்த்தம் ஸூர்யமிவ வாதாத்மஜந்ததர்ஶ " இத்யந்வயஃ. உதயஸ்த்தனான அருணனை ஆதித்யோதயஸூசகமாகக்காணுமாப்போலே, இவனையும் ராமோதயஸூசகமாகக் கண்டாளென்றபடி. ரஸோக்தி ( ஆகையிறேயித்யாதி ) ஹரி-குரங்கு. அருணோதயவேளையிலே ஹரிஶப்தஶ்ரவணமுமுண்டேயென்றபடி. ப்ரஶ்நோத்தரரூபேண " நரசிங்கா " என்றதுக்குபாவம் ( இப்படிவருகைக்கித்யாதி ) பாத்வாதிகளைவிட்டவதாரத்தைச்சொல்லுவானென்னென்ன (பத்துடையித்யாதி) ரஸோக்தி ( தன்கொய்சகமித்யாதி ) அதுக்கடியேதென்ன ( அதுக்குக்கருத்தித்யாதி )

நரசிங்கர்வென்று என்றது - " வாடும் " என்கிறபர்யந்தத்துக்குபாதாநம். " வாடும் " என்றதுக்கவதாரிகை ( ப்ரஹ்லாதனையித்யாதி ) தம்பம்-ஸ்தம்பம். சாடுவுக்கு, ஆதாரமென்றபடி. ஸ்தம்பத்தில்தோற்றினாற்போலே யிங்குந்தோற்றாமையாலேயென்றபடி. ஸ்வாபாவிகம்ஹேதுமாஹ ( மத்தஸ்ஸர்வமித்யாதி ) ப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶே, " மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம் மயி ஸர்வம் ஸநாதநே । அஹமேவாவ்யயோநந்தஃ பரமாத்மாத்மஸம்ஶ்ரயஃ " ( மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே । அஹமேவாவ்யயோநந்தஃபரமாத்மாத்மஸம்ஶ்ரயஃ. ) தோற்றான்-தோற்றுகிறிலன். ஒன்று-விஷாதாதிஶயஸூசகம். " நரசிங்காவென்றுவாடும் " என்றதக்கு வெறுப்பாகபாவம் பஹுமுகமாக வருளிச்செய்கிறார் (தமப்பனித்யாதி) ( ஒருஅதிகாரிநியதித்யாதி ) ப்ரஹ்லாதன், ஸந்த்யாகாலம், நரத்வஸிம்ஹத்வங்கள், என்கிறநிர்ப்பந்தம் வேணுமோவென்றபடி. முகம்பண்ணுகை - ஸிம்ஹமுகத்வேநாவிர்ப்பவிக்கை. கோபிக்கையென்றுத்வநி. அதாவது-அவனுடையரக்ஷணத்திற்போலே யிங்கு ஸிம்ஹமுகம்பண்ணவேணுமோ; இப்படி சீறியருளவேணுமோ, இருந்தபடியே முகங்காட்டவமையாதோவென்றபடி. பதஸ்வாரஸ்யஸித்தார்த்தம் ( கொம்பையித்யாதி ) புநருக்திக்குபாவம் ( முதல்வாட்டமித்யாதி ) வர்த்தமாநத்துக்கு பாவம் ( தர்மிலோபமித்யாதி ) ஆனாலது ப்ரணயத்துக்குக்கொத்தையன்றோவென்ன ( வருமென்னுமித்யாதி )

" வாணுதல் " என்றதுக்கு ஶப்தார்த்தம் (ஒளியுடனித்யாதி) "வாணுதல்" என்றதுக்குபாவம் ( இவ்வழகுக்கித்யாதி ) " இவ்வாணுதல் " என்றதுக்குபாவம் ( இவள்முடிந்தாலித்யாதி ) ஏதத்விவரணம் ( தாதாயதாபூர்வமித்யாதி ) இவ்வவஸ்த்தையில் " வாணுதல் " என்னக்கூடுமோவென்ன ( ஊனிலித்யாதி ) பரிஹாராந்தரம் ( அம்புபட்டித்யாதிவாக்யத்வயத்தாலே ) " குணாதிகவிஷயப்ரயுக்தமிந்தக்லேஶம் " என்னுமிடத்தை முககாந்தியே தெரிவிக்கிறதென்றபடி. (முகத்திலேதெரியுமிறே) அப்படியேமித்யத்யாஹார்யம்.

இவ்வாணுதல்-ஆடியாடிதொடங்கி, வாடிவாடு மித்யந்வயஃ..................*

# இரண்டாம்பாட்டு.

வாணுதலிம்மடவரலும்மைக்
காணுமாசையுளைகின்றாள்விறல்
வாணனாயிரந்தோடுணித்தீரும்மைக்
காணநீரிரக்கமிலீரே.

## ஆறாயிரப்படி.

(வாணுதல்) "உம்மைக்காணவேணும்" என்னுமாசையாலே யிவள்நையாநின்றாள்; உம்மைக்காணும்படி யிவள்பக்கல க்ருபைபண்ணுகிறிலீர்; ப்ரதிகூலர் திறத்திலன்றோஇப்படி நைர்க்ருண்யம்பண்ணுவது, உம்மையாசைப்பட்டார் திறத்திலுமிப்படி நைர்க்ருண்யம்பண்ணலாமோ வென்கிறாள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிருத்தனை நிரோதித்தபாணனைத் தோண்மிடுக்கறுத்த நீரிவளுக்கிரங்குகிறிலீரென்கிறாள்.

வாள் - ஒளிவிடுகிற. நுதல் - நுதலையுடையளாய். இம்மடவரல் - மடப்பத்தால்விஞ்சினவிவள். உம்மை - தர்ஸநீயரானவும்மை. காணுமாசையுள் - "காணவேணும்" என்கிறவாசையிலே. நைகின்றாள் - சிதிலையாகாநின்றாள். விறல் - பெருமிடுக்கனுன. வாணன் - பாணனுடைய. ஆயிரந்தோள்துணித்தீர் - ஆயிரந்தோள்துணித்தவரே. உம்மை - உம்மை. காண - காண்கைக்கு. நீர் - நீர். இரக்கமிலீர் - இரக்கமில்லாமையாயிராநின்றீர்.

இவளாசைப்பட்டாலும் பசையில்லை, உம்முடைய இரக்கமிறே காட்டுவதென்று கருத்து..........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

நடுவேவாடுமித்தனையேயோ! வேண்டுவது விரோதிகிடக்கச்செய்தேயென்ன, பாணனுடைய பாஹுவநத்திலும் ப்ரபலமோ! இவள் விரோதியென்கிறாள்.

(வாணுதல்) இவ்வவயவசோபை போகஹேதுவாகை யன்றிக்கே, நைகைக்குறுப்பாவதே. பெற்றவெனக்காகர்ஷக ஹேதுவானவிது, கைப்பிடித்தவுமக்கநாதரஹேதுவாவதே; "இயம்ஸீதாமமஸுதாஸஹதர்மசரீதவ| ப்ரதீச்சசைநாம்பத்ரந்தேபாணிம்க்ருஹ்ணீஷ்வபாணிநா" (இயம்ஸீதாமமஸுதாஸஹதர்மசரீதவ| ப்ரதீச்சசைநாம்பத்ரந்தேபாணிம்க்ருஹ்ணீஷ்வபாணிநா) (இம்மடவரல்) மடப்பம்வந்திருக்கையாவது- மென்மையையுடையவளாகை. பிரிந்துகலக்கப்பொறுத ஸௌகுமார்யத்

தை யுடையவள். பிராட்டிதசையைக்கண்ட திருவடியைப்போலே யிருக்கிறதுகாணும் இப்பெண்பிள்ளை தசையைக்கண்ட திருந்தாயார்க்கு, [ ஒஷ்கரஂக்ருதவாநூாமஃ ] ( துஷ்கரம்க்ருதவாந்ராமஃ ) இவளைப்பிரிந்து ஸமாதாநம்பண்ணியிருந்த பெருமாள் சாலவரிதாகச்செய்தார். [ ஹீநோயதநயாப்ரஃ ]( ஹீநோயதநயாப்ரபுஃ ) இவளைப்பிரிந்து தேஹத்தைத் தரித்திருந்தாரென்பதுயாதொன்று, அதுசாலவரிதாகச்செய்தார். [ ப்ரஃ ] ( ப்ரபுஃ ) ஆனைகுதிரையேறவும், நாடாளவும் கற்றுரித்தனை ; ப்ரணயதாரையில் புதியதுண்டிலர். மால்யவானில் பெருமாளிருந்தபோது மேகதர்ஶநத்திலேபட்டபாட்டைக்கண்டு,“வஸிஷ்டஶிஷ்யனொரு ஸ்த்ரீநிமித்தமாக இப்படிபடுவதே!” என்று கர்ஹித்துச்சிரித்திருந்தான் விரக்தனுகையாலே ; இப்போது “இவளைப்பிரிந்து தேஹத்தைத் தரித்துக்கொண்டிருப்பதே ; ” என்கிறுனயிற்று விஶேஷஜ்ஞனுகையாலே. [ யாரயத்யாத்மநோதேஹம் ] ( தாரயத்யாத்மநோதேஹம் ) இதேதேனுமிரவலுடம்போ சுமந்துகொண்டிருக்கைக்கு. போகாயதநமன்றே, துஃக்காயதநமோவிது. பிரிந்தால் “ க்ரமத்திலேகூடுகிறேம் ” என்று தரித்திருக்கவல்லளல்லளே. ( உம்மை ) இவள்படியன்றே உமக்குபதேசிக்கவேண்டுவது, உம்மை நீரறியாமையில்லையே, நம்மைப்பிரிந்தார் பிழையார்கள் ” என்றிருக்கவேண்டாவோ. ( வாணுதலிம்மடவரலும்மை ) “ துல்யஶீலவயோவ்ருத்தாம் ” ( துல்யஶீலவயோவ்ருத்தாம் ) என்னும்படிகாணுமிருக்கிறது. ( உம்மைக்காணுமாசையுள்நைகின்ருள் ) விஷயாநுரூபமாயிறே ஆசையுமிருப்பது. ( காணுமாசையுள் ) உம்மோடே யணையவாசைப்பட்டாளோ, காட்சியிலேயு மருமைப்படுத்துவீரோ. (நைகின்ருள்) இவளைத்தரிப்பிக்கவேண்டா, அடியில் நிலையிலே நிறுத்தவமையும். ( உம்மைக்காணுமாசையுள்நைகின்ருள் ) கடலிலேயழுந்தாநின்ருள். * ஆசையென்னும்கடலிறே. வாடுகைதான் தேட்டமாம்படியாயிற்று.

( விறல்வாணனுயிரந்தோள்துணித்தீர் ) “ நையுமிதுவேயோ வேண்டுவதுப்ரதிபந்தகங்கிடக்க ” என்றேநீர்சொல்லுவது பாணனுடையபாஹுவநத்தில் பரப்புண்டோ இவளுடையவிரோதிவர்க்கம். உஷாநிருத்தகடகரன்றேநீர். பேரனுமாயாணுமாகிலோ உதவலாவது, உம்மோடேகலந்த அபலைக்குதவலாகாதோ. ( உம்மைக்காண ) கருமுகைமாலை தேடுவார் சூடவிறேதேடுவது, சும்மாட்டைக்கொள்ள வல்லவிறே ; இவ்வஸ்துவையாசைப்படுவார் படுவது காட்சிக்காகவாயிற்று. “ அழைப்பன்திருவேங்கடத்தானைக்காண ” “ காரார்திருமேனி காணுமளவும் ” ; இவர்தாமும், “ கண்களாற்காணவருங்கொலென்று ” . உம்மையிவள்

காண்கைக்கிடாக நீரிரக்கத்தையுடையீராகிறிலீர். ( நீரிரக்கமிலீரோ ) "நைவதம்ஸாந்" ( நைவதம்ஸாந் ) என்கிறபடியே நீர்நோவுபடுகை தவிர்ந்தால், ஸாமாந்யமான விரக்கமும்போகவேணுமோ." இவள்நைவு பேற்றுக்குபாயமல்ல, அவனிரக்கம் பேற்றுக்குஸாதநம் " என்றுகாணும் திருத்தாயாரிருக்கிறது."இவள்நைவு அவனிரக்கத்துக்குப்பரிகரம், அவனிரக்கம்பேற்றுக்குஸாதநம் " என்றிருக்கிறுன். [ தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதேதநூம்ஸ்வாம்என்று [ தானே காட்டக்காணுமித்தனையிறே.*

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு ( வாணுதலித்யாதி ) " வாணனுயிரந்தோள்துணித்தீர் " என்றத்தைக்கடாக்ஷித்து சங்காபரிஹாரமுகேநாவதாரிகை (நடுவேயித்யாதி)

" வாணுதல்-நைகின்ருள் " என்றுகூட்டிபாவம் (இவ்வவயவசோபையித்யாதி) " இம்மடவரல் " என்றவிடத்தில் "இ" என்றத்தை, " இரக்கமிலீர் " என்றத்தோடேகூட்டிபாவம் (பெற்றவெனக்கித்யாதி) பெற்றவர்களுக்காகர்ஷகஹேதுத்வேஸம்வாதம் (இயம்ஸீதேத்யாதி) பாலகாண்டே ராமம்ப்ரதிஜநக:. "இயம், பத்ரந்தே " (இயம், பத்ரந்தே ) என்கிறபதங்களாலே யாகர்ஷகத்வம்ஸூசிதம். ஜநகராஜன் பிராட்டியுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்து "இயம்ஸீதா" (இயம்ஸீதா) என்ருற்போலே, திருத்தாயாரும் பெண்ணினுடைய வைலக்ஷண்யத்தையநுஸந்தித்து " இம்மடவரல் " என்கிருளென்றபடி. மென்மை-மார்த்தவம். விவரணம் (பிரிந்தித்யாதி)

பாட்டையெல்லாம் பராமர்ஶித்தருளிச்செய்கிருர் (பிராட்டிதசையையித்யாதி ) அதாவது - பிராட்டிவைலக்ஷண்யத்தைக் கண்டதிருவடிக்கு, " இவளை விஶ்லேஷித்திருக்கிற பெருமாளதி ஸாஹஸம்பண்ணிஞர்"என்றுதோற்றிஞற்போலே, இவளுடைய வவயவசோபையையும் ஸௌகுமார்யத்தையு மநுஸந்தித்ததிருத்தாயார்கு " ஈஶ்வரன் ஸாஹஸப்ரவ்ருத்திகன் " என்றுதோற்றியிருக்கிறதென்றபடி. அப்படிதிருவடி, பெருமாளைவெறுத்தானேவென்ன ( துஷ்கரமித்யாதி ) ஸுந்தரகாண்டேபஞ்சதஶே ஸீதாம்த்ருஷ்ட்வாஹநுமத்விசார:, "துஷ்கரம் க்ருதவாந்ராமோஹீநோயதநயாப்ரபு: । தாரயத்யாத்மநோதேஹந்நஶோகேநாவஸீததி" ( துஷ்கரம்க்ருதவாந்ராமோஹீநோயதநயாப்ரபு: । தாரயத்யாத்மநோதேஹந்நஶோகேநாவஸீததி ) விஶ்லேஷமே தூர்க்கடமென்கிற வபிப்ராயேணுஹ ( இவளைப்பிரிந்தித்யாதி ) இருந்த - தரித்திருந்த. "ப்ரபு:-ராம:-அநயாஹீநஸ்ஸந்-ஆத்மநோதேஹம்தாரயதீதியத், தத்துஷ்கரம்க்ருதவாந்" (ப்ரபு:-ராம:-அநயாஹீநஸ்ஸந்-ஆத்மநோதேஹம் தாரயதீதியத், தத்துஷ்கரம்க்ருதவாந் ) இத்யந்வயமுகேநபாவம் ( இவளைப்பிரிந்து தேஹத்தையித்யாதி ) " தாரயதி " ( தாரயதி ) என்றதிலேநோக்கு. " தைவக்ருதமான விஶ்லேஷத்துக் கவரென்செய்வர் " என்றிருக்கையாலே, " ஹீந: " (ஹீந:) என்று - குற்றஞ்சொல்லுகிருனல்லன் " தாரயதி " ( தாரயதி ) என்று குற்றஞ் சொல்லுகிருனென்றபடி. (ப்ரணயேத்யாதி) இத்தனைநாளும் " ப்ரணயி " ( ப்ரணயி ) என்று ப்ரமித்திருந்தோம் ; ப்ரணயிகள்படியன்றிக்கே, பிரிந்துதரித்திருக்கையா

லே ப்ரணயியல்லர் ; கேவலம்ப்ரபுவென்றபடி. புதியதுண்டிலர் - ஏகதேசமு மநுபவித்திலர். புதியதுண்கை - ஏகதேசாநுபவம். " ஏவம்ஸீதாந்ததாத்ருஷ்ட்வா ஹ்ருஷ்டபவநஸம்பவ: " ஏவம்ஸீதாந்ததாத்ருஷ்ட்வா ஹ்ருஷ்டபவநஸம்பவ: ) என்கிறமேலில்ஶ்லோகத்தில், " ததா " ( ததா ) என்றதிலே நோக்காக பாவம் ( மால்யவானிலித்யாதி ) இப்போதிவளைக் கண்டிப்படிசொல்லுகையாலே, இவளைக்காணுமையாலே மால்யவானிலே கர்ஹித்ததர்த்தஸித்தம்; " மமாபிவ்யதிதம்மந: " ( மமாபிவ்யதிதம்மந: ) என்றதேயிதுக்கு நியாமகம். " ஆத்மந: " ( ஆத்மந: ) என்றுவிஶேஷித்ததுக்குபாவம் ( இதேதேனுமித்யாதி ) இரவலுடம்போ - பிராட்டிக்குப்போலே - பரதந்த்ரமானவுடம்போ. இரவல்-பரதந்த்ரம். பாரதந்த்ர்யத்தாலே யிப்பிராட்டிக்கு தேஹதாரணங்கூடும், அப்படியிவர் பரதந்த்ரரன்றே தேஹத்தைதரித்திருக்கைக்கென்றபடி. " நசாஸ்யமாதா " நசாஸ்யமாதா ) இத்யாதி, " நகல்வத்யைவ " ( நகல்வத்யைவ ) இத்யாதி. " தேஹம் " ( தேஹம் ) என்றதுக்குபாவம் ( போகாயதநமித்யாதி ) " போகாயதநம்-ஶரீரம் " (போகாயதநம்-ஶரீரம்) என்றுசரீரலக்ஷணம். து:க்காயதநமோ து:க்கைகாயதநமோ. ஆனுலிவர் ப்ருகுபதநாதிகளைப் பண்ணவோவடுப்பதென்ன; அங்ஙனல்லவென்கிருர் ( கஶோகோவஸீததிஎன்று ) இதுவேயிறே ப்ரணயித்வத்துக்குச்சேர்ந்தது, அதுப்ரணயித்வத்துக்குச் சேராதென்றபடி. ம்ருச்ச்வாஸத்தைபோலே யாகவேணுமென்றுதாத்பர்யம். " அநயா " ( அநயா ) என்றதுக்குபாவம் ( பிரிந்தாளித்யாதி ) " மடவரல் " என்றதுக்கு ஶப்தார்த்தமாதல்.

விஶேஷணமிடாமல் கேவலம் " உம்மை " என்றதுக்குபாவம் ( இவள்படியித்யாதி ) அதாவது - " வாணுதலிம்மடவரல் - நைகின்ருள் " என்று இவள்ப்ரகாரமேயன்ரே வுமக்குச்சொல்ல வேண்டுவதென்கை. அறிந்தாலோவென்ன ( நம்மையித்யாதி ) இவ்வாக்யத்துக்கடியிலே - ஆகையாலே யித்யத்யாஹார்யம். கீழே, இருவர்வைலக்ஷண்யத்தையும்பார்த்தாலும் வரவேணுமென்ருரு தாத்பர்யமருளிச்செய்து, இருவர் வைலக்ஷண்யத்துக்கீடாகவும் இவளுக்காசை கனக்கப்பிறந்ததென்று பாவாந்தரம் (துல்யஶீலேத்யாதி) ஸுந்தரகாண்டே ஸீதாம்த்ருஷ்ட்வாஹநுமாந் " துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதிவைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா. " ( துல்யஶீலவயோவ்ருத்தாம்துல்யாபிஜநலக்ஷணும் । ராகவோர்ஹதிவைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணு. ) விஷயாநுருபமென்றதுக்கு - " உம்மை " என்றதிலேநோக்கு. " காணும் " என்றதிலேநோக்காகபாவம் ( உம்மோடேயித்யாதி ) அடியில்நிலையிலே - " வாடிவாடும் " என்கிறநிலையிலே. " உள் " என்கைக்கு - ஆசையகாதமாயிருக்குமோவென்ன ( கடலிலேயித்யாதி ) ஆசையைக்கடலென்னலாமோவென்ன ( ஆசையென்னுமித்யரிதி ) பெரியதிருமொழி. ( ஆசையென்னுங்கடலில் வீழ்ந்திங்கயர்த்தோம் ) " உம்மைக்காணவேணும் " என்கிறவாசையாகிற கடலிலே புக்ககப்பட்டறிவுகெட்டோமென்கை. " அடியில்நிலையிலே " இத்யாதிக்குவிவரணம் ( வாடுகைதானித்யாதி )

" விறல்வாணன் " இத்யாதிக்கவதாரிகா பூர்வகமாகபாவம் ( நையுமிதுவேயோவித்யாதி ) விறல் - மிடுக்கனுன. வாணனுடைய பாஹுவநத்திலித்யாதிவாக்யம் - ஸ்வாபதேசாங்யாப தேசஸாதாரணம். இப்படிநைகிறவர்களுக் காருக்குத

விஞேமென்ன ( உஷாஸிருத்தேத்யாதி ) இது - தாத்பர்யாந்தரம். இத்தைச்சொல்லுகிறவளுடைய ஹார்தபாவம் ( பேரனுமாயித்யாதி )

ஸ்வாபதேசத்திலேபாவம் ( சருமுகைமாலையித்யாதி ) ( சும்மாட்டைக்கொள்ளவல்லவிறேளென்று ) இத்தால்பலிதம் - ப்ரயோஜநாந்தர ஸாதநத்வேநவன்றிறே யென்றபடி. இவ்வஸ்துவையித்யாதி வாக்யத்தினடியிலே - அப்படிபோலேயித்யத்யாஹார꞉. இதுக்குதாஹாரணம் ( அழைப்பனித்யாதி ) நாலாந்திருவந்தாதி. ஸ்பஷ்டோர்த்த꞉. ஶப்தார்த்தம் ( உம்மையித்யாதி ) “ [illegible] ” ( நைவதம்ஶாச் ) இத்யாதிக்குபாவம் - ஸ்நேஹமில்லாவிட்டா லிரக்கமாகிலும் வேண்டாவோவென்றபடி. ஸாமாந்யமான விரக்கமுமென்றது - “ [illegible] ” ( வ்யஸநேஷுமநுஷ்யாணும் ) இத்யாதியைப்பற்ற. ஸுந்தரகாண்டே ஷட்த்ரிம்ஶே ஸீதாம்ப்ரதிமாருதி꞉, “ [illegible] ” ( நமாம்ஸம் ) இத்யாரப்ய, “ [illegible] ” ( நைவதம்ஶாந்நமஶகாந்நகீடாந்நஸரீஸ்ருபாந்। ராகவோபநயேத்காத்ராத்த்வத்கதேநாந்தராத்மநா. )

“ இரக்கமிலீர் ” என்கிறதென், “ நைகின்றாள் ” என்கிற - ப்ராவண்யம் ஸாதநமாகாதோவென்ன ( இவள்நைவுபேற்றுக்கித்யாதி ) ஆனால் நைவுக்குவிநியோகமேதென்ன ( இவள்நைவவனிரக்கத்துக்கித்யாதி ) அவனிரக்கம் ஸாதநமென்கைக்குப்ரமாணம் ( தஸ்யைஷஇத்யாதி ) கடவல்லியாம், “ [illegible] ” ( நாயமாத்மாப்ரவசநேநலப்யோநமேதயாநபஹுநாஶ்ருதேந । யமேவைஷவ்ருணுதேதேநலப்யஸ்தஸ்யைஷ꞉ ) இத்யாதி. ப்ரவசநமென்று - மநநத்தைச்சொல்லுகிறது. மேதயாவென்று - த்யாநத்தையும், ஶ்ருதேநஎன்று - ஶ்ரவணத்தையுஞ்சொல்லுகிறது.

க்ரமேணாந்வய꞉.............................................................*

---

# மூன்றாம்பாட்டு.

இரக்கமனத்தோடெரியணை
யரக்குமெழுகுமொக்குமிவ
ளிரக்கமெழீரிதற்கென்செய்கே
னரக்கனிலங்கைசெற்றீருக்கே.

## ஆறாயிரப்படி.

( இரக்கமனத்தோடு ) அவஸந்நமான மநஸ்ஸையுடையளா யெரியணையரக்கு மெழுகும்போலே விரஹாக்நியாலே தஹ்யமானையான விவள்பக்கல் க்ருபையுங்கூடப் பண்ணுகிறிலீர் ; இதற்கென்செய்கேன், கெட்டேன், ஓ! கொடுமையே யிதுவென்கிறாள்,.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பிராட்டிக்காக ராவணனையும் லங்கையையுமழித்த நீரிரங்குகிறிலீர்; இதற்குச்செய்வதென்னென்கிருள்.

இரக்கம் - க்லேஸோத்தரமான. மனத்தோடு - நெஞ்சோடே. இவள் - இவள். அரக்கும் - சிக்கென்றவரக்கும். மெழுகும் - மெத்தென்றமெழுகும். எரியணையொக்கும் - அக்நிஸகாசத்திலொக்கவுருகுமாப்போலே, கற்பும்மடமும் சுட்டுக்குலையாநின்ருள். இரக்கமிலீர் - நீரிரக்கந்தோற்றவிருக்கிறிலீர். இதற்கு - இதுநிமித்தமாக. அரக்கன் - ராக்ஷஸனுனராவணனுடைய. இலங்கை - லங்கையை. செற்றீருக்கு-அழித்தவுமக்கு. என்-எத்தை. செய்கேன் - செய்வேன்.

இல்லாதவிரக்கத்தையுண்டாக்கவோ, இவள்மைதில்யத்தை “ தத்ஸ்ய ஸத்ருஸம்ஹவேத் ” ( தத்தஸ்யஸத்ருஸம்பவேத் ) என்றவள் நெஞ்சுபோலேசிக்கெனப் பண்ணவோவென்றுகருத்து..........................................*

---

## ஈடு-மூன்ரும்பாட்டு.

இன்றிச்செயல் செய்யக்கடவதாக நினைத்தநீர், அன்று * உண்ணுதுறங்காதொலிகடலை யூடறுத்து அச்செயலை என்றியசெய்தீரொன்கிருள்.

( இரக்கமித்யாதி ) இரக்கம் - நெஞ்சில் நெகிழ்ச்சியாதல், ஈடுபாடாதல், ஈரிப்பாதல். இரங்கின நெஞ்சையுடையவிவள், எரியையணைந்த அரக்கும் மெழுகும்போலே யுருகாநின்ருள். அரக்குமெழுகும் என்கிறவிரண்டையும் - நெஞ்சுக்கொன்றும், இவள்தனக்கொன்றுமாக்கி நிர்வஹிப்பர் பிள்ளைதிருநறையூரரையர். நெஞ்சுமிவடனக்குக் கையடைப்பாகையாலே யிவடனக்கே யிரண்டையுமாக்கி யருளிச்செய்வர்பட்டர்; “ விஷ்ணுநாவஸ்ருஸோவீர்யே ” ( விஷ்ணுநாஸத்ருஸோவீர்யே ) என்கிறபடியே, எல்லாமிவள் தன்படிக்கு த்ருஷ்டாந்தமாக வேண்டும்படியிறே யிவள்தன்னிலை ; அக்நிக்குள்ளே புகில்கரிந்துபோம், கடக்கவிருக்கில் வலிக்கும், அக்நிஸகாசத்திலே யுருகாநிற்குமிறே ; முடிந்து பிழைக்கவும்பெருதே, தரித்திருக்கவும்பெருதே நோவுபடும்படி பண்ணுவீரே! .

இவள்தசையிது (இரக்கமெழீர் ) “ நீருமிவளைப்போலே யுருகவேணும் ” என்றுவளைக்கிறேமோ, நொந்தார்பக்கல் பண்ணும்க்ருபையும் பண்ணுகிறிலீர். இரக்கமனத்தையுடைய ளாகாநின்ருளிவள், நீரிரக்கமெழுகிறிலீர் ; நீரிரங்காவிட்டால், உம்மைப்போலே யிருப்பதொரு நெஞ்சையிவளுக்குக் கொடுத்தாலாகாதோ.

( இதற்கென்செய்கேன் ) உம்முடைய விரக்கமொழியவேதேனுமுபாயாந்தர ஸாத்யமோவிப்பேறு. ( என்செய்கேன் ) உம்மையிரங்கப் பண்ணவோ, இவளை யிரங்காமற்பண்ணவோ. ( அரக்கனிலங்கைசெற்றீருக்கே ) உமக்கிரக்கமின்றியே யொழிந்தால், இவளிரங்குவதொருசெயலைச் செய்துவைக்கவேணுமோ. “ ஒருப்ரணயிநிக்குதவினவன் நமக்கு

தவானே" என்றீடுபடாநின்றாள் புழுக்குறித்த தெழுத்தானாற்போலே ஒன்று வாய்த்தத்தைக்கொண்டு "அதங்யார்த்தம்" என்றிராதே நோவுபடாநின்றாள். அரக்கனிலங்கைசெற்றீருக்கு - இரக்கமனத்தோடு - இவள் - எரியணையரக்கு மெழுகுமொக்கும்; இரக்கமெழீர்; இதற்கென்செய்கேன் என்றந்வயம்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (இரக்கமனத்தோடித்யாதி) "அரக்கனிலங்கை" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (இன்றிச்செயலித்யாதி) இச்செயலென்று - இரக்கமெழாமை. (உண்ணுதித்யாதி) நாய்ச்சியார்திருமொழி. "நமாம்ஸம்ராகவோ புங்க்தே" (நமாம்ஸம்ராகவோபுங்க்தே) "அநித்ரஸ்ஸததம்ராம:" (அநித்ரஸ்ஸததம்ராம:) இத்யாதிப்படியே ஊணுமுறக்கமுமற்று, கோஷிக்கிறகடலைநடுவே யடைத்தென்றபடி. (என்றியசெய்தீர்) எதுக்காகச்செய்தீர்.

நெஞ்சில்நெகிழ்ச்சி - க்ருபை. ஈடுபாடு - து:கம், வித்ததையாதல். ஈரிப்பு- ஸ்நேஹம். இங்கு - ஈடுபாடுவேண்டுவது. பட்டர்நிர்வாஹத்துக்குச் சேரஸப்தார்த்தம் (இரங்கினவித்யாதி) அரையர் நிர்வாஹத்திலே, எரியணையரக்கொக்கு மிரக்கமநத்தோ டிவளெரியணைமெழுகொக்கு மித்யந்வய:. நெஞ்சமிவள் தனக்குக் கையடைப்பாகையாலேயென்றது - மநஸ்ஸுமிவளுக் குபகரணமாய்க்கொண் டிவளிடத்திலே யந்தர்ப்பூதமாகையாலே யென்றபடி. ஒன்றுக்கநேக த்ருஷ்டாந்தம் கூடுமோவென்ன (விஷ்ணுநேத்யாதி) ஸங்க்ஷேபே, "விஷ்ணுநா ஸத்ருஸோ வீர்யே ஸோமவத் ப்ரியதர்ஸந:" (விஷ்ணுநாஸத்ருஸோவீர்யேஸோமவத்ப்ரியதர்ஸந:) "அணை" என்றதுக்குபாவம் (அக்நிக்குள்ளேயித்யாதி) கரிந்துபோம் வெந்துபோம். தார்ஷ்டாந்திகம் (முடிந்தித்யாதி) இவ்வாக்யாதியிலே-அப்படியே யித்யத்யாஹார்யம்.

பூர்வார்த்தம் பராம்ருஸந்நாஹ (இவள்தசையிதுவென்று) "இரக்கமெழீர்" என்கிறவிடத்தில், "இரக்கம்" என்றதுக்கர்த்தத்வயம் - க்ருபையாதல், ஈடுபாடாதல். க்ருபாபக்ஷமாஹ (நீருமித்யாதி) த்விதீயமாஹ (இரக்கமனத்தையித்யாதி) பலிதம் (நீரிரங்காவிட்டாலித்யாதி)

"இதற்கு" என்றதுக்கர்த்தத்வயம் - உம்முடைய லாபத்துக்கென்னுதல், இவளிரங்க நீரிரங்காமலிருக்கிறதுக் கென்னுதல். "இரக்கமெழீர்" என்றதின் - க்ருபாபக்ஷத்திலேபாவம் (உம்முடையவிரக்கமித்யாதி) உபாயாந்தர ஸாத்யமோ வென்றது - நாயமாத்மா" (நாயமாத்மா) இத்யாதியைப்பற்ற. "ஈடுபாடு" என்றத்விதீயபக்ஷத்துக்குச்சேரபாவம் (உம்மையிரங்கவித்யாதி) (இவளையிரங்காமற்பண்ணவோவிதி) "ஸமஸ்தஸங்க்லாந்தாந்க்ருத்வா" (ஸமாஸ்துஸங்குலாம்க்ருத்வா) இத்யாதிவதிதிபாவ:.

தாத்பர்யார்த்தம் (உமக்கிரக்கமித்யாதி) அரக்கனிலங்கை செற்றதிவளிரக்கத்துக்கெப்படி ஹேதுவென்ன (ஒருப்ரணயிநிக்கித்யாதி) உதவினவன் - உபகரித்தவன். ப்ரணயிநிக்குதவின செயலுக்கீடுபட ப்ராப்தமன்றோவென்ன (புழுக்குறித்ததித்யாதி) அதாவது - "குணக்ஷாந்யாயத்தாலே செய்தசெயல்" எ

ன்றும், "அது ஸஹ்ருதயமாகிலு மந்யார்த்தம்" என்றுமறியாதே நோவுபடாநி ன்றளித்தனையொழிய ப்ரணயிநிக்காகச்செய்தசெயலன்றென்றபடி. அது-ஒருத்தி க்குதவினது. அந்யார்த்தம்-அபலைகளை நோவுபடுத்துகைக்காகச் செய்தசெயல்.
பட்டர்நிர்வாஹத்திலே யந்வயம் (அரக்கனிலங்கையித்யாதி) ............*

---

## நான்காம்பாட்டு.

இலங்கைசெற்றவனேயென்னும்பின்னும்
வலங்கொள்புள்ளுயர்த்தாயென்னுமுள்ள
மலங்கவெவ்வுயிர்க்குங்கண்ணீர்மிகக்
கலங்கிக்கைதொழுநின்றிவளே.

### ஆறாயிரப்படி.

(இலங்கை) இப்படி நானவனுடையகொடுமையைநினைத்து "இலங்கைசெற்றீர்" என்று சொல்லுமளவில், தானதைக்கேட்டு அவனுடைய ப்ரணயித்வத்தையேநினைத்து, இலங்கைசெற்றவனேயென்னும்; பின்னையும், பெரியதிருவடிமேலேயேறி யருளிவந்து தோன்றுயென்னும்; என்றால் அப்போதேவரக்காணாமையாலே உள்ளம்மலங்கவெவ்வுயிர்க்கும்; கண்ணீர்மிகக்கலங்கி யிவள்நின்று கைதொழாநிற்குமென்கிறாள்.*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நாட்டுக்குதவினபடியைச்சொல்லிக்லேஶியாநின்றாளென்கிறாள்.
இவள்-இவள். பின்னும்-முன்புத்தைக்லேஶத்தளவன்றியே, பின்னையும். இலங்கை-மாலிப்ரப்ருதிகளிருந்தலங்கையை. செற்றவனே-செறுத்தவனே. என்னும் - என்னும். அதுக்குறுப்பாக வலங்கொள்-பலவானான. புள்-பெரியதிருவடியை. உயர்த்தாய்-வாஹநமும் த்வஜமுமாகவுடையவனே. என்னும்-என்னும். அப்படிதன க்குவந்துதோற்றாமையாலே உள்ளம்-நெஞ்சு. மலங்க-அலமாக்கும்படி. வெம்-வெவ்விதாக. உயிர்க்கும்-மூச்சுவிடும். கண்ணீர்-கண்ணீரானது. மிக-மேலிட. கலங்கி-அறிவுகலங்கி. நின்று-வருகிறானாகநினைத்து. கைதொழும்-அஞ்சலிபண்ணாநிற்கும்.*

---

### ஈடு-நான்காம்பாட்டு.

"'அரக்கனிலங்கைசெற்றீர்' என்கிறவிது நியதஸ்வபாவமன்று காண், காதாசித்கங்காண்" என்றாள் திருத்தாயார்; அதுபொறுக்கமாட்டாமை, அதுதன்னையே சொல்லுகிறாள்.

(இலங்கைசெற்றவனேயென்னும்) எனக்குப்பண்டேயுதவி உபகரித்தவனே என்னாநின்றாள். முன்பு தனக்குதவினவனிப்போது தனக்குதவாதொழிந்தாற்போலே கூப்பிடாநின்றாள். கடலடைத்தல், மலையெடுத்தல், அம்பேற்றல், செய்யவேணுமோ; என்பக்கல்வரும்போது என்ன

ப்ரதிபந்தகமுண்டு. திருத்தாயார் இவள்விடுகைக்குச் சொன்னதுதானே அவளுக்குப்பற்றுகைக்குடலாய்விட்டது.

(பின்னுமித்யாதி) அதுக்குமேலே, விடாயரிருந்தவிடத்தே சாய்கரகம்போலே உயரவைத்துக்கொண்டுவந்துகாட்டும் பரிகாரமுடையவனேயென்னாநின்றாள். மிடுக்கையுடையபுள்ளை த்வஜமாகவுடையவனென்னுதல்; அன்றியே, புள்ளாலே வஹிக்கப்பட்டவனென்னுதல்.

கொண்டுவருகைக்குப் பரிகாரமுண்டாயிருக்கச்செய்தே வரக்காணாமையாலே, மநஸ்தத்த்வம் வேர்பறியும்படி நெடுமூச்செறியாநிற்கும்; "ஓஹந்தீவ நிஶ்வாஸைர் வ்ருக்ஷாந் பல்லவதாரிண:" (தஹந்தீமிவநிஶ்வாஸைர்வ்ருக்ஷாந்பல்லவதாரிண:) என்னுமாபோலே.

(கண்ணீர்மிக) நெடுமூச்சாய்ப்புறப்பட்டு, புறப்படாதது கண்ணீராய்ப்புறப்படாநின்றது. (கலங்கிக்கைதொழும்) தெளிந்திருந்துதொழுமதில்லையிறே ப்ரணயிநி. (இவளே) அவன் தொழும்படியான வேண்டற்பாடுடைய தான் தொழாநின்றாள் ..................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (இலங்கையித்யாதி) "இலங்கைசெற்றவனேயென்னும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அரக்கனித்யாதி) கீழ்ப்பாட்டிலே "புழுக்குறித்த தெழுத்தானாற்போலே" என்கிறவாக்யத்துக் குத்தரமாயிருக்கிறது - "இலங்கைசெற்றவனே" என்கிறபதமென்றுஸங்கதி. "அந்தவாக்யத்திலே நியதஸ்வபாவமன்று" என்றுதிருத்தாயார்சொன்னது பொருமல், அதுநியதஸ்வபாவமென்கிறாளென்றபடி, "இலங்கைசெற்றவனே" என்றஏவகாரத்தாலேயாதல், "இலங்கைசெற்றவனே" என்றித்தையேநிரூபகமாகச்சொல்லி ஸம்போதிக்கையாலேயாதல் - நியதஸ்வபாவ மென்கிறதென்றபடி.

பிராட்டிதானாகவிவக்ஷித்துபாவம் (எனக்குப்பண்டேயித்யாதி) விவரணம் (முன்பித்யாதி) "அன்றிக்கே பிராட்டிக்குதவினவன் எனக்குதவானோ" என்றுவிவக்ஷித்து தாத்பர்யாந்தரம் (கடலடைத்தலித்யாதி) மலையெடுத்தல் - கடலடைத்தலென்றந்வயிப்பது. மலையாலேகடலடைத்தலென்றபடி. இத்தாத்பர்யத்தால் பலிதம் (திருத்தாயாரித்யாதி) இப்படிபாவத்வயமாதல்; "எனக்குப்பண்டே" இத்யாரப்ய, நாலுவாக்யமும்-நாலுதாத்பர்யமாதல். (திருத்தாயார்விடுகைக்குச் சொன்னதுதானேயித்தி) "அதந்யார்த்தம்" என்று - "அபலைகளை நோவுபடுத்துகைக்காகச்செய்தது" என்றுசொன்னதுதானே, அபலைகளுடைய ரக்ஷணார்த்தமாகச்செய்தசெயலென்ற உக்திபோலேயாதரஹேதுவாய்விட்டதென்றபடி.

புள்ளுயர்த்தாய் - புள்ளையுயர்த்தவன், புள்ளாலேவஹிக்கப்பட்டவனென்றும். த்விதீயார்த்தத்திலேபாவம் (அதுக்குமேலேயித்யாதி) சாய்கரகம்-தண்ணீர்ப்பந்தலிலே யுயரவைத்துச் சாய்கிறகரகம்.

கீழ்வாக்யத்தோடேகூட்டி மேல்வாக்யத்துக்கர்த்தம் (கொண்டுவருகைக்கித்யாதி) உள்ளம்-மநஸ்தத்த்வம். மலங்கி-வேர்பறியும்படி. வெவ்வுயிர்க்கும் - வெவ்

விதாம்படி யுயிர்க்குமென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித்ருஷ்டாந்தம் (ஸஹ ந்தீமித்யாதி) ஸாந்தாசாண்டே ஸீதாம்த்ருஷ்ட்வாஹநூமாந், "ஸஜாதமிவ ஸோகாநாநுஸ்வஸந்தம்" (ஸங்காதமிவஸோகாநாம் துக்க ஸ்யோர்மிமிவஸ்த்திதாம்) இத்யுக்தமர்த்தம். உயிர்க்கை-மூச்சுவிடுகை. ஸாஷ்கமா னத்தையிறே யக்நிதஹிப்பது, அவனனல்லகிடீரிதினுடைய கொடுமையென்கிறான் (பல்லவதாரிணீஎன்று)

(கண்ணீராய்ப்புறப்படாநின்றது) மநஸ்தத்த்வமென்றபடி. "உள்ளம்மல ங்க" என்றதுக்கு - மலங்கியென்றர்த்தாந்தரம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நெடு மூச்சாயித்யாதி) "மலங்க" என்கிறநிர்த்தேஸஸ்வாரஸ்யத்தைப்பற்ற நெஞ்சை தாஹகர்மமாகவிவக்ஷித்து, "ஊஹந்தீம்வ்ருக்ஷாந்" (தஹந்தீம்வ்ருக்ஷாந்) என்று-கர் மகர்த்ருநிர்த்தேஸவத்தானவாக்யத்தையுதாஹரித்தார் கீழ்; கண்ணீருக்குள்ளம் மலங்குகையே ஹேதுவாகவிவக்ஷிக்கவேண்டுகையாலே, அதிரண்டுக்குமொக்குமெ ன்று திருவுள்ளம்பற்றியோஜநாந்தரமருளிச்செய்தாரிங்கு. "கலங்கி" என்றவிசே ஷணத்துக்குபாவம் (தெளிந்தித்யாதி) "இவளே" என்றஸ்வரத்துக்குபாவம் (அவன் தொழும்படியானவித்யாதி) வேண்டற்பாடு-பெருமை. நின்று-கைதொழு கைமாறாதேநின்று.

இவள்-பின்னும் - இலங்கைசெற்றவனேயென்னுமித்யாரப்ய, நின்று - கை தொழுமித்யந்வயம்.....................................................................*

---

# ஐந்தாம்பாட்டு.

இவளிராப்பகல்வாய்வெரீஇத்தன
குவளையொண்கண்ணநீர்கொண்டாள்வண்டு
திவளுந்தண்ணந்துழாய்கொடீரென
தவளவண்ணர்தகவுகளே

## ஆறாயிரப்படி.

(இவள்) "இலங்கைசெற்றவனே" என்றும், "வலங்கொள் புள்ளுயர்த்தாய்" என்றுமிப்படியிராப்பகல் வாய்வெருவி, தனகுவளை யொண்கண்ணநீர்கொண்டாள்; இப்படிதயநீய தசைவரச்செய்தேயும் வண்டுதிவளும் தண்ணந்துழாய் கொடுக்கிறிலீர்; பரமகாருணிகரான வு ம்முடைய காருண்யமிருக்கும்படி யிதுவோவென்கிறாள்.................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சுத்தபாவரான வும்முடைய ஸ்வபாவமிருந்தபடி யென்னென் கிறாள்.

இவள் - விலக்ஷணையானவிவள். இராப்பகல் - இரவோடுபகலோடுவாசிய ற. வாய்வெரீஇ - திருத்துழாயைவாய்வெருவி. அதுகிடையாமையாலே - தன - தன்னுடைய. குவளை - நெய்தல்போலே. ஒண் - அழகியவான. கண் - கண்களி

லே. நீர் - சோகாஸ்ருவை. கொண்டாள் - உடையளானாள். வண்டு - வண்டுகள். திவளும் - மதுபாநம்பண்ணி, ரஸாயந ஸேவைபண்ணினாரைப்போலேபடிந்து ஒளிவிடும்படியான. தண்ணந்துழாய் - திருத்துழாயை. கொடீர் - கொடுக்கிறிலீர். தவளவண்ணர் - ஆஸ்ரிதவிஷயத்தில் சுத்தஸ்வபாவரானஉம்முடைய. தகவுகள - க்ருபாதிஸ்வபாவங்கள். என - என்னென்னவாயிருக்கின்றன.

வாய்வெருவினதற் கிரக்கமற்று, கண்ணநீர்க்கிரக்கமற்று, "இவளுக்குக் கொடுக்கவேணும்" என்றிரக்கமற்று, வண்டுகளுக்குக் கொள்ளைகொடுத்ததென்ன ஸ்வபாவமென்றுகருத்து.................................................................*

## ௬ - ஐந்தாம்பாட்டு.

இவளிப்படி க்லேசிக்கிறவிடத்திலும் வரக்காணாமையாலே, நிர்த்தயரென்கிறாள்.

( இவளிராப்பகல்வாய்வெரீஇ ) "ஸீதேதிமதுராம்வாணீம் வ்யாஹரந்ப்ரதிபுத்யதே" ( ஸீதேதிமதுராம்வாணீம்வ்யாஹரந் ப்ரதிபுத்யதே ) என்று - வாய்வெருவுவானவன்கிடீர். [ அநித்ரஸ்ஸததம் ராமஃ ] ( அநித்ரஸ்ஸததம்ராமஃ ) நித்ரையோடே காலக்ஷேபம்பண்ண வேண்டும் செல்வுடையவர், ஸததமநித்ரராயிருப்பர். [ஸுப்தோபிச] ( ஸுப்தோபிச ) "ஸததமநித்ரஃ" ( ஸததமநித்ரஃ ) என்றுவைத்து, "ஸுப்தோபிச" ( ஸுப்தோபிச ) என்கிறது - பராகர்த்தாநுஸந்தாந பாவத்தைப்பற்ற. [ நரோத்தமஃ ] ( நரோத்தமஃ ) அபிமதவிஸ்லேஷத்தி லிங்ஙனேயிருக்கைபோலே - புருஷோத்தமத்வமாவது. ( இராப்பகல்) * பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும் வாய்வெருவினவித்தனைகாணும். ( வாய்வெரீஇ ) வாய்வெருவி. அவதாநம்பண்ணிச்சொல்லுகிற தொன்றுமில்லை, வாஸநையே யுபாத்யாயராகச் சொல்லுகிறவித்தனை. ( தனகுவளையொண்கண்ணநீர்கொண்டாள் ) ( தன ) ஆநந்தாஸ்ரு ப்ரவஹிக்கக்கடவகண், சோகாஸ்ரு ப்ரவஹியாநின்றது. இக்கண்ணுக்கிலக்கானார் கண்ணிலேகாணக்கடவ கண்ணீரைத்தன்கண்ணிலேகொண்டாள். தன்னுடையவாய், குவளைப்பூப்போலே யிருக்கிறவழகியகண்களிலே நீரைக்கொண்டாள்.

நம்மைச்செய்யச்சொல்லுகிறதென்னென்ன ( வண்டுதிவளும்தண்ணந்துழாய்கொடீர் ) விரஹஜ்வரத்தாலேவாடின இவள்மார்வில் மாலையைவாங்கி, உம்முடையமார்வில் செவ்விமாறாத மாலையைக்கொடுக்கிறிலீர். அவ்வண்டுகளுக்கென்ன கண்ணீரைக்கண்டு கொடுக்கிறீர். திவளுகை - படிகை, அசைகை, ஒளிவிடுகை, இவையித்தனையுஞ் சொல்லக்கடவது.

( என ) இவையென்னென்பின. ( தவளவண்ணர்தகவுகளே ) "சுத்தஸ்வபாவரான வும்முடைய தகவுகளெங்கேபோயிற்றின" என்

றெம்பா ரருளிச்செய்யும்படி. அன்றிக்கே, பட்டர், "உம்மைப்போலே நாலுஶிஷ்டர்களமையுமிறே அபலைகள்குடிகெட" என்றார்............*

---

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (இவளித்யாதி) பாட்டையெல்லாமடைவே கடாக்ஷித்தவதாரிகை (இப்படியிவளித்யாதி)

"இவள் - வாய்வெரீஇ" என்றதுக்குபாவம் (ஸீதேத்யாதி) ஸுந்தரகாண்டேஷட்த்ரிம்ஶே, "அநித்ரஸ்ஸததம்ராம ஸுப்தோபிச நரோத்தம:। ஸீதேதி மதுராம்வாணீம் வ்யாஹரந்ப்ரதிபுத்யதே" (அநித்ரஸ்ஸததம் ராம ஸ்ஸுப்தோபிசநரோத்தம: । ஸீதேதமதுராம்வாணீம் வ்யாஹரந்ப்ரதிபுத்யதே.) பூர்வார்த்தத்தையும் வ்யாக்யாநம்பண்ணுவதாகவத்தை யுபாதாநம்பண்ணுகிறார் (அநித்ரஸ்ஸததமித்யாதி) செல்வு - ஸம்பத்து. அதாவது - ரமயதீதிராம: என்கிற வ்யுத்பத்தியாலே-ஸ்வவ்யதிரிக்தரை ரமிப்பிக்குமவர்க்கு ஸ்வயம்ரமிக்கும்படியான ஸம்பத்துஸித்தமிறே, அத்தைச்சொல்லுகிறதென்கை. "அநித்ர:" (அநித்ர:) என்றுவைத்து, "ஸுப்தோபி" (ஸுப்தோபி) என்றால் - வ்யாஹதமுமாய், ஸ்நேஹத்துக்குக் கொத்தையுமாயிராதோவென்ன (ஸததமநித்ர: என்றுவைத்தித்யாதி) பராகர்த்தேத்யாதிக்குபாவம்-வ்யதிரிக்தபதார்த்தங்களிற் கண்வையாதே, பிராட்டியையேயெப்போதும் த்யாநம்பண்ணிக் கொண்டிருப்பரென்றபடி. ஸ்வாபதேசம் (பொய்ந்நின்றவித்யாதி) "இராப்பகல், வாய்வெரீஇ" இதிஸமுச்சித்யபாவம் (அவதாநம்பண்ணியித்யாதி) ஆனாற்றானெப்படியென்ன (வாஸனையேயித்யாதி)

"குவளையொண்" என்றவிஶேஷணத்துக்குபாவம் (ஆநந்தாஶ்ருவித்யாதி) "தன" என்றதுக்குபாவம் (இக்கண்ணுக்கித்யாதி) சப்தார்த்தம் (தன்னுடையவாயித்யாதி) குவளை - கருநெய்தல்.

"வண்டுதிவளும்" என்று - அவன்மாலையை விஶேஷிக்கையாலே, இவள் மாலையிற் செவ்வியில்லாமைஸித்தமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (விரஹஜ்வரத்தாலேயித்யாதி) "வண்டுதிவளும்" என்றவிஶேஷணத்துக்கு பாவம் (வண்டுகளுக்கித்யாதி)

இவையென்னென்பினவென்றது - எம்பார்நிர்வாஹத்திலே. "தகவில்லை" என்கிறவள், "தவளவண்ணர்" என்றுவிஶேஷிக்கிறதுக்குக் கருத்தைவாஸ்தவமாகவும், உபாலம்பமாகவு மிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (சுத்தஸ்வபாவரான வித்யாதிவாக்யத்வயத்தாலே) முன்பு சுத்தஸ்வபாவருமாய் தயாவானுமாயிருக்கிறநீர், இப்போது சுத்தஸ்வபாவருமன்றிக்கே தயாஹீநருமாய் விட்டீரென்று எம்பாருக்குக்கருத்து ; என - எங்குற்றன வென்றபடி ; என்னென்பினவென்றது - முன்புத்தையில்க்ருபை யிப்போதெங்கே போயிற்றென்றபடி. சுத்தஸ்வபாவருமல்ல, தயாவானுமல்லவென்றுபட்டர் ; என - என்னபடியா யிருக்கிறதென்று க்ஷேபோக்தி. "என - தவளவண்ணர், என - தகவுகள்" என்றாய் - என்னசுத்தஸ்வபாவர், என்னதகவுகள் என்றுவிவக்ஷித்து ரஸோக்தியாகபாவம் (உம்மைப்போலேயித்யாதி) "தகவுகள்" என்கிறபன்மை - "காருண்யநாநூஶம்ஸ்ய

ந" (காருண்யேநாந்ருஶம்ஸ்யேந) இத்யாதிப்படியே ஸாமாந்யவிஷயமாயு மாஶ்ரிதவிஷயமாயுமுள்ள க்ருபைகளைச் சொல்லுகிறது.

க்ரமேணாந்வய: ......................................................*

## ஆறாம்பாட்டு.

தகவுடையவனேயென்னும்பின்னு
மிகவிரும்பும்பிரானென்னுமென
தகவுயிர்க்கமுதேயென்னுமுள்ள
முகவுருகிநின்றுள்ளுளே.

### ஆறாயிரப்படி.

(தகவு) இப்படியிவளுடைய ப்ரஸங்கத்தாலே யவனுடைய க்ருபையைநினைத்துப் பரமகாருணிகனேயென்றுகூப்பிடும்; இப்படிக்ருபையையுடையவன் நம்மைக்கைவிடானென்று பார்த்துப்பின்னையும் மிகவுமாசைப்படும்; ஆசைப்பட்ட வப்போதே பெருமையாலேவந்த வவஸாதத்தாலே நெஞ்சுருகும்படியுருகிநின்று, கேட்கச்சொல்லக்ஷமையல்லாமையாலேபோய்த் தன்னுள்ளுளேபிரானேயென்று மென்னுடையபோக்யமென்றுஞ் சொல்லாநிற்குமென்கிறாள்...............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்னிலேசிதிலையா யும்முடைய போக்யதாதிசயத்தைப்பேசி, வாய்புலற்றா நின்றாளென்கிறார்.

இவள் - உள்ளம் - தன்னெஞ்சு. உக - அழியும்படி. உருகி - ஸ்வரூபம்நீராயுருகி. உள்ளுளே - தன்னிலேதன்னிலே. நின்று - நின்று. தகவு - என்னைப்புஜிப்பிக்கைக்கடியான க்ருபாதிஸ்வபாவங்களை. உடையவனே - உடையவனே. என்னும் - என்னும். பின்னும் - அவ்வளவிலேநில்லாதே. மிக - மேன்மேலும். விரும்பும்- விரும்பும்படியான. பிரான் - உபகாரகனே. என்னும் - என்னும். எனது - என்னுடைய. அகவுயிர்க்கு-அந்தராத்மாவுக்கு. அமுதே - நித்யமானநிரதிசயபோக்யமே. என்னும் - என்னாநிற்கும்.

மிகவிரும்புமென்று - தன்னையவன் விரும்பினபடியாகவுமாம்..............*

### ஈடு - ஆறாம்பாட்டு.

இவளவஸாதத்தைக்கண்ட திருத்தாயார் "நிர்த்தயர்" என்றாள், இவளதுபொறுதே, "தகவுடையவனே" என்று அத்தைநிரூபகமாகச் சொல்லாநின்றாளென்கிறாள் (தகவுடையவனேயென்னும்) கெடுவாய், ஆகரத்தில் தகவுமறுக்குமோ. நங்குற்றங் காணென்னாநின்றாள். "'தகவில்லை, யென்றவள்வாயைப் புதைத்தாற்போலேவந்து தோற்றுவதே"

என்று, அவன்வந்தால் பண்ணும்விருப்பத்தைப் பண்ணுகிற்கும். ( பின்னும்மிகவிரும்பும் ) பாவநாப்ரகர்ஷ மிருக்கிறபடி.

( பிரானென்னும் ) பெற்றதாய்க்கவகாசம்வையாதே வந்துதோற்றுவதே, இதென்ன வுபகாரந்தானென்னும்.

(எனதகவுயிர்க்கமுதேயென்றும்) என்னுடையப்ரத்யகாத்மாவுக்கு போக்யனானவனேயென்னும். நித்யவஸ்து அழியாமல் நோக்குமம்ருதமாயிற்றிது. போகதசையிற் சொல்லுமவையெல்லாம் சொல்லாநின்றாள். ( உள்ளமுகவுருகின்று ) உள்ளென்பது - மேல். அமூர்த்தமானது மூர்த்தீபவித்துருகித்ரவீபூதமாய் மங்கிப்போகாநின்றது. உள்ளமுகவுருகின்று - தகவுடையவனேயென்னும், பின்னும் மிகவிரும்பும், பிரானென்னும், எனதகவுயிர்க்கமுதேயென்னும்; இது, நாம்பேசுக்கொண்டறிந்தஅம்ஸம், உள்ளோடுகிறது ( உள்ளுளே ) வாசாமகோசரம். “ உள்ளுளே - உருகின்று ” என்பாருமுண்டு........................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( தகவித்யாதி ) நானவன்குணஹானி, சொல்ல, பொருதேயவன்குணங்களைப் பேசப்புக்கு அதிலேயமுந்தாநின்றாளென்றிப்பாட்டுக்கவதாரிகை.

பதாவதாரிகாமாஹ ( இவளவஸாதத்தையித்யாதிவாக்யத்வயேந ) நிர்த்தயரென்றாளென்றது - “ எனதவளவண்ணர்தகவுகளே ” என்றத்தைப்பற்ற. நிருபகமாகச்சொல்லும் ப்ரகாரத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, வாராமைக்கடிஸ்வாபராதமென்கிறாளென்றருளிச்செய்கிறார் ( கெடுவாயித்யாதி ) கெடுவாயென்றது - வார்த்தைப்பாடு. ஆகரத்தில் - கநியில். உத்பத்திஸ்த்தாநத்திலென்றபடி. மறுக்குமோ - வற்றுமோ. “ வ்ராதஃவ்ராஜஃக்ருதஜஹ ” ( க்யாதஃப்ராஜ்ஞஃக்ருதஜ்ஞஸ்ச ) “ மமைவதுஷ்க்ருதம்கிம்சித் ” ( மமைவதுஷ்க்ருதம்கிஞ்சித் ) இத்யாத்யநுஸந்தேயம். “ தகவுடையவனே ” என்கிறவிது - “ க்ருபாவானேஎன்கிறப்போலே ஸம்போதநமுமாம், ஸாவதாரணநிர்த்தேசமுமாம்.

அவன் வாராதிருக்கச்செய்தே விரும்புகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் ( தகவில்லையித்யாதி ) விருப்பமாவது - பரிசரிக்கையிறே ; அதுதான் - ஸந்நிதாநத்திலே செய்யுமதொன்று ; அதுசெய்கையாவது - * பூசும்சாந்தும் புனையும் கண்ணியும் முதலானவற்றைச்சேர்க்கை. புதைத்தாற்போலே - மூடினாற்போலே. ஆனாலவன் வந்தானோவென்ன ( பாவநேத்யாதி ) உருவெளிப் பாட்டாலேயென்றபடி.

விஸ்லேஷவேளையிற்பண்ணின வுபகாரமேதென்ன ( பெற்றதாயித்யாதி. )

“ எனது, அகவுயிர்க்கு ” என்றுபதச்சேதம். “ அகவுயிர் ” என்று-ப்ராணவாயுவை வ்யாவர்த்திக்கிறது. அம்ருதம் போக்யமுமாய் தாரகமுமாயிறே யிருப்பது, இங்கேயிரண்டும் விவக்ஷிதமென்கிறார் ( என்னுடையவித்யாதியாலும், நித்யவஸ்துவித்யாதியாலும் ) “ உயிர்க்கமுதே ” என்கையாலே-தேஹத்தைப் பூண்கட்டுகிறவம்ருதத்தை வ்யாவர்த்திக்கிறதென்னு மிடந்தோற்ற வருளிச்செய்கிறார் (இதுவென்று ) கீழெல்லாவற்றுக்கும்பலிதம் ( போகதசையிலித்யாதி )

(உள்ளென்பதுமேலென்று) இதுக்கநுகுணமாக "உள்ளமுகவுருகிகின்று" என்றதுக்கு - மென்மேலன வுருகிகின்று என்றோரர்த்தங்கண்டுகொள்வது. "உள்ளம்" என்பதுக்கு - ஹ்ருதயபரமாக வர்த்தாந்தரம் (அமூர்த்தமானவித்யாதி) அமூர்த்தம்-அஸ்பர்ஶவத்த்ரவ்யம். இதுக்குச்சேர "உள்ளும்" என்றதுக்குமர்த்தாந்தரம் (உள்ளுளேயுருகிகின்று என்பாருமுண்டென்று) அதாவது - மேன்மேலனென்றபடி. இந்தப்பக்ஷத்திலே, உள்ளுளேயுள்ள முகவுருகிகின்று-தகவுடையவனே யென்னுமித்யாரப்ய, அமுதேயென்னு மித்யந்வய꞉. ;"உள்ளென்பதுமேல்" என்றபக்ஷத்தி லந்வயங்காட்டுகிறுர் (உள்ளமுகவுருகிகின்றித்யாதி) (உள்ளோடுகிறதுள்ளுளேயிதி) உள் - உள்ளோடுகிறது. உளே - உள்ளேதானே. ஆகையால் வாசாமகோசரமென்றபடி. ஆக, இப்பாட்டுக்கிரண்டு விதமந்வயங்கண்டுகொள்வது. "உள்ளம" என்றதுக்கு - மேன்மேலனென்றும், மநஸ்ஸென்று மர்த்தத்வயம். "உள்ளுளே" என்றதுக்கும் - உள்ளோடுகிற துள்ளேதானேயென்றும், மேன்மேலனென்று மர்த்தத்வயம். உக - உக்குப்போம்படி. சிதிலமாம்படி. உருகி-த்ரவீபூதமாய். நின்று - தரித்துநின்றென்றுஶப்தார்த்தம். "உள்ளென்பதுமேல்" என்றவாக்யம் - "உள்ளுளேயுருகி நின்றென்பாருமுண்டு" என்றவாக்யாநந்தரம் படிதமானுலும், கீழ்ச்சொன்னபடியே யர்த்தமநுஸந்தேயம்....................*

---

## ஏழாம்பாட்டு.

உள்ளுளாவியுலர்ந்துலர்ந்தென
வள்ளலேகண்ணனேயென்னும்பின்னும்
வெள்ளநீர்க்கிடந்தாயென்னுமென
கள்விதான்பட்டவஞ்சனையே.

### ஆருயிரப்படி.

(உள்ளுளாவி) எம்பெருமானைப்பிரிகையாலே பரிதபைபாயந்தப் பரிதாபத்தைப்பொறுக்கமாட்டாமையாலே, விடாய்ப்பட்டார் "தண்ணீர் தண்ணீர்" என்னுமாபோலே யென்வள்ளலே, என்கண்ணனேயென்னும்; பின்னும் வெள்ளநீர்க்கிடந்தாயென்னும்; எம்பெருமானையுங்கூட்ட வசீகரிக்குமழகுடையளானவிவள் அவனுடையகுணங்களிலே யிங்ஙனே யகப்பட்டாளென்கிறுள்........................ ..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், "அபேக்ஷித்தார்க்குபகரிக்க அணித்தாகவர்த்திக்கிறவனே" என்னுநின்றுளென்கிறுள்.

எனகள்வி-எனக்குத்தன்னெஞ்சில் விகாரந்தோன்றுதபடி மறைக்குங்களவையுடையவிவள். தான்பட்ட - தானகப்படும்படியவன்செய்த வஞ்சனை - வஞ்சனைகளிருந்தபடி. உள்ளுள்-ஹ்ருதயஸ்த்தாநத்துக்குள்ளேநிற்கிற. ஆவி - அபோஷ்யமான அந்தராத்மாவானது. உலர்ந்துலர்ந்து-உலர்த்திமேலுலர்த்தியாம்படியாய்.

என-எனக்குன்னைமுற்றூட்டாகத்தந்த. வள்ளலே-மஹோதாரனே. கண்ணனே-அதொனுன்பேரும்படியான தாழ்ச்சியையுடையக்ருஷ்ணனே. என்னும் - என்னும். பின்னும்-அதுக்குமேலே. அவதாரகந்தமாம்படியணித்தாக வெள்ளநீர் - பரிபூர்ண ஜலமானகடலிலே. கிடந்தாய்-கண்வளர்ந்தருளினவனே. என்னும்-என்னும்.

அப்படுக்கை தனக்குறுப்பென்றிருக்கிருள் ....................................*

---

## ஈடு - ஏழாம்பாட்டு.

தன்னெஞ்சிலோடுகிறது பிறரறியாதபடி அடக்கவல்லவிவள், வாய்விட்டுக்கூப்பிடும்படி யிவளைவஞ்சித்தா னென்கிருள்.

( உள்ளுளாவி ) ஆந்தரமான மநஸ்ஸுக்கு தாரகமானஆத்மா சருகாய்வருகிறபடி " அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோஸோஷ்யஏவச " ( அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோஸோஷ்யஏவச ) என்று - அஸோஷ்யமென்று சொல்லுகிறவிதுவும் போயிற்றென்கிருள். பாவபந்தமடியாக வருகிறநோயாகையாலே அகவாயேபிடித்து வெந்துகொண்டு வருமாயிற்று. விடாயர் கற்பூரநிகரம் வாயிலிடுமாபோலே ( என வள்ளலேகண்ணனேயென்னும் ) இவ்வளவான ஆர்த்திகளிலேவந்து உன்னையெனக்குக் கையாளாகத்தருமவனே யென்னாநின்ருள்.

அதுக்குமேலே, " தாபார்த்தோஜலஸாயிநம் " ( தாபார்த்தோ ஜலஸாயிநம் ) என்று, என்விடாய்க்குதவத் திருப்பாற்கடலிலேவந்துசாய்ந்தருளிற்றேயென்னும். இக்கிடை, இவளுக்கொரு படுக்கையிலே சாய்ந்தாற்போலே யிருக்கிறதுகாணும்.

( எனகள்வி ) தன்ஹ்ருதயத்திலோடுகிறது பிறரறியாதபடிமறைத்துப் பரிமாறக்கடவஇவள் படும்பாடேயிது. ( தான்பட்ட ) " நஜீவேயம்க்ஷணமபி " (நஜீவேயம்க்ஷணமபி) என்கிறதான் அவிக்ருதனாய், இவள் விக்ருதையாவதே. ( வஞ்சனை ) அளவுபடைக்குப் பெரும்படை தோற்பது வஞ்சநத்தாலேயிறே. பகலையிரவாக்கியும், " ஆயுதமெடேன்" என்றெடுத்தும் செய்தசெயல்போலே யிவளைவஞ்சித்திரித்தனை .........*

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( உள்ளுளாவியித்யாதி ) " எனகள்விதான்பட்டவஞ்சனையே " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( தன்னெஞ்சிலித்யாதி )

உள்-ஆந்தரமான, உள்-மநஸ்ஸுக்கு, ஆவி-தாரகமானவாத்மாவென்றுஸப்தார்த்தம். இரண்டாமுள்-மநோவாசி. " அஸோஷ்யம் " ( அஸோஷ்யம் ) என்னாநிற்க, " உலர்ந்து " என்னலாமோவென்ன ( அச்சேத்யோயமித்யாதி ) கிதாஸூக்தியே. " நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம்ஸநாதநஃ " ( நித்யஸ்

ஸர்வகதஸ்ஸ்த்தாணுரசலோயம்ஸநாதநः ) இத்யுத்தரார்த்தம். ஶரீரம் முற்படவுலர்ந்து, அநந்தரமாவியுலரவேண்டாவோவென்ன ( பாவபந்தமித்யாதி ) “உலர்ந்துலர்ந்து” என்றவநந்தரம், “ஏனவள்ளலேகண்ணனே ” என்றதுக்குபாவம் (விடாயரித்யாதி) தன்னுடையதாஹத்துக்காப்யாயநமாகக் குணங்களைச்சொல்லுகிறுளென்றபடி. கற்பூரநிகரம்-கற்பூரவுண்டை. பாவாந்தரம் (இவ்வளவானவித்யாதி)

“வெள்ளநீர்க்கிடந்தாய்” என்றதுக்கு ப்ரயோஜநம் ( அதுக்குமேலேயித்யாதி ) ( தாபார்த்தஇத்யாதி ) ஶ்ரீவிஷ்ணுதர்மேசத்வாரிம்ஶேத்யாயே, “𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑍇𑌤𑌿𑌤𑍀𑌵𑍍𑌰𑍇 𑌚 𑌨𑌰𑌸𑌿𑌂𑌹𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍। 𑌤𑌾𑌪𑌤𑍍𑌰𑌯𑌾𑌭𑌿𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌰𑍍𑌤𑍋𑌜𑌲𑌶𑌾𑌯𑌿𑌨𑌂। 𑌗𑌰𑍁𑌡𑌧𑍍𑌵𑌜𑌾𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌤𑍍𑌵𑌿𑌷𑌵𑍀𑌰𑍍𑌯𑌂𑌪𑍍𑌰𑌶𑌾𑌮𑍍𑌯𑌤𑌿.” ( அந்தகாரோதிதீவ்ரேசநரஸிம்ஹமநுஸ்மரேத் । தாத்யகிலதுःகநிதாபார்த்தோஜலஶாயிநம் । கருடத்வஜாநுஸ்மரணாத்விஷவீர்யம்ப்ரஶாம்யதி.) தூரஸ்த்தனுய்த்திருப்பாற்கடலிலேகிடந்தால் தனக்குதவின தாமோவென்ன ( இக்கிடையித்யாதி ) ஒருபடுக்கையிலே சாய்ந்தாற்போலே யென்கிறவிடத்திலே - “𑌬𑌹𑍍𑌵𑍇𑌤𑌤𑍍𑌕𑌾𑌮𑌯𑌾𑌨𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌯𑌮𑍇𑌤𑍇𑌨 𑌜𑍀𑌵𑌿𑌤𑍁𑌂। 𑌯𑌦𑌹𑌂 𑌸𑌾 𑌚 𑌵𑌾𑌮𑍋𑌰𑍁𑌰𑍇𑌕𑌾𑌂 𑌧𑌰𑌣𑍀𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍌” ( பஹ்வேதத்காமயாநஸ்ய ஶக்யமேதேநஜீவிதும் । யதஹம்ஸாசவாமோரூரேகாம்தரணீமாஶ்ரிதௌ ) என்கிறஶ்லோகமநுஸந்தேயம். ஒருபடுக்கையிலே சாய்ந்தாற்போலே யென்றது-பாவநாப்ரகர்ஷத்தாலேயென்றபடி.

“கள்வி” என்றதுக்குபாவம் ( தன்ஹ்ருதயத்திலித்யாதி ) கள்விதான்பட்ட வஞ்சனை, என-என்னவாயிருந்ததென்றந்வயித்து தாத்பர்யமென்று கண்டுகொள்வது. “பட்டவஞ்சனை” என்னவமைந்திருக்க, “தான்” என்றதுக்குபாவம் ( நஜீவேயமித்யாதி ) ஸுந்தரகாண்டே ஷட்ஷஷ்டிதமே, “𑌚𑌿𑌰𑌂𑌜𑍀𑌵𑌤𑌿 𑌵𑍈𑌦𑍇𑌹𑍀 𑌯𑌦𑌿 𑌮𑌾𑌸𑌂 𑌧𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿। 𑌨𑌜𑍀𑌵𑍇𑌯𑌂𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿𑌵𑌿𑌨𑌾 𑌤𑌾𑌮𑌸𑌿𑌤𑍇𑌕𑍍𑌷𑌣𑌾𑌂.” ( சிரம்ஜீவதிவைதேஹீயதிமாஸந்தரிஷ்யதி । நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம். ) இவள் விக்ருதையானு லது வஞ்சநமாகவேணுமோவென்ன ( அளவுபடைக்கித்யாதி ) அளவுபடை-அல்பஸேனை. நாயகன்-அளவுபடை. பிராட்டி - பெரும்படை. “𑌅𑌸𑌿𑌤𑍇𑌕𑍍𑌷𑌣𑌾” ( அஸிதேக்ஷணு ) என்கிற-சக்ஷுஸ்ஸௌந்தர்யாதிக்யத்தைப்பற்ற (பெரும்படையென்றது) “𑌤𑍁𑌲𑍍𑌯𑌶𑍀𑌲𑌵𑌯𑍋𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌂” (துல்யஶீலவயோவ்ருத்தாம்) இத்யாதி. அப்படிவஞ்சகனோவென்ன (பகலையித்யாதி) “வஞ்சனையே” என்ற ஏகாரம்-இதிருந்தபடியென் என்றீடுபாட்டிலே..........*

---

# எட்டாம்பாட்டு.

வஞ்சனேயென்னுங்கைதொழுந்தன
நெஞ்சம்வேவநெடிதுயிர்க்கும்விறற்
கஞ்சனைவஞ்சனைசெய்தீரும்மைத்
தஞ்சமென்றிவள்பட்டனவே.

## ஆறுயிரப்படி.

(வஞ்சனே) உன்னுடையகுணங்களிலே யென்னை யகப்படுத்தினவனேயென்னும்; பின்னைத்தன் திருவாயாலொன்றுஞ் சொல்லமாட்டா

மையாலே தன்கைகளாலே தொழுதிருக்கும்; அப்போதே யவனைக்காணாமையாலே தன்னெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும்; உம்மை "தன்னுடையலாபத்துக்குத்துணை" என்று விஸ்வஸித்திருந்த விவளும் உமக்குப்ரதிகூலனான கம்ஸன்பட்டது படுவதேயென்கிறாள்............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸந்நஜநங்களுக்கநுபவவிரோதிநிவர்த்தகரான வும்மைவிஸ்வஸித்திவள்பட்டபாடுகளென்னென்கிறாள்.

வஞ்சனே - உட்புகுந்தாரைப்போலே பவ்யதையைக்காட்டி வஞ்சித்தவனே. என்னும்-என்னும். கைதொழும் - "அவ்வஞ்சநத்துக்குத்தொழவேண்டாவோ" என்று ப்ரணயரோஷத்தாலே கையெடுத்துத்தொழாநிற்கும். பூர்வஸம்ஶ்லேஷப்ரகாரத்தைநினைத்து தனநெஞ்சம்-தன்னெஞ்சானது. வேவ-தக்தமாம்படி. நெடிதுயிர்க்கும் - நெடுமூச்செறியும். விறல் - பெருமிடுக்கனான. கஞ்சனை - கம்ஸனை. வஞ்சனைசெய்தீர் - அவன்வஞ்சனையவனோடேபோம்படிபண்ணினவரே. உம்மை-மதுரையில்பெண்களுக்குதவினவும்மை. தஞ்சமென்று - தனக்குத்தஞ்சமென்று. இவள் - இவள். பட்டன-பட்டவெள்ளம். ஏ-என்.

இப்படிகரணத்ரயமும் ஶிதிலமாம்படி பண்ணவேணுமோவென்று கருத்து.*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

உம்மையநுபவித்து ஸுகிக்கவைத்தீரல்லீர், கம்ஸனைப்போலே முடித்துவிட்டீரல்லீர், உம்மை "ரக்ஷகர்" என்றிருந்த விவள் படும்பாடே யிதுவென்கிறாள்.

(வஞ்சனேயென்னும்) தாயார், "வஞ்சித்தான்" என்னப்பொறுத்திலள், "நானல்லேன்" என்றாலும் தவிரவொண்ணாதபடி வஞ்சித்துன்றிருவடிகளிலே சேர்த்துக்கொண்ட உபகாரகனேயென்னாநின்றாள்; * தானொட்டிவந்தென் தனிநெஞ்சைவஞ்சித்தூ ஞொட்டிநின்றென்னுயிரிற்கலந்தியலுமவனன்றே. இப்படி யென்னையுமறியாதே வஞ்சித்து உன்றிருவடிகளிலேசேர்த்த உபகாரகனேயென்னாநின்றாள். (கைதொழும்) வஞ்சித்த வுபகாரத்துக்குத் தோற்றுத்தொழும்.

தாயார்சொன்னகுணஹாநிக்கொரு பரிஹாரம்பண்ணினவாறே ஆற்றாமைபோகாதே; தனநெஞ்சம்வேவ நெடுமூச்செறியாநிற்கும்; "த தொமலிநஸம்வீதாம் ராக்ஷஸீபிஸ்ஸமாவ்ருதாம் । உபவாஸக்ருஶாம்தீநாம் நிஶ்வஸந்தீம்புந:புந:." (ததோமலிநஸம்வீதாம் ராக்ஷஸீபிஸ்ஸமாவ்ருதாம் । உபவாஸக்ருஶாம்தீநாம் நிஶ்வஸந்தீம்புந:புந:.) "உள்ளம்மலங்க" என்று - வெட்டிவிழுந்தபடிசொல்லிற்று; "உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து" என்கிறவிடத்திலே - உலர்ந்தபடிசொல்லிற்று; இங்கே, தனநெஞ்சம் வேவவென்கையாலே-நெருப்புக்கொளுந்தினாற்போலேசொல்லுகிறது.

(விறற்கஞ்சனை வஞ்சனைசெய்தீர்) மிடுக்கனானகம்ஸனை யழியச்செய்தீர். உம்மைத்தோற்பிக்க நினைத்தாரை நீர்தோற்பிக்குமவராயிருந்தீர். ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமற உமக்கிரண்டிடத்திலும்கார்யமொன்றேயோ (உம்மைத்தஞ்சமென்று) தஞ்சமல்லாதாரை "தஞ்சம்" என்றிருந்தால் சொல்லுமாபோலே சொல்லுவதே. "தஞ்சமாகிய தந்தைதாயொடு தானுமாய்" என்னும் ஸர்வரக்ஷகனை, காதுகரைச்சொல்லுமாபோலே சொல்லுகிறுளிறே மகள்தசையைப்பார்த்து. (இவள்பட்டனவே) ஒரு மஹாபாரதத்துக்குப்போரும்போலே. ஸம்ஸாரிகளைப்போலே யுண்டுடுத்துத்திரியவைத்தீரல்லீர், உம்மை நித்யஸூரிகளைப்போலே அநுபவிக்கக்கொடுத்தீரல்லீர், எங்களைப்போலே "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்னுமளவிலிருக்கப்பெற்றிலள், கம்ஸனைப்போலேமுடித்தீரல்லீர். என்வழிவாராதே உம்மைத்தஞ்சமாகப்பற்றின விவளை யெத்தனைபடுத்தவேணும் ..................................*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (வஞ்சனேயித்யாதி) "தனநெஞ்சம்வேவ" இத்யாரப்ய, மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (உம்மையித்யாதி)

அதெப்படியென்ன (நானல்லேனித்யாதி) வஞ்சநத்தை யுபகாரமாகச்சொல்லுகையாலே யென்றபடி. அப்படி வஞ்சித்துச்சேர்த்துக்கொண்டானேவென்ன (தானொட்டியித்யாதி) "நானல்லேன்" இத்யாதிவாக்யவிவரணம் (இப்படியென்னையுமித்யாதி)

புநஶ்சநெடுமூச்செறிவானேனென்னென்ன (தாயார்சொன்னவித்யாதி) உயிர்க்கை-மூச்சுவிடுகை. பலகாலும் நெடுமூச்செறிகிறதுக்கு ஸம்வாதம் (ததோமலிநேத்யாதி) ஸுந்தரகாண்டேபஞ்சதஶே. நெஞ்சின் நோவைப்பலகாலுஞ்சொன்னத்தை-காஷ்ட்டஸமாதியாகருபிக்கிறுர் (உள்ளம்மலங்கவென்றித்யாதி) இத்தால்-அச்சேத்யத்வாதி ப்ரதிகோடியைச்சொன்னபடி. (கொளுந்திறுற்போலேசொல்லுகிறது) கொளுந்திறுற்போலிருக்கிறமையைச்சொல்லுகிறது.

ஶப்தார்த்தம் (மிடுக்கனானவித்யாதி) ஹார்த்தபாவம் (உம்மைத்தோற்பிக்கவித்யாதி) "உம்மைத்தஞ்சம்" என்றபதத்தையுங்கூட்டிக்கொண்டுபாவம் (ஆஶ்ரிதாநாஶ்ரிதேத்யாதி) கார்யம்-வஞ்சனை. ஆஶ்ரிதரான யஶோதாதிகளுக்குத்தோற்கையும், அநாஶ்ரிதரான கம்ஸாதிகளை ஜயிக்கையுமன்றே வுமக்குஸ்வபாவம், இப்போதிரண்டிடத்திலும் தோற்பிக்கையேயாய் விட்டதேயென்றபடி.

வ்யாக்யாதாவினீடுபாடு (தஞ்சமல்லாதாரையித்யாதி) அப்படிசொல்லலாமோவென்ன (தஞ்சமாகியவித்யாதி) "தஞ்சமல்லாதாரை" இத்யாதிவாக்யம்- "உம்மை" என்றதின்தாத்பர்யம். பஹுவசநார்த்தம் (ஒருமஹாபாரதமித்யாதி) விவரணம் (ஸம்ஸாரிகளையித்யாதி) வஞ்சநத்தை யுபகாரமாகச் சொல்லுகையாலே - ஸம்ஸாரிகளில்வ்யாவ்ருத்தி; "தனநெஞ்சம்வேவ" என்கையாலே நித்யஸூரிகளிலும், திருத்தாயாரான தன்னிலும்வ்யாவ்ருத்தி, "கைதொழும்" என்ற

த்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (எங்களைப்போலேயித்யாதி) "கஞ்சனை" இத்யாதியைக்கடாக்ஷித்தருளிச் செய்கிறார் (கம்ஸனையித்யாதி) "உம்மைத்தஞ்சம்" என்றதுக்குத்தாத்பர்யாந்தரம் (என்வழிவாராதேயித்யாதி) அதாவது - இத்தனை நாளுமென்னை "தஞ்சம்" என்றிருந்தாள், இப்போதென் சொற்கேளாமல் என்னைவிட்டும்மைத் தஞ்சமாகப்பற்றின விவள்படும்பாடேயிது, இவளையித்தனைபாடுபடுத்தவேணுமோவென்றபடி. என்வழிவாராதே என்சொல்வழிவாராதே. அதாவது - "இலங்கைசெற்றீருக்கே" என்றும், "எனதவளவண்ணர் தகவுகளே" என்றும், "எனகள்விதான்பட்ட வஞ்சனையே" என்றும், நான்சொன்னவார்த்தைகளை யநாதரித்தென்றபடி. யத்வா, என்வழி - "தத்தஸ்யஸத்ருஸம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்கிறநிலையாதல். ஸுந்தரகாண்டே ஏகோநசத்வாரிம்ஸே, "ஸஸைந்யாம் லங்காம் க்ருத்வா ... தத்தஸ்யஸத்ருஸம்பவேத்" (ஸஸைந்யாம் ஸங்குலாங்க்ருத்வா லங்காம்பரபலார்தநः । மாங்நயேத்யதிகாகுத்ஸ்த்த ஸ்த்தத்தஸ்யஸத்ருஸம்பவேத்.)

க்ரமேணாந்வயः.......................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

பட்டபோதெழுபோதறியாள்விரை
மட்டலர்தண்டுழாயென்னுஞ்சுடர்
வட்டவாய்நுதிநேமியீர்நும
திட்டமென்கொலிவ்வேழைக்கே.

## ஆறாயிரப்படி.

(பட்டபோது) ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாகத் திருவாழியை யேந்திக்கொண் டிருக்கிறநீர், உம்மோடுஸம்ஸ்லேஷிக்கையிலுள்ள வபிநிவேசத்தாலே மற்றொன்று மநுஸந்திக்க க்ஷமையன்றிக்கே யிருக்கிற விவள்திறத்திற் செய்யநினைத் தருளிற்றென்னென்கிறாள்..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்வளவில், ரக்ஷோபகரண வத்தையையுடைய வும்முடைய நினைவேதாயிருக்கிற தென்கிறாள்.

உறங்காமையாலும், உணர்ந்துதெளிவுடையளா யிராமையாலும் பட்டபோது - அஸ்தமித்தபோதும். எழுபோது - உதித்தபோதும். அறியாள் - அறிகிறிலள். அறிகிறதுநெஞ்சத்திலேயாகையாலே. விரை - பரிமளமும். மட்டு - மதுவும். அலர் - பரம்பின. தண்டுழாய் - செவ்வித்திருத்துழாய். என்னும் - என்னாநிற்கும். சுடர் - ஜ்வாலைகளையுடைய. வட்டம் - வட்டமான. வாய் - வாயையும். நுதி - கூர்மையையுமுடைய. நேமியீர் - திருவாழியையுடையவரே. நுமது - ப்ரதிபந்தகத்

தைக்கழித்துக்கிட்ட பரிகரமுடையீரானவும்முடைய. இட்டம் - நினைவானது. இவ்வேழைக்கு ~ பற்றிற்றுவிடமாட்டாத விச்சபலைக்கு. என்கொல் - ஏதாயிருக்கிறது.

ஸத்தைக் குறுப்பாயிருக்கிறதோ, முடிவுக்குறுப்பா யிருக்கிறதோவென்று கருத்து.........................................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"இவள்பட்டன" என்கைக்கு என்பட்டாளென்ன ; படுவதெல்லாம் பட்டாளாகில் இவளினி என்படுவா ளென்கிறாள்.

(பட்டபோதெழுபோதறியாள்) உதித்தது மஸ்தமித்தது மறிகிறிலள்.

இவளறிவது மேதேனுமுண்டோவென்னில் (விரையித்யாதி) விரை - இதொருபரிமளமே, மட்டு - இதொருதேனே, அலர் - இதொருபூவே, தண் - இதொருகுளிர்த்தியே, என்றுதிருத்துழாய் விஷயமாக ஒருகோடியைச்சொல்லும். * உம்முடைய பேருந்தாருமொழிய வறியாளென்கிறாள்.

என்றவாறே, "நம்மையாசைப்பட்டு இப்படிபடப்பெற்றோமே" என்றலப்யலாபத்தாலே கையிற்றிருவாழியை விதிர்த்தான் (சுடர்வட்டவாய்நுதிநேமியீர்) சுடரையும், வட்டமானவாயையும், கூர்மையையுமுடைய திருவாழியைக் கையிலேயுடையீர். இப்போது "சுடர்பட்டவாய்நுதி" என்கிறவிஶேஷண மென்னென்னில் ; பெண்பிள்ளையைக்காட்டில் திருத்தாயார், கையுந்திருவாழியுமான வழகுக்கீடுபட்டு, விஶேஷணங்க ளிட்டநுபவிக்கிறாள். ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமற உமக்கழிக்கைக்குப் பரிகரமொன்றேயோ. "ஆழிப்படையந்தணனை மறவியையின்றிமனத்துவைப்பாரே" என்றிறே இவர் தம்முடையவார்த்தையும், கையுந்திருவாழியுமான வழகைக்கண்டால் நெஞ்சழியுமவர்களிறே. (நுமதிட்டமென்கொல்) ராவணஹிரண்யாதிகளைப்போலே முடிக்கநினைக்கிறீரோ, நித்யஸூரிகளைப்போலே கையுந்திருவாழியுமானவழகை யநுபவிப்பிக்கிறீரோ, தன்னையும்மறந் தும்மையும்மறந்து ஸம்ஸாரிகளைப்போலே யுண்டுடுத்துத் திரியவைக்கிறீரோ ; இவள் பேற்றில் நீர்நினைத்திருக்கிறதென். (இவ்வேழைக்கே) அத்யந்தசபலையான இவள்விஷயத்தில் நீர்நினைத்திருக்கிறதென்.... ..............................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (பட்டபோதித்யாதி) பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்த ...ாரிகை (இவள்பட்டனவித்யாதி) (இனியென்படுவாளிதி) இதுக்குமுன்பநுபவியாததா யினிமேலே யநுபாவ்யமான துஃகமுண்டோவென்றபடி.

"பட்டபோது" என்றது - "முத்துப்பட்டது" என்னுமாபோலே, உதித்தபோதென்றபடி. "எழுபோது" என்றது - "எழுகளம்" என்னுமாபோலே, அஸ்தமித்தபோதென்றபடி. எழுகளம் - முடிகிறயுத்தபூமி.

விவரணம் (உம்முடையவித்யாதி)

விதிர்த்தான்-சலிப்பித்தான். தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறூர் (இப்போதித்யாதி) இப்போது - தாயார் தன்வார்த்தையாய்ச் சொல்லுகிறபோது. "சுடர்வட்டவாய்நுதிநேமியீர் - பட்டபோது" இத்யாதி பூர்வார்த்தத்தோடேகூட்டி, மகளுடைய வ்யஸநத்துக்குத் திருவாழியாழ்வானேட்டைச்சேர்த்தியழகே ஹேதுவென்று தாத்பர்ய மருளிச்செய்கிறூர் (ஆஶ்ரிதாநாஶ்ரிதேத்யாதி) அதாவது - அநாஶ்ரிதரான ஹிரண்யாதிகளை யழிக்கைக்கும், ஆஶ்ரிதையான விவளைச்சேர்த்தி யழகைக்காட்டியழிக்கைக்கும்பரிகரமொன்றேயோ வென்றபடி. இவரப்படிகையுந் திருவாழியுமானவழகிலே யீடுபட்டிருப்பரோவென்ன (ஆழிப்படையித்யாதி) அந்தணனை - பரிசுத்தனை. "சக்கரத்தண்ணலேயென்றுதாழ்ந்து," "ஆழியொடும்பொன்னூர் சார்ங்கமுடையவடிகளை யின்னுரென்றறியேன்" இத்யாதியைத்திருவுள்ளம்பற்றி, திருமங்கையாழ்வார் முதலானூரையுங்கூட்டி யருளிச்செய்கிறூர் (கையுமித்யாதி)

"சுடர்வட்டவாய்நுதிநேமியீர்" என்றத்தையுங்கூட்டிபாவம் (ராவணேத்யாதிவாக்யத்வயேந) "நுதி" என்ற - தைக்ஷ்ண்யத்தைப்பற்ற (ராவணஹிரண்யாதிகளைப்போலேயென்றது) "சுடர்" என்றத்தாற்சொன்ன - ஸௌந்தர்யத்தைப்பற்ற (நித்யஸூரிகளைப்போலேயித்யாதி) இந்தவர்த்தத்வயத்தையே யுத்தரத்ரவிவரிக்கிறூர் (கூர்மைக்கிலக்காக வித்யாதிவாக்யத்வயேந) "பட்டபோதெழுபோதறியாள்" என்றத்தைப்பற்ற, தன்னையுமறந்தித்யாதி, அதாவது "பட்டபோதெழுபோதறியாள்" என்கிறவிடத்திலே - "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ । ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம்" (நந்தந்த்யுதிதஆதித்யேநந்தந்த்யஸ்தமிதேரவௌ।ஆத்மநோநாவபுத்யந்தேமநுஷ்யாஜீவிதக்ஷயம்) இத்யாதிப்படியே யெல்லாரும் ஸுகமாகவிருக்க இவளுதித்தது மஸ்தமித்தது மறியாதேயிருக்கிறுளென்றிறே தாத்பர்யம்; அந்தபாவத்தைத் திருவுள்ளம்பற்றி, இப்படியிருக்கிறவிவளை யவர்களைப்போலே யுண்டுடுத்துத் திரியவைக்கிறீரோவென்றபடி. "இவ்வேழைக்கு - நுமதிட்டமென்கொல்" என்கிற பதஸங்கதியைத் திருவுள்ளம்பற்றி, "விரைமட்டலர்" இத்யாதியையுங் கடாக்ஷித்து, சாபலஸ்யவிஷயந்தர்ஶயந் பாவமாஹ (பற்றிற்றுவிடாதவித்யாதி) ஏழை-சபலை. "சுடர்" இத்யாதியையும், "விரை" இத்யாதியையுமுட்கொண்டு சாபலத்தை விவரிக்கிறூர் (கையுமித்யாதி.) ..........................................*

# பத்தாம்பாட்டு.

ஏழைபேதையிராப்பகற்றன
கேழிலொண்கண்ணநீர்கொண்டாள்கிளர்
வாழ்வைவேவவிலங்கைசெற்றீரிவள்
மாழைநோக்கொன்றும்வாட்டேன்மினே.

## ஆறாயிரப்படி.

( ஏன்ழபேதை ) உம்மையாசைப்படும் ஸ்வபாவையாய், உம்முடைய துர்லபத்வத்தை யறியமாட்டாத பால்யதசாபந்நையா யிருந்தவிவள், உம்மையாசைப்பட்டுப் பெறுதவ்யஸநத்தாலே அத்யந்தமவஸந்நையானாள் ; இவள்முடிவதற்குமுன்னே ப்ரதிபந்தகங்களையும் நீரேபோக்கிக்கொண்டு ஈண்டெனவந்து ரக்ஷித்தருளவேணுமென் றெம்பெருமானை யபேக்ஷிக்கிறாள்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விரோதிமிக்கால் வெந்துவிழப்பண்ணும் வீரப்பாட்டையுடைய நீர் ; இவள்நோக்கொன்று மொழியச்சென்றற்றது, இத்தைமுடியாதொழிய வேணுமென்கிறாள்.

ஏழை - கிட்டாதொழியிலும் விடாதசபலையுமாய். பேதை - என்சொற்கேளாதபேதையுமானவிவள். இராப்பகல் - இரவோடுபகலோடுவாசியற. தன - தன். கேழ் - ஒப்பு. இல் - இல்லாத. ஒண் - அழகிய. கண் - கண்கள். நீர் - நீர். கொண்டாள் - கொள்ளும்படியானாள். கிளர் - மிக்கவுயர்த்தியையுடைத்தாய், பரபீடாபலமான. வாழ்வு - ராவணைஸ்வர்யம். வேவ - அக்நிஸாத்தாம்படி. இலங்கை - லங்கையை. செற்றீர் - அழியச்செற்றவனே. அவளுக்குதவினாற்போலே இவள் - இவளுடைய. மாழை - முக்தமான - மானின்நோக்குப்போலேயிருக்கிற. நோக்கொன்றும் - நோக்கையொன்றையுமாகிலும். வாட்டேன்மின் - க்ஷயிப்பியாதொழியவேணும்.

இவள்நோக்குக்கிடீர் எல்லார்க்குமுஜ்ஜீவந ஹேதுவென்றுகருத்து.......*

---

## ஈடு - பத்தாம்பாட்டு.

இவள், நோக்கொன்றுமொழிய அல்லாததெல்லாமொழிந்தாள்; இந்நோக்கொன்றையும் நோக்கிக்கொள்ளீரென்கிறாள்.

( ஏழை ) "கிடையாது" என்றுப்ரமாண ப்ரஸித்தமானத்திலே, கிடைக்குமதில்பண்ணும் சாபலத்தைப்பண்ணுகை. ( பேதை ) "கிடையாது" என்றறிந்துமீளும் பருவமல்ல, நான்ஹிதஞ்சொன்னாலுங் கேளாதபருவம். ( இராப்பகல்தனகேழிலொண் கண்ணநீர்கொண்டாள் ) ஆநந்தாஸ்ருவுக்குத் தகுதியாய் ; ( கேழில் ) கேழ்என்று - ஒப்பாய், இல்என்று - இல்லாமையாய், ஒப்பின்றிக்கே யிருப்பதாய் ; ஒண்கண் - கண்ணநீரில்லாவிடிலும், கண்டார்க்கு ஆலத்திவழிக்கவேண்டும்படியானகண், ஸர்வகாலமுமஸ்ருபூர்ணமாயிற்று. தாமரையிலே முத்துப்பட்டாற்போலே யிக்கண்ணும் கண்ணநீருமாயிருக்கிறவிருப்பை, காட்டிலெறித்தநிலாவாக்குவதே. இவ்விருப்புக்கு க்ருஷிபண்ணி, பலவேளையிலேயிழப்பதே; பொன்னும் முத்தும் விளையும்படியிறே க்ருஷிபண்ணிற்று. இப்போதிவளிழவுக்கன்றியே, அவனிழவுக்காயிற்றிவள்கரைகிறது.

(ளிரித்யாதி) நடுவேகண்ணீர்விழவிடுமித்தனையோவிரோதிகள த்திருக்கவென்ன; ராவணனிலும் வலிதோ இவளுடையவிரோதிவர்க்கம். "உதீர்ணஸ்யராவணஸ்ய" (உதீர்ணஸ்யராவணஸ்ய) என்கிறபடியே-தாயும் தமப்பனும் சேரவிருக்கப்பெறாத வைஶ்வர்யமிறே. ளிர்ந்தவைஶ்வர்யமானது வேம்படிலங்கையை நிரஸித்திர். ஒன்றையழிக்கநினைத்தால், முதல்கிடவாமேயழிக்குமவராயிராநின்றீர்.

(இவள்மாழைநோக்கொன்றும்வாட்டேன்மினே) இவளுடைய முக்தமானநோக்கொன்றும் கிடக்கும்படி காரியம்பார்க்கவேணும். மாழையென்று - இளமை. (நோக்கொன்றும்வாட்டேன்மினே) இவள்தானே முடிந்துபோகிறாள், நாங்கள் தானேயிழக்கிறோம், ஜீவிக்கவிருக்கிற நீர் வேணுமாகில், உம்முடையஜீவநத்தைநோக்கிக்கொள்ளப்பாரும்.*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (ஏழையித்யாதி) "மாழைநோக்கொன்றும் வாட்டேன்மின்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இவளித்யாதி)

கிடையாதென்று ப்ரமாணப்ரஸித்தமானத்திலேயென்றது - "ஸௌமநோரதம்ஸ்வர்க்யம்ஸ்வர்க்கிவந்த்யஞ்சயத்பதம் । ப்ராப்நோத்யாராதிதேவிஷ்ணௌ முக்திமப்யதிதுர்லபாம்" (ஸௌமமநோரதம்ஸ்வர்க்யம்ஸ்வர்க்கிவந்த்யஞ்சயத்பதம்।ப்ராப்நோத்யாராதிதேவிஷ்ணௌமுக்திமப்யதிதுர்லபாம்) "நசக்ஷுஷாபஶ்யதிகஶ்சநைநம்" (நசக்ஷுஷாபஶ்யதிகஶ்சநைநம்) "நக்ராஹ்யஃகேநசித்க்வசித்" (நக்ராஹ்யஃகேநசித்க்வசித்) "கட்கிலி" இத்யாதியைப்பற்ற. (நான்ஹிதஞ்சொன்னாலுமிதி) "தகவுகளே" "வஞ்சனையே" இத்யாதிஸ்த்தலங்களிலேசொன்னேனென்றபடி.

(ஆலத்திவழிக்கை)ஆலத்தியாலே த்ருஷ்டிதோஷத்தை வழிக்கை. போக்குகையென்றபடி. "தனகேழிலொண்கண்ணிலே - இராப்பகல்நீர்கொண்டாள்" என்றந்வயித்தர்த்தம் (ஸர்வகாலமுமித்யாதி) கண்ணேவர்ணிக்கிறவளுடையஹார்த்தபாவம். (தாமரையிலேயித்யாதி) [1]அதாவது-ஸம்ஶ்லேஷோத்மஸ்தகரஸம்ஸாத்மிக்கைக்காகவும், மேன்மேலனத்ருஷ்ணைபிறப்பிக்கைக்காகவுமன்றோ நீர்விஶ்லேஷித்தது; அவையப்படியே பலித்தபின்பும், கண்ணநீரையும் மாற்றிக்கலக்கப்பெறாதேயிழப்பதேயென்றபடி. தாமரையிலே - தாமரைப்பூவிலே. அதிலநிச்சுவாயிழக்கிறீரல்லீர், "இதுவேணும்" என்று ஸ்ருஷ்ட்யவதாராதிகளாலே பாடுபட்டிழந்துவிட்டீரோயென்கிறாள் (இவ்விருப்புக்கித்யாதி) "ஒண்முத்தும் பைம்பொன்னுமேந்தி" என்றத்தையுட்கொண்டு ரஸோக்தி (பொன்னும்முத்துமித்யாதி) பொன்-வைவர்ண்யம். முத்து-அஶ்ருபிந்துக்கள். (இப்போதிவளிழவுக்கன்றியேயிதி) இல்லையாகில், "தனகேழிலொண்" என்கிற விசேஷணத்துக்குப்ரயோஜநமில்லையிறே.

கீழுக்குசேஷமாக்கியவதாரிகை (நடுவேயித்யாதி) "ராவணனிலும்வலிதோ" என்கைக்கு அவனப்படியதிகனோவென்ன; ளிர்த்தியின் சரமாவதிமாஹ (உதீர்ண்ஸ்யேத்யாதி) அயோத்யாகாண்டேப்ரதமே, "ஸஹிதேவைருதீர்ண

ஸஹ்ருராவணஸ்யவயாமி–ஹிஃ। ஃயி–குதொரோ–ந–ஷெவொகெஜஜெ விஷ்ணு ஸநா த ந8" ( ஸஹிதேவைருதிர்ணஸ்யராவணஸ்யவதார்த்திபிஃ । அர்த்தித்தோமா நுஷேலோகேஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாதந8 ) " வாழ்வை " இத்யத்ர - ஐகாரம்-அவ்யயம். " கிளர்வாழ்வைவேவவிலங்கைசெற்றீர்-இவள் மாழைநோக்கொன்றும்வாட்டேன்மினே " என்றுமேலுக்கு சேஷமாக்கி பாவாந்தரம் ( ஒன்றையழிக்கவித்யாதி ) அதாவது-லங்கையை நிஸ்ஸேஷமாக அழித்தாற்போலே யிவளையுமழியாதே கொள்ளுமென்றபடி.

" வாட்டேன்மின் " என்று-பலமவனதாகச்சொன்னதுக்குபாவம் ( இவள் தானேயித்யாதி ) உம்முடைய ஜீவநத்தையென்றது - "மணநோக்கமுண்டானே" என்றத்தைப்பற்ற.

க்ரமேணாந்வய8 ......................................................................*

# பதினொன்றாம்பாட்டு.

வாட்டமில்புகழ்வாமநனையிசை
கூட்டிவண்சடகோபன்சொல்லமை
பாட்டோராயிரத்திப்பத்தாலடி
சூட்டலாகுமந்தாமமே.

## ஆறாயிரப்படி.

(வாட்டமில்) ஆழ்வாரிப்படி யவஸந்நரானவிடத்தில், அவருடைய வவஸாதமெல்லாம்போம்படிவந்துதோன்றி யருளுகையாலே வாட்டமில்லாத ப்ரணயித்வ வாத்ஸல்ய காருண்ய ஸௌசீல்யாதி கல்யாணகுணங்களை யுடையனாயிருந்த எம்பெருமானைச்சொன்னவித்திருவாய்மொழி, அவன்றிருவடிகளிலே யழகியதொரு திருமாலையாகச் சூட்டலாமென்கிறார். .............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவதாராதநரூபகைங்கர்யத்தை யருளிச்செய்கிறார்.

நோக்குவாடாதபடி தன்குறைவுதோன்ற அர்த்தியாய்வந்து முகங்காட்டினபடியாலே வாட்டம் - வாட்டம். [இல்-இல்லாத. புகழ்-குணப்ரதையையுடைய. வாமநனை-வாமநனைக்குறித்து. வண்-உதாரரான. சடகோபன் - ஆழ்வார். இசை-இசையோடே. கூட்டி-கூட்டி. சொல் - சொன்ன. அமை - லக்ஷணபூர்த்தியாலே யமைதியையுடைய. ஓர்-அத்விதீயமான. பாட்டு-பாட்டுக்கள். ஆயிரத்து - ஆயிரத்திலும். இப்பத்தால்-இப்பத்தால். அடி-அந்தவாமநனடியிலே. அம் - அழகிய. தாமம்-மாலையை. சூட்டலாகும்-சூட்டலாம்.

இது வஞ்சிவிருத்தம் .....................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார், இவர் ப்ரார்த்தித்தபடியே நித்யஸூரிகள் திரளிலேபோய்ப்புக்கு ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே * சூட்டுநன்மாலைப்படியே திருமாலைசாத்தி யடிமைசெய்யப்பெறுவர்களென்கிறார்.

(வாட்டமில்புகழ்வாமநனை) இவ்வளவிலேவந்து முகங்காட்டிற்றிலனாகில், அவன்புகழுக்கு வாட்டம்வந்ததிறே. (வாமநனை) தன்னுடைமைபெறுகைக்கிரப்பாளனுமவனிறே. (இசைகூட்டி) பரிமளத்தோடே பூவலருமாபோலே, இசையோடேபுணர்ப்புண்டதாயிற்று. (வண்சடகோபன்சொல்) "உதாரதீர்முநி:" (உதாரதீர்முநி:) என்னுமாபோலே, மாநஸாநுபவமன்றிக்கே வாசிகமாக்கி நாட்டைவாழ்வித்த ஔதார்யம். (அமைபாட்டோராயிரத்து) அமைவு-சமைவாய், சப்தார்த்தங்கள் நிறைந்திருக்கை. (இப்பத்தாலித்யாதி) இப்பத்தையுமப்யஸிக்கவல்லவர்களுக்குச் செவ்விமாலையைக்கொண்டு அவன்திருவடிகளிலே நித்யகைங்கர்யம்பண்ணப்பெறலாம். "கைங்கர்யம்பண்ணவேணும்" என்றாசைப்பட்டு, அதுபெறாமையாலே போலே காணுமிவ்வாற்றாமையெல்லாம் பிறந்தது; பித்ருதநம் புத்ரனுக்கு ப்ராப்தமாமாபோலே, இவ்வாற்றாமையால்வந்த க்லேஶம் இதுகற்றவர்களுக் கநுபவிக்கவேண்டாதே, "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்றுகொலோ" என்று ஆசைப்பட்டபடியே அத்திரளிலேபோய்ப்புக்கு அநுபவிக்கப்பெறுவரென்கிறார்.

முதற்பாட்டில்-ஆஶ்ரிதராபத்தேசெப்பேடாக வுதவும் ஸ்வபாவனானவன், இவளுடைய ஆபத்துக்குவந்துதவுகிறிலனென்றாள்; இரண்டாம்பாட்டில் - "விரோதியுண்டே" என்றுநினைவாக, பாணனுடையபாஹுவநத்திலும் வலிதோ இவள் விரோதியென்றாள்; மூன்றாம்பாட்டில்-இப்படிசெய்யநினைத்த நீர் முன்பச்செயலை என்றியசெய்தீரென்றாள்; நாலாம்பாட்டில்-அதுபொறுக்கமாட்டாமல் அதுதன்னையே யுபகாரமாகச் சொல்லாநின்றாளென்றாள்; ஐந்தாம்பாட்டில் - அவ்வளவிலும்வாராமையாலே, நிர்த்தயனென்றாள் திருத்தாயார்; ஆறாம்பாட்டில்-அதுபொறுக்கமாட்டாமல், கெடுவாய் ஆகரத்தில் தகவுமறுக்குமோ, அதுநங்குறைகாணென்கிறாளென்றாள்; ஏழாம்பாட்டில் - அவன்குணஹாநிதன்னையே குணமாகக்கொள்ளும்படி யிவளைவஞ்சித்தானென்றாள்; எட்டாம்பாட்டில்-உம்மை யபாஶ்ரயமாகப்பற்றினவிவள் படும்பாடேயிதுவென்றாள்; ஒன்பதாம்பாட்டில்-இவள்பேற்றில் நீர்செய்தருள நினைத்திருக்கிறதென்னென்றாள்; பத்தாம்பாட்டில் - சேஷித்தது நோக்கொன்றுமேயாயிற்று, இதொன்றையும் நோக்கிக்கொள்ளீரென்றாள்; நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்.........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (வாட்டமித்யாதி) " அடிசூட்டலாகுமந்தாமமே " என்றந்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியையித்யாதி) திருவிருத்தம் (சூட்டுநன்மாலைகள்) சூட்டுகைக்குத்தகுதியான நல்லமாலைகள்.

நித்யநிர்த்தோஷகுணங்களுக்கு வாட்டத்துக்கு ப்ரஸக்தியுண்டோவென்ன (இவ்வளவிலேயித்யாதி) " வாமநன் " என்கிறபதத்துக்கு - " இவளாற்றாமை தனக்குண்டு " என்னுமிடந்தோன்ற வர்த்தியாநின்றானென்றர்த்தமாக விவக்ஷித்து, இப்பத மிவ்வர்த்தத்தைக்காட்டுமோ வித்யாஶங்காயாமாஹ ( தன்னுடைமையித்யாதி )

இசை-காநம். புணர்ப்புண்டதாயிற்று - ஸந்தர்ப்பிதமாயிற்று. இவர்க்குவண்மையேதென்ன ( உதாரதீரித்யாதி ) பாலகாண்டே த்விதீயே, " 𑌉𑌦𑌾𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌪𑌦𑍈𑌰𑍍𑌮𑌨𑍋𑌰𑌮𑍈𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍍𑌯𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌚𑌕𑌾𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 । 𑌸𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑍈𑌶𑍍𑌶𑍍𑌲𑍋𑌕𑌶𑌤𑍈𑌰𑍍𑌯𑌶𑌸𑍍𑌵𑌿𑌨𑍋𑌯𑌶𑌸𑍍𑌕𑌰𑌂𑌕𑌾𑌵𑍍𑌯𑌮𑍁𑌦𑌾𑌰𑌧𑍀𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌃. " (உதாரவ்ருத்தார்த்தபதைர்மநோரமைஸ்ததாஸ்யராமஸ்யசகாரகீர்த்திமாந் । ஸமாக்ஷரைஶ்ஶ்லோகஶதைர்யஶஸ்விநோ யஶஸ்கரம்காவ்யமுதாரதீர்முநி:.)

" அமைபாட்டு " என்றவிடத்திலே - " 𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌂𑌸𑌮𑌗𑍍𑌰𑌯𑌤𑌾 " (ஸூக்திம்ஸமக்ரயது) இத்யாத்யநுஸந்தேயம்.

" அந்தாமம் " என்றதுக்கர்த்தம் (செவ்விமாலையென்றது) இங்கே யிதுகற்றவர்களுக்குக்கைங்கர்யத்தைப்பலமாகச்சொல்லுகையாலே-கீழே, " அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ " என்றவிடத்திலும்-கைங்கர்யபர்யந்தம் விவக்ஷிதமென்கிறார் ( கைங்கர்யம்பண்ணவித்யாதி ) இவர்களுக்குமிவரைப்போலே யாற்றாமைபிறக்கவேண்டாவோவென்ன (பித்ருதநமித்யாதி) இவருடைய பாசுரங்கற்றவழியாலே யிவரைக்குறித்து ஶிஷ்யபுத்ரத்வமுண்டிறே கற்றவர்களுக்குமென்றபடி. (அநுபவிக்கப்பெறுவரென்கிறாரிதி) இதுகற்றவர்களுக்கிவருடைய ப்ரார்த்தனையே ப்ரார்த்தனை, தனித்து ப்ரார்த்தனைவேண்டாவென்றபடி.

என்றிய-எதுக்காக. மறுக்குமோ—வற்றுமோ. அபாஶ்ரயம்-ஆஶ்ரயம்.

" ஈயாடுவதோகருடற்கெதிரேயிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ, நாயோடுவதோவுறுமிப்புலிமுன் நரிகேசரிமுன் னடையாடுவதோ, பேயாடுவதோ வழகூர்வசிமுன் பெருமானடிசேர்வகுளாபரணன், ஓராயிரமாமறையின்றமிழி லொருசொற்பொருமோவுலகிற்கவியே." என்கிறசங்கத்தார்கவியும், "அமைபாட்டோர்" என்றவிடத்திலே யநுஸந்தேயம். வாமநனை - வாமநனைக்குறித்து. இசைகூட்டி- இசையோடுகூட்டி. சொல்-சொன்ன.

க்ரமேணாந்வய:.................................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(ஆடியாடி.)

ப்ரஹ்லாதார்த்தே ந்ருஸிம்ஹம் க்ஷபிதவிபதுஷாவல்லபம் க்ஷிப்தலங்கம்
க்ஷ்வேளப்ரத்யர்த்திகேதும் ச்ரமஹரதுலஸீமாலிநம் தைர்யஹேதும் ।
த்ராணே தத்தாவதாரம் ஸ்வரிபுஹதிக்ருதாச்வாஸநம் தீப்தஹேதிம் ஸத்ப்ரே
க்ஷாரக்ஷிதாரம் வ்யஸநநிரஸநம் வ்யக்தகீர்த்திம் ஜகாத ॥ (கரு)

(ப்ரஹ்லாதார்த்தேந்ருஸிம்ஹம்) நாடிநாடிநரசிங்காவென்று - பக்தரான ப்ரஹ்லாதர்நிமித்தமாக ந்ருஸிம்ஹனுயாவிர்ப்பவித்தும்; (க்ஷபிதவிபதுஷாவல்லபம்) விறல்வாணனுயிரந்தோள் துணித்தீர்-அநிருத்தருக்கு விரோதியான பாணஸுரனுடைய கரங்களைக்கழித்தும்; (க்ஷிப்தலங்கம்) அரக்கனிலங்கை செற்றீருக்கே- எதிரியான ராவணனுடைய விலங்கையையழித்தும்; (க்ஷ்வேளப்ரத்யர்த்திகேதும்) வலங்கொள் புள்ளுயர்த்தாயென்னும் - [விஷவிரோதியான வைநதேயனை த்வஜமாகப்படைத்தும்; (ஶ்ரமஹரதுலஸீமாலிநம்) வண்டுதிவளுந்தண்ணந்துழாய் - மதுஸ்யந்தியாகையாலே ஶ்ரமஹரமாயிருக்கிற திருத்துழாய் மாலையைத்தரித்தும்; (தைர்யஹேதும்) எனதகவுயிர்க்கமுதே - விரஹவ்யஸநத்தாலே ஆத்மவஸ்துஅழியாதே யம்ருதமாயிருந்து தரிப்பித்தும்; (த்ராணேதத்தாவதாரம்) வெள்ளநீர்க்கிடந்தாயென்னும் - ரக்ஷணத்திலே அவஹிதனுய்த் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தும்; ஸ்வரிபுஹதிக்ருதாஶ்வாஸநம்) விறற்கஞ்சனை வஞ்சனைசெய்தீர் - மிடுக்கனனகஞ்சனை யழியச்செய்து, தந்நிமித்தமான பயத்தைத்தீர்த்தாஶ்வாஸநம்பண்ணியும்; (தீப்தஹேதிம்) சுடர்வட்டவாய் நுதிநேமியீர்-தேஜிஷ்ட்டமான திருவாழியைத்திருக்கையிலேதரித்தும்; (ஸத்ப்ரேக்ஷாரக்ஷிதாரம்) மாழைநோக்கொன்றும் வாட்டேன்மினே - ஆஶ்ரிதருடைய ப்ரேக்ஷையைப் போக்காதேரக்ஷித்தும்; இப்படி ப்ரஸித்தவைபவனன வெம்பெருமானை, ஆஶ்ரிதருடைய வ்யஸநத்தையெல்லாம் நிரஸித்தருளுமவனுக "ஆடியாடி" என்கிறதசகத்திலே யாழ்வாரநுஸந்தித்தாரென்கிருர்.................................*

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

ஆடிமகிழ்வானிலடியார்குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக்குறையதனல் - வாடிமிக
அன்புற்ருர்தன்னிலைமையாய்ந்துரைக்கமோகித்துத்
துன்புற்ருன்மாறனந்தோ. (கச)

(ஆடிமகிழ்வானில்) இதில் - ததியரையுமவனையும் பிரிகையாலே மிகவும் தளர்ந்து, தாய்பேச்சாலே பேசுகிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; எம்பெருமானைப் பிரிந்தவளவன்றிக்கே, அவனுக்கு ப்ராணபூதரான நித்யஸூரிகளையுங் கூடப்பிரிகையாலே, தம்தசையைத் தாமறியாதபடி மோஹிதராய்க் கிடக்கிறதம்படியை பார்ஶ்வஸ்த்தரானபரிவர் அவனுக்கு விண்ண

ப்பஞ்செய்கிறப்ரகாரத்தை, கலந்து பிரிந்து மோஹங்கதையான பிராட்டியுடைய விரஹபரவச வ்யாபாரோக்திகளை யநுகரித்து அவனுக்கறிவிக்கிற திருத்தாயார் பேச்சாலே யருளிச்செய்கிற * ஆடியாடி யிலர்த்தத்தை "ஆடிமகிழ்" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

(ஆடிமகிழ்வானிலடியார் குழாங்களுடன்கூடி யின்பமெய்தாக் குறையதனால்வாடிமிக) (ஆடிமகிழ்வானில்) பகவதநுபவத்திலே யவகாஹித்து ஹ்ருஷ்டராகிறவென்னுதல்; அன்றிக்கே, பகவதநுபவ ப்ரகர்ஷத்தாலே "ந்ருத்யந்திகேசித்" (ந்ருத்யந்திகேசித்) என்னும்படியாடி அத்தாலே ஹ்ருஷ்டராகிறவென்னுதல். இப்படியானவானிலடியாருண்டு-வைகுண்டவாஸிகளான நித்யஸூரிகள். அவர்கள் ஸங்கத்திலேஸங்கதராயாநந்தத்தையடையாதஅபூர்த்தியாலே "வாடிவாடி" என்றுமிகவாடி. (அன்புற்றார்தன்னிலைமையாய்ந்துரைக்க) "மூய்கின்றேனுன்றன்மொய்கழற்கன்பை" என்றதிரவதிக ஸ்நேஹயுக்தரான மதுரகவிப்ரப்ருதி ப்ரபுத்தஸுஹ்ருத்துக்கள், இவர்வ்யாமோஹத்தை யெம்பெருமானுக்கு நிரூபித்து, தந்முகேந "இதுதேவர்க்ருபாஸாத்யம்" என்றுவிஜ்ஞாபிக்கிறபடியை, தன்றிறத்திலே பரிவுடையதிருத்தாயார் தன்ஸ்வபாவத்தை யாராய்ந்து பேசும்படியாக. (மோகித்துத்துன்புற்றான்மாறனந்தோ) தாம்தம்தசையைப் பேசமாட்டாமல் பிறர்பேசும்படிமோஹித்து துக்கத்தை ப்ராப்தரானாராழ்வார், ஐயோ. "மமாபிவ்யதிதம்மந:" (மமாபிவ்யதிதம்மந:) என்று, * அற்றபற்றர்க்கு மிரங்கவேண்டும்படியாயிறேயிவர்தசையிருப்பது. அன்புற்றார்தன்னிலைமை யாய்ந்துரைக்கையாவது—"ஸாதிர்யகூர்த்வஞ்ச" (ஸாதிர்யகூர்த்வஞ்ச) இத்யாதிப்படியே, "எங்கும் நாடிநாடி நரசிங்காவென்று வாடிவாடும்" என்றும், "உம்மைக்காணுமாசையுணின்றாள், உம்மைக்காண நீரிரக்கமிலீரோ" என்றும், "வண்டுதிவளுந்தண்ணந்துழாய்கொடீரென தவளவண்ணர் தகவுகளே" என்றும், "உம்மைத்தஞ்சமென்றிவள் பட்டனவே" என்றும், "நுமதிட்டமென்கொலிவ்வேழைக்கே" என்றும், "இவள்மாழைநோக்கொன்றும்வாட்டேன்மினே" என்றுமிப்புடைகளிலே யருளிச்செய்தவையென்கை. இப்படிதம்தசைதமக்கு வாசாமகோசரமாய், கண்டாரெல்லாமிரங்கவேண்டும்படி யாயிருக்குமாயிற்று............................*

இரண்டாம்பத்தில்-நான்காந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக-திருவாய்மொழி-கச—பாட்டு-கருச.

---



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

அந்தாமத்தன்பு-ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(அந்தாமத்தன்பு) இப்படிதோற்றியருளின வெம்பெருமான் தம் மோடுகலந்த கலவியையும், அக்கலவியால் தமக்குப்பிறந்த ஸம்ருத்தி யையுஞ் சொல்லுகிறார் ...........................................*

### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், இப்படி யிவருடைய ஆர்த்தியைக்கண்டு த்வ ரிதனாய் ஸம்ஶ்லேஷித்த ஸர்வேஶ்வரனுக்கு ப்ரீதியாலேவந்த ஸௌந்தர்யாதிசய த்தை யருளிச்செய்கிறதாக; ப்ரதமத்திலே ஸக்ரஹேண பூஷணவயவாயுதசோ பாவிஶிஷ்டமான வடிவழகையும், அத்தோடேகூடின விபூத்யுந்மேஷத்தையும்' ஸம்ஶ்லேஷகாரிதமான ரக்ஷகத்வோந்மேஷத்தையும், ஸ்த்திரௌஜ்ஜ்வல்யத்தை யும், உபமாநராஹித்யத்தையும், அபர்யந்தபூஷணாதி யோகத்தையும், தர்ஶநீயசே ஷ்டிதத்வத்தையும், ஸம்ஶ்லேஷவைலக்ஷண்யத்தினுடைய வாசாமகோசரதையை யும், சொல்லுகைக்கதிகாரிகளில்லையென்னுமிடத்தையும், சொல்லுகை யரிதென் னுமிடத்தையு மருளிச்செய்து, தம்முடைய ஸம்ஶ்லேஷப்ரீதிகாரித ஸௌந்தர்ய பாரம்யத்தை யருளிச்செய்கிறார் ...........................................*

---

### ஈடு.

“ ஶஜஸூகஷ தேதீரொநூாஹஸூகஷதெஜஶெ ” ( கஜஆகர்ஷதே தீரேக்ராஹஆகர்ஷதேஜலே ) என்னுமாபோலேயிறே கீழ் * ஆடியாடி யில் ஆழ்வார்க்குப்பிறந்த வ்யஸநம்; அதெல்லாமாறும்படியாக, “ ஊதந்த்ரி தஸமூபதிப்ரஹிதஹஸ்தம் ” (அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம்) என்கிறபடியே பெரியத்வராயோடே ஆயுதாபரணங்களை அக்ரமமாகத் தரித்துக்கொண்டு மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலையவந்துள் ளேபோய்ப்புக்கு, ஆனையையொருகையாலும் முதலையையொருகையா

னுமாக வணைத்தெடுத்துக்கொண்டு கரையிலேயேறி, " ग्राहंचक्रेण माधवः " (க்ராஹம்சக்ரேணமாதவ:) என்கிறபடியே - ப்ரஜையின்வாயிலே முலையைக்கொடுத்து க்ரந்தியைசிகித்ஸிப்பிக்குமாபோலே, பெரியபிராட்டியாரும் தானுமாக இரண்டுக்கும் நலிவுவாராமே திருவாழியாலேவிடுவித்து, சாத்தியருளின திருப்பரிவட்டத்தலையைச்சுருட்டித் திருப்பவளத்திலேவைத்து அதினுடைய புண்வாயை வேதுகொண்டு திருக்கையாலே குளிரஸ்பர்ஶித்துநின்றாற்போலே, இவரும் " வலங்கொள்புள்ளுயர்த்தாய் " என்றுகூப்பிட்ட ஆர்த்தநாதம்செவிப்பட்டு, "அழகிதாக நாம் ஜகந்நிர்வஹணம்பண்ணினோம், நாமாரானோம்" என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜாபயங்களினாலே விஹ்வலனாய், தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்கள், ஒப்பனை, திவ்யாயுதங்கள் சேர்ந்தசேர்த்தி, இவையெல்லாவற்றோடும்வந்து ஸம்ஶ்லேஷித்து அத்தாலே ஹ்ருஷ்டனாய் க்ருதக்ருத்யனாயிருக்கிற இருப்பை யநுபவித்து, அவ்வநுபவஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே தாம்பெற்றபேற்றைப்பேசி யநுபவிக்கிறார் ......................*

---

## ஜீயர் அரும்பதம்.

அந்தாமத்தன்புப்ரவேஶே. வ்ருத்தாநுவாத பூர்வகம்வர்த்திஷ்யமாணஸங்கதிமாஹ (கஜஇத்யாதி) அதாவது-விஶ்லேஷவ்யஸநம்முடிக்கத்தேட, நசையான து முடியவொட்டாமல்ஜீவிப்பிக்க, இப்படியேயிறேசென்றதென்றபடி. விஷ்ணுதர்மே அஷ்டஷஷ்டிதமேத்யாயே, "गजाकर्षते तीरे ग्राहाकर्षते जले। तयोर्द्वन्द्वसमं युद्धं दिव्यं वर्षसहस्रकम्॥ (கஜஆகர்ஷதேதீரேக்ராஹஆகர்ஷதேஜலே। தயோர்த்வந்த்வஸமம்யுத்தம் திவ்யம்வர்ஷஸஹஸ்ரகம்.)

ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வ்யஸநமாறும்படி தோன்றினப்ரகாரத்தைவிஸ்தரேண வருளிச்செய்யாநின்றுகொண்டு, அப்படியே யிவர்க்குப்பிறந்த வ்யஸநமாறும்படிதோன்றின ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (அதெல்லாமாறும்படியித்யாதி) ஸ்ரீரங்கராஜஸ்தவே, " अतन्द्रितचमूपतिप्रहितहस्तमस्वीकृतप्रणीतमणिपादुकं किमिति चाकुलान्तःपुरम्। अवाहनपरिष्क्रियं पतगराजमारोहतः करिप्रवरबृंहिते भगवतस्त्वरायै नमः॥ " (அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்த:புரம் । அவாஹநபரிஷ்க்ரியம்பதகராஜமாரோஹத:கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ்த்வராயைநம:. ) " स्रक्भूषाम्बरमयथायथन्यासः " (ஸ்ரக்பூஷாம்பரமயதாயதந்யாஸ: ) என்றத்தைப்பற்ற (ஆயுதாபரணங்களையித்யாதி) " चक्रायुधोपगमतापशमो गजेन्द्रः " ( சக்ராயுதோபகமதாபஶமோகஜேந்த்ர: ) என்றத்தைப்பற்ற ( மடுவின்கரையிலேயென்கிறார் ) மஹா

பாரதேவிஷ்ணுதர்மே, "ග്രாஹග്രஸ்தம்ഗജேந்த்ரஞ்சதம் ග്രாஹஞ்சஜலாஶயாத் । உஜ்ஜஹாராப்ரமேயாத்மா தரஸா மதுஸூதந: । ஸ்தலஸ்தந்தாரயாமாஸ க்ராஹஞ்சக்ரேண மாதவ: " (க்ராஹக்ரஸ்தம்கஜேந்த்ரஞ்சதம் க்ராஹஞ்சஜலாஶயாத் । உஜ்ஜஹாராப்ரமேயாத்மாதரஸாமதுஸூதந: । ஸ்த்தலஸ்த்தம்தாரயாமாஸக்ராஹஞ்சக்ரேணமாதவ: ) இத்யாதியைப்பற்ற ("ஆனையையொருகையாலுமித்யாதி ) ". மாதவ: " (மாதவ:)என்றதுக்கர்த்தம் ( பெரியபிராட்டியாருமித்யாதி ) ( இரண்டுக்கும்-வாராமே ) முதலைக்கே நலிவுவரும்படியென்று கூட்டுவது. அவன் நிரவதிகவ்யாமோஹயுக்தனுகையாலே ஸம்பாவிதஸ்வபாவங்களை யருளிச்செய்கிறார் (சாத்தியருளினவித்யாதி) இதுக்கு ஸூசகம் - " விஶ்வந்தியைவவிரசய்யநிசாய்யபூயஸ்ஸஞ்ஜஹ்ருஷஸ்ஸதிஸமாஶ்ரிதவத்ஸலத்வே । ஆஜக்முஷஸ்தவகஜோத்தமப்ரும்ஹிதேநபாதம்பராமம்ருஜுஷோபிசகாமநீஷா " (விஶ்வந்தியைவவிரசய்யநிசாய்யபூயஸ்ஸஞ்ஜஹ்ருஷஸ்ஸதிஸமாஶ்ரிதவத்ஸலத்வே । ஆஜக்முஷஸ்தவகஜோத்தமப்ரும்ஹிதேநபாதம்பராமம்ருஜுஷோபிசகாமநீஷா ) என்றாழ்வானருளிச்செய்தவசநம். வேதுகொண்டு-உஷ்ணமாக்கி. காய்ச்சியொற்றியென்றபடி. " திக்மாம் " ( திக்மாம் ) என்றத்தைக்கடாக்ஷித்து (நாமாராஜேமென்றது ) " ஹ்ரீரோஷாஹிமமாதுலா " ( ஹ்ரீரோஷாஹிமமாதுலா ) என்றத்தைப்பற்ற ( லஜ்ஜாபயங்களினாலேயென்றது ) " முடிந்துவிடுமோ " என்கிறசங்கை-பயநிமித்தம்: " தன்னுள்கலவாதது " " செம்பொன்திருவுடம்பு " "அரனேயோ" " பலபலவேயாபரணம் " " ஆழிநூலாரம் " இத்யாதிகளைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் ( ஸ்வரூபரூபேத்யாதி ) " என்னுள்கலந்தவன் " என்றத்தைப்பற்ற (வந்துஸம்ஶ்லேஷித்தென்கிறார் ) " மரதகக்குன்றமொக்கும் " " ஆராவமுதமாய் " இத்யாதியைப்பற்ற (ஹ்ருஷ்டனாயித்யாதி) " க்ருதக்ருத்யஸ்ததாராம: " ( க்ருதக்ருத்யஸ்ததாராம: ) என்றத்தைப்பற்ற ( க்ருதக்ருத்யனாயென்றது )............*

ஐந்தாந் திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

அந்தாமத்தன்புசெய்தென்னாவிசேரம்மானுக்
கந்தாமவாழ்முடிசங்காழிநூலாரமுள
செந்தாமரைத்தடங்கண்செங்கனிவாய்செங்கமலஞ்
செந்தாமரையடிக்கள்செம்பொன்றிருவுடம்பே.

## ஆறாயிரப்படி.

நித்யநிர்த்தோஷ நிரதிசயகல்யாண திவ்யதாமத்திற்பண்ணும்ப்ரேமத்தை யென்பக்கலிலே பண்ணிக்கொண்டு, ஸர்வதிவ்யபூஷணாயுத பூஷிதமாய் நிரதிசயஸௌந்தர்யாதி கல்யாணகுணவிசிஷ்டமாய், சுத்தஜாம்பூ

ந்த ப்ரபமான திவ்யரூபத்தோடேவந்து என்னோடேகலந் தருளினனெ ன்கிறார்......;..........................................................*

## பன்னீராயிரப்படி,

முதற்பாட்டில், பூஷணாதி விசிஷ்டமான விக்ரஹசோபையை யநுபவிக் கிறார்.

அந்தாமத்து - பரமபதத்தில். அன்பு - விருப்பத்தை. செய்து - பண்ணி. என்னாவி - ஹேயனான வென்னெஞ்சுக்குள்ளே. சேர் - பொருந்தின. அம்மானுக்கு - நிருபாதிகஸ்வாமியானவனுக்கு. ஸௌஷீல்யஸூசகமான அம் - அழகிய. தாமம் - மாலையையுடைத்தான. வாள் - உஜ்ஜ்வலமான. முடி - திருவபிஷேகம். சங்காழி - திவ்யாயுதங்கள். நூல் - திருயஜ்ஞோபவீதம். ஆரம் - திருவாரம். உள - இவைஸ்ப்புரித்துத்தோன்றுகின்றன கண் - திருக்கண்கள். செந்தாமரைத்தடம் - சிவந்ததாமரைத்தடாகமாயிராநின்றன. செம் - சிவந்த. கனி - பக்வபலம்போன்ற. வாய் - அதரம். செம் - சிவந்த. கமலம் - தாமரையாயிராநின்றது. அடிக்கள் - திருவடிகள். செம் - சிவந்த. தாமரை - தாமரையாயிராநின்றன. திருவுடம்பு - திருவுடம்பு. செம்பொன் - செம்பொன்னாயிராநின்றது.

இப்பாட்டு - அந்தராதித்ய வித்யையிற்சொன்ன ஹிரண்மய விக்ரஹயோகத்தையும், புண்டரீகாக்ஷத்வாத்யவயவசோபையையும், த்ருதசங்கசக்ரத்வத்தையுஞ் சொல்லி, இப்படியாதித்ய மண்டலாந்தர்வர்த்தியானவன், "ஸயஶ்சாயம்புருஷே யஶ்சாஸாவாதித்யே ஸ ஏக:" (ஸயஶ்சாயம்புருஷே யஶ்சாஸாவாதித்யேஸஏக:) என்கிறபடியே - அழகிய ஆதித்யமண்டலத்திற் பண்ணும்விருப்பத்தை யென்னெஞ்சிலே பண்ணிப்புகுந்து, அந்தவ்யக்த்யைக்யமிங்கே ஸ்ப்புரிக்கும்படி அத்யுஜ்ஜ்வலனாயிராநின்றானென்றுஞ்சொல்லும்..............................*

---

## ஈடு - முதற்பாட்டு.

"அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றிலராசைப்பட்டபடியேவந்து கலந்தானென்கிறார்.

(அந்தாமத்தன்புசெய்து) அழகியதாமத்திலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தை யென்பக்கலிலேபண்ணி. தாமமென்று - ஸ்த்தாநமாய், * மஞ்சா:க்ரோஶந்திபோலே, பரமபதத்திலுள்ளார்பக்கலிலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தை யென்பக்கலிலேபண்ணி. ஒருவிபூதியிலுள்ளார் பக்கலிலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தைக்கிடீர் என்னொருவன்பக்கலிலும் பண்ணிற்று. தாமே யருளிச்செய்தாரிறே "முற்றவுநின்றனன்" என்று. (என்னாவி) அவன்மேல்விழத்தா மிறாய்த்தமைதோன்றுகிறது. இவர் பூர்வவ்ருத்தத்தை யநுஸந்தித்து இறாயாநின்றார்; அதுவேஹேதுவாக அவன்மேல்விழாநின்றான். கமர்பிளந்தவிடத்திலே நீர்பாய்ச்சுவாரைப் போலே, "உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து" என்கிறஆவியிலேகாணும் வந்துசேருகிறது. (சேர்) விடாயர்மடுவிலே சேருமாபோலேவந்து

சேராநின்றான். இப்படி மேல்விழுகைக்கு ஹேதுவென்னென்னில் ( அம்மானுக்கு ) வகுத்தஸ்வாமியாகையாலே. நித்யவிபூதியிலுள்ளாரோபாதி லீலாவிபூதியிலுள்ளார்க்கும்வந்து முகங்காட்டவேண்டும்ப்ராப்தியை யுடையவனுக்கு. இவரைப்பெற்ற பின்பாயிற்றவன் ஸர்வேஶ்வரனாயிற்று. ( அந்தாமமித்யாதி ) "'அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ' என்றிவராசைப்பட்டபடியே, நித்யஸூரிகளோடேவந்துகலந்தான்" என்று ஆளவந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான்பணிக்கும்படி. ஆனால், அவர்களை "ஆழிநூலாரம்" என்றேசொல்லுவதென்னில்; * சிந்மயராயிருக்கச்செய்தே, பாரதந்த்ர்யஸித்திக்காகத் தங்களை யமைத்துவைக்கிற வித்தனையிறே. அங்ஙனன்றிக்கே, எம்பெருமானாரருளிச்செய்யும்படி - "இவரோடுஸம்ஶ்லேஷிப்பதற்குமுன்பு அவனோடொக்கஇவையும் அநுஜ்ஜ்வலமாய் அஸத்ஸமமாய், இவரோடு கலந்தபின்பு உஜ்ஜ்வலமாய் ஸத்தைபெற்றபடி சொல்லுகிறது" என்று; கல்பகதருவாடினாலதில் பூவும்தளிரும் வாடுமிறே. ( அந்தாமவாழ்முடி ) அழகியமாலையானது முடிசூடிவாழத்தொடங்கிற்று, அன்றியே, "வாண்முடி" என்றாய், வாளென்று - ஒளியாய், நிரவதிகதேஜோரூபமான முடியென்றுமாம். தாமம் - தேஜஸ்ஸாகவுமாம். தேஜோரூபமான ஸ்ரீபாஞ்சஜந்யம், தேஜோரூபமானதிருவாழி, நூல் - திருயஜ்ஞோபவீதம், ஆரம்-திருவாரம். இவை - நித்யஸூரிகளுக் குபலக்ஷணம். ( உள ) நித்யரானவிவர்க ளுளராகையாவதென்னென்னில்; "ஸஏகாகீநரமேத" ( ஸ ஏகாகீநரமேத ) என்கிறபடியே, இவரோடு கலப்பதற்குமுன்பு அந்தவிபூதியு மில்லையாய்த் தோற்றுகையாலே.

( செந்தாமரைத்தடங்கண் ) ஆர்த்தியெல்லாந்தீர இவரைப்பார்த்துக்கொண்டு நிற்கிறநிலை. இவரோடேகலந்த பின்பாயிற்று திருக்கண்கள் செவ்விபெற்றதும், விகஸிதமாயிற்றதும். ஏகரூபமானவற்றுக்கெல்லா மிதொருவிகாரம் பிறக்கிறதிறே. "ஸதைகரூபரூபாய" ( ஸதைகரூபரூபாய ) என்கிறவிடத்தில் - கர்மமடியாகவரும் விகாரமில்லையென்கிற வித்தனையிறே.

( செங்கனிவாய்செங்கமலம் ) சாடுசதங்கள் சொல்லுகிற திருவதரமிருக்கிறபடி. சிவந்துகனிந்தவதரமானது, சிவந்தகமலம்போலே யிராநின்றது.

( செந்தாமரையடிக்கள் ) நோக்குக்கும் ஸ்மிதத்துக்கும் தோற்றுவிழுந்திருவடிகள். திருவடிகளிலேவிழுந் தநுபவிக்கும் திருமேனி ( செம்பொன்திருவுடம்பே ) "ருக்மாபம்" ( ருக்மாபம் ) என்னும்படியாயிற்று இவரோடுகலந்தபின்பு திருமேனியிற் பிறந்தபுகர்தான்........*

# ஜீயர் அரும்பதம்

முதற்பாட்டு. ( அந்தாமத்தன்பித்யாதி ) " ஆழிநூலாரமுள " என்றத்தைக்கடாக்ஷித்து, ஆளவந்தார் நிர்வாஹத்திலே யவதாரிகை ( அடியார்களித்யாதி )

" அம் " என்றத்தாலே - விலக்ஷணபோக்ய போகோபகரண போகஸ்த்தாநங்களாலே வந்தவழகைச்சொல்லுகிறது. " தாமமென்றுஸ்த்தாநமாய் " இத்யாதிவாக்யம் - பூர்வவாக்யவிவரணமாதல், அர்த்தாந்தரமாதல். விபூதியையிட்டு லக்ஷித்தவிதுக்கு ப்ரயோஜநம் ( ஒருவிபூதியிலித்யாதி ) அப்படிபண்ணிறேவென்ன ( தாமேயித்யாதி )

" என் " என்றதுக்குபாவம் ( அவன்மேல்விழவித்யாதி ) இருய்த்தமை - பின்வாங்கினமை. விவரணம் ( இவரித்யாதி ) " ஆவி " என்றுவிஶேஷிப்பானென்னென்ன ( கமர்பிளந்தவிடத்தேயித்யாதி ) ஆக, " என்னுவிசேர், ஆவிசேர், சேர், " என்றுமூன்றுவிதமாக்கி யருளிச்செய்தாராயிற்று.

( வகுத்தஸ்வாமியாகையாலேயிதி ) அதாவது - அம்மானுகையாலே அந்தாமத்தன்பு செய்தான், என்னுவிசேர்ந்தானென்றபடி. விவரணம் ( நித்யவிபூதியிலித்யாதி ) அந்தாமத்தன்புசெய் தென்னுவிசேர்ந்தவநந்தரம் - அம்மானுனென்று அபரபாவியாக தாத்பர்யாந்தரம் (இவரைப்பெற்றவித்யாதி) இந்தப்பக்ஷத்தில், " அம்மான் " என்கிறவிது - ஸாத்யபரம்.

ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, அந்தாமவாழ்முடி சங்காழிநூலாரம், உள - உண்டென்றபடி; அதாவது - இவற்றோடே வந்தானென்றுகருத்து. ( ஆனலித்யாதி ) " ஆழிநூலாரம் " என்று - அசேதநமாகச் சொல்லுவானென்னென்னிலென்றபடி. லோகந்யாயத்தாலே அசைதந்யந்தோன்றுகையாலே யிப்படியேயாகவேண்டாவோவென்று கருத்து. ( சிந்மயராயித்யாதி ) பௌஷ்கரே, " [illegible] " ( ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தம்ஸ்வாநுரூபைரநூபமை꞉। சிந்மயைஸ்ஸ்வப்ரகாஶைஶ்ச அந்யோந்யருசிரஞ்ஜகை꞉. ) ( இவரோடித்யாதி ) எம்பெருமானார் நிர்வாஹத்தில், அம்மானுக்கு - அம்மானுடையதான, அந்தாமவாழ்முடி சங்காழிநூலாரம், உள - ஸத்தைபெற்றனவென்றபடி. இவன்வாடினலவற்றுக்கும் வாட்டம்வேணுமோவென்ன ( கல்பகதருவித்யாதி ) " [illegible] " ( திவ்யாஸ்த்ரபுஷ்பிதசதுர்ப்புஜமத்யுதாரம் ) என்னக்கடவதிறே.

முடிசூடிவாழத் தொடங்கிற்றென்று - ரஸோக்தி. முடிசூடி-முடியிலே சூட்டப்பட்டு. தாமம் - மாலை. அழகியமாலை யானதுவாழ்கிற முடியென்றுசப்தார்த்தம். " வாள் " என்று பாடமானபோது, " தாமம் " என்றும் - தேஜஸ்ஸாய், " தாமவாள் " என்கிறவீப்ஸையாலே - நிரவதிகதேஜோரூபமான முடியென்றபடி. இத்தைக்காட்டுகிறார் ( தாமம்தேஜஸ்ஸாகவுமாமென்று ) " அந்தாமவாள் " என்றத்தை சங்குமுதலானவற்றுக்கும் விஶேஷணமாக்கி யருளிச்செய்கிறார் ( தேஜோரூபமானவித்யாதி ) ஆரம் - ஹாரம்.

எம்பெருமானார் நிர்வாஹத்திலே சங்கிக்கிறார் (நித்யரானவித்யாதி) (உளராகையாவது) இப்போதுளராகையாவது. (ஸஏகாகீத்யாதி) இந்தவாக்யம் - எம்பெருமானார் நிர்வாஹவிவரணமாதல், அந்தநிர்வாஹத்திலே தாத்பர்யாந்தரமாதல். தாத்பர்யாந்தரமானபோது - முந்தின அவஸ்தைகளை வாடினார்களென்றபடி. இரண்டாவது - பகவதபிப்ராயத்தாலே யந்தவிபூதியு மில்லையாய்த் தோற்றிற்றென்றபடி.

ஆளவந்தார் நிர்வாஹத்தில் (ஆர்த்தியெல்லாமித்யாதி) எம்பெருமானார் நிர்வாஹத்தில் (இவரோடேயித்யாதி) வ்யாக்யாதாவினீடுபாடு (ஏகரூபமானவித்யாதி) ஏகரூபமானவற்றுக்கெல்லாமென்றது - முடிமுதலான நித்யஸூரிகளை யபேக்ஷித்து. ஆனால், "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய) என்கிறப்ரமாணத்தோடே சேரும்படி யெங்ஙனேயென்ன (ஸதைகேத்யாதி) ப்ரதமேம்ஸோத்விதீயே, "அவிகாராயஶுத்தாய நித்யாயபரமாத்மநே। ஸதைகரூபரூபாயவிஷ்ணவேஸர்வஜிஷ்ணவே" (அவிகாராயஶுத்தாய நித்யாயபரமாத்மநே। ஸதைகரூபரூபாய விஷ்ணவேஸர்வஜிஷ்ணவே.)

பதச்சேர்த்திக்குபாவம் (நோக்குக்குமித்யாதி)

செம்பொன்போலே திருமேனி யிருக்குமோவென்ன (ருக்மாபமித்யாதி) மாநவேத்வாதஸோத்யாயே, "ப்ரஶாஸிதாரம்ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம்। ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்வித்யாத்தம்புருஷம்பரம்." (ப்ரஶாஸிதாரம்ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்வித்யாத்துபுருஷம்பரம்.) ஸ்ப்ருஹணீயமென்றபடி.

ஆளவந்தார்நிர்வாஹத்துக்கு, அந்தாமவாழ்முடி சங்காழி நூலார முளவாய்க்கொண்டு, அந்தாமத்தன்பு செய்தென்னாவி சேரம்மானுக்கு செந்தாமரை யித்யாரப்யார்வய8; க்ரமாந்வயோவா. எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு, அந்தாமத்தன்பு செய்தென்னாவி சேர்ந்தவநந்தரம் - அந்தாமவாழ்முடிசங்காழி நூலாரமுளவாய் - அம்மானுமானவனுக்கு - செந்தாமரையித்யாரப்யார்வய8..................*

---

## இரண்டாம்பாட்டு.

---

திருவுடம்புவான்சுடர்செந்தாமரைகண்கைகமலம்
திருவிடமேமார்வமயனிடமேகொப்பூ
ழொருவிடமுமெந்தைபெருமாற்கரனேயோ
வொருவிடமொன்றின்றியென்னுள்கலந்தானுக்கே.

## ஆறாயிரப்படி.

(திருவுடம்பு) என்னோடேகலந்தருளுகிறான், ஸர்வேஶ்வரியான பெரியபிராட்டியாரோடும் ஆஶ்ரிதரான ப்ரஹ்மருத்ராதிகளோடும் கலந்தருளினாற்போலன்றியே, தன்னுடைய நிரதிசயதேஜோமயமானதிரு

வுடம்பி லொருப்ரதேஶமொழியாமே ஸமஸ்தப்ரதேசத்தாலுங் கலந்தரு ளினான்; ஒருவனுடைய அபிநிவேஶமே யிதென்கிறார்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்வவயவசோபையையுடையவன், ப்ரஹ்மருத்ராதிகளான விபூதிபூதர்க்கும் பிராட்டியோபாதிதிருமேனியிலே யிடங்கொடுத்த ஔஜ்ஜ்வல்ய த்தை யருளிச்செய்கிறார்.

ஒருவிடமொன்றின்றி - ஸ்வரூபரூபகுணவிபூதிகளொன்றுஞ் சோராதபடி. என்னுள்-என்னுள். கலந்தானுக்கு-கலந்த. எந்தைபெருமாற்கு-என்குலநாதனுக்கு. திரு - ஶ்லாக்யமான. உடம்பு-வடிவு. வான்சுடர் - ஆதித்யவர்ணமாயிராநின்றது. கண்கைகமலம்-திருக்கண்ணும் திருக்கையும். செம்-சிவந்த. தாமரை-தாமரைபோ லேசெவ்விபெற்றது. மார்வம்-திருமார்வு. திருவிடமே - லக்ஷ்மீஸ்த்தாநமேயாயிற் று. கொப்பூழ்-கொப்பூழ். அயன்-ப்ரஹ்மாவுக்கு. இடமே - ஸ்த்தாநமேயாயிற்று. ஒருவிடமும்-நீக்கியுள்ளவிடம். அரனே-ருத்ரனேயாயிராநின்றது. ஓ - இதென்ன ஆஶ்சர்யம்.

ஒருவுதல்-நீங்குதல். தந்திருவுள்ளத்திலே யவன்கலந்தபின்பு ரூபௌஜ்ஜ் வல்யமும் அவயவௌஜ்ஜ்வல்யமுமுண்டானவோபாதி, விபூத்யௌஜ்ஜ்வல்யமுமு ண்டாயிற்றென்று கருத்து ... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தம்மோடேகலந்தபின்பு அவனுக்குப்பிறந்த புகரைச்சொல்லி, த ன்னுடம்பைப்பற்றி ப்ரஹ்மேசாநாதிகள் ஸத்தையாம்படி யிருக்கிறவன் தானென்னுடம்பைப்பற்றித் தன்ஸத்தையாம்படி யிராநின்றானென்கிறார்.

(திருவுடம்புவான்சுடர்) அணைத்தபோதை ஸ்பர்ஶஸுகங் கொ ண்டருளிச்செய்கிறாரிறே. "'ஈஶ்வரனுக்கு விக்ரஹமில்லை, விபூதியில் லை' என்கிறவர்கள்முன்பே, ஆப்ததமரானவிவர் 'திருவுடம்புவான்சுடர்' என்னப்பெறுவதே!, 'ஈஶ்வரனுக்கு விக்ரஹமில்லை, குணமில்லை' என் கிறவர்கள் பண்ணிவைக்கமாட்டாத பாபமில்லை; அவர்களை யநுவர்த்தி த்து அதுகேட்கவிராதபடி பெருமாள் நமக்குப்பண்ணின உபகாரமென்" என்றருளிச்செய்வர் ஜீயர். * மயர்வறமதிநல மருளப்பெற்றவர் துவக்கு ண்கிறதிருமேனியிறே. "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" (இச் சாக்ருஹீதாபிமதோருதேஹ:) என்றுதனக்கு மபிமதமாயிருப்பதொன் றிறே. தான்மதித்தார்க்கு "ஏஷஸர்வஸ்வபூதஸ்து" (ஏஷஸர்வஸ்வ பூதஸ்து) என்றுகொடுப்பதும் திருமேனியையே. (வான்சுடர்) முத லிலே தேஜோரூபமான திருமேனிமிகவு மொளிபெற்ற திவரோட்டை க்கலவியாலே. புறம்பொளியாய் உள்ளுமண்பற்றியிருக்கை யன்றிக் கே, நெய்திணுங்கினாற்போலே தேஜஸ்த்தத்வமே யாயிருக்கை. "தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்" (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) என்கிறபடியே. * ப

ஞ்சசக்திமயமாயிருக்கச்செய்தே, "ஷாடூ-ணூவிறு ஹ" (ஷாட்குண்யவிக்ரஹம்) என்கிறது குணங்களுக்கு ப்ரகாசகமாகை சுட்டியிறே

(செந்தாமரைகண்) கடாக்ஷத்தாலே வவ்வலிட்டுச்சொல்லுகிற வார்த்தை.

(கைகமலம்) "கரேணஜுநா" (கரோணம்ருதுநா) என்கிறபடியே யணைத்தகை. இவரொருகாற்சொன்னத்தைப் பலகாற்சொல்லுவானென்னென்னில்; முத்துக்கோக்கவல்லவன் முகம்மாறிக்கோத்தவாறே விலைபெறுமாபோலே, இவருமொரோமுகபேதத்தாலே மாறிமாறி அநுபவிக்கிறார்.

(திருவிடமேமார்வம்) அக்கையாலேயணைப்பிக்கும் பெரியபிராட்டியார்க்கிருப்பிடம் திருமார்வு.

(அயனிடமேகொப்பூழ்) சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவானப்ரஹ்மா, திருநாபீகமலத்தை யிருப்பிடமாகக்கொண்டிருக்கும்.

(ஒருவிட்முமெங்தைபெருமாற்கரனே) ஓரிடமென்னுதே, ஒருவிடமென்கிறது-ஒருவுதல்-நீங்குதலாய், நீங்கினவிடமென்றபடி. என்னையுடைய ஸர்வேஸ்வரனுக்கு நீங்கினவிடமும் ருத்ரனுக்கிருப்பிடமாயிருக்கும். தாமஸதேவதையிருப்பிடமாகையாலே, "நீங்கினவிடம்" என்றநாதரோக்தியிருக்கிறபடி. (ஒருவிடமொன்றின்றி யென்னுள்கலந்தானுக்கே) என்னோடேவந்து கலக்கிறவிடத்தில், நீங்குமிட்மொன்றுமின்றிக்கேவந்துகலந்தான்.

(ஓ) "அநந்யபரையான பெரியபிராட்டியோடொக்க, அந்யபரரான ப்ரஹ்மருத்ரர்களுக்கும் திருமேனியிலே யிடங்கொடுத்துவைப்பதே" என்று இந்தச்சீலகுணத்தை யநுஸந்தித்துவித்தராயிருந்தார் முன்பு; இப்போது தமக்குடம்புகொடுத்தபடிகண்டவாறே "அதுபரத்வம்" என்றுதோற்றி, இதென்னசீலாதிசயம், ஓ! என்கிறார். ஒருவிடமொன்றின்றி யென்னுள்கலந்தானுக்கு-திருவுடம்பென்றுதொடங்கி, அரனே ; ஓ என்றந்வயம்... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (திருவுடம்பித்யாதி) "என்னுவிசேரம்மானுக்கு-செம்பொன்திருவுடம்பே" என்றதிலேநோக்காக (தம்மோடேயித்யாதி) "அயனிடமே" இத்யாதியைக்கடாக்ஷித்து (தன்னுடம்பையித்யாதி) "ஒருவிடமொன்றின்றி" என்றத்தைக்கடாக்ஷித்து (தானென்னுடம்பையித்யாதி)

வான்சுடர் - மிக்கதேஜஸ்ஸு. "என்னுள்கலந்தானுக்குத் திருவுடம்புவான்சுடர்" இத்யந்வய முகேநாஹ (அணைத்தபோதையித்யாதி).

பலகாலும் விக்ரஹத்தை வர்ணிக்கிறபடியை யநுஸந்தித்து நம்பிள்ளை யீடு பாடு ( ஈஸ்வரனுக்கித்யாதி ) ப்ராஸங்கிகமாக நஞ்சீயருடைய ஸ்வலாபாநுஸந்தாநமாஹ ( ஈஸ்வரனுக்கித்யாதி ) இத்தால் - விக்ரஹாதிகளில்லையென்கைக்கு நிமித்தமவர்களுடைய பாபப்ராசுர்யமென்றபடி.

இவரருளிச்செய்தால் ப்ரமாணமாமோவென்ன (மயர்வறவித்யாதி) ஆகையாலே, இவரநுபவபரீவாஹரூபமான ஸ்ரீஸூக்தியும் பரமப்ரமாணமென்றபடி. அவக்குண்கிற-ஈடுபட்டநுபவிக்கிற. “ திரு ” என்று-அழகாய், அத்தைக்காட்டுகிறார் ( இச்சாக்ருஹீதேத்யாதி ) ஷஷ்ட்டேம்ஸேபஞ்சமே, பூர்வமேவலிகிதம். கார்யத்தாலு மபிமதத்வத்தை யுபபாதிக்கிறார் (தான்மதித்தார்க்கித்யாதி) யுத்தகாண்டே ப்ரதமே, “ [illegible] ” ( ஏஷஸர்வஸ்வபூதஸ்து ) பூர்வமேவலிகிதம்.

(முதலிலேயித்யாதி) “திரு” என்றபோதே-ஸ்வாபாவிகஸர்வாதிஸயங்களும் ஸித்திக்கையாலே, பின்னையும் பின்னையும் “சுடர்” என்னும்போது - இப்படியேயாகவேணுமென்றபடி. * வானின்தாத்பர்யம் (புறம்பொளியாயித்யாதி) திணுங்குகை-கநீபவிக்கை. உக்தார்த்தஸ்யப்ரமாணம் (தேஜஸாமித்யாதி) இந்தநிரவதிகதேஜோரூபத்துக்கடிபஞ்சஸக்திமயமாகையாலே யென்று விவக்ஷித்து, ஆனால் “ஷாட்குண்யவிக்ரஹம்” என்கிறது சேரும்படியென்னென்ன (பஞ்சசக்திமயேத்யாதி) ப்ரதமேம்ஸேநவமே, “ [illegible] ” ( தத்ருஷ்ட்வாதே ததாதேவாஸ்ஸங்கசக்ரகதாதரம்। அபூர்வரூபஸம்ஸ்த்தாநம் தேஜஸாம்ராஸிமூர்ஜிதம்.) “ [illegible] ” ( பஞ்சஸக்திமயோதேவஃ பரமாத்மாஜகத்ப்ரபுஃ। பராபிஸ்ஸக்திபிஸ்தத்ரவிக்ரஹஃபரமாத்மநஃ. ) “ [illegible] ” (ஷாட்குண்யவிக்ரஹம்தேவம்பாஸ்வஜ்ஜ்வலநவர்ச்சஸம்) பஞ்சஸக்திகளாவன- “ [illegible] ” ( பரமேஷ்ட்டிபுமாந்விஸ்வோநிவ்ருத்தஸ்ஸர்வஏவச ) என்றுசொல்லப்படுகிற நித்யவிபூதிஸ்த்தித பஞ்சபூதங்கள்.

(கரேணம்ருதுநா என்கிறபடியே) தடவியணைத்தகையென்றபடி. ஹரிவம்ஸே கண்டாகர்ணமோக்ஷப்ரதாநே, “ [illegible] ” ( பஸ்பர்ஸாங்கம்ததாவிஷ்ணுஃபிஸாசஸ்யாபிஸர்வதஃ । கரேணம்ருதுநாதேவஃபாபாந்நிர்மோசயந்ஹரிஃ. ) ( முகபேதத்தாலே ) க்ரமபேதத்தாலே.

மார்வமே-திருவிடம். கொப்பூழே-அயனிடம். எந்தைபெருமாற்கு-ஒருவிடமே-அரன். அரனதென்றபடி. கொப்பூழ்-திருநாபி.

(ஓரிடமென்னுதே) இன்னவிடமென்று விசேஷியாதே. விவரணம் (என்னுமுனவித்யாதி) நிரவதிகதேஜோரூபவிக்ரஹத்தில்நீங்கின விடமுண்டோவென்ன தாமஸேத்யாதி )

(வித்தராயிருந்தார்முன்பு) “ஏறனைப்பூவனை” என்கிறபாட்டிலேயென்றபடி.

ஒருவிடமொன்றின்றி யென்னுள்கலந்தானுக்கு- திருவுடம்புவான்சுடரென்றுதொடங்கி, கொப்பூழ், எந்தைபெருமாற்கு-ஒருவிடமே-அரன், ஓ இத்யந்வய꞉. *

## மூன்றாம்பாட்டு.

என்னுள்கலந்தவன்செங்கனிவாய்செங்கமல
மின்னுஞ்சுடர்மலைக்குக்கண்பாதங்கைகமல
மன்னுமுழுவேழுலகும்வயிற்றினுள
தன்னுள்கலவாதவெப்பொருளுந்தானில்லையே.

### ஆறாயிரப்படி.

(என்னுள்) நிரதிசயகல்யாணகுண திவ்யரூபத்தையுடையனாய், ஸ்வஸங்கல்பாதீந ஸமஸ்தவஸ்துஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகனாயிருந்தவனென்னுள்ளேகலந்தருளினானென்கிறார். ..............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்னுள்ளிராத வஸ்துவுக்கு ஸத்தையில்லையாமோபாதி, என்னுள்தான் கலவாதபோது தனக்கு ஸத்தையில்லையாகநினைத்து என்னுள்ளேகலந்துஜ்ஜ்வலனானானென்கிறார்.

என்னுள்-என்னுள்ளே. கலந்தவன்-கலந்தவனாய். மின்னும்-அத்தாலேவிளங்கின. சுடர்-சுடரையுடைய. மலைக்கு-மலைபோன்றவனுக்கு. செங்கனிவாய்செங்கமலம் கண்பாதங்கைகமலம்-முன்புசொன்னஅவயவசோபையும் யதாபூர்வமத்யுஜ்ஜ்வலமாயிராநின்றது. மன்னும்-ஸ்த்திரமாய். முழு-பூர்ணமான. ஏழுலகும்-சகலலோகங்களும். வயிற்றின்-அவன்வயிற்றிலேயாய். உள-ஸத்தைபெறுகின்றன. தன்னுள்-தனக்குள்ளே. கலவாதது-ஸம்பந்தியாதிருப்பது. எப்பொருளுந்தான் - ஏதேனுமொருபொருளும். இல்லை-இல்லை.

ஸர்வவஸ்துவுக்கும் தத்வ்யதிரேகத்தில் ஸத்தாஹாநிஸ்வரூபப்ரயுக்தை, ஈஶ்வரனுக்கு "இவருடையவ்யதிரேகத்தில் ஸத்தையில்லை" என்றுநினைக்கிறவிடம் சீலக்ருதமென்றுகருத்து .........................................................*

### ஈடு - மூன்றாம்பாட்டு.

ஸ்வவ்யதிரிக்தஸமஸ்துவஸ்துக்களும் தன்னைப்பற்றி யுளவாம்படியிருக்கிற ஸர்வேஶ்வரன், தானென்னைப்பற்றியுளனா யென்னோடேவந்து கலந்தானென்கிறார்.

(என்னுள்கலந்தவன்) "ஜமதக்நிஹ்ராதா" (அகஸ்த்யப்ராதா) என்னுமாபோலே நிருபகமிருக்கிறபடி. "நாராயணன்" "வாஸுதேவன்" என்னுமாபோலே, "என்னுள்கலந்தவன்" என்றுகாணுமவனுக்

குத் திருநாமம். (செங்கனிவாய்செங்கமலம்) சிவந்துகனிந்தவாய் செங்கமலம்போலேயிராநின்றது.

(மின்னும் சுடர்மலைக்கு) *வாட்டமில்புகழ்வாமநன், கலந்தபின்பு வளர்ந்தபடியும், புகர்பெற்றபடியும், தனையிலேகால்பாவித்தரித்தபடியும், திண்மையையுடையனானபடியும்பற்ற (மலையென்கிறார்) (கண்பாதம் கைகமலம்) முகமறிந்துகோத்தவாறே முத்துவிலைபெறுமாபோலே, இவரும் திவ்யாயுதங்களைச்சேர்த்தநுபவிக்கிறார்.

(மன்னுமுழுவேழுலகும்வயிற்றினுள) ப்ரவாஹரூபத்தாலே நித்யமான ஸகலலோகங்களும் தன் ஸங்கல்பத்தைப்பற்றிக்கிடக்கிறன.

(தன்னுளித்யாதி) தன்திருவுள்ளத்தை யபாஶ்ரயமாக வுடைத்தன்றிக்கேயிருக்கிறவஸ்துயாதொன்று, 'அது நாஸ்திசப்தத்துக்கர்த்தமாகிறது. அப்ரஹ்மாத்மகமாயிருப்பதொரு பதார்த்தந்தானில்லை, "நதத³ஸ்தி விநாயத்ஸ்யாத்" (நததஸ்திவிநாயத்ஸ்யாத்) என்றுணிறே. தன்னுள் கலவாததெப்பொருளுந்தானில்லையே) அவையிவனைப்பற்றாதபோது ஸத்தையின்றிக்கே யிருக்கிறது - ஸ்வரூபத்தாலே; இவனிவனைக்கலவாதபோது ஸத்தையின்றிக்கேயிருக்கிறது-ப்ரணயித்வகுணத்தாலே.........*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (என்னுளித்யாதி) "மன்னுமுழுவேழுலகும்" என்றுதொடங்கி, "என்னுள்கலந்தவன்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை (ஸ்வவ்யதிரிக்தேத்யாதி)

"நாராயணன்" என்கிறவாக்யாநந்தரம், "அக³ஸ்த்யப்⁴ராதா" (அகஸ்த்யப்ராதா) என்கிறவாக்யமநுஸந்தேயம். அஸங்க்யாதமான நாமங்களிருக்க, "என்னுள்கலந்தவன்" என்றுவிசேஷிக்கிறதுக்குபாவம் (நாராயணனித்யாதி) இவ்வர்த்தத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக விஶதீகரிக்கிறார் (அகஸ்த்யப்ராதாவித்யாதி) நாராயணவாஸுதேவநாமங்கள் பரத்வத்துக்கு ப்ரதாநங்களானாற்போலே, "என்னுள்கலந்தவன்" என்கிறது-ஸௌலப்யத்துக்கு ப்ரதாநமென்றபடி.

பதத்வயத்துக்கும் வ்யுத்க்ரமேணபாவம் (வாட்டமிலித்யாதி) "'வாட்டமில்புகழ்வாமநனே' என்றதுக்கு - 'தன்னுடைமைபெறுகைக்குத்தானர்த்தியானவன்' என்றுவைத்து, இங்கேகலந்தபின்பு வளர்ந்தபடியுமென்கையாலே-அவ்விடத்திலே, சிறும்பினவனென்று மோரர்த்தம்விவக்ஷிதம்" என்றருளிச்செய்வர். (மலையென்கிறார்) மின்னும்சுடர்மலையென்கிறார். திவ்யாவயவங்களைப் பாட்டுக்கள்தோறுஞ்சொன்னால் புநருக்திவாராதோவென்ன ; பரிஹரிக்கிறார் (முகமறிந்தித்யாதி)

ப்ரவாஹரூபத்தாலே நித்யமானவென்றவிடத்திலே - "யதா²ர்து²ஷ்வ்ருதுலிங்கா³நி நாநாரூபாணி பர்யயே। த்³ருஶ்யந்தே தாநி தாந்யேவ ததா² பா⁴வா யுகா³தி³ஷு" (யதர்துஷ்வ்ருதுலிங்காநிநாநாரூபாணிபர்யயே।த்ருஶ்யந்தே தாநிதாந்யேவததாபாவாயுகாதிஷு) இத்யாத்யநுஸந்தேயம். ருதுலிங்காநி-ருது

சிந்ஹங்கள். பர்யயே-ருதுவின்முடிவிலே. பாவாః-ப்ரபஞ்சபதார்த்தா॰. "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" (ஸூர்யாசந்த்ரமஸௌதாதா யதாபூர்வமகல்பயத்) இத்யாதி. வயிறு-உள்.தேநஸங்கல்பஉச்யதே என்றுகருத்து.

"மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள" என்றந்வயமுகேந சொன்னவர்த்தத்தை வ்யதிரேகமுகேந த்ருடீகரிக்கிறார் (தன்னுள்கலவாததெப்பொருளுந்தானில்லையேயென்று) (தந்திருவுள்ளத்தையிதி) உள்-உள்ளம். இேஹ - ஸங்கல்பாதீநமென்றார்; இப்போது-ஸ்வரூபாஸ்ரிதமென்றர்த்தாந்தரம் ( அப்ரஹ்மாத்மகமித்யாதி ) தன்-தான். ஸ்வரூபாஸ்ரிதமென்னுமதுக்கு ப்ரமாணம் (நததஸ்தீத்யாதி) கீதாஸூதஸமே, "யச்சாபி ஸர்வபூதாநாம் பீஜம் ததஹமர்ஜுந। ந ததஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூதம் சராசரம்." ( யச்சாபிஸர்வபூதாநாம்பீஜம்ததஹமர்ஜுந।நததஸ்திவிநாயத்ஸ்யாந்மயாபூதஞ்சராசரம்.)

அவதாரிகைக்குச்சேரதாத்பர்யம் (அவையிவனையித்யாதி)

என்னுள்கலந்தவனை-மின்னும்சுடர்மலைக்கு - செங்கனிவாய்செங்கமலம், கண்பாதம் கைகமலமித்யாரப்யாந்வய॰.......................................*

## நான்காம்பாட்டு.

எப்பொருளுந்தானாய்மரதகக்குன்றமொக்கு
மப்பொழுதைத்தாமரைப்பூக்கண்பாதங்கைகமல
மெப்பொழுதுநாடிங்களாண்டூழியூழிதொறு
மப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே.

### ஆறாயிரப்படி.

( எப்பொருளும் ) ஸர்வாந்தராத்மபூதனாய், அளவிறந்தவழகையுடையனாயிருந்தவிவன், அழகாலே ஸர்வகாலமும் ப்ரதிக்ஷணமெனக்கபூர்வவத்போக்யமாயிராநின்றான்; ஒருவனுடைய வழகிருக்கும்படியேயீதென்கிறார்.......................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யபூதனானவ னென்னுள்ளே புகுந்தபின்பு ஸ்த்திரஸ்வபாவனானனென்கிறார்.

எப்பொழுதும் - எல்லாக்ஷணம். எந்நாள் - எல்லாநாள். எத்திங்கள் - எல்லாமாஸம். எவ்வாண்டு - எல்லாவாண்டு. எவ்வூழியூழிதொறும் - எல்லாவகைப்பட்டவூழிதோறும். அப்பொழுதைக்கப்பொழுது - அவ்வோகாலங்களிலே. என் - என்னுள்ளேகலந்து. ஆரா - அத்ருப்திகரமான. அமுதம் - அம்ருதமானவன். அத்தால்வந்ததன்னுடைய ப்ரீத்யதிசயத்தாலே எப்பொருளும் - எல்லாப்பொருளும். தானாய் - தானானஸர்வாத்மபாவமும்நிறம்பெற்று. மரதகக்குன்றமொக்கும் - மரதகமலைபோலேயுயர்த்தியும் நிறமுமாமு முடையனானான். அப்பொழுதை - அப்

போதலர்ந்த. தாமரைப்பூ - தாமரைபோலே. கண் - கண்ணும். அப்பொழுதைக்கமலம் - அப்போதைக்கமலம்போலே. பாதம் - பாதமும். கை - கையும்புதுமைபெற்றன.........................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

நீரொருகாற்சொன்னத்தை யொன்பதின்கால்சொல்லி யிங்ஙனே கிடந்து படுகிறதென்னென்ன ; நானதுதவிர்கிறேன், நீங்களவ்விஷயமொருகாலிருந்தபடியே யெப்போதுமிருக்கும்படி பண்ணவல்லீர்களோ வென்கிறாள்.

( எப்பொருளுந்தானாய் ) ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் " தான் " என்கிறசொல்லுக்குள்ளே ப்ரகாரமாம்படி, தான்ப்ரகாரியாய் ஸ்வாதீநமல்லாததொரு பதார்த்தத்தைப்பெற்றுத் தானிப்பாடுபடுகிறுனே. ( மரதகக்குன்றமொக்கும் ) கீழ் - ஜகதாகாரனாய் நிற்கும்நிலைசொல்லிற்று ; இங்கு - அஸாதாரணவிக்ரஹந் தன்னையேசொல்லுகிறது. கீழ், மின்னும்சுடரொன்று - தம்மோட்டைக்கலவியால் வந்தபுகரைச்சொல்லிற்று ; அதுக்காஸ்ரயமான அஸாதாரணவிக்ரஹத்தைச் சொல்லுகிறதிங்கு. ( அப்பொழுதை ) " கீழ் - தாமரையையொப்பாகச்சொன்னவிடம் தப்பச்சொன்னேம் " என்றழித்து பரதிஜ்ஞைபண்ணுகிறார். கேவலம்தாமரையை யொப்பாகச்சொல்லில், செவ்வியழிந்த ஸமயத்திலுமொப்பாகத்தொடங்குமே; அப்போதலர்ந்த - செவ்வியையுடைத்தான தாமரை. ( கண்பாதம் ) கண்-பந்தத்தைவிளைக்குங்கண். பாதம் - பந்தமறிந்தா லநுபவிக்க விழியும்துறை ( கைகமலம் ) தம்மோட்டை ஸ்பர்ஶத்தாலே செவ்விபெற்றபடி. இவையெல்லா மப்போதலர்ந்த கமலம்போலே யிருக்கும் ( எப்பொழுதுமித்யாதி ) கலாகாஷ்ட்டாதிகளாலும் பேதிக்கவொண்ணாத அத்யல்பகால மநுபவிப்பது, ஒருநாளநுபவிப்பது, ஒருமாஸமநுபவிப்பது, ஓராண்டநுபவிப்பது, கல்பந்தோறும் கல்பந்தோறுமநுபவிப்பது, இப்படிகாலமெல்லா மநுபவியாநின்றாலும், கீழ்ச்சொன்ன அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே-பூர்வக்ஷணத்திலநுபவம்போலல்ல வாயிற்று உத்தரக்ஷணத்தி லநுபவமிருப்பது. தாராவாஹிக விஜ்ஞாநத்தில் காலோபஶ்லேஷம்பாதிகளாலே வருவதொருபேதமுண்டிறே ஜ்ஞாநத்துக்கு, இங்குவிஷயந்தானே பேதியாநின்றதாயிற்று.*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. ( எப்பொருளுமித்யாதி ) திவ்யாவயவங்களைப் பலகாலுஞ்சொன்னதுக்குக் கீழிற்பாட்டுக்களி லருளிச்செய்த பரிஹாரமொழிய பரிஹாரா

முதாகரம்] நிலவுக்குமாம்பலுக்கும் நிர்வாஹகனே. நாமக்ரஹணம்பண்ணுகிறதெதுக்காகவென்ன (போகமித்யாதி)

ஸம்ஶ்லேஷஸமயத்திலே " மணிவண்ணனே " என்கிறதுக்குபாவம் ( அணைத்தபோதித்யாதி ) சப்தார்த்தம் ( நீலரத்நமித்யாதி )

இப்போது " குறளா " என்கிறதுக்குபாவம் ( மஹாபலீத்யாதி ) சிறும்பி-ஸங்கோசித்து. " பொல்லா " என்றதுக்குபாவம் ( அழகிதென்னிலித்யாதி ) கண்ணெச்சில் - த்ருஷ்டிதோஷம். ( வைகுந்தாவென்று மேன்மைசொல்லிற்றித்யாதி வாக்யத்ரயேண ) ஏவம்பூதவஸ்துவை விடப்போமோவென்று சொல்லிற்றாயிற்று.

" திருக்குறளாவென்னுள்மன்னி " என்றதுக்குவாஸனை (இந்த்ரனித்யாதி) சப்தார்த்தம் (என்னுடையவித்யாதி)

இப்போது " வானேறே " என்றதுக்குபாவம் ( நித்யஸூரிகளோடேயித்யாதி ) தாத்பர்யாந்தரம் (ஏறென்கிறவித்யாதி)

மேலுக்கவதாரிகை (தம்முடையவித்யாதி) குந்தா - தப்பாவாய், வருந்தீமை-வருகிறதீமை யிதிப்ராதமிகார்த்தஃ. அர்த்தத்வயத்தாலும்பலிதம்-அநுபவித்து மீளுதல், ஸ்வயத்நத்தால் கடக்கலாதல் செய்யவரிதாயிருக்குமென்றபடி. " அடியார் " என்று தாதாத்விகமான வாநுகூல்யத்தையுடையவர்களைக் காட்டுகிறதென்கிறார் (முன்னித்யாதி) யத்வா, இத்தால் பலிதம் (முன்னித்யாதி) ஆதல். "சத்ருக்கள்மேலே பொகடும்" என்னுமதுக்கு ப்ரமாணம் (த்விஷந்தஇத்யாதி) அப்படிசத்ருக்கள்மேலே பொகட்டவிடமுண்டோவென்ன (கடலுக்கித்யாதி) அவன்-ஸமுத்ரன். " ஊமெஜாவதஂஸாரநீவஂஊளஸாமஹஊஜநாசு " (முமோசதம்ஸாரந்திப்தம்மஹௌஸாகரதர்ஸநாத்) என்றத்தைப்பற்ற ( மருகாந்தாரத்திலேயென்றது ) சத்ருக்களில்லாதவுத்தமாதிகாரிகளுக்குச்செய்வதென்னென்ன ( அந்நன்றிருவித்யாதி ) தன்னந்தஃபுரத்திலேயென்றது- " உரஸாயாரயாஊஸவாஜ்ஂஸஞ்ஜாஊயவஃ" ( உரஸாதாரயாமாஸபார்த்தம்ஸஞ்சாத்யமாதவ ) என்கிறஸ்லோகத்தில், " ஊயவஃ " (மாதவஃ) என்றத்தைப்பற்ற. அந்தஃபுரம்-திருமார்வு. அவனேயிட்டுக்கொள்ளுகையாவதேதென்ன (பாபங்களித்யாதி) இத்தால்பலிதம் ( அவன்மார்விலேயித்யாதி )

அவன் பலப்ரதனாகவேணுமோ, க்ரியாதிகள் பலப்ரதமாமாலோவென்ன (அபூர்வங்காணித்யாதி) ஸர்வஜ்ஞன் செய்விக்கிறானென்றது- " ஹலஊதஉவவதெஃ " (பலமதஉபபத்தேஃ) இத்யாதியைப்பற்ற. " கிரியாதஹ்வா " ( க்ரியாதச்சக்திர்வா ) இத்யாதிகமநுஸந்தேயம். " குந்தா " என்கிறபதம்-கீழ், சுத்தியோகத்தைச் சொல்லும்படி யெங்ஙனேயென்ன ( குந்தமென்றித்யாதி )

தாத்பர்யாந்தரம் (நீயுஜ்ஜீவிப்பிக்கவித்யாதி) உஜ்ஜீவிப்பிக்கை- * மயர்வறமதிநலமருளுகை. கொள்-கொண்டருளவேணும். திருவுள்ளம்பற்றவேணுமென்றபடி. முன்பும்- * வளவேழுலகுக்குமுன்பும். " வைகுந்தா-திருக்குறளா " என்றத்தைப்பற்ற (பூர்வஜனான நீயென்றது) பூர்வஜனான-முற்பாடனான. பலிதம் (அவனேயித்யாதி)

க்ரமேணாந்வயஃ......................................................................*

# இரண்டாம்பாட்டு.

சிக்கெனச்சிறிதோரிடமும்புறப்படாத்தன்னுள்ளேயுலகுக
ளொக்கவேவிழுங்கிப்புகுந்தான்புகுந்ததற்பின்
மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த் துளக்கற்றமுதமாயெங்கும்
பக்கநோக்கறியானென்பைந்தாமரைக்கண்ணனே.

## ஆறுயிரப்படி.

( சிக்கென ) இப்படி தம்முள்ளேபுகுந்தபின்பு எம்பெருமானுக்குப்பிறந்தஸ்ம்ருத்தியைப் பேசுகிறார்.

ஜகத்ஸ்ருஷ்ட்யாத்யங்யபரதையைப்போக்கிக்கொண் டென்னுள்ளேபுகுந்தான்; புகுந்ததற்பின் அளவிறந்த ஜ்ஞாநாதி சகலகல்யாணகுணவிசிஷ்டனாய், விஜ்வரனாய், ப்ரமுதிதனாய், ஹர்ஷாதிசயத்தாலே புதுக்கணித்த திருக்கண்களையுடையனாய், என்னையல்லதெங்கும் பக்கநோக்கறியானென்கிறார்...........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தம்முடையபக்கல் கலந்து அவனுஜ்ஜ்வலஸ்வரூபனாய்க்கொண்டு ஓரிடத்தி லந்யபரதையற்றிராநின்றானென்கிறார்.

சிறிதோர்-அல்பமான. இடமும்-தேசமும். புறப்படா-புறம்புபோகாதபடி. உலகுகள்-உலகுகளை. தன்னுள்ளே-தன்ஸங்கல்பத்துக்குள்ளே. ஒக்கவே-ஏகப்ரகாரமாக. விழுங்கி-அடக்கி. சிக்கென-இனியொருகாலும் புறப்படாதபடி. புகுந்தான்-என்னுள்ளேபுகுந்தான். புகுந்ததற்பின்-புகுந்தபின். மிக்க-மிகுத்துவருகிற.ஞானவெள்ளம்-ஜ்ஞாநபூர்த்தியாகிற. சுடர்-ப்ரபைக்காஶ்ரயமான. விளக்காய்-ஸ்வரூபமாகிற தேஜோத்ரவ்யமாய். துளக்கு-நான் சிக்கெனப்பிடித்தபின்பு விஶ்லேஷாதிசங்கையால்வந்தநடுக்கமும். அற்று-தீர்ந்து. அமுதமாய்-நிரதிசயபோக்யபூதனுமாய். என்-என்னையேபார்த்திருக்கிற. பை - அழகிய. தாமரை-தாமரைபோன்ற. கண்ணன்-கண்ணையுடையவன். எங்கும்-ஓரிடத்திலும். பக்கம் - பக்கத்தில். நோக்க-நோக்க. அறியான்-அறிகிறிலன்.

என்பக்க லபிநிவேஶம் பத்நீபரிஜநாதிகள் பக்கலிலுங் காண்கிறிலனென்றுகருத்து. ஸ்வரூபாதிகளிலவனுக்குண்டான ஸ்புரிதப்ரகாசமும் ஸ்வஸம்ஶ்லேஷமடியாகவென்று நினைக்கிறார்...........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அவன், "இவர் நம்மைவிடிற்செய்வதென்" என்றதிசங்கைபண்ணபடியைச்சொல்லிற்று - கீழிற்பாட்டில்; இவர், "விடேன்" என்றபின்பு அவனுக்குவடிவிற் பிறந்தபௌஷ்கல்யம் சொல்லுகிறதிப்பாட்டில்.

( சிறிதோரிடமும் புறப்படாத்தன்னுள்ளே யுலகுகளொக்கவே விழுங்கிச் சிக்கெனப்புகுந்தான் ) "நாமாழ்வாரை யநுபவிக்கும்போது,

செருப்புவைத்துத் திருவடிதொழப்புக்காற்போலே யாகவொண்ணாது ” என்றுபார்த்து, ஜகத்ரக்ஷணத்துக்குவேண்டும் ஸம்விதாநமெல்லாம்பண்ணி, அநந்யபரனா யநுபவித்து, போகமாட்டாதேயிருந்தான் ; ராஜாக்களந்தஃபுரத்திற்புகுவது,நாட்டுக்கணக்கற்றபின்பிறே, அத்யல்பமாயிருப்பதொரு பதார்த்தமும் தன்பக்கல்நின்றும் பிரிகதிர்ப்பட்டு நோவுபடாதபடியாகத்தன்ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்திலே லோகங்களை யொருகாலே வைத்து, இனிப்பேராதபடிபுகுந்தான். ( சிக்கெனப்புகுந்தான் ) அநந்ய ப்ரயோஜநமாகப் புகுந்தானென்றுமாம்.

( புகுந்தவித்யாதி ) இவரோடேவந்துகலந்து, அக்கலவியிலதிசங்கையும் தீர்ந்தபின்பாயிற்று விகஸிதஸஹஜ ஸார்வஜ்ஞ்யனுமாய் விஜ்வரனுமாயிற்றது.

தனக்குநித்யதர்மமான ஜ்ஞாநத்தையுடைத்தான ஆத்மவஸ்து, கர்மநிபந்தநமாக வொருதேஹத்தைப் பரிக்ரஹித்து, இந்த்ரியத்வாரத்தை யபேக்ஷித்துக்கொண்டு ப்ரஸரிக்கவேண்டும்படி போந்தது, ஒருநாள்வரையிலே பகவத்ப்ரஸாதமும்பிறந்து ஜ்ஞாநஸங்கோசமும் கழியக்கடவதாயிருக்குமிறே ; அங்ஙனொரு ஹேதுவுமின்றிக்கே யிருக்கிறவனு மிவரோடேவந்து கலப்பதற்குமுன்பு ஸங்குசித ஜ்ஞாநனாய், இவரோடே கலந்தபின்புவிகஸிதமான ஜ்ஞாநவெள்ளத்தையு முடையனானான், திவ்யமங்கள விக்ரஹமும் புகர்பெற்றதிப்போது. ( துளக்கற்று ) * ஆடியாடியிலாற்றாமையால்வந்த உள்நடுக்கமுந்தீர்ந்தா னயிராநின்றான் ; “ விஜ்வர: :’ ( விஜ்வர: ) என்னக்கடவதிறே. “ இவர்நம்மைவிடிற்செய்வதென் ” என்கிற உள்நடுக்கமுமற்றதிப்போது. (அமுதமாய்) “ ப்ரமுமோதஹ ” ( ப்ரமுமோதஹ ) என்கிறபடியே. அவன்தம்மைவிரும்பி போக்யமாக நினைத்திருக்கிறவிருப்புத் தமக்குபோக்யமாயிருக்கிறபடி. ( எங்கும்பக்கநோக்கறியான் ) “ ஆழ்வார்பக்க லிவனுக்குண்டான அதிமாத்ரப்ராவண்யத்தைத் தவிர்க்கவேணும் ” என்றுநாய்ச்சிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கிலுமவர்கள்பக்கல் கண்வைக்கமாட்டுகிறிலன். இங்கே, ஆளவந்தாருக்குக் குருகைக்காவலப்ப னருளிச்செய்ததாக வருளிச்செய்யும்வார்த்தை-“அப்பன்ஸ்ரீபாதத்திலே யொருரஹஸ்யவிசேஷமுண்டு” என்றுமணக்கால் நம்பியருளிச்செய்ய, “ அதுகேட்கவேணும் ” என்று ஆளவந்தாருமெழுந்தருள கங்கைகொண்ட சோழபுரத்தேற, அப்பனுமங்கே யொருகுட்டிச்சுவரிலே யோகத்திலே யெழுந்தருளியிருக்க, “ இவரைஸமாதி பங்கம்பண்ணவொண்ணாது ” என்று சுவருக்குப்புறம்பே பின்னேநிற்க, அப்பனும்யோகத்திலே யெழுந்தருளியிருக்கிறவர் திரும்பிப்பார்த்து, “ இங்குசொட்டைக் குலத்திலாரேனும் வந்தாருண்டோ ” என்றுகேட்டருள, “ அடியேன் ” என்றுஆளவந்தாரு மெழுந்தருளிவ

ந்துகண்டு, "நாங்கள் பின்னே தெரியாதபடிநிற்க இங்ஙனருளிச்செய்கைக்குஹேதுவேன்" என்ன, "நானும்தானுமாகவநுபவியாநின்றால், பெரியபிராட்டியார் திருமுலைத்தடத்தாலே நெருக்கியணைத்தாலு மவள்முகங்கூடப்பாராத ஸர்வேஸ்வரன், என்கழுத்தையமுக்கி நாலுமூன்றுதரமங்கே யெட்டிப்பார்த்தான்; 'இப்படியவன் பார்க்கும்போது சொட்டைக்குடியிலே சிலர் வந்தாருண்டாகவேணும்' என்றிருந்தேன்காணும்" என்றருளிச்செய்தார். (என்பைந்தாமரைக்கண்ணனே) * ஆடியாடி யிலாற்றாமையால்வந்த தாபமுந்தீர்ந்து திருக்கண்களும் குளிர்ந்தது... ..*

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (சிக்கெனவித்யாதி) கீழ்ப்பாட்டில் ப்ரமேயத்தையநுவதியாநின்றுகொண்டு, "மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (அவனித்யாதி) இவர் "பிடித்தேன்கொள்சிக்கென" என்றவநந்தரம், அவனுடையஜ்ஞாநாதிகளிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறு ரென்றிப்பாட்டுக்குஸங்கதியென்றபடி. (அதிசங்கைபண்ண) அதுநிவ்ருத்தமான (படி) என்று கூட்டுவது. "சுடர்விளக்காய்" என்றதைப்பற்ற (வடிவிற்பிறந்த பௌஷ்கல்யமென்றது)

அந்வய ப்ரதர்ஶநபூர்வகம் பாவமாஹ (சிறிதோரிடமுமித்யாதி) ஓரிடமும்-ஒருபதார்த்தமும். செருப்புவைத்துத்திருவடிதொழுகையாவது-ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பெருமாளைத்திருவடிதொழவெழுந்தருள, அவர் ஸ்ரீபாதம் பித்தப்பிளப்பாயிருக்கையாலே ஸ்ரீபாதரக்ஷைகொண்டெழுந்தருளினாரா யத்தைத்திருவாசலிலே வைத்தெழுந்தருளினவளவிலே, ஸ்ரீபாதரக்ஷையிலேதானே திருவுள்ளம்சென்று, "தீர்த்தம்ப்ரஸாதிக்க" என்றருளிச்செய்கிறத்தை, "செருப்புப்ரஸாதித்தருள" என்றாராம். ஸம்விதாநம்-வ்யாபாரம். "சிக்கென" என்றதுக்கர்த்தத்வயம்-அந்யபரதையில்லாதபடியென்னுதல், ப்ரயோஜநாந்தர பரதையில்லாதபடி யென்னுதல். லௌகிகத்ருஷ்டாந்தம் (ராஜாக்களித்யாதி) ஶப்தார்த்தம் (அத்யல்பமாயித்யாதி) பிறிகதிர்ப்பட்டு-தப்பிப்போய். அநந்யப்ரயோஜநமாகவென்றது-ஜகத்ரக்ஷணரூபப்ரயோஜநம் ஸித்திக்கையாலேயென்றபடி.

"புகுந்ததற்பின் மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த்துளக்கற்று" என்னுமளவுக்கர்த்தம் (இவரோடேயித்யாதி) மிகுந்துவருகிற ஜ்ஞாநபூர்த்தியாகிறப்ரபைக்காஶ்ரயமான ஸ்வரூபமாகிற தேஜோத்ரவ்யமாயிதிஶப்தார்த்தம். "புகுந்ததற்பின்" என்கிறவிது-உபலக்ஷணமித்யபிப்ராயேணாஹ (அதிசங்கையுந்தீர்ந்தபின்பாயிற்றென்று) ஞானவெள்ளத்தால்வந்த மிக்கதேஜஸ்ஸையுடையனுயென்றர்த்தாந்தரத்தையும் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (விகஸிதஸஹஜஸார்வஜ்ஞ்யனுமாயென்று) விஜ்வரனுமாயென்றது- "துளக்கற்று" என்றதுக்குபாவம். கர்மவஶ்யனான சேதநனுக்கு ஸம்ஸாரியானநாளில் பகவந்நிக்ரஹமடியாக ஜ்ஞாநஸங்கோசம்பிறக்கக்கடவதாய்,பகவத்ப்ரஸாதமடியாக முக்தனானவவஸ்தையில் ஜ்ஞாநவிகாஸம்பிறக்கக்கடவதாயிருக்கும்; அப்படியொருஹேதுவின்றியிலேயிருக்கிறவனு மாழ்வாரோட்டை விஶ்லேஷத்தாலே ஸங்குசிதஜ்ஞாநனாய், அவரோட்டை ஸம்ஶ்லே

ஷத்தாலே விகஸிதஜ்ஞாநனுயிராநின்ருன்; இதென்னப்ரணயித்வமென்கிருர் (தன க்கித்யாதி) " [illegible] " (ஜ்ஞாநம்வைராக்யமைஸ்வர்யம்தர்மஸ்சமநுஜேஸ்வர । ஆத்மநோப்ரஹ்மபூதஸ்யநித்யமேதச்சதுஷ்டயம்) என்றத்தைப்பற்ற (நித்யதர்மமானவென்றது) தர்மம்-சேஷத்வம். ஐஸ்வர்யம்-நியந்த்ருத்வம். " [illegible] " (ஆத்மாநதேவோநநரோநபஸுர்நசபாதப: । ஸரீராக்ருதிபேதாஸ்துபூபைதேகர்மயோநய:) என்றத்தைப்பற்ற (கர்மநிபந்தநமாக வித்யாதி) இவ்விடத்திலே- " [illegible] " (விஷ்ணுஸக்தி:பராப்ரோக்தாக்ஷேத்ரஜ்ஞாக்யாததாபரா । அவித்யாகர்மஸம்ஜ்ஞாந்யாத்ருதியாஸக்திரிஷ்யதே । யயாக்ஷேத்ரஜ்ஞஸக்திஸ்ஸாவேஷ்டிதாந்ருபஸர்வகா) இத்யாத்யநுஸந்தேயம். இந்த்ரியத்வாரத்தை யபேக்ஷித்துக்கொண்டு என்றவிடத்திலே " [illegible] " (இந்த்ரியாணாம்ஹிஸர்வேஷாம்யத்யேகம்க்ஷரதீந்த்ரியம் । தேநாஸ்யக்ஷரதிப்ரஜ்ஞாத்ருதே:பாதாதிவோதகம்) என்றதநுஸந்தேயம். " [illegible] " பராபித்யாநாத்துதிரோஹிதந்ததோஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ) " [illegible] " (பரஞ்ஜ்யோதிருபஸம்பத்யஸ்வேநரூபேணபிநிஷ்பத்யதே) இத்யாதியைப்பற்ற (ஒருநாள்வரையிலேயித்யாதி) மிக்கஞானவெள்ளத்தையும், " சுடர்விளக்கு " என்று-நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையுமுடையவனென்றர்த்தாந்தரம் (விகஸிதமானவித்யாதி) "விஜ்வரனுமாய்" என்றத்தைவிவரிக்கிருர் (ஆடியாடியித்யாதி) " [illegible] " (க்ருதக்ருத்யஸ்ததாராமோவிஜ்வர:ப்ரமுமோதஹ) இதிஸ்ரீஸங்க்ஷேபே. ஆற்ருமையாலே - ஆழ்வாருடைய வாற்ருமையாலே. உள்நடுக்கம் - அந்த:கம்பம். இதுக்குஸம்வாதம் (விஜ்வரஇத்யாதி) இதுக்கு-பூர்வார்த்தத்திலேநோக்கு. " தளக்கற்று " என்றதுக்கர்த்தாந்தரம் (இவர்நம்மைவிடிலித்யாதி)

எவ்வாகாரத்தாலே போக்யத்வமென்ன (ப்ரமுமோதஹேத்யாதி) " ஹ " என்றது-பெருமாளுடைய ப்ரமோததசையில் போக்யதையைக்கண்ட ருஷியினுடைய ஈடுபாடு.

" எங்கும் " இத்யஸ்யசரமாவதிமாஹ (ஆழ்வார்பக்கலித்யாதி) (அதிமாத்ரப்ராவண்யத்தையிதி) அதிமாத்ரப்ராவண்யம் ஸத்தாநாசகமாகையாலே தவிர்க்கவேணுமென்றபடி. " அவர்கள் பக்கல்கண்வையான் " என்னுமதுக்குஸம்வாதம் (இங்கேயாளவந்தாரித்யாதி)

என்பைந்தாமரைக்கண்ண னித்யாரப்யாந்வய:.............................*



# மூன்றும்பாட்டு.

தாமரைக்கண்ணனைவிண்ணோர்பரவுந்தலைமகனைத்துழாய்விரைப்
பூமருவுகண்ணியெம்பிரானைப்பொன்மலையை
நாமருவிநன்கேத்தியுள்ளிவணங்கிநாமகிழ்ந்தாடநாவலர்
பாமருவிநிற்கத்தந்தபான்மையேவள்ளலே.

## ஆறுயிரப்படி.

(தாமரை) நிரதிசயஸௌந்தர்யலாவண்யாதி கல்யாணகுணவிசிஷ்டனாய், நிரதிசயஸுகந்ததிவ்யமால்யாலங்க்ருதனாய், சேஷசேஷாசநவைநதேயாதிதிவ்யபுருஷர்களாலேஸம்ஸ்தூயமாநனாயிருந்தவனே, நாம்மருவிநன்கேத்தியுள்ளிவணங்கி நாமகிழ்ந்தாடும்படிநம்முடைய நாவிலேயலருகிற சொற்களுக்குத் தன்னைவிஷயமாகத்தருகையே ஸ்வபாமாயிருப்பதே!, என்னவதான்யனேவென்கிறார்............... ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்னைக்கரணத்ரயத்தாலும் நிரந்தராநுபவம்பண்ணுவித்த மஹோதாரனானவன் என்னையொழியவறிகிறிலனென்கிறார்.

தாமரை-தாமரைபோன்ற. கண்ணனை-கண்களையுடையனாய். - அவ்வழகாலே. விண்ணோர்-நித்யஸூரிகள். பரவும் - நிரந்தரமாகப்புகழும்படியான. தலைமகனை-மேன்மையையுடையவனாய். விரை-விரையும். பூ-பூவும். மருவு-மருவின. துழாய்க்கண்ணி-துழாய்மாலையையுடையனாய்க்கொண்டு. எம்-எங்களுக்கு. பிரானை-ஸ்வாமியாய். பொன்மலையை - எங்களோட்டைச்சேர்த்தியாலே பொன்மலைபோலேயோங்கி யுஜ்வலனானதன்னை. நாம் - நாங்கள்விகர்ஷம்பார்த்தகலாதே. மருவி-மருவி. நன்று . ஸூரிகளோபாதியங்ருத்தைக்குத்தகுதியாம்படிநன்றாக. ஏத்தி - ஏத்தி. உள்ளி - அவர்கள்சிந்தையுள் வைக்குமாபோலே நினைத்து. வணங்கி - "வணங்கிவழிபடும்" என்றபடியேதிருவடிகளிலேவிழுந்து. இப்படிகரணத்ரயத்தாலுமுண்டானவநுபவத்தாலே நாம் - நாங்கள். மகிழ்ந்து - ஆநந்திகளாய். ஆட - ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணும்படியாக. நா - நாவிலே. அலர் - அலருகிற. பா-பாவிலே. மருவி - மருவி. நிற்க - திருவாய்மொழிபாடிநிற்கும்படி. தந்த - உபகரித்த. பான்மை - ஸ்வபாவத்துக்கு. ஏய் - பொருந்தின. வள்ளல் - ஔதார்யகுணவிசிஷ்டனானவன்.

எந்தும் பக்கநோக்கறியானென்றந்வயம். பான்மை - ஸ்வபாவம்.........*

## ஈடு - மூன்றும்பாட்டு.

நித்யஸூரிகளுக்கு மவ்வருகானவன்தன்னை நான்தேசிகனாயநுபவிக்கும்படி பண்ணினவிதுவு மோரௌதார்ய மேதாமென்கிறார்.

(தாமரைக்கண்ணனையித்யாதி) ஒருகால் திருக்கண்களாலே குளிரநோக்கினால், அதிலேதோற்று ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவுகெட வேத்தாநிற்பர்களாயிற்று நித்யஸூரிகள். "ஶ்ரூயதோயமர்த்தோராமஸ்யஜாமதக்ந்யஸ்யஜல்பத:" (ஶ்ருதோயமர்த்தோராமஸ்யஜாமதக்ந்யஸ்யஜல்பத:) என்கிறபடியே. (தலைமகனை) இவர்களேத்தாநின்றாலும், "நிரவத்ய:பர:ப்ராப்தே:" (நிரவத்ய:பர:ப்ராப்தே:) என்றுஅவன் பரனாயிருக்கும். (துழாயித்யாதி) நித்யஸூரிகளைக் கண்ணழகாலே தோற்பித்தான், இவரைக்கண்ணியிலே யகப்படுத்தினான். மார்வில் மாலையைக்காட்டி மாலாக்கினான். விரை - பரிமளம். விரையும் பூவும்மருவி யிருந்துள்ளதுழாய்க் கண்ணியெம்பிரானை. (பொன்மலையை) என்னோட்டைக்கலவியாலே அபரிச்சிந்நமான வழகையுடையனாய், கால்வாங்கமாட்டாதே யிருக்கிறவனை. நானேத்தப்பெற்றபடியாலே வளர்ந்தபடியென்னவுமாம். ஆக, இத்தால் - இவரைப்பெற்றபின்பு வளர்ந்து புகர்பெற்றபடி. (நாமருவி) "அருவினையேன்" என்றகலக்கடவநாம்கிட்டி. (நன்கேத்தி) நித்யஸூரிகளேத்தக்கடவ விஷயத்தைநன்றாகவேத்தி; * வானவர்சிந்தையுள் வைத்துச்சொல்லும்செல்வனை, எந்தையேயென்பன் என்றகன்றவரிறே. "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று வேதங்களுங்கூட மீண்டவிஷயத்தை மறுபாடுருவவேத்தியென்றுமாம். (உள்ளி) "நினைந்து" என்று - அநுஸந்தாநத்துக்கு ப்ராயஸ்சித்தம்பண்ணத்தேடாதே யநுஸந்தித்து. (வணங்கி) குணபலாத்க்ருதராய் நிர்மமராய்வணங்கி. "வணங்கினால், உன்பெருமை மாசூணாதோ" என்னும்நாம்வணங்கி. (நாமகிழ்ந்தாட) பகவதநுபவத்தால்வந்த ப்ரீதிதத்வம் கணுக்கண்டறியாதநாம் ஹ்ருஷ்டராயதுக்குப் போக்குவிட்டாட. (நாவலரித்யாதி) நாட்பூவலருமாபோலே ஜிஹ்வாக்ரத்திலே விகஸியாநின்றுள்ள சந்தஸ்ஸானது என்பக்கலிலே நிற்கும்படியாகத் தந்தவிதுதன்னைஸ்வபாவமாகவுடையையா யிருக்கிறபரமோதாரனே. (நாவலர்பா) மநஸ்ஸஹகாரமும் வேண்டாதபடியாயிருக்கை.

தாமரைக்கண்ணனாய், விண்ணோர் பரவுந்தலைமகனாய், துழாய்விரைப்பூ மருவுகண்ணி யெம்பிரானாய், பொன்மலையாயிருக்கிறதன்னை, நாம்மருவிநன்கேத்தியுள்ளி வணங்கிநாம் மகிழ்ந்தாடும்படி, நாவலர் பாமருவிநிற்கத்தந்த பான்மையேய்ந்த வள்ளலேயென்று சொல்லுகிறாராகவுமாம். அன்றியே, "தாமரைக்கண்ணனை" என்கிறஐகாரத்தை - அவ்யயமாக்கி, தாமரைக்கண்ணனாய் - பொன்மலையாயிருக்கிறநீ, நாமருவி - நா

வலர் பாமருவிநிற்கத்தந்தபான்மையே - இதுவுமொருஸ்வபாவமே! ; வள்ளலே - ப்ரமோதாரனே என்கிறுராகவுமாம்..............................*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. ( தாமரையித்யாதி ) " விண்ணோர் பரவும்தலைமகனை, நாவலர் பாமருவிநிற்கத்தந்த பான்மையேவள்ளலே " என்றபதங்களைக் கடாக்ஷித்த வதாரிகை ( நித்யஸூரிகளுக்குமித்யாதி )

" தாமரைக்கண்ணனை, விண்ணோர் பரவும்தலைமகனை " என்கிறபதச்சேர்த்திக்குபாவம் ( ஒருகாலித்யாதி ) பரவுகை - அடைவுகெடக்கூப்பிடுகை. இது - பக்திபாரவஶ்யக்ருதம். " பரவும் " என்றதுக்கு ஸம்வாதம் ( ஶ்ருதோயமித்யாதி ) " நாரதஸ்யசதேவர்ஷேஃக்ருஷ்ணத்வைபாயநஸ்யச " ( நாரதஸ்யசதேவர்ஷேஃக்ருஷ்ணத்வைபாயநஸ்யச ) இத்யுத்தரார்த்தம். இதம்ப்ரமாணம் மோக்ஷதர்மே. ஜல்பதஃஎன்று - தஸில்ப்ரத்யயாந்தமான அவ்யயமாய், ராமனுடைய ஜல்பத்தினாலே கேட்கப்பட்டதென்றபடி. ஜல்பநம் - அக்ரமமாகச்சொல்லுகை. தலைமகனை - முதன்மையையுடையவனை. ( நிரவத்யஇத்யாதி ) பஞ்சமேம்ஶேப்ரதமே; " நிரவத்யஃபரஃப்ராப்தேர்நிரதிஷ்டோக்ஷரக்ரமஃ। ஸர்வேஶ்வரபராதாரதாம்நாந்தாமாத்மகாக்ஷய " ( நிரவத்யஃபரஃப்ராப்தேர்நிரதிஷ்டோக்ஷரக்ரமஃ। ஸர்வேஶ்வரபராதாரதாம்நாந்தாமாத்மகாக்ஷய. ) ( பரஃப்ராப்தேஃ ) ப்ராப்தேஃ பரஃ - ப்ராப்துமசக்யஇத்யர்த்தஃ. நிரதிஷ்டஃ - நிராதாரஃ. க்ரமஃ - அப்ரதிபந்தமஹோத்ஸாஹஃ. ஸர்வேஶ்வரபராதார - ஸர்வேஷாமீஶ்வராணாம்பராதார. தாம்நாந்தாமாத்மக - ஜ்யோதிஷஞ்ஜ்யோதிரித்யர்த்தஃ.

" கண்ணியெம்பிரானை " என்றபதத்தைக் கடாக்ஷித்துரஸோக்தி ( நித்யஸூரீத்யாதி வாக்யத்வயமும் ) அந்வயம் ( வினையுமித்யாதி ) " எம்பிரானை ", பொன்மலையை " இதிபதஸங்கதிஸித்தம்பாவமாஹ ( என்னோட்டையித்யாதி ) " நன்கேத்தி " என்றத்தைக்கடாக்ஷித்தர்த்தாந்தரம் ( நானேத்தவித்யாதி ) பலிதம் ( ஆகவித்தாலித்யாதி ) உக்த்தார்த்தத்வயத்தாலு மென்றபடி.

" நாம் " என்றபதத்தை - " மருவி, நன்கேத்தி, உள்ளி, வணங்கி, " என்றபதங்களோடே ப்ரத்யேகமந்வயித்து, அத்தால் - ஔதார்யாதிசயந் தோன்றுகிறதென்று திருவுள்ளம்பற்றி, ப்ரதிபதம் ப்ரதிகோடிஞ்சதர்ஶயதி ( அருவினையேனித்யாதியாலும், வானவர் சிந்தையுள் வைத்தித்யாதியாலும், நினைந்தென்றித்யாதியாலும், வணங்கினுலுன்பெருமை யித்யாதியாலும், பகவதநுபவத்தா லித்யாதியாலும் ) அருவினையேனென்றதுக்கு - " வளவேழுலகின்முதலாய வானோரிறையை " இத்யாதௌஹ்ருதயம். " விண்ணோர்பரவும்தலைமகனை " இத்யேதத்ருதிநிதாயாஹ ( நித்யஸூரிகளைத்தவித்யாதி ) நன்மைக்குபாவம் ( வானவரித்யாதி ) ஆகையாலே நித்யஸூரிகளைப்போலே நன்றாகவேத்தியென்று ( அகன்றவரிறே ) என்றவநந்தரம் வாக்யத்தைப்பூரிப்பது. நன்மைக்கர்த்தாந்தரம் ( யதோவாசயித்யாதி ) விஷயத்தை - அபரிச்சிந்நவிஷயத்தை. மறுபாடுருவவென்றது - நன்மையினர்த்தம். மறுபாடுருவுகை - பின்னேபுறப்படுகை. யாவதவகாஹநத்தைச் சொல்

லுகிறது. ஆக, "நன்கேத்தி" என்றநுக்கர்த்தத்வயம் - அயோக்யதாநு ஸந்தாநத்தாலே யகன்றநாணது தவிர்ந்து நித்யஸூரிகளைப்போலே நன்ருகவேத்தியென்னுதல், அபரிச்சிந்நவிஷயத்தை மறுபாடுருவவேத்தி யென்னுதலென்று. (நினைந்தென்றுஇதி) அஸ்ய "என்பன் நினைந்துநைந்து" இத்யத்ரஹ்ருதயம். ப்ராயஸ்சித்தம்பண்ணத்தேடாதே - அயோக்யதாநு ஸந்தாநத்தாலகலநினையாதே. குணம் - ஸௌஶீல்யாதி. ப்ரதியோகியோடே கூட்டிவிவரணம் (வணங்கிஞலித்யாதி) அதுக்கு - ப்ரீதிதத்வத்துக்கு. போக்குவிட்டு - வழிவிட்டு.

நாட்பூ - ஸத்யோவிகஸிதபுஷ்பம். சப்தார்த்தம் (ஜிஹ்வாக்ரத்திலேயித்யாதி) சந்தஸ்ஸாகில் நாவினுலேயன்றேவலருவது, "நாவலர்" என்றுவிஶேஷிப்பானென்னென்ன (மகஸ்ஸஹகாரமித்யாதி)

முந்தினவந்வயம்-பரோக்ஷநிர்த்தேசமாய், பான்மையோடேகூடின வௌதார்யமிருந்தபடி யென்னென்றீடுபாடு. த்விதியாந்வயம்-அபரோக்ஷநிர்த்தேசமாய் ப்ரதமாந்தமாகக் கண்டுகொள்வது. பான்மை- ஸ்வபாவம். பான்மையேய்ந்த-ஸ்வபாவமாக வுடையையாயிருக்கிற. வள்ளலேயென்கிறது - ஸம்போதனை..........*

---

## நான்காம்பாட்டு.

வள்ளலேமதுசூதனுவென்மரதகமலையேயுனைநினைந்
தெள்கறந்தவெந்தாயுன்னையெங்ஙனம்விடுகேன்
வெள்ளமேவுநின்புகழ்குடைந்தாடிப்பாடிக்களித்துகந்துகந்
துள்ளநோய்களெல்லாந்துரந்துய்ந்துபோந்திருந்தே.

### ஆருயிரப்படி.

(வள்ளலே) ஆஶ்ரிதர்க்காத்மதாநம் பண்ணும்ஸ்வபாவனே, தத்விரோதிநிரஸந ஸ்வபாவனே, என்னுடைய பரமபோக்யமே, உன்னைநினைந்தால் நீராயுருகும் ப்ரக்ருதியாக வென்னைப்பண்ணினவனே, உன்னுடைய ஏவம்விதமான கல்யாணகுணங்களாகிற அம்ருதவெள்ளத்தைக்குடைந்தாடிப்பாடிக்களித் துகந்துகந்துள்ள நோய்களெல்லாந் துரந்துய்ந்துபோந்திருந்துன்னை யெங்ஙனேவிடும்படி யென்கிருர்..................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸர்வப்ரகாரோபகாரகனுனவுன்னை விடப்போமோவென்கிருர்.

வள்ளலே - அர்த்தித்வநிரபேக்ஷமாக வுபகரிக்கும்மஹோதாரனுய். மதுசூதனு - உபகாரங்கொள்ளுகிற வென்விரோதியை மதுவையழித்தாற்போலேயழிக்குமவனுய். என் - நிவ்ருத்தவிரோதிகனுனவெனக்கு. மரதகமலையே - உத்துங்கமா யுஜ்வலமானமரதகமலைபோலே யிருக்கிறவடிவை யநுபவிப்பிக்குமவனுய். "மாற்பான்மனஞ்சுழிப்பமங்கையர்தோள்கைவிட்டு" என்கிறபடியே உனை - உன்னை. நினைந்து - அநுஸந்தித்து. எள்கல் - இதரவிஷயங்களையிகழும்ஸ்வபாவத்

ணைத, தந்த - தந்த. எந்தாய் - ஸ்வாமியே. வெள்ளமேபுரை - பெருங்கடல்போலேயபரிச்சிந்நமான. நின் - உன்னுடைய. புகழ் - குணங்களை. குடைந்து - அவகாஹித்தநுபவித்து. ஆடிப்பாடி - அந்தப்ரீதியாலே ஆடுவதுபாடுவதாய். களித்து - களித்து. உகந்துகந்து - அதோரளவில்நில்லாதேமேன்மேலனவுகந்து. உள்ளநோய்களெல்லாம் - அஹங்காரார்த்தகாமங்கள், அநுபவவிஶ்லேஷம், நிகர்ஷாநுஸந்தாநம்முதலாக வுள்ளநோய்களையெல்லாம். துரந்து - தூரப்போம்படியகற்றி. உய்ந்து - லப்தஸத்தாகனாய். போந்து - ஸம்ஸாரஸ்த்திருலைந்து உன்னளவும்போந்து. இருந்து - "ஹாயந்நாஸ்தே" (காயந்நாஸ்தே) என்றநுபவித்துக்கொண்டிருக்கப்பெற்றுவைத்து. உன்னை - இப்படியுபகாரகனானவுன்னை. எங்ஙனம் - எங்ஙனே. விடுகேன் - விடுவேன்..............................*

---

## ஈடு - நான்காம்பாட்டு.

"நாமருவிநன்கேத்தியுள்ளி வணங்கிநாமகிழ்ந்தாட" என்று - தம்முடையநைச்யத்தை யநுஸந்தித்தவாறே, "இவர்நம்மைவிடிற்செய்வதென்" என்று, அவனதிசங்கைபண்ண, நிர்ஹேதுகமாக வுன்வடிவழகை நீயென்னையநுபவிப்பிக்க அநுபவித்து அத்தாலேசிதிலனானநானுன்னைவிட ஸம்பாவனையுண்டோ வென்கிறார்.

(வள்ளலே) நிர்ஹேதுகமாகவுன்னை யெனக்குத்தந்த பரமோதாரனே. (மதுசூதனா) நீயுன்னைத்தருமிடத்தில் நான் ஸ்வீகரியாதபடி பண்ணும்விரோதிகளை, மதுவாகிற அசுரனை நிரஸித்தாற்போலே நிரஸித்தவனே. (என்மரதகமலையே) உன்னைநீயாக்கும்படி யுன்னிலும்சீரியதாய், ஶ்ரமஹரமாய், அபரிச்சேத்யமான வடிவழகையன்றோ எனக்கௌதார்யம்பண்ணிற்று. (உனைநினைந்தெள்கல்தந்தவெந்தாய்) உன்னையநுஸந்தித்தால், இதரவிஷயங்களை நான்விடும்படி பண்ணினவனேயென்னுதல், அன்றிக்கே, எள்கலாவது. ஈடுபாடாய் உன்னை யநுஸந்தித்தால் "காலாழும்நெஞ்சழியும்கண்சுழலும்" என்கிறபடியே அள்ளியெடுக்கவேண்டும்படிபண்ணித் தந்தவென்னையனே யென்னுதல். (உன்னையெங்ஙனம்விடுகேன்) "உதாரனல்லை" என்றுவிடவோ, "விரோதிநிரஸநனல்லை" என்றுவிடவோ, "உனக்குவடிவழகில்லை" என்றுவிடவோ, உன்விஷயத்திலேயிப்படி யீடுபட்ட நான் உன்னைவிட ஸம்பாவனையுண்டோவென்னுதல்; உன்னையநுஸந்தித்தால், இதரவிஷயங்களில் விரக்தனான நான்விடஸம்பாவனை யுண்டோவென்னுதல். இனிமேலெல்லாமவனதி சங்கையைத்தீர்க்கிறார் (வெள்ளமேயித்யாதி) கடலோடொத்திருந்துள்ள வுன்னுடைய கல்யாணகுணங்களை நாலுமூலையும்புக்கு வ்யாபித்து, நான்மறுநனைந்து ப்ரீதிப்ரேரிதனாய்க் கொண்டுபாடி, அத்தாலேசெருக்கி மிகவும்ப்ரீதனாய். (உள்ளநோய்களெல்லாம்துரந்து) கர்மநிபந்தநமாகவருமவை, உன்னைப்பிரிந்துபடுமவை, "அயோக்யன்" எ

ன்றகன்றுவ்ருமவை, இத்யாதிகளெல்லாவற்றையுமோட்டி. ( உய்ந்து ) "ஸந்தமேநந்ததோவிது:" ( ஸந்தமேநந்ததோவிது: ) என்கிறபடியேயுஜ்ஜீவித்து. ( போந்து ) ஸம்ஸாரிகளைவிட்டு வ்யாவ்ருத்தனாய். ( இருந்து ) நிர்ப்பரனாயிருந்து - வள்ளலேமதுசூதனா - உன்னையெங்ஙனம் விடுகேன்.......................................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. ( வள்ளலேயித்யாதி ) ( தம்முடையநைச்யத்தையிதி ) "நாம்" - ப்ரீதிதத்வம் கணக்கண்டறியாத நாமென்கையாலே - நைச்யம்த்யோதிதமென்றபடி. ( அதிசங்கைபண்ண ) நைச்யாநுஸந்தாந மதிசங்காஹேதுவென்றபடி. வடிவழகையென்றது - "மரதகமலை" என்றத்தைப்பற்ற. "எள்கல்" என்றபதத்தின் த்விதியார்த்தத்திலேநோக்காக ( சிதிலனானானென்றது ) விடஸம்பாவனை யுண்டோவென்றது - "எங்ஙனம் விடுகேன்" என்றத்தைப்பற்ற.

ஹேதுபூர்வகமாகத்தரில், அது ஔதார்யமல்லாமையாலே ( நிர்ஹேதுகமாகவென்கிறார் ) "மதுசூதனா" என்றது - த்ருஷ்டாந்தார்த்தம்.

உன்னைநீயாக்கும்படி - உன்னை "பரன்" என்றுப்ரகாசிப்பிக்கிறபடி யென்றபடி. இங்கே - "ரூபவஸ்ரியாபரமயா" ( ரூபஸ்ரியாபரமயா ) இத்யாத்யநுஸந்தேயம். * மரதகமலையின் தாத்பர்யம் ( உன்னிலும்சீரியதாயித்யாதி ) சீரியதாய் - போக்யமாய்.

"எள்கல்" என்றதுக்கர்த்தத்வயம் - த்யாகமும், ஈடுபாடும். முந்தினது ( உன்னையித்யாதி ) ( காலாழுமித்யாதி ) கால் தடுமாறுகிற்கும், நெஞ்சு சிதிலமாகாநிற்கும், கண்சுழலாநிற்குமென்றபடி. அள்ளியெடுக்க - வாரியெடுக்க.

எங்ஙனம் - எந்தப்ரகாரத்தாலே. "எங்ஙனம்" என்றத்தை விவரிக்கிறார் ( உதாரனித்யாதி ) "வள்ளலே" இத்யாதிபதங்கள் - ஹேதுகர்ப்பங்கள். "எள்கல்" என்கிறபதத்தி னர்த்தத்வயத்தையும் வ்யுத்க்ரமமாக வருளிச்செய்கிறார் ( உன்விஷயத்திலித்யாதி )

வெள்ளமேபுரை - ( கடலோடொத்திருந்துள்ள ) அபரிச்சின்னமான வென்றபடி. "குடைந்து" என்றதினர்த்தம் ( நாலுமூலையும்புக்குவ்யாபித்தென்றது ) அதாவது - அவகாஹித்தநுபவித்தென்றபடி. மறுகணைந்து - மறுபாடுருவநணைந்து. பூர்ணாநுபவம் பண்ணியென்றபடி. இது "குடைந்து" என்றதில் ஸித்தமானவர்த்தம். "ஆடி" என்றதின் தாத்பர்யமாதல். ஆடி - அவகாஹித்து. களித்து - ( செருக்கி ) உகந்துகந்து ( மிகவும்ப்ரீதனாய் ) தூரந்து - தூரத்தி. போந்து - ஸாம்ஸாரிக ஸ்த்திதிகுலைந்தன் னளவும்போந்து.

வெள்ளமேபுராதொடங்கி, போந்திருந்து - வள்ளலேதொடங்கி, எள்கல் தந்தவெந்தா யுன்னையெங்ஙனம்விடுகேனித்யந்வய:. .......................................*

---

# ஐந்தாம்பாட்டு.

உய்ந்துபோந்தென்னுலப்பிலாதவெந்தீவினைகளைநாசஞ்செய்துன
தந்தமிலடிமையடைந்தேன்விடுவேனோ
வைந்துபைந்தலையாடரவணைமேவிப்பாற்கடல்யோகநித்திரைச்
சிந்தைசெய்தவெந்தாயுன்னைச்சிந்தைசெய்துசெய்தே.

## ஆறாயிரப்படி.

(உய்ந்து) த்வதநுபவ ஜநிதமான ப்ரீதியாலே களித்தாடுகிறதிருவநந்தாழ்வான்மேலே யுன்னுடைய திவ்யரூபகுணங்களை யநுபவித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற வுன்னையநுபவித் துய்ந்துபோந்திருந்து, என்னுடைய முடிவில்லாத மஹாதுக்கங்களைப்போக்கி உன்னந்தமிலடிமையடைந்தேன்; இனிவிடுவேனோ வென்கிறார்................. .....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், த்வதநுபவஜநித கைங்கர்யபோக்யத்தைப்பெற்றநான் விடும்படியென்னென்கிறார்.

பாற்கடல் - திருப்பாற்கடலிலே. ஐந்து - ஐந்துவகையாய். பை - விரிந்த. தலை - பணங்களையுடையவனாய். ஆடு - அசைந்துவருகிற. அரவணை - திருவரவணையின்மேலே. மேவி - பொருந்தக்கண்வளர்ந்து. யோகம் - ஜகத்ரக்ஷணயோகத்தில்நிப்ருததையாலே. நித்திரை - உறங்குவாரைப்போலே. சிந்தைசெய்த - ரக்ஷணப்ரகாரசிந்தைபண்ணின. எந்தாய் - என்ஸ்வாமியே. உன்னை - இப்படிரக்ஷகத்வத்தை ப்ரகாசிப்பித்தவுன்னை. சிந்தைசெய்துசெய்து - நிரந்தராநுஸந்தாநம்பண்ணி. உய்ந்து - லப்தஸ்வரூபனாய். போந்து - அந்யபரரானஸம்ஸாரிகளில்வ்யாவ்ருத்தனாய். என் - நானேயெனக்குத்தேடிக்கொண்டு. உலப்பிலாத - அஸங்க்யாதமாய். வெம் - க்ரூரமாய். தீ - அக்நிகல்பமான. வினைகளை - பாபங்களை. நாசஞ்செய்து - நசிக்கும்படிபண்ணி. உனது - ப்ராப்தனானவுன்னுடைய. அந்தமில் - அபரிச்சிந்நமான. அடிமை - கைங்கர்யபோகத்தை. அடைந்தேன் - கிட்டப்பெற்றநான். விடுவேனோ - விடக்ஷமனல்லன்.

ஆஶ்ரிதவிஷயத்திலுனக்குப் பொருத்தமில்லாமல் விடுகிறேனோ, அவர்கள் ரக்ஷணத்தில் உனக்குச்சிந்தையில்லாமல் விடுகிறேனோ, உன்னநுபவத்திலெனக்கு சீலநமில்லாமல் விடுகிறேனோ, என்ஸ்வரூபம் ப்ரகாசியாமல் விடுகிறேனோ, விஷயாஸக்தரான ஸம்ஸாரிகளோடு பொருத்தமுண்டாய் விடுகிறேனோ, ப்ரதிபந்தகமான பாபமுண்டாய் விடுகிறேனோ, ப்ராப்யமான கைங்கர்யத்தில் சுவடறியாமல் விடுகிறேனோ, இப்படி லப்தாபீஷ்டனான நான்விடுவேனோ வென்றுகருத்து....*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஆத்மாந்ததாஸ்யத்திலே அதிகரித்தநான் உன்னைவிட ப்ரஸங்கமுண்டோவென்கிறார்.

(உய்ந்துபோந்து) நானுளேனாய், ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாய்ப்போந்து. (என்னுலப்பிலாதவித்யாதி) என்னுடைய, முடிவின்றிக்கேயிருந்துள்ள கொடியபாபங்களை வாஸனையோடேபோக்கி, உன்றிருவடிகளிலே ஆத்மாந்ததாஸ்யத்திலே அதிகரித்தநான், இனிவிட ப்ரஸங்கமுண்டோ. (விடுவேனோ) விஷயாந்தரங்களை விரும்பினேனோ விடுகைக்கு, ஸ்வரூபஸித்தியின்றிக்கே யொழிந்துவிடுகிறேனோ, தாஸ்யபரிமளத்தில்சுவடறியாமல்விடுகிறேனோ, எனக்குத்தெவிட்டிவிடுகிறேனோ, (ஐந்தித்யாதி) அடிமையிற்சுவடறிந்த திருவநந்தாழ்வா னுன்னைவிடிலன்றோ நானுன்னைவிடுவது. பெருவெள்ளத்துக்குப் பலவாய்த்தலைகள்போலே பகவதநுபவத்தால் வந்தஹர்ஷத்துக்குப் போக்குவீடாகப் பலதலைகளையுடையனாய், மதுபானமத்தனைப்போலே ஆடாநிற்பானாய், ஶைத்யஸௌகுமார்ய ஸௌகந்த்யங்களையுடையனான திருவநந்தாழ்வான்மேலே, திருப்பாற்கடலிலே, "ஸகலப்ராணிகளும் கரைமரஞ்சேர்ந்ததாம்விரகென்" என்றுயோக நித்ரையிலே திருவுள்ளஞ்செய்த என்னையனானவனே. (யோகநித்திரை) "ஆத்மாநம்வாஸுதேவாவ்யம்சிந்தயந்" (ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்) என்கிறபடியேதன்னை யநுஸந்தித்தல்.

(எந்தாய்) நீர்மையைக்காட்டி யென்னை யநந்யார்ஹனாக்கினவனே. (உன்னைச்சிந்தைசெய்துசெய்து) நான்நினைக்கைக்கு க்ருஷிபண்ணினவுன்னை நினைத்துவைத்துவிட ப்ரஸங்கமுண்டோ....................*

---

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (உய்ந்தித்யாதி) "உனதந்தமிலடிமையடைந்தேன்விடுவேனோ" என்றத்தைப்பற்ற வவதாரிகை (ஆத்மாந்தேத்யாதி) ஆத்மாந்ததாஸ்யம்- யாவதாத்மபாவியான கைங்கர்யம்.

(நானுளேனாய்) "உன்னைச்சிந்தைசெய்துசெய்து - உய்ந்துபோந்து" என்றந்வயத்திலே தாத்பர்யம். உன்னைநிரந்தராநு ஸந்தானம்பண்ணி லப்தஸ்வரூபனாயென்றபடி. ஸம்ஸாரிகளில் - அந்யபரரான ஸம்ஸாரிகளில்.

முடிவின்றிக்கே - அஸங்க்யாதமாய். வெந்தீ - க்ரூரமாய், அக்நிகல்பமான.

அந்தமிலடிமை - அபரிச்சின்னமாய் நித்யமானவடிமை. தாஸ்யம்செய்வது திருவடிகளிலேயாகையாலே (உன்றிருவடிகளிலேயென்கிறார்)

"உனது" என்றத்தைக்கடாக்ஷித்து (விஷயாந்தரங்களையித்யாதி) "உய்ந்து" என்றத்தைப்பற்ற (ஸ்வரூபஸித்தீத்யாதி) "அடிமை" என்றத்தைப்பற்ற (தாஸ்யபரிமளமித்யாதி) சுவடு - ரஸம். "அந்தமில்" என்றத்தைப்பற்ற (தெவிட்டிவிடுகிறேனோவென்றது) தெவிட்டல் - அதித்ருப்தியாலே வேண்டியிராமை.

"விடுவேனோ" என்றவநந்தரம் திருவநந்தாழ்வானைச் சொல்லுகிறதுக்கு பாவம் (அடிமையிலித்யாதி) "ஐந்து" என்றதுக்குபாவம் (பெருவெள்ளத்துக்

இத்யாதி ) வாய்த்தலைகள் - வாய்க்கால்கள். பைந்தலை - பரந்ததலைகள், பலவாய்த்தலைகளென்றது - தாத்பர்யார்த்தம். " அரவு " என்றதிக்குபாவம் ( ஸைத்யேத்யாதி ) ( திருவநந்தாழ்வான்மேலே ) பொருந்தினென்று - " மேவி " என்றதுக்கர்த்தமாகக் கூட்டுவது.

" யோகஸ்ஸந்நஹநோபாயத்யாநஸங்கதியுக்திஷு " ( யோகஸ்ஸந்நஹநோபாயத்யாநஸங்கதியுக்திஷு ) என்றதிலுபாய விவக்ஷயாபாவம் ( ஸகலப்ராணிகளுமித்யாதி ) த்யாநவிவக்ஷயா அர்த்தாந்தரம் ( ஆத்மாநமித்யாதி ) ஷஷ்டேம்ஸேசதுர்த்தே, " ஆத்மமாயாமயீம் திவ்யாம் யோகநித்ராம் ஸமாகத: ஆத்மாநம் வாஸுதேவாக்யம் சிந்தயந் மதுஸூதந: " ( ஆத்மமாயாமயீந்திவ்யாம்யோகநித்ராம்ஸமாகத: । ஆத்மாநம்வாஸுதேவாக்யஞ்சிந்தயந்மதுஸூதந: ) யோகரூபநித்ரையிலே சிந்தைசெய்கையாவது - யோகரூபநித்ரையைப்பண்ணுகை. நீர்மையைக்காட்டியென்றது - " பாற்கடல் " இத்யாதியைப்பற்ற. " யோகநித்திரை " என்றதின் முர்த்தினவர்த்தத்தைக்கடாக்ஷித்து ( நான்நினைக்கைக்கித்யாதி ) உன்னைச் சிந்தைசெய்துசெய்து - உன்னைநிரந்தரமாக வநுஸந்தாநம்பண்ணி.

ஐந்துபைந்தலைதொடங்கி. எந்தாயுன்னைச் சிந்தைசெய்துசெய்து - உய்ந்துபோந்துதொடங்கி, அடிமையடைந்தேன் விடுவேனோவித்யந்வய:................*

---

# ஆறம்பாட்டு.

உன்னைச்சிந்தைசெய்துசெய்துன்னெடுமாமொழியிசைபாடியாடியென்
முன்னைத்தீவினைகண்முழுவேரரிந்தனன்யா
னுன்னைச்சிந்தையினலிகழ்ந்தவிரணியனகன்மார்வங்கீண்டவென்
முன்னைக்கோளரியேமுடியாததென்னெனக்கே.

## ஆறுயிரப்படி.

( உன்னை ) இப்படியுன்னை ஸர்வகரணங்களாலு மநுபவித்து என்னுடையஸமஸ்த ப்ரதிபந்தகங்களையும்போக்கினேன், ஆஶ்ரிதனுன்னைக்கோலுவதற்குமுன்பவனுடைய இஷ்டத்தை முடித்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவனானவனே, எனக்குமுடியாததென்; இந்தஸ்ம்ருத்தியெல்லாமுன்னுடையப்ரஸாதத்தாலேவிளைந்ததென்கிறார்..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தக்கைங்கர்யலாபத்தாலே தம்முடைய ஸர்வாபீஷ்டமும் தலைக்கட்டிற்றென்கிறார்.

உன்னை - வகுத்தஸ்வாமியுமாய் உபகாரகனுமானவுன்னை. சிந்தையினால் - நெஞ்சாலே. இகழ்ந்த - அநாதரித்த. இரணியன் - ஹிரண்யனுடைய. அகல் - பெரிடமுடைத்தான. மார்வம் - மார்வை. கீண்ட - அநாயாஸேநகிழித்தவனாய். என்-

விரோதிநிவ்ருத்திக்குநிதர்ஶநபூதனுய். முன்னை - ஆஶ்ரிதனுன்ப்ரஹ்லாதன் நினைவுக்குமுற்கோலின. கோளரியே - நரஸிம்ஹமானவனே. உன்னை - இப்படிஆபத்ஸகனுய்ப்ராப்தனுய்போக்யனுனவுன்னை. சிந்தைசெய்துசெய்து - நிரந்தராநுஸந்தாநம்பண்ணி. நெடு - அந்தப்ரீதியாலேயுத்துங்கமான. உன் - உன்னுடையகுணவாசகமான. மொழி - திருவாய்மொழியை. மா - அவ்விஷயத்துக்கீடானபெருமையுடைய. இசை - இசையோடே. பாடி - பாடி. ஆடி - அப்பாட்டுக்கீடானவபிநயந்தோற்றும்படியாடி. இப்படிகரணத்ரயத்தாலுமுண்டான போகத்தாலே என்-என்னுடைய. முன்னைத்தீவினைகள்-அநாதிகாலார்ஜிதபாபங்களை. "ெநாவஜநம் ஸ்மரந்" (நோபஜநம்ஸ்மரந்) என்னும்கணக்கிலே, யான்-நான். முழுவேரரிந்தனன் - ஒன்றொழியாமல் வேரோடேயரிந்தேன். போக்த்ருத்வமித்தலையிலே யானவோபாதி, விரோதிநிவர்த்தகத்வமும் இங்கேயாகக்குறையில்லையிறே. ஸ்வரூபம் தத்ப்ரகாரமானபின்பு, எனக்கு - எனக்கு. முடியாதது - தலைக்கட்டாதது. என்-எதுதான்.

ஸர்வாபீஷ்டமும் ஸித்தமன்றோவென்று கருத்து.........................*

---

## ஈடு - ஆறும்பாட்டு.

ஆஶ்ரிதனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தோற்றுவானொருவனுனபின்பு எனக்கொரு கர்த்தவ்யாம்ஶமுண்டோவென்கிறுர்.

(உன்னைச்சிந்தைசெய்துசெய்து) இனிமையாலே விடவொண்ணுதிருக்கிறவுன்னை மாறுதேயநுஸந்தித்து. (உன்னை) போக்யனுமாய்ப்ராப்தனுமானவுன்னை. (சிந்தைசெய்துசெய்து) "நிதி஧்யாஸிதவ்யஃ" (நிதித்யாஸிதவ்யஃ) என்கிற விதிப்ரேரிதனுயன்றிக்கே, போக்யதையாலே விடமாட்டாதே அநவரதபாவனைபண்ணி. (உன்னித்யாதி) நெடுமையும், மஹத்தையும் - மொழிக்கும், இசைக்கும் விஶேஷணம். இயலிற்பெருமையும், இசையிற்பெருமையுஞ் சொல்லுகிறது. இயலுமிசையும் கரைகாணவொண்ணுதபடி யிருக்கிற மொழியைப்பாடி, அதிருந்தவிடத்தி லிருக்கவொட்டாமைஆடி. (என்னித்யாதி) என்னுடைய ப்ராக்தநமான கர்மங்களை வாஸனையோடேபோக்கினேன். முழுவேர் - வேர்முழுக்கவென்றபடி. பக்கவேரோடேயென்றபடி, அவன்விரோதியைப் போக்கச்செய்தேயும், பலாந்வயம் தம்மதாகையாலே (அரிந்தனன்யானென்கிறுர்)

(உன்னையித்யாதி) எனக்குப்பண்டேயுபகரித்தவனே. (உன்னைச்சிந்தையினுலிகழ்ந்த) உக்திமாத்ரமன்றிக்கே, நெஞ்சால் இகழ்ந்தானுயிற்று. இத்தால்-அவன்விடுவது, புத்திபூர்வகம்ப்ராதிகூல்யம்பண்ணினுல; *கைக்கொள்ளுகைக்கு மித்ரபாவமமையும். (இரணியனகன்மார்வங்கீண்ட) வரபலபுஜபலமுட்டியாகவளர்ந்த சரீரமானது திருவுகிர்க்கிரை

போராமையாலே, அநாயாஸேநகிழித்துப்பொகட்டானுயிற்று. (என்மு ன்னைக்கோளரியே) நரஸிம்ஹமாயுதவிற்றும் தமக்கென்றிருக்கிறார்.கோ ளென்று-மிடுக்காதல், தேஜஸ்ஸாதல். "மஹாவிஷ்ணும்" என்கிறமிடு க்காதல், "ஜ்வலந்தம்" (ஜ்வலந்தம்) என்கிறதேஜஸ்ஸாதல். ஆஸ்ரிதரிலே யொருவனுக்குச்செய்ததும் தனக்குச்செய்ததாக நினைத்திராதவன்று ப கவத்ஸம்பந்தமில்லையாமித்தனை. (முடியாததென்னெனக்கே) நீப்ரதிஜ் ஞாஸமகாலத்திலேவந்து தோற்றுவாயாயிற்ற பின்பு எனக்கு முடியாத துண்டோ.........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (உன்னையித்யாதி) "என்முன்னைக்கோளரியே முடியாத தென்னெனக்கே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (ஆஸ்ரிதனுடையவித் யாதி) இனியுமக்குச் செய்யவேண்டுவதென்னென்ன வென்றவதாரிகையினடியி லே கூட்டிக்கொள்வது.

இனிமையாலேயென்றது - "யோகநித்திரைசிந்தைசெய்த" என்றதின் த்விதியார்த்தத்தைப்பற்ற. வீப்ஸைக்கர்த்தம் (மாறுதேயநுஸந்தித்தென்றது) வி வரணம் (போக்யனுமாயித்யாதி) "யோகநித்திரை சிந்தைசெய்த, எந்தாய்" என்றபதத்வயத்தையும்பற்ற (போக்யனுமாய் ப்ராப்தனுமானவுன்னையென்றது) ஸாதநத்வேந பலகாலும் சிந்திக்கிறேரோவென்ன (நிதித்யாஸிதவ்யஇத்யாதி)

நெடுமையும், மஹத்தையும் - பர்யாயமன்றோவென்ன (நெடுமையுமித்யா தி) நெடு - மொழி, மா-இசை, என்றபடி. உபபாதநம் (இயலிற்பெருமையுமித்யா தி) இயலிற்பெருமையும், இசையிற்பெருமையுமாவது - அர்த்தகாம்பீர்யத்தாலு ம், ரஸ்யதாதிசயத்தாலு மெல்லைகாணவொண்ணாதிருக்கை யென்கிறார் (இயலு மிசையுமித்யாதி) மொழியைப்பாடி - திருவாய்மொழியைப்பாடி.

ப்ராக்தநமான-அநாதிகாலார்ஜிதமான. விவரணம் (பக்கவேரித்யாதி) ப் ரதாநவேரும், பக்கவேருமாவன-ருசிவாஸனைகள். தீவினைகள் முழுதும் வேரோ டேயரிந்தனன் என்று மோரர்த்தமுண்டு. "அரிந்தனன்யான்" என்று ஸ்வகர்த் ருகமாகச்சொல்லுவானென்னென்ன (அவன்விரோதியையித்யாதி) பலாந்வயம்- ப்ரதிபந்தகநிவ்ருத்திரூபபலாந்வயம். அரிந்தனன் - அரியப்பெற்றேனிதியாவத்.

தாத்பர்யம் (எனக்கித்யாதி) இந்ததாத்பர்யம் - "என்முன்னைக்கோளரி யே" என்னுமளவுங்கடாக்ஷித்து. "சிந்தையினால்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (உக்திமாத்ரமன்றிக்கேயித்யாதி) இகழ்ந்த - அநாதரித்த. "சிந்தையினாலிகழ் ந்த" என்கையாலே-அவனே புத்திபூர்வகமாக ப்ரதிகூலனாய்விட்டாலவன் விடுவ னென்றும், இவன்பக்கலல்பாநுகூல்யமுண்டானாலவனங்கீகரிப்பனென்று மீஸ்வ ரனுக்குண்டான குணாதிக்யம் பலித்ததென்கிறார் (இத்தாலித்யாதிவாக்யத்வயேந) (அமையுமென்று) அநந்தரம், என்றதாயிற்றென்று கூட்டுவது.

அகல்மார்வம்-பேரிடமுடையமார்வம். தாத்பர்யார்த்தம் (வரபலேத்யாதி) ஊட்டியாக - ஆஹாரமாக. உகிர்-நகம். இரை-லக்ஷ்யம். அநாயாஸேநவென்றது- "கீண்ட" என்றத்தைப்பற்ற.

என்முன்னைக்கோளரியே-என்னுடையவிரோதி நிவ்ருத்திக்கு நிதர்ஶநபூத ஞய், ஆஶ்ரிதஞன ப்ரஹ்லாதன்நினைவுக்கு முற்கோலினவஞய், நிரதிசயதேஜோ பலங்களையுடைய நரஸிம்ஹமானவனே இதிஶப்தார்த்த:. "என்" என்றதுக்குபாவம் (நரஸிம்ஹமாயித்யாதி) கோள்-மிடுக்கும், தேஜஸ்ஸும். "மஹாவிஷ்ணும்" என்கிறவிடத்தில், மிடுக்காவது-ஸர்வலோக வ்யாபநஶக்தி. மிடுக்கையும் தேஜஸ்ஸையும் மந்த்ரலிங்கத்திலேகாட்டுகிருர் (மஹாவிஷ்ணுமித்யாதி) இவ்வவதாரம் தமக்காகவென்றிருக்கைக்கடியேதென்ன (ஆஶ்ரிதரிலேயித்யாதி)

"கோளரியே, முடியாததென்னெனக்கு" என்கிற ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் (நீப்ரதிஜ்ஞேத்யாதி) முடியாததென் - தலைக்கட்டாததெதுதான். இதாநீமஸித்தமித:பரம்ஸாம்யம் கிஞ்சிதஸ்திகிம், ஸர்வஜ்ஞஸித்தமிதிபாவ:.

உன்னைச்சிந்தைசெய்துசெய்து இத்யாரப்ய, என்முன்னைக்கோளரியே-எனக்கு-முடியாததென் இத்யந்வய:.......................................................................*

---

## ஏழாம்பாட்டு.

முடியாததென்னெனக்கேலினிமுழுவேழுலகுமுண்டானுகந்துவந்
தடியேனுட்புகுந்தானகல்வானுமல்லனினிச்
செடியார்நோய்களெல்லாந்துரந்தெமர்கீழ்மேலெழுபிறப்பும்
விடியாவெந்நரகத்தென்றுஞ்சேர்தன்மாறினரே.

### ஆருயிரப்படி.

(முடியாததென்) ஸர்வேஶ்வரனுயிருந்த வெம்பெருமானுக்கென்பக்கலபிநிவேசமென்னளவில் பர்யவஸியாதே, என்னோடு ஸம்பந்தித்தார்பக்கலிலுங்கூட வெள்ளங்கோத்தது, ஆதலாலவனென்னை யகலநினைக்கிறிலன்; இனிமுடியாததொன்றுண்டோவென்கிருர். ..................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்பக்கல்பண்ணினவுபகாரம் என்குலத்தில் ஸம்பந்தித்தாரெல்லாரு முஜ்ஜீவிக்கும்படியாயிற்றென்கிருர்.

முழுவேழுலகும்-ஸமஸ்தலோகமும். உண்டான்-தன்செல்லாமையாலே தனக்குள்ளேயாம்படி அவற்றையமுதுசெய்தவன். உகந்து - அச்செல்லாமைதனக்கென்பக்கலிலேயுண்டாயதுக்குமேலே. ஆதராதிசயத்தை யுடையஞய்க்கொண்டு அடியேன்-என்னுடையசேஷத்வஸம்பந்தமேபற்ருசாக. உள்-உள்ளே. வந்து-வந்து. புகுந்தான்-புகுந்தான். இனி-இனி. அந்தலோகங்கள்போலே அகல்வானும்-புறம்புபோமவனும். அல்லன்-அல்லன். இதடியாக,கீழ்-கீழும். மேல்-மேலும். எழுபிறப்பும்-எழுபிறப்பிலும். எமர்-என்னோடுஸம்பந்தமுடையார். செடி - செடிபோலே. ஆர்-செறிந்த; நோய்களெல்லாம்-அவித்யாகர்மவாஸநாதிகளான ஸமஸ்தவ்யாதிகளையும். துரந்து-கடக்கவோட்டி. விடியா - ஒருகால்முடிந்து வெளிச்சிறப்பதன்றியே. வெம்-நிரதிசயதாபகரமான. நரகத்து-ஸம்ஸாரமாகிறநிரயத்திலே, என்று

ம்-யாவதாத்மபாவி. சேர்தல்-கிட்டுகை. மாறினர்-தவிர்ந்தார்கள். இனி-இப்படிகுலஸம்பந்திபர்யந்தமாக என்னைப்பக்ஷபதித்தபின்பு. எனக்கேல்-எனக்காகில். முடியாதது-முடியாதது. என்-உண்டோ.

என்னுடைநுபந்தித்ததாகில் எல்லாக்காரியமும்தலைக்கட்டுமென்றுகருத்து.

---

ஈடு-ஏழாம்பாட்டு.

என்னளவில் விஷயீகாரம் என்னுடையஸம்பந்தி ஸம்பந்திகளளவும் சென்றதுகிடீரென்கிறார்,

(முடியாததென்னெனக்கேலினி) என்க்காகிலினி முடியாததுண்டோ. எனக்கினி முடியாததுண்டோ - எனக்கினி அநவாப்தமா யிருப்பதொன்றுண்டோ.

நீரிதென்கொண்டு சொல்லுகிறீரென்ன (முழுவித்யாதி) ப்ரளயாபத்திலே ய்கப்பட்டபூமி, தன்வயிற்றிலே புகாதபோது படும்பாடடங்க, தானென்பக்கல் புகாதபோது படுவானாய்வந்து புகுந்தான், எனக்கினி முடியாததுண்டோ. (அடியேனுட்புகுந்தான்) ஸம்பந்தத்தைப்பார்த்துப்புகுந்தான். (உட்புகுந்தான்) ஒருநீராகக்கலந்தான். தன்பக்கல் ஜகத்துப்புக்காற்போலன்றியே, உகந்துபுகுந்தான். இவனுக்கும் ஜகத்துக்கும் செல்லாமையொக்கும், உகப்பேயிவ்விஷயத்தில் தன்னேற்றம்.

(அகல்வானுமல்லனினி) அந்தபூமிக்கு, ப்ரளயங்கழிந்தவாறே அகலவேணும்; இவனுக்கதுவுமில்லை. முதலிலேபிரிவை ப்ரஸங்கிக்கவொட்டுகிறிலன். சேதநனைப்போலே பாபத்தாலேயகன்று ஒருஸ்ஙக்ருத்தாலே கிட்டுமதில்லையே யிவனுக்கு.

உம்மையவனிப்படி விரும்பினானாகில்; பனைநிழல்போலே உம்மைநோக்கிக்கொண்டு விடவமையுமோவென்ன (செடியாரித்யாதி) செடி-பாபம். பாபத்தாலே பூர்ணமானதுக்கங்கள். தூறுமண்டினநோய்களெல்லாம்துரந்து. விஷயப்ராவண்யத்தாலே வந்தநோய், அயோக்யதாநு ஸந்தாநத்தாலேவந்தநோய், பகவதநுபவ விஸ்லேஷத்தாலேவந்தநோய், இவற்றையெல்லாம் வாஸனையோடேயோட்டி. "உள்ளநோய்களெல்லாம்துரந்து" என்கிறவிடத்திலும் சொல்லிற்றில்லையோவிதென்னில்; அங்குச்சொல்லிற்று - தம்மளவு; இங்கு - தம்ஸம்பந்தி ஸம்பந்திகள் விஷயமாயிற்று. இப்படியிவர்களோட்டிற்றெத்தாலேயென்னில் (எமர்) வேறென்றாலன்று, என்னோட்டை ஸம்பந்தமேஹேதுவாக. ஸம்பந்தமெவ்வளவென்னில் (கீழ்மேலெழுபிறப்பும்) கீழேழுபடிகாலுமேலேழுபடிகாலும் தம்மோடே ஏழுபடிகாலுமாக இருபத்தொருபடிகால். (விடியாவெந்நரகத்து) ஒருநாள்வாயிலே கர்மக்ஷயம்பிறந்தவாறேவிடியுமதிறே யமன்தண்டல். இதுவிடியாவெந்நரகமிறே. "நரகம்" என்று

புத்திபிறக்குமதில், தண்மைதோற்ருத நரகமிது. (என்றும்சேர்தல்மாறினரே) என்றும் கிட்டக்கடவதான தண்மை தவிர்ந்தார்கள். நானும் ப்ரார்த்திக்கவேண்டிற்றில்லை, அவனும் நினைப்பிடவேண்டிற்றில்லை. எத்தாலேயென்னில்; என்பக்கலவன்பண்ணின பக்ஷபாதராஜகுலத்தாலே மாறிக்கொண்டுநின்ருர்கள். முடியாததென்னெனக்கேலினி என்றந்வயம்.*

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (முடியாததென்னித்யாதி) "எமர்கீழ்மேல்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (என்னளவிலித்யாதி)

எனக்கேல் - எனக்காகில். "ஏல்" என்றது-சேத் என்றதினர்த்தம். முடியாததென் - ஸாத்யமாகாததெது. ஸாத்யமாகாததுண்டோவென்றபடி. விவரணம் (எனக்கித்யாதி)

நீரிதென்கொண்டென்கிற சங்கைக்கு - அவனென்பக்கல் பண்ணினவ்யாமோஹங்கொண்டு சொல்லுகிறேனென்றுத்தரம். "முழுவேழுலகுமுண்டான்" என்கிறவிது - த்ருஷ்டாந்தார்த்த மித்யபிப்ராயேணாஹ (ப்ரளயாபத்திலேயித்யாதி) "அடியேன்" இதிபதம்-ஹேதுகர்ப்பமித்யபி ப்ராயேணாஹ (ஸம்பந்தத்தையித்யாதி) "உகந்து, வந்து, உள்," இதிபதத்ரயம் த்ருஷ்டாந்தாத்தார்ஷ்டாந்திகஸ்யாதிக்ய பரமித்யபிப்ராயேணாஹ (ஒருநீராகவித்யாதி) (உகப்பேயிவ்விஷயத்தில்தன்னேற்றம்) ஆழ்வார்விஷயத்தி லிவனுக்குண்டானவுகப்பே யிவன்றனக்கேற்றம். யத்வா, இவ்விஷயமென்றது - ஈஶ்வரனையாதல்.

உக்தஸமுச்ச யபரஶ்சசப்த இத்யபிப்ராயேணபாவம் (அந்தபூமிக்கித்யாதி) அகலாமையின் சரமாவதிமாஹ (முதலிலேயித்யாதி) அகலவொண்ணுமைக்கு ஹேதுவேதென்ன (சேதநனையித்யாதி)

பனைநிழல்போலே - பனைமரத்தின்நிழல் பனையைமாத்ரம் காக்குமாபோலே. செடி - பாபமும், தூறும். முந்தினது (பாபத்தாலேயித்யாதி) த்விதீயம் (தூறுமண்டினவித்யாதி) செடிபோலேசெறிந்த நோய்களென்றபடி. "நோய்கள்" என்கிற பஹுவசநத்துக்கும், "எல்லாம்" என்கிறதுக்கும்பாவம் (விஷயப்ராவண்யேத்யாதி) "தரந்து" இதிபதஸாமர்த்த்யாதாஹ (வாஸனையோடேயோட்டியிதி) தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிருர் (உள்ளநோய்களித்யாதி)

"எமர்" என்கிறவிடத்திலே - "ஸ்நாநஹ்ருஹணவஸமொயாதிரங்கேஶயத்ஸ" (அந்தோநந்தக்ரஹணவஸகோயாதிரங்கேஶயத்வத்" இத்யாத்யநுஸந்தேயம். "கீழ்மேலெழுபிறப்பும்" என்றது - நடுவேழுபிறப்புக்கு முபலக்ஷணமித்யாஹ (கீழேழுபடிகாலுமித்யாதி) தம்மோடேயேழுபடி காலுமென்றது - தமக்குமுன்னே மூன்றுபேரும், பின்னேமூன்றுபேரும், தாமுமாக வேழுபடிகாலென்றபடி. இருபத்தொருபடிகால் - இருபத்தொருதலைமுறை.

"விடியா" என்றதுக்ருபாவம் (ஒருநாள்வனாயிலேயித்யாதி) யமன்தண்டல் - யமதண்டம். இது - ஸம்ஸாரம். வெம்மைக்கர்த்தம் (நரகமென்றித்யா

தி ) ஒருநாளும் முடிந்து வெளிச்சிறப்பதன்றியே, நிரதிசயதாபகரமான ஸம்ஸார மாகிற நிரயத்தில்.

என்றும் சேர்தல்மாறினரோ - யாவதாத்ம பாவிகிட்டுகைதவிர்ந்தார்களிதி சப்தார்த்தஃ. "மாறினர்" என்று - தத்கர்த்ருகமாகச் சொன்னதுக்குபாவம் ( நானுமித்யாதி ) ( எத்தாலேயென்னிலிதி ) உம்முடையார்க் கும்முடைய ஸம்பந்தத்தாலே ஸம்ஸாரவிச்சேதத்தில் ஹேதுவேதென்று சங்கிதர்ப்பாவஃ. பூர்வார்த்தம் ஹ்ருதிநிதாயோத்தரமாஹ ( என்பக்கலித்யாதி )

"என்றும்சேர்தல்மாறினர்" இத்யஸ்யாந்வயந்தர்ஸயதி ( முடியாததித்யாதி ) முழுவேழுலகுமுண்டான் உகந்துவந்தடியே னுட்புகுந்தான், இனி - அகல்வானுமல்லன் ; கீழ்மேலெழு பிறப்பிலுமுண்டான - எமர் - செடியார்நோய்க ளெல்லாம்துரந்து - விடியாவெந்நரகத்தென்றும் சேர்தல்மாறினர் ; எனக்கேலினி முடியாததென் இத்யந்வயஃ..........................................................*

---

# எட்டாம்பாட்டு.

---

மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்தடியையடைந்துள்ளந்தேறி
ஈறிலின்பத்திருவெள்ளம்யான்மூழ்கினன்
பாறிப்பாறியசுரர்தம்பல்குழாங்கணீறெழப்பாய்பறவையொன்
றேறிவீற்றிருந்தாயுன்னையென்னுணிக்கேலெந்தாய்.

## ஆறுயிரப்படி.

(மாறிமாறி) உன்னோடு ஸம்ஸ்லேஷிக்கைக்கு விரோதியான ஸம்ஸாரத்தில் வர்த்திக்கிறநான், நிர்ஹேதுகமாக வுன்திருவடிகளையே ப்ராப்யமாகப்பெற்று அதிலேயுள்ளந்தேறி, முடிவில்லாத வழகியவின்பவெள்ளத்திலேமுழுகினேன்; ஆஸ்ரிதருடையவபேக்ஷிதங்களைச்செய்யும் ஸ்வபாவனுயிருந்த நீ யினியென்னைக் கைவிடாதொழியவேணுமென்றபேக்ஷிக்கிருர்..........................................................*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், இபபேறெனக்கு விச்சேதியாதொழியவேணுமென்கிருர்.

பலபிறப்பும்-தேவதிர்யக்மநுஷ்யஸ்த்தாவராதிகளான நாநாஜந்மங்களிலும். மாறிமாறிப்பிறந்து-ஒருகால் பிறந்ததிலே மீண்டுமீண்டும் பிறந்துபோரச்செய்தே. அடியை-உன்திருவடிகளை. அடைந்து-கிட்டி-சேஷத்வஜ்ஞாநத்தையுடையேனுய், உள்ளந்தேறி - "நீயேயுபாயபூதன்" என்கிறநெஞ்சில் தோற்றத்தையுடையேனுய். உன்னுடையவநுபவத்தாலே ஜநிதமான, ஈறு-முடிவு. இல் - இல்லாத. இன்பம்-ஆநந்தமாகிற. இரு-பெரிய. வெள்ளம்-வெள்ளத்திலே. யான்-அஹமர்த்தபூதனனநான். மூழ்கினன்-அவகாஹித்தேன். அசுரர்தம்-அஸுரர்களுடைய. பல்-பலவகைப்பட்ட. குழாங்கள்-குழாங்களானவை. பாறிப்பாறி-பஹுமுகமாகசிதிலமாய். நீறு-தூளியாய். எழ-கிளரும்படி. பாய் - அவர்களுடைய ஸேநாமத்யத்திலே பாயக்கடவனுன. ஒன்று-அத்விதியனுயுள்ள. பறவை - பெரியதிருவடியின்மேலே.

ஏறி-ஏறி. வீறு-உன்மேன்மைதோன்றும்படி. இருந்தாய்-இருந்த. எந்தாய்-என்னுதனே. உன்னை-ப்ராப்தனுமாய் ஶரண்யனுமாய் போக்யனுமாய் விரோதிநிவர்த்தகனுமானவுன்னை. என்னுள்-உனக்குஸர்வப்ரகாரபரதந்த்ரனான என்னுள்ளினின்றும். நீக்கேல்-அகற்றுதொழியவேணும்..........................................*

---

## ஈடு-எட்டாம்பாட்டு.

இப்படி கனத்தபேற்றுக்கு நீர்செய்த ஸுக்ருதமென்னென்ன; ஒருஸுக்ருதத்தால்வந்ததல்ல, நான்பிறந்து படைத்ததென்கிறார். அதுவுமொன்றுண்டு, அந்தாதியாகப்பிறந்து போந்தேனென்கிறார்.

(மாறிமாறியித்யாதி) ஸபரிகரமாகவும்மை விஷயீகரிக்க, நீர்செய்ததென்னென்ன; கடலுக்குள்ளேகிடந்ததொரு துரும்பு திரைமேல்திரையாகத்தள்ளவந்து கரையிலேசேருமாபோலே, மாறிமாறிப்பிறந்துவாராநிற்க, திருவடிகளிலேகிட்டிக்கொண்டு நிற்கக்கண்டேனித்தனை. அநுபவித்துமீளுதல், ப்ராயஶ்சித்தம்பண்ணிமீளுதல், செய்யக்காலமில்லையாயிற்று. (அடியையடைந்துள்ளந்தேறி) உள்ளந்தேறி யடியையடைந்தவரல்லர், அடியையடைந்தாயிற்றுள்ளந்தேறிற்று. (உள்ளந்தேறி)நெடுநாள் விஷயவாஸனையாலும் பகவதலாபத்தாலுமுள்ள அந்தஃகரணகாலுஷ்யம்போய் ஹ்ருதயந்தெளிந்து. தெளிந்தவளவேயன்றியே (ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன்) முடிவின்றிக்கேயிருக்கிற பெரிய ஆநந்தஸாகரத்திலே யவகாஹித்தேன். திருவடி, திருவநந்தாழ்வான், இவர்கள் குமிழிநீருண்கிறவிஷயத்திலேயிறே நானவகாஹிக்கப்பெற்றது

ஆனாலும்முடையவிரோதிகள் செய்ததென்னென்ன; அதுக்குக்கடவரொக்கேளிகோளென்கிறார் (பாறியித்யாதி) அஸுரவர்க்கத்தினுடையபலவகைப்பட்ட குழாங்களானவை, பாறிப்பாறி நீறெழுந்துபோம்படியாக ப்ரதிபக்ஷத்தின்மேலே பாயாநின்றுள்ள அத்விதீயமானபறவையை மேற்கொண்டு உன்னுடையவ்யாவ்ருத்திதோற்றவிருந்தவனே. பெரியதிருவடிக்கத்விதீயத்வம்-அவன்கருத்தறிந்து நடக்கையிற்றலைவனாகை. அவன்ப்ரதிபக்ஷநிரஸநத்துக்குப்பண்ணினவ்யாபாரம் பெரியதிருவடிதிருத்தோளிலே பேராதேயிருந்தவித்தனை. (உன்னையித்யாதி) ஸ்வாமியானநீ இனியொருகாலமும் உன்னையென்பக்கல் நின்றும் பிரித்துக்கொண்டு போகாதொழியவேணும். (உன்னையென்னுள்நீக்கேல்) என்னோடேயிப்படிகலந்தவுன்னை, உன்னுடையகலவியால்வந்த ரஸமறிந்த வென்பக்கல்நின்றும் நீக்கநினையாதொழியவேணும். தம்முடையவினிமையாலே அதிசங்கைபண்ணுகிறார். தம்முகப்பவனை யெதிரிட்டபடி. (எந்தாய்) விரோதியைப்போக்கிக் கலக்கைக்கடியான ப்ராப்தியைச்சொல்லுகிறது......*

---

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (மாறிமாறியித்யாதி) "பிறந்து" என்றத்தைப்பற்றவவதாரிகை (இப்படியித்யாதி) (இப்படிகனத்தபேற்றுக்கு) ஸம்பந்திஸம்பந்திபர்யந்த ஸம்ஸாரவிச்சேதரூபபலத்துக்கு. (ஒருஸுக்ருதத்தாலே யித்யாதிவாக்யத்வயமும்) ரஸோக்தி. (பிறந்துபடைத்தது) ஜந்மஸித்தமென்றுத்வநி. ஸ்வபாவார்த்தஸ்து - பிறவாநிற்கச்செய்தே பெற்றது. அதாவது-துர்க்கதியேபற்றுசாக வங்கீகரித்தானென்றபடி. "மாறிமாறி" என்றதுக்குபாவம் (அதுவுமித்யாதி) நிர்ஹேதுகமென்றபடி. (அதுவுமொன்றுண்டு) "ஸுக்ருதமில்லை" என்னப்போகாதே, அப்படியேயொரு ஸுக்ருதமுமுண்டென்றபடி. அந்தாதியாகப்பிறக்கை ஸுக்ருதமென்றபடி. (அந்தாதியாகப்பிறக்கை) பூர்வதேஹத்தினுடைய வந்தமுத்தரதேஹத்துக்காதியாம்படியாகப் பிறக்கை.

"இப்படிகனத்தபேறு" என்றத்தை "இன்னது" என்று விவரியாநின்றுகொண்டு, துர்க்கதியேபற்று சாகவங்கீகரித்தானென்று வாஸ்தவமானவர்த்தத்தையருளிச்செய்கிறார் (ஸபரிகரமாகவித்யாதியாலே) "மாறிமாறி" என்றவீப்ஸைக்குபாவம் (அநுபவித்தித்யாதி)

* அடியையடைந்துள்ளந்தேறினமைக்கு - "ஸாதம்ஸமாஸாத்யவிஶுத்தஸத்த்வா" (ஸாதம்ஸமாஸாத்யவிஶுத்தஸத்த்வா) என்றத்தையருளிச்செய்வர். "அடியையடைந்துள்ளந்தேறி" என்றத்தால்-மஃப்ரஸாதமுண்டானபின்பு அடிகளைக்கிட்டு முபாஸகவ்யாவ்ருத்தி (உள்ளந்தேறியித்யாதி) "மாறிமாறி" இத்யாதிக்கு தேவதிர்யகாதிகளான நாநாஜந்மங்களிலொருகாற்பிறந்ததிலே மீண்டுமீண்டு பலபிறப்பும்பிறந்து போரச்செய்தேயுன்றிருவடிகளைக்கிட்டி ஹ்ருதயம்தெளிந்து என்றுசப்தார்த்தம். தாத்பர்யம் (நெடுநாளித்யாதி) "இன்பத்திருவெள்ளம்" இத்யத்ர, அத்துகாரஃ - பாதபூரணார்த்தோவ்யயஃ. ஈறிலின்ப விருவெள்ளமென்றபடி. இருமை - பெருமை. "ஈறிலின்பம்" என்று-நஶ்வரமான வைஶ்வர்யவ்யாவ்ருத்தி. "இரு" என்று-அல்பஸுகமானகைவல்யவ்யாவ்ருத்தி. இந்தநிரதிஶயாநந்தத்துக்கடியே தென்கிறசங்கையிலே "பறவையொன்றேறி வீற்றிருந்தாய்" இத்யேதத்பராம்ருஶ்நாஹ (திருவடியித்யாதி) விஷயஸ்வபாவமே ஹேதுவென்றபடி. குமிழிநீருண்கிற-நிமக்நராகிற.

மேலுக்கவதாரிகை (ஆறுலித்யாதி) அதுக்குக்கடவாரென்றது - "பறவை" என்றத்தைப்பற்ற. சப்தார்த்தம் (அசுரவர்க்கத்தினுடையவித்யாதி) பாறிப்பாறி - சிதறிச்சிதறி. நீறெழ - தூளியாய்க்கிளம்பும்படி. "பாய் - ஒருபறவையேறி" இத்யந்வயஃ. தலைவன் - ப்ரதாநன். "பாறிப்பாறி" இத்யாதி-ஈஶ்வரவிசேஷணமாக்கி அர்த்தாந்தரம் (அவன்ப்ரதிபக்ஷேத்யாதி) பேராதே-சலியாதே.

"இனியொருகாலமும்" என்கையாலே - இவ்வளவும் ஸம்ஸாரத்தில் வைத்ததுமதிஶங்கா நிமித்தமிதிஸ்ப்புரதி. "ஈறிலின்பத்திருவெள்ளம்யான் மூழ்கினன்" என்கையாலே - "இந்தபோகம் தமக்குத்தொங்கப் புகுகிறதோ" என்று போக்யதாதிசயாததிசங்கத இத்யபிப்ராயேண பாவாந்தரமாஹ (என்னுடையித்யாதி) த்விவாரம் ப்ரதிகோபாதாநம் - பாவத்வயத்வஸூசகம். விவக்ஷிதமதிசங்காஹேதும் ஸ்பஷ்டயதி (தம்முடையவித்யாதி) இனிமையாலே - ப்ரீதியாலே. மேலும்மேலும் - ஈஶ்வரனுடைய வதிசங்கையாயிருக்க, இங்கே-தாமெப்படி யதிச

ங்கைபண்ணுகிருனென்ன (தம்முகப்பித்யாதி) இத்தால்-பரஸ்பராநுராகத்தைத் யோதிப்பித்தாராயிற்று. "பாறிப்பாறி" இத்யாதிகஞ்ச பராம்ருஶங்காஹ (விரோதியையித்யாதி)

மாறிமாறிதொடங்கி, மூழ்கினேன்-அசுரர்தம்பக்கல் குழாங்கள் - பாறிப்பாறி நீறெழப்பாய்கின்ற - ஒன்றுன பறவையேறி வீற்றிருந்தாயான-எந்தாய்-உன்னை யென்னுள்நீக்கேல் இத்யந்வய:.......................................................*

## ஒன்பதாம்பாட்டு.

எந்தாய்தண்டிருவேங்கடத்துணின்றுயிலங்கைசெற்றாய்மராமரம்
பைந்தாளேழுருவவொருவாளிகோத்தவில்லா [ம்
கொந்தார்தண்ணந்துழாயினையமுதேயுன்னையென்னுள்ளேகுழைத்தவெ
மைந்தாவானேறேயினியெங்குப்போகின்றதே.

### ஆறுயிரப்படி.

(எந்தாய்) திருமலையிலே புகுந்து நின்றருளினபடியையும், உன்னுடைய திருவவதாரங்களையும், உன்னுடைய திவ்யசேஷ்டிதங்களையும், உன்னுடையவழகையும், ஸ்ரீவைகுண்டநாதனுயிருந்தருளும்படியையும், மற்றுமுள்ளபடியை யடங்கவெனக்கு போக்யமாகக்காட்டியருளி, உன்னை யென்னுள்ளே யொன்றுகக்குழைத்தருளின நீயினியெங்கேபோவது ; போவேனென்றால்தான் போகமுடியுமோ வென்கிருர்.............*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீயேக்ருஷிபண்ணிக்கலந்து இனியெங்கேறப்போவ தென்கிருர்.

எந்தாய் - எனக்குநிருபாதிகஸ்வாமியாய். தண் - ஶ்ரமஹரமான. திருவேங்கடத்துள் - திருமலையிலே. நின்றாய் - எழுந்தருளிநின்றுஸுலபனாய். இலங்கை- ஆஶ்ரிதவிரோதிகளுக்கு வாஸஸ்த்தாநமானலங்கையை. செற்றாய் - அழித்தவனாய். மராமரம் - மராமரங்களினுடைய. பை - பருத்த. தாள் - அடி. ஏழு - ஏழும். உருவ - உருவும்படி. ஒருவாளி - ஒருவாளியை. கோத்த - அநாயாஸேநகோத்த. வில்லா - வில்லையுடையனாய். கொந்து - கொத்தாய். ஆர் - செறிந்து. தண் - குளிர்ந்த. அம்துழாயினாய் - திருத்துழாயாலேயலங்க்ருதனாய். எம்மமுதே - நித்யபோக்யனாய்க்கொண்டு. உன்னை - ஏவம்விதனானவுன்னை. என்னுள்ளே - என்னுள்ளே. குழைத்த - ஏகத்ரவ்யமாம்படிகலசின. மைந்தா - நித்யயௌவநஸ்வபாவனாய். இந்நிலையாலே, வான் - ஸூரிகளுக்கும். ஏறே - செருக்கனும்படிநின்றவனே. அஸாதாரண ஸம்பந்தத்தையும், ஸௌலப்யத்தையும், விரோதிநிவர்த்தகத்வத்தையுங்காட்டி, மஹாராஜனைப்போலே யென்னையும் விஶ்வஸிப்பித்து, ஒப்பனையழகைக்காட்டியெனக்கு நித்யபோக்யனாய்ப் பிரிக்கவொண்ணாதபடிகலந்து அத்

தாலே இளகிப்பதித்து இத்தாலே நித்யவிபூதிக்கும் மேலானமேன்மையை யுடைய நீ இனி - இனி. இந்தஸம்ஶ்லேஷத்தைவிட்டு எங்கு - எங்கே. போகின்றது - போகிறது.

இனிப்போகாதேயென்றுகருத்து.......................................................*

ஈடு-ஒன்பதாம்பாட்டு.

முதலிலேயுன்னை யறியாதிருக்கிறவென்னை, உன்னையுமுன் போக்யதையையுமறிவித்து உன்னாலல்லது செல்லாதபடியாக்கினநீ இனியென்னைவிட்டுப் போகாதொழிய வேணுமென்கிறார்.

(எந்தாய்) ஶ்ரமஹரமான திருமலையிலேவந்துநின்று உன்ஸ்வாமித்வத்தைக் காட்டியென்னை சேஷத்வத்திலே நிறுத்தினவனே. (இலங்கைசெற்றாய்) பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷவிரோதியைப் போக்கினாற்போலே, என்னுடைய சேஷத்வ விரோதியைப் போக்கினவனே. (மராமரமித்யாதி) ஆஶ்ரித விஷயத்தில் மழுவேந்திக்கொடுத்து கார்யம் செய்யும்படி. பரந்தவடிவை யுடைத்தான மராமரங்களேழும் மறுபாடுருவும்படியாக, பண்டேதொளையுள்ள தொன்றிலே யோட்டினாற்போலே அம்பைக்கோத்த வில்வலியையுடையவனே. (கொந்தார் தண்ணந்துழாயினாய்) வைத்தவளையத்தோடேநின்றாயிற்று மராமரமெய்தது. அவதாரத்துக்குச்சேர ஏதேனுமொன்றாலே வளையம்வைக்கிலும், திருத்துழாயல்லது தோற்றாதிவருக்கு. கொந்தார் - தழைத்திருக்கை. (அமுதே) மராமரமெய்கிறபோதிலக்குக்குறித்து நின்றநிலை யிவர்க்கு போக்யமாயிருந்தபடி. (உன்னையித்யாதி) கலக்கிறவிடத்தில் "வனகதஞ்சம்", "ஏகதத்த்வம்" என்னலாம்படிகலந்து, இனி "போவேன்" என்றால், போகப்போமோ. போகிலும், கூடப்போமித்தனை. (மைந்தா) என்னோடேகலந்தவித்தாலே நவீக்ருதமான யௌவநத்தை யுடையவனே. (வானேறே) தன்போக்யதையை நித்யஸூரிகளையநுபவிப்பித்து, அத்தாலே வந்த மேன்மைதோற்ற விருக்குமாபோலேயாயிற்றிவரை யநுபவிப்பித்து மேன்மைதோற்றவிருந்தபடி. (இனியெங்குப்போகின்றதே) உன்னாலல்லது செல்லாதபடியான வென்னைவிட்டு, உன்னையொழிய காலக்ஷேபம்பண்ணவல்லார்பக்கல்போகவோ. நித்யஸூரிகளை விடிலன்றோ வென்னைவிடலாவது. "இவர்நம்மைவிடிற்செய்வதென்" என்று அவனுக்குண்டானவதிசங்கையைப்பரிஹரியாநிற்க, "நீயென்னைவிட்டுப்போகாதேகொள்" என்கிறவிதுக்குக் கருத்தென்னென்னில்; விலக்ஷணவிஷயம், தானும்காற்கட்டி எதிர்த்தலையையும் காற்கட்டப்பண்ணுமாயிற்று.

(எந்தாய்) நீசேஷியல்லாமற்போகவோ (தண்டிருவேங்கடத்துணின்றாய்) தூரஸ்த்தனாய்ப்போகவோ; (இலங்கைசெற்றாய்) விரோ

திநிரஸநஶீலனல்லாமற்போகவோ; (மராமரமித்யாதி) ஆஶ்ரிதவிஷயத்திலே மழுவேந்திக்கொடுத்துக் கார்யஞ்செய்யுமவனல்லாமற்போகவோ; (கொந்தார்தண்ணந்துழாயினை) ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு மாலையிட்டிலையாய்ப்போகவோ; (அமுதே) போக்யபூதனல்லாமற்போகவோ; (உன்னையென்னுள்ளேகுழைத்த) ஒருநீராகக்கலந்திலையாய்ப்போகவோ; (எம்மைந்தா) நவீக்ருத ஸ்பாவனல்லாமற்போகவோ; (வானேறே) மேன்மையனல்லாமற்போகவோ; (இனியெங்குப்போகின்றதே) போகிலும் கூடப்போமித்தனையொழிய, "ஏகதத்வம்" (ஏகதத்த்வம்) என்னலாம்படிகலந்து தனித்துப்போகலாமோ..................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (எந்தாயித்யாதி) "அமுதேயுன்னை யென்னுள்ளேகுழைத்தவெம்மைந்தா, இனியெங்குப்போகின்றதே" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (முதலிலேயித்யாதி) "'உன்னையென்னுள் நீக்கேல்' என்கிறவிது உக்திமாத்ரமோ, ஹ்ருதயத்திலுமுண்டோவென்றறியவேணும்" என்றுஈஶ்வரனேரடிபேர, சொல்லுகிறார் (எந்தாயித்யாதி) என்று வாக்யஸங்கதி. இந்தவாக்யஸங்கதி - ஏதத்தஶகார்த்தநிகமநாவஸரேஸ்பஷ்டம். "திருவேங்கடத்துள்நின்றாய்-எந்தாய்" என்கையாலே (உன்னையுமென்றது)

"திருவேங்கடத்துள் நின்றாய் - எந்தாய்" என்றந்வயமுகோநாஹ ஶ்ரமஹரமானவித்யாதி) (உன்ஸ்வாமித்வத்தைக்காட்டி) ஸ்வாமியாகையாலேயிறே புனங்காப்பாரைப்போலே திருமலையிலேவந்து நோக்குகிறதென்றுகருத்து.

தாத்பர்யம் (பிராட்டியித்யாதி) சேஷத்வவிரோதியைப் போக்கினவனே யென்றது - "மயர்வறமதிநலமருளினன்) என்றத்தைப்பற்ற. மழு-தப்தமான வய:பிண்டம். பைந்தாள் - மராமரம் - ஏழுருவ என்றந்வயித்தருளிச்செய்கிறார் (பரந்தவித்யாதி) மராமரங்களினுடைய பருத்தவடியேழு முருவும்படியென்று மர்த்தமுண்டு. மறுபாடுருவும்படி - பின்னேயுருவிப்போம்படி. "கோத்த" என்றபதத்துக்கர்த்தம் (பண்டேதொளையுள்ளதித்யாதி) ஸமபிவ்யாஹாரத்துக்குபாவம் (வைத்தவளையத்தோடேயித்யாதி) மராமரம்-ஸாலவ்ருக்ஷம். பெருமாளுக்குத் திருத்துழாயுண்டோவென்ன (அவதாரத்துக்கித்யாதி) கொந்தார்-கொந்தாற்செறிந்து. கொந்து-கொத்து. தழையென்றபடி. "வாளிகோத்தவில்லா" என்றவநந்தரம், "அமுதே" என்றதுக்குபாவம் (மராமரமித்யாதி) இலக்குக்குறித்து-லக்ஷயம்பார்த்து.

"உன்னையென்னுள்ளேகுழைத்த" என்றத்தை - "இனியெங்குப்போகின்றதே" என்றத்தோடே கூட்டிதாத்பர்யம் (கலக்கிறவித்யாதி) குழைக்கை - ஏகத்ரவ்ய மென்னலாம்படிகலக்கை. "குழைத்த-எம்மைந்தா" இதிபதஸமபிவ்யாஹார தாத்பர்யம் (என்னோடேயித்யாதி) "குழைத்த-வானேறே" என்றுகூட்டிபாவம் (தன்போக்யதையையித்யாதி)

"உன்னை யென்னுள்ளே குழைத்தவெம்மைந்தா - இனியெங்குப்போகின்றதே" இதிபதஸங்கதிம் ஹ்ருதிநிதாயபாவம் (உன்னாலல்லதித்யாதி) "வானேறே-

இனியெங்குப்போகின்றது" என்றுகூட்டிபாவம் (நித்யஸூரிகளையித்யாதி) தடஸ்த்தஶங்கையையநுவதித்து பரிஹரிக்கிறுர் (இவர்நம்மையித்யாதி) தானும்காற்கட்டிதன்னுடையஸ்நேஹத்தாலே யெதிர்த்தலையையும் போகாதபடிகாற்கட்டப்பண்ணுமென்றபடி. காற்கட்டுகை - அதிஶங்கைபண்ணுகை.

கீழில்விசேஷணங்களையெல்லாம் போகாமைக் குறுப்பாக்குகிறுர் (எந்தாயித்யாதி) யத்வா, "எந்து" என்றபதத்தை - முன்னே, தேசபரமாக வ்யாக்யாநம்பண்ணி, ஹேதுபரமாக வ்யாக்யாநம்பண்ணுகிறுர் (எந்தாயித்யாதி) எங்கு-எத்தாலே. ஆஶ்ரிதரக்ஷணத்துக் கித்யாதிவாக்யம் - "ஒருவாளிகோத்தவில்லா, கொந்தரர் தண்ணந்துழாயினுய்," என்கிறஸமபி வ்யாஹாரதாத்பர்யம்.

க்ரமேணுந்வய:.......................................................................*

## பத்தாம்பாட்டு.

போகின்றகாலங்கள்போயகாலங்கள்போகுகாலங்கடாய்தந்தையுயி
ராகின்றுயுன்னைநானடைந்தேன்விடுவேனே
பாகின்றதொல்புகழ்மூவுலகுக்குநாதனேபரமாதண்வேங்கட
மேகின்றுய்தண்டுழாய்விரைநாறுகண்ணியனே.

### ஆருயிரப்படி.

(போகின்ற) ஸர்வாத்மாக்களுக்கும் மாதாசெய்யும்நன்மையும் பிதாசெய்யும்நன்மையும் தான் தனக்குச்செய்யும்நன்மையும் ஸர்வகாலமுமெனக்குச்செய்தருளும் ஸ்வபாவனுய், நிரவதிகநித்யஸித்த கல்யாணகுணவிஶிஷ்டனுய், ஸர்வலோகேஶ்வரனுய், நிரஸ்தஸமாப்யதிகனுய், திருமலையிலேபுகுந்தருளி யெனக்குங்கூட பரமஸுலபனுய், பரமபோக்யனுமிருந்த வுன்னைநானடைந்தேன்; இனிவிடுவேனேவென்றுகொண்டுதாமெம்பெருமானேடு கலந்தகலவிக்குத் தம்மாலுமவனுலும் ஹேத்வந்தரத்தாலு மொழிவில்லையென்கிறுர்... ........... ............. ................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுபகாரங்களைக்கண்ட நான் உன்னைப்பெற்றுவைத்து விடக்ஷமனே வென்கிறுர்.

போகின்றகாலங்கள் போயகாலங்கள் போகுகாலங்கள்-வர்த்தமாநமாயும் பூதமாயும் ஆகாமியாயுமுள்ள காலத்திலும். தாய்தந்தையுயிராகின்றுய் - தாயும் தந்தையும் தன்னுத்மாவும்தனக்குப்பண்ணும் பரிவைப்பண்ணுகிற்பானுய். பாகின்ற - இப்படிஸர்வதோமுகமான ரக்ஷணத்தாலேபரக்கிற. தொல் - அநாதிஸித்தமான. புகழ் - குணப்ரதையையுடையனுய்க்கொண்டு. மூவுலகுக்கும் - த்ரிவிதசேதநாசேதநங்களுக்கும். நாதனே - நாதனுய். பரமா - இப்பெருமைக்குத்தனக்குமேலில்லாதவனுய். இம்மேன்மையன்றியே, தண் - ஶ்ரமஹரமான. வேங்கடம் - திரு

மலையிலே. மேவின்ருய் - மேவிநிற்கிற ஸௌலப்யத்தையுடையனாய். இப்பரத்வ ஸௌலப்யங்களுக்கும் போக்யதைக்கும்ஸூசகமாய். தண்-குளிர்ந்த, துழாய்- திருத்துழாயையுடைத்தாய். விரை - பரிமளம். நாறு - ப்ரவஹிக்கிற. கண்ணியனே - மாலையையுடையவனே. உன்னை - ஏவம்விதனானவுன்னை. அடைந்தேன் - ஸம்ஶ்லேஷிக்கப்பெற்ற. நான் - நான். விடுவேனோ - விடக்ஷமனோ.......................*

---

## ஈடு _ பத்தாம்பாட்டு.

நாம்போகாதொழிகிறோம், நீர் நம்மைவிடாதொழியவேணுமே யென்ன; நீபண்ணின வுபகாரங்களைக் கண்டுவைத்துவிட ஸம்பாவனையுண்டோவென்கிறார். காலத்ரயத்திலும் ஸர்வவிதபந்துவுமான வுன்னைவிட ஸம்பாவனையில்லையென்கிறார்.

(போகின்றவித்யாதி) காலத்ரயத்திலும், பரிவுடையதாய்செய்வதுஞ்செய்து, ஹிதகாமனானதமப்பன்செய்வதும்செய்து, "ஸபித்ராசபரித்யக்தః" (ஸபித்ராசபரித்யக்தః) என்று-அவர்கள் விடுமளவிலும், தான் தனக்குப்பார்க்கும் ஹிதமும் பார்க்கும்படி ஸர்வப்ரகாரத்தாலும் ப்ராப்தனுமாய், உபகாரகனுமானவுன்னை, உபகாரஸ்ம்ருதியையுடைய நான் கிட்டப்பெற்றுவைத்து, விட ஸம்பாவனையுண்டோ. (பாகின்றவித்யாதி) "விதிதః" (விதிதః) என்கிறபடியே சத்ருகோஷ்டியிலும் ப்ரஸித்தமாம்படி பரம்பியிருப்பதாய் ஸ்வாபாவிகமான கல்யாணகுணங்களை யுடையையாய், த்ரைலோக்யத்துக்குநிர்வாஹகனானவனே. (பரமா) குணங்களுக்கும் ரக்ஷணத்துக்கு முன்னையெண்ணினால் பின்னையெண்ணலாவாரில்லாதபடி ஸர்வாதிகனாயிருக்குமவனே. இப்படிஸர்வாதிகனாயிருந்துவைத்து, என்னையடிமைகொள்ளுகைக்காக, ஶ்ரமஹரமான திருமலையிலேவந்து ஸந்நிஹிதனானவனே. உன்னைநானடைந்தேன் விடுவேனோவென்றந்வயம். (தண்டுழாய்விரைநாறுகண்ணியனே) இவருடைய ஆர்த்தியெல்லாந்தீரும்படியாகவந்து விஷயீகரித்துத்தன்னை யநுபவிப்பித்து, "இவர் தன்னைவிடிற்செய்வதென்" என்கிற அதிசங்கையுந்தீர்ந்து, தோளிலிட்டமாலையும் பரிமளிதமாய், பிடித்துமோந்த இலைத்தொடைமாலையுந்தானுமாய்நின்றபடி..........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (போகின்றவித்யாதி) * போகின்றகாலங்கள்தொடங்கி, "விடுவேனோ" என்னுமளவுஞ்சடாக்ஷித்தவதாரிகை (நாமித்யாதி) "தாய்தந்தை" என்கிறவிடத்திலே - உபகாரகத்வமும், பந்துத்வமுந்தோன்றுகிறது; ததநுபயாநுகுணமாக வவதாரிகாத்வயமாஹ (நீபண்ணின வுபகாரங்களை யித்யாதிவாக்யத்வயேந)

போகின்ற - வர்த்தமாநமாயும், போய-பூதமாயும், போகு-ஆகாமியாயுமுள்ளகாலங்களென்றபடி. சகாரம் - அநுக்தஸமுச்சயமாய், மாத்ராபித்யக்தః என்

றபடியாக்கி (அவர்கள்விடுமளவிலுமென்றது) தாய்தந்தைகளுக்கு ப்ராப்தியும் உபகாரகத்வமுமுண்டாகையாலே (ப்ராப்தனுமாயுபகாரகனுமானவுன்னையென்கிறது) "போகின்ற" இத்யாதிக்கு-வர்த்தமாநபூதாகாமியான காலத்ரயத்திலும் தாயுந்தந்தையும் தன்னுத்மாவுமாகாநிற்கிறவனேயென்றுசப்தார்த்தம். (ஸபித்ராசேதி) ஸுந்தரகாண்டே அஷ்டத்ரிம்ஶே, " 𑌸 𑌪𑌿𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑍁𑌰𑍈𑌶𑍍𑌚 𑌸𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃। 𑌤𑍍𑌰𑍀𑌨𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌸𑌂𑌪𑌰𑌿𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 𑌤𑌮𑍇𑌵𑌶𑌰𑌣𑌂𑌗𑌤𑌃" (ஸபித்ராசபரித்யக்தஸ்ஸுரைஶ்சஸமஹர்ஷிபி: । த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்யதமேவஶரணம்கத:.

தத்ரைவைகத்ரிம்ஶே ராவணம்ப்ரதிஸீதா, " 𑌵𑌿𑌦𑌿𑌤𑌸𑍍𑌸𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌜𑍍𑌞𑌶𑍍𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌵𑌤𑍍𑌸𑌲𑌃 । 𑌤𑍇𑌨 𑌮𑍈𑌤𑍍𑌰𑍀 𑌭𑌵𑌤𑍁 𑌤𑍇 𑌯𑌦𑌿 𑌜𑍀𑌵𑌿𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌸𑌿 " (விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸல:। தேநமைத்ரீபவதுதேயதிஜீவிதுமிச்சஸி.) பாகின்ற-பரம்பாநிற்கிற. தொன்மை- பழமையாய், அத்தால்பலிதம் (ஸ்வாபாவிகமானவென்று) (பரமா) பரோமாஅஸ்மாதிதி-பரம:. "பாகின்றதொல்புகழ் மூவுலகுக்கும்நாதனே பரமா" என்றுகூட்டிபாவம் (குணங்களுக்குமித்யாதி)

* போகின்றகாலங்கள் தொடங்கி உயிராகின்றாய்- பாகின்றதொடங்கி வேங்கடமேகின்றாய்-உன்னைநானடைந்தேன் விடுவேனோ வென்றருளிச்செய்தார்; அநந்தரம் ஈஸ்வரன் பரிபூர்ண மநோரதனாய், தோளில்மாலையும் பரிமளிதமாய், இலைத்தொடைமாலையும் மோந்துகொண்டிருக்கு மிருப்பையநுபவிக்கிறார் - " தண்டுழாய்விரைநாறுகண்ணியனேயென்று " என்றுவாக்யயோஜநை. "விரைநாறு" என்றதுக்குபாவம் (இவருடையவித்யாதி) தண்டுழாய் - கண்ணி, விரைநாறு-கண்ணியனேயித்யந்வய:. (பிடித்துமோந்த) பரிமளாதிக்யத்தாலேமோந்த. இலைத்தொடை - பூப்பந்து. விரைநாறுகண்ணி - பரிமளம் ப்ரவஹிக்கிறமாலை. பாகின்றதொடங்கி, கண்ணியனே-போகின்றகாலங்கள்தொடங்கி, உன்னைநானடைந்தேன் விடுவேனோவித்யந்வயோவா. வேங்கடமேகின்றாய் - திருமலையிலே மேவிநிற்கிறவனே. மேகுகை-பொருந்தி வர்த்திக்கையும், ப்ரகாசிக்கையும்........................*

# பதினொன்றாம்பாட்டு.

கண்ணித்தண்ணந்துழாய்முடிக்கமலத்தடம்பெருங்
கண்ணனைப்புகழ்நண்ணித்தென்குருகூர்ச்சடகோபன்மாறன்சொன்ன
எண்ணிற்சோர்விலந்தாதியாயிரத்துள் ளிவையுமோர்பத்திசையொடும்
பண்ணிற்பாடவல்லாரவர்கேசவன்றமரே.

## ஆறாயிரப்படி.

(கண்ணி) எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளையுள்ளபடியே யநுபவித்து, அநுபவித்தபடியேசொன்ன இத்திருவாய்மொழியை யிசையோடும்பண்ணிலே பாடவல்லார்க்கு, " கேசவன்றமர் " என்னு மிவ்வாகாரமல்லாத வாகாராந்தர மில்லையென்கிறார்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவச்சேஷத்வசித்தியை யருளிச்செய்கிறார்.

கண்ணி - மாலாகாரமாய். தண் - குளிர்ந்த. அம்துழாய் - திருத்துழாயா லே யலங்க்ருதமான. முடி - திருமுடியையும். கமலம்-கமலம்போலேதர்ஸநீயமா ய். தடம் - விசாலமாய். பெரு - நீண்ட. கண்ணனை - திருக்கண்களையுடையவ னை. புகழ் - அவனுடைய ஆஶ்ரிதஸம்ஶ்லேஷகாரிதமான குணப்ரதையை. நண் ணி - கிட்டி. தென் - அழகிய. குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகராய். மாறன் - “ மாறன் ” என்கிறகுடிப்பேரையுடைய. சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அ ருளிச்செய்த. எண்ணில் - பகவதபிப்ராயத்தை. சோர்வில்-தப்பாத. அந்தாதி-அந் தாதியாயடைவுகுலைச்சவொண்ணாத. ஆயிரத்துள் - ஆயிரத்துள். ஓர் - அத்விதீய மான. இவைபத்தும் - இவைபத்தையும். இசையொடும் - இசையோடேகூட. பண் ணில் - பண்ணிலே. பாடவல்லாரவர் - பாடவல்லாரானவவர்கள். கேசவன்றமர்- ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனோடு அவ்யவஹிதஸம்பந்தயுக்தராவர்கள்.

எண்ணென்று-ஜ்ஞாநமாய், தத்வஜ்ஞாநத்தைத்தப்பாத வாயிரமென்றுமா ம். பண்ணென்று - ஸ்வரம். இசையென்று - கீதப்ரகாரம். இது - இரண்டாமடி யும்மூன்றுமடியும் அறுசீராய், முதலடியும் ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை.

---

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லாராரேனுமா கவுமாம், அவர்களுக்கு குலசரணகோத்ராதிகளப்ரயோஜகம், இவ்வா காரத்தாலே அவர்கள் பகவதீயரென்கிறார்.

( கண்ணியித்யாதி ) இப்போதாயிற்று வளையம்செவ்வி பெற்றது ம், முடிநற்றரித்ததும், திருக்கண்கள் விகஸிதமாயிற்றதும். ( புகழ்ந ண்ணி ) அவன் தன்பக்கல்பண்ணின வ்யாமோஹகுணத்திலே யவகாஹி த்து. ( தென்குருகூர்ச்சடகோபன்மாறன் ) ஒன்றுதிருநாமம், ஒன்று சத் ருவர்க்கத்துக்கு ம்ருத்யுவாயுள்ளவ ரென்கிறது. ( எண்ணில்சோர்விலந் தாதி ) அவன் தம்பக்கல்பண்ணின வ்யாமோஹாதிசயத்தை யநுஸந்தித் து, அவற்றிலொன்றும்குறையாமே யருளிச்செய்த வாயிரத்திலிப்பத்து. ( இசையொடும்பண்ணிற்பாடவல்லார் ) இதிலபிநிவேசத்தாலே யிசை யோடும் பண்ணோடும்பாடவல்லவர்கள். பண்ணாகிறது-காநம். இசையாகி றது - குருத்வலகுத்வாதிகள் தம்மிலேநெகிழ்ந்து பொருந்துகை. த்வநி யிலே-நிறத்திலேயென்றபடி. ( அவர்கேசவன்றமரே ) அவர்களாரேனு மாகவுமாம், குலசரணகோத்ராதிகளப்ரயோஜகம்; “ விண்ணப்பஞ்செ ய்வார்கள் ” என்னுமாபோலே, இவ்வாகாரத்தாலே அவர்கள் பகவதீயர்.

முதற்பாட்டில்-எம்பெருமான் “இவர்நம்மைவிடிற்செய்வதென்” என்கிறவதி சங்கையைப்போக்கினார் ; இரண்டாம்பாட்டில் - அதுபோன பின்பு அவனுக்குப்பிறந்த புதுக்கணிப்பைச்சொன்னார் ; மூன்றும்பாட்டி ல் - தமக்கவன் பண்ணின ஔதார்யத்தை யநுஸந்தித்து வித்தரானார் ; நாலாம்பாட்டில் - அவனுமக்குப்பண்ணின ஔதார்யமேதென்ன, இத ரவிஷய வைராக்யமென்றார் ; அஞ்சாம்பாட்டில் - இதரவிஷய வைராக்

யபூர்வகமாக ஆத்மாந்ததாஸ்யத்திலே அதிகரித்தநான் இனியொருநாளு ம் விடேனென்றார்; ஆறாம்பாட்டில் - ஆஶ்ரிதர்க் குதவுவாயானபின்பு எனக்கொருகுறையுண்டோவென்றார்; ஏழாம்பாட்டில் - என்னுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கு மொருகுறையில்லையென்றார்; எட்டாம்பாட்டில் - இதுக்குத் தாமநுஷ்டித்த வுபாயமின்னதென்றார்; ஒன்பதாம்பாட்டில் - "இவரகவாயறியவேணும்" என்றேரடிபேரநிற்க, இனிப்போக வொண்ணுதென்றார்; பத்தாம்பாட்டில் - நாம்போகாதொழிகிறேம், நீர்தாம்போகா தொழியவேணுமேயென்ன, காலத்ரயத்திலும் ஸர்வவித பந்துவுமானவுன்னை விடஸம்பாவனையில்லையென்றார்; இதில்கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்...................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கண்ணியித்யாதி) "பண்ணிற்பாடவல்லாரவர்கேசவன்தமர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நிகமத்திலித்யாதி) சரணசப்தம்-சாகாவாசி. இவ்வாகாரத்தாலே - இத்தையப்யஸிக்கிறவாகாரத்தாலே.

(கண்ணியித்யாதி) மாலாரூபமாய்க் குளிர்ந்து அழகிய திருத்துழாயாலே யலங்க்ருதமான திருமுடியையும், கமலம்போலே தர்ஶநீயமாய் விசாலமாய் நீண்டதிருக்கண்களையு முடையவனை. "உன்னை நானடைந்தேன்விடுவேனோ" என்றவநந்தரம், "கண்ணித்தண்ணந்துழாய்முடி" என்றதுக்குபாவம் (இப்போதாயிற்றித்யாதி) இப்போது - இருவரதிசங்கையும் தீர்ந்தவநந்தரம், வளையம் - மாலை. நற்றரித்ததும் - நன்றாகநின்றதும்.

புகழாவதென்னென்ன (அவன்தம்பக்கலித்யாதி) நண்ணுகை - கிட்டுகையாய், அவகாஹித்தென்றபடி. தென்குருகூர் - அழகியதிருநகரிக்கு நிர்வாஹகரான. "சடகோபன், மாறன்" என்னவேணுமோ, ஒன்றுசொன்னலமையாதோவென்ன (ஒன்றுதிருநாமமித்யாதி) "சடகோபன்" என்றது-ரூடி. "மாறன்" என்றது-யோகம்.

(எண்ணிற்சோர்வில்) எண்ணுகை - அநுஸந்திக்கை. அநுஸந்தாநத்திலொன்றுங் குறையாமே. "சடகோபன் மாறன்-எண்ணிற்சோர்வில்சொன்ன-அந்தாதியாயிரத்துள்" என்றந்வயித்தர்த்தம் (அவன்தம்பக்கலித்யாதி) அவற்றில்; வ்யாமோஹாதிசயங்களில். அந்தாதியான (ஆயிரத்தில்) என்றுகூட்டுவது. இவையுமோர்பத்து - அத்விதீயமான விவைபத்தையும்.

வைதத்வம்வ்யாவர்த்தயதி (இதிலபிநிவேசத்தாலேயித்யாதி) * பண்ணிசைகள் தானேதென்ன (பண்ணுகிறதித்யாதி) காநம் - த்வந்யாத்மகம். (குருத்வலகுத்வாதிகள்) குருத்வலகுத்வங்களும், ஆதிசப்தத்தாலே - ஸம்யுக்தங்களும். இவைகள் தத்தத்ராகாநுகுண்யத்துக்காக (தம்மிலேநெகிழ்ந்துபொருந்துகை) சேருகை - இசையாகிறதென்றபடி. இதுக்கு நிறமென்றும்பேர். உக்தவிவரணம் (த்வநியிலேயித்யாதி) த்வநியென்றது - பண். நிறமென்றது - இசை. "இவ்வாக்யம்-ஸந்திக்தம்" என்றருளிச்செய்வர். "அவர்" இதிஸாமாந்ய நிர்த்தேஶஸ்யபாவம் (அவர்களாரேனுமித்யாதி) (விண்ணப்பஞ்செய்வாரிதி) "இசையொடும்பண்

ணிற்பாடவல்லார்" என்று - காநஸஹிதமாக விப்பத்தினநுஸந்தாநமே, அவர்கள் பகவதியராகைக்கும், தந்முகேந வுத்தேஶ்யராகைக்கும் ப்ரயோஜகமென்றபடி. விண்ணப்பஞ்செய்வார் - அறையர். இவ்வாகாரத்தாலே - பாடவல்லாரொன்கிற வாகாரத்தாலே. இதிலந்வயமுண்டான வாகாரத்தாலே யென்னுதல்.

புதுக்கணிப்பு - நவீநகாந்தி. ஆத்மாந்ததாஸ்யம் - நித்யதாஸ்யம். இன்னதுமாறிமாறிப் பலபிறப்பும்பிறக்கை. இவரகவா யறியவேணுமென்றேரடி பேரநிற்கவென்கிறவிது - இவ்விடத்திலே விசேஷமென்று பூர்வமேவோக்தம். பேரநிற்க-பின்வாங்கிநிற்க.

க்ரமேணுந்வய:.......................................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( வைகுந்தாமணிவண்ணனே )

ஸ்வாஸ்வாதவ்யாபகத்வாத் ஶ்ரிததநியதத்ருஷ்டேர்நைகபோகப்ரதாநாத்
த்யாகாநர்ஹப்ரகாஶாத் ஸ்த்திரபரிசரணஸ்த்தாபநாத் பாபபங்காத் । து-
ஸ்ஸாதார்த்தஸ்ய ஸித்தேர்விரஹபயக்ருதேர்நிர்விபேதாத்மயோகாந்நித்யா-
நேகோபகாராத் ஸ்வவிரஹசகிதம் ஶௌரிமாஹாஸஹாக்ஷம்.

( ஸ்வாஸ்வாதக்யாபகத்வாத் ) வைகல்தோறு மமுதாயவானேறே - தன்னுடைய நிரதிசயபோக்யதையை க்யாபநம்பண்ணுகையாலும் ; ஶ்ரிதநியதத்ருஶே: ) எங்கும்பக்கநோக்கறியான் - ஆஶ்ரிதஜநத்தைவிட்டு அந்யத்ரகண்வைக்கமாட்டாமையாலும் ; ( நைகபோகப்ரதாநாத் ) நாமருவிநன்கேத்தியித்யாதி - ஆஶ்ரிதர் தன்னைக்கிட்டி ஸ்தோத்ரம்பண்ணி மநஸ்ஸிலே சிந்தித்து நிர்மமராய்வணங்கி ஹ்ருஷ்டராய்க் கூத்தாடும்படி யநேகவிதாநுபவத்தைக்கொடுக்கையாலும்; (த்யாகாநர்ஹப்ரகாஶாத்) உன்னையெங்ஙனம்விடுகேன் - தன்னைவிடுகைக்குஸம்பாவனையில்லாதபடி ப்ரகாசிக்கையாலும்; (ஸ்த்திரபரிசரணஸ்த்தாபநாத்) உனதந்தமிலடியையடைந்தேன் - ஆத்மாந்ததாஸ்யத்தை நிலைநிறுத்துகையாலும்; (பாபபங்காத்) முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான் - விரோதிகளானபாபங்களை ஸவாஸநமாகப்போக்குகையாலும்; (துஸ்ஸாதார்த்தஸ்யஸித்தே:) முடியாததென்னெனக்கேலினி-ஸம்பந்திஸம்பந்திகளு முத்தீர்ணராம்படி துஸ்ஸாதமான கார்யத்தைஸாதிக்கையாலும்; (விரஹபயக்ருதே:) உன்னையென்னுள் நீக்கேலெந்தாய்- "விட்டுப்பிரியப்போகிருன்" என்கிற வதிசங்கையை விளைக்கையாலும்; (நிர்விபேதாத்மயோகாத் ) உன்னை யென்னுள்ளேகுழைத்த வெம்மைந்தா - ஆத்மாவோடே "ஏகதத்வம்" ( ஏகதத்த்வம் ) என்னலாம்படிகலந்திருக்கையாலும்; ( நித்யாநேகோபகாராத் ) போகின்றகாலங்களித்யாதி - காலத்ரயத்திலேயும் மாதாபிதாக்கள் பண்ணுமுபகாரங்களையும், தான் தனக்குப்பண்ணிக்கொள்ளுமுபகாரங்களையும் பண்ணுகையாலு மெம்பெருமானை " வைகுந்தாமணிவண்ணனே " என்கிறதசகத்திலே " ஆஶ்ரிதர் நம்மைவிடிற்செய்வதென் " என்றதிசங்கையையுடையனாக வாழ்வாரத்யவஸித்தருளினுரென்கிறுர் .....................................*

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

---

வைகுந்தன்வந்துகலந்ததற்பின்வாழ்மாறன்
செய்கின்றநைச்சியத்தைச்சிந்தித்து - நைகின்ற
தன்மைதனைக்கண்டுன்னைத்தான்விடேனென்றுரைக்க
வன்மையடைந்தான்கேசவன். (கசு)

( வைகுந்தன் ) இதில் - "' அப்பொழுதைக் கப்பொழுதென் னாராவமுதம்' என்றநுபவிக்கிறவிவர், ' அயோக்யன்' என்றகலிற் செய்வதென் " என்றீஸ்வரனதிசங்கைபண்ண, இவர்ஸமாதாநம் பண்ணித்தேற்றினபடியைப் பேசுகிறபாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; ஸர்வேஸ்வரனோடே ஸம்ஶ்லேஷிக்கிறவிவர், " அல்லாவியுள்கலந்த " என்றுதம்சிறுமையை யநுஸந்திக்கையாலே, " வளவேழுலகு தலையெடுத்தின்னமுமிவர் நம்மைவிடிற் செய்வதென் " என்றதிசங்கைபண்ணி யவனலமாக்கிற படியைக்கண்டு " இவனுக்குநம்பக்கல் பாரதந்த்ர்யவாத்ஸல்யங்களிருந்தபடியென் " என்றுவிஸ்மிதராய், தாமகலாமைக் குறுப்பான பலவற்றையுஞ்சொல்லி அவனதிசங்கையைத்தீர்த்து அவனைதரிப்பிக்கிற * வைகுந்தாமணிவண்ணனி லர்த்தத்தை "வைகுந்தன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறொன்கை.

( வைகுந்தன்வந்துகலந்ததற்பின் ) நித்யவிபூதியுக்தன் " அந்தாமத்தன்பு செய்தென்னுவிசேரம்மான் " என்னும்படி ஒருநீராகக்கலந்தபின்பு. ( வாழ்மாறன் ) அத்தாலேஸத்தைபெற்று ஸம்பந்நரானவாழ்வார். ( செய்கின்றநைச்சியத்தைச்சிந்தித்து ) இவர் " அல்லாவி " என்றகலநினைக்கிற நைச்யாநுஸந்தாநத்தைக்கண்டு - " இதென்னுய்விளையக்கடவது " என்றீஸ்வரன் விசாரித்து, ( நைகின்றதன்மைதனைக்கண்டு ) அவன்சிதிலனாகிற ப்ரகாரத்தைதர்ஶித்து. ( உன்னைத்தான்விடேனென்றுரைக்க ) இப்படியென்விஶ்லேஷத்தி லதிபீருவாயிருக்கிற வுன்னைத்தான்விடேனென்று - " உன்னைநான்பிடித்தேன்கொள்சிக்கெனவே " " உன்னையெங்ஙனம்விடுகேன் " " அந்தமிலடிமையடைந்தேன்விடுவேனோ " " உன்னைநானடைந்தேன்விடுவேனோ " என்றுமீஸ்வரனைக் குறித்தருளிச்செய்ய. ( வன்மையடைந்தான்கேசவன் ) " விஜ்வரஃப்ரமுமோதஹ " ( விஜ்வரஃப்ரமுமோதஹ ) என்னும்படி * தளக்கற்றமுதமாயெங்கும் பக்கநோக்கறியாதே "என்மரதகமலையே " என்னும்படி ஸ்த்தைர்யத்தைப்ராபித்தான் ப்ரஶஸ்தகேஶனானவன். *

இரண்டாம்பத்தில் - ஆறுந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக-திருவாய்மொழி-கசு—பாட்டு-களசு.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### கேசவன்றமர் - ப்ரவேஶங்கள்.

### ஆருயிரப்படி.

(கேசவன்றமர்) என்பக்கலுள்ள அபிநிவேசத்தாலே யென்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட விஷயீகரித்தருளினனென்று ப்ரஸ்துதமான பொருளை விஸ்தரிக்கிறது.......................................................*

### பன்னீராயிரப்படி,

ஏழாந்திருவாய்மொழியில், ஸ்வஸம்பந்தி பரம்பராபர்யந்தமாக ஈஸ்வரன் பண்ணின பக்ஷபாதத்தாலே தம்மளவிலவனுடைய அபிநிவேசாதிசயத்தைக்கண்டுகந்து; ஸ்வஸாந்தாநிக விஷயத்திலவனுடைய ப்ரஸாதவிசேஷத்தையும், அதுக்கடியான தம்மளவில் பக்ஷபாதத்தையும், தத்கார்யமான வுபகாரத்தையும், அவ்வுபகாரம் தங்குலத்திலுள்ளார்க்கும் ப்ராப்திபர்யந்தமான படியையும், இதடியாக ஈஸ்வரனுக்குப்பிறந்த ஔஜ்வல்யத்தையும், இதுக்கடையஹேதுவான க்ருபாபாரவஶ்யத்தையும், அநுபவிக்கைக் குறுப்பாக ஸத்த்வோத்தரமான சித்தப்ரதாநத்தையும், பொல்லாநெஞ்சைப்போக்கின படியையும், ப்ரேமயுக்தமான நல்லநெஞ்சிலே புகுந்தபடியையும், அந்தநெஞ்சுஅவனை விடாதொழியவேணுமென்கிற அபேக்ஷையையும், இன்னின்னபடியாக அவன்தன்னை முழுக்கக்கொடுத்த ஔதார்யத்தையும், இவ்வௌதார்யாதிசயமதிசயிதஜ்ஞாநர்க்குமபரிச்சேத்யமென்னுமிடத்தையுமருளிச்செய்து, ஸ்வவிஷயத்திலாதர மீஸ்வரனுக்குஸம்பந்திரயஸந்தாந ஸம்ரக்ஷணபர்யந்தமானபடியை யவனுடைய ஆஶ்ரிதரக்ஷணார்த்தகுணசேஷ்டித ப்ரகாசகங்களான திருத்வாதசநாமங்களோடேகூட வருளிச்செய்கிறார்.........*

---

### ஈடு.

* ஆடியாடியில் "வாடிவாடும்" என்கையாலே - ஒருநீர்ச்சாவியாய் வாடினபடிசொல்லிற்று; அந்தவொரு நீர்ச்சாவியானதுதீர * காரார்கருமுகில் கலந்துவர்ஷித்தபடி சொல்லிற்று - * அந்தாமத்தன்பில்; அப்படிவர்ஷித்தபடியாலே "ஈறிலின்பத்திருவெள்ளம்யான்மூழ்கினன்"

என்று - வெள்ளமிட்டுப் பெருகினபடி சொல்லிற்று * வைகுந்தா மணி வண்ணனில்; "எமர்கீழ்மேலேழெழுபிறப்பும் மாசதிரிதுபெற்று" என்கையாலே - அவ்வெள்ளமிருகரையும் புரண்டபடிசொல்லுகிறது - * கேசவன்றமரில்.

இவர் *ஆடியாடியில் பட்டவார்த்திரவந்து கலந்தபடிசொல்லிற்று - * அந்தாமத்தன்பு; அக்கலவியால் பிறந்தப்ரீதியவன தானபடிசொல்லிற்று - * வைகுந்தாமணிவண்ணன்; அந்தப்ரீதிதான் ஆழ்வாரொருவ ரளவிலுமன்றிக்கே, தம்மோடுபரம்பரயா ஸம்பந்தமுடையாரளவும் வெள்ளமிட்டுப் பெருகினபடியைச் சொல்லுகிறதித் திருவாய்மொழியில். ஸர்வேஶ்வர னாழ்வாரோடேவந்து ஸம்ஶ்லேஷித்து அத்தால்பிறந்த ப்ரீதிதம்மொருவரளவிலுமன்றிக்கே தம்மோடுபரம்பரயா ஸம்பந்தமுடையாரளவும் பெருகினபடியைக்கண்டு, "இது இவனென்பக்கல்பண்ணின பக்ஷபாதாதிசயமிறே" என்று இனியராய், தம்மைவிஷயீகரிக்கைக்கீடான குணசேஷ்டிதாதிகளை யநுஸந்தித்து அவற்றுக்கு வாசகமான திருநாமத்தாலே அவனைப்பேசி யநுபவிக்கிறார். ஸர்வேஶ்வரன் ஒருவனை விஷயீகரித்தால், அதுபின்னை யவனளவிலேநில்லாதிறே. [ மரணாந்தாநிவைராணி ] ( மரணாந்தாநிவைராணி ) ருஷிகள் குடியிருப்பையழித்து, மைதிலியைப்பிரித்து, நம்முயிர்நிலையிலே நலிந்தாற்போலே ஸ்ரீஜடாயும்ஹாராஜரைநலிந்து, இவையெல்லாம் செய்யமாட்டானேயிவனினி. [ நிர்வ்ருத்தம்நःப்ரயோஜநம் ] ( நிர்வ்ருத்தம்நःப்ரயோஜநம் ) இவன் ஜீவிக்கிறநாளிலே "நாம்செய்யும்நன்மை யிவன்விலக்காதொழிவது காண்" என்றிருந்தோம், அது அந்நாளில் பெற்றிலோம்; நாம்தேடியிருந்தது முந்தறமுன்னம் ஸித்திக்கப்பெற்றோமிறே. [ க்ரியதாமஸ்யஸம்ஸ்கார: ] ( க்ரியதாமஸ்யஸம்ஸ்கார: ) இவன் நாம்செய்யும்நன்மை விலக்காதானவளவு பிறந்தவின்று மிழக்கவேணுமோ, வேண்டுவனசெய்யப்பாரும். [மமாப்யேஷயதாதவ] (மமாப்யேஷயதாதவ) நீரிருய்த்திருந்திராகில், குடற்றொடக் குடையாரிலே யொருவன்செய்யுமித்தனையன்றோ; நாமிவனுக்குவேண்டுவனசெய்ய, நீர்பின்னைகடக்க நில்லீரொன்றுறிறே. ஸ்ரீவிபீஷணாழ்வான்பக்கலோரம் ராவணனளவுஞ்சென்றதிறே. "மஹாராஜர்க்குசத்ரு" என்று வாலியைநிரஸித்துவைத்து, மஹாராஜர் கண்ணீர்பொறுக்கமாட்டாதே [ஸஞ்ஜாதபாஷ்ப:] [ஸஞ்ஜாதபாஷ்ப:] என்று தாமும் கண்ணநீர்விழவிட்டாரிறே. [யமேநஸ்ஸ்தேஹ:] [தர்மேமநஸ்சதேபத்ர] ஸ்ரீமாலாகாரர்பக்கல் விஷயீகாரம் அவர் ஸந்தாநத்தளவும் சென்றதிறே. ஸ்ரீகண்டாகர்ணன்பக்கல் பண்ணினவிஷயீகாரம் அவன்தம்பியளவுஞ்சென்று, "நீயவனுக்கு நல்லையாகில் அவன்முன்னாகப்போ" என்றருளிச்செய்தானிறே. எம்பாரித்திருவாய்மொழி யருளிச்செய்யப்

புக்கால், " ஸ்ரீவைஷ்ணவனேனென்கிறர் " என்பராம் ; வைஷ்ணவ த்வசிந்ஹமிறே ( த்ருத்வாதசநாமம் ) ஆழ்வாருடைய நெடுமாற்கடிமை யும், எம்பெருமானுடைய நெடுமாற்கடிமையு மிரண்டாயிற்று நெடுமா ற்கடிமை ; அதிலெம்பெருமானுடைய நெடுமாற்கடிமையித் திருவாய் மொழி..........................................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

கேசவன்றமர்ப்ரவேஸே. ரூபகமாகஸங்கதி ( ஆடியாடியிலீத்யாதி ) ஒருநீ ர்ச்சாவி - ஒருநீரில்லாதபயிர். காரர்கருமுகில் கலந்துவர்ஷித்தபடி யென்றது- "அ ல்லாவியுள் கலந்தகாரார் கருமுகில்போல் " என்றத்தைப்பற்ற. ( இருகரையும் ) கீழேழ்பிறப்புமொருகரை, மேலேழுபிறப்புமொருகரை.

முக்யஸங்கதிமாஹ ( இவராடியாடியிலித்யாதி ) உக்த்தார்த்தவிவரணம் ( ஸர்வேஸ்வரனித்யாதி ) " எமர்கீழ்மே லெழுபிறப்பும் " என்றத்தைப்பற்ற ( ஸ ம்பந்தமுடையாரளவுமென்றது ) இனியராய் - ப்ரீதராய். ஆழ்வாரைவிஷயீகரித் தால் ஸம்பந்திஸம்பந்திபர்யந்தம் விஷயீகரிப்பா னென்னென்ன ( ஸர்வேஸ்வர னொருவனையித்யாதி )

பகவத்விஷயீகாரம் ஸம்பந்திஸம்பந்திகளளவுஞ் செல்லுமென்கைக்கு நா லுதாஹரணங்காட்டுகிறர் ( மரணாந்தாநீத்யாதி ) யுத்தகாண்டே சதுர்த்தச சதத மே விபீஷணம்ப்ரதிராமঃ, " மரணாந்தாநி வைராணி நிவ்ருத்தம் நঃ ப்ரயோ ஜநம் । க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ " ( மரணாந்தாநிவை ராணிநிர்வ்ருத்தம்நঃப்ரயோஜநம் । க்ரியதாமஸ்யஸம்ஸ்காரோமமாப்யேஷயதாத வ. ) ராவணவிஷயத்தில் நம்முடையவைரங்கள் ராவணன் மரணாந்தங்களென்றர் த்தமன்று, கிந்து, நம்முடையவிஷயத்தில் ராவணன்பண்ணினவைரங்கள் ராவண ன் மரணாந்தங்களென்று வ்யாக்யாநம்பண்ணுகிறர் ( ருஷிகளித்யாதி ) நாட்டார் சொல்லுகிறபடி யன்றிக்கே, இப்படிவைரங்களை ராவணநிஷ்ட்டமாக வ்யாக்யாந ம்பண்ணுகிறர் - " ஸஞ்ஜாதபாஷ்பঃ " ( ஸஞ்சாதபாஷ்பঃ ) என்னும்படியான குணதிக்யத்தைப்பற்ற. உயிர்நிலை - மர்மஸ்த்தாநம். ( இவையெல்லாமென்று ) ப லவாகச்சொன்னது - " வைராணி " ( வைராணி ) என்கிறபஹுவசநத்தைப் பற்ற. ( நிர்வ்ருத்தம்நঃப்ரயோஜநம் ) " ஸீதாவாப்திரூபம் நঃ ப்ரயோஜ நம் நிவ்ருத்தம் " ( ஸீதாவாப்திரூபம்நঃப்ரயோஜநம்நிர்வ்ருத்தம் ) என்றுசொல்லு வர்கள் ; தந்நேத்யர்த்தவிசேஷமாஹ ( இவன்ஜீவிக்கிறவித்யாதி ) இப்படிவ்யாக் யாநம்பண்ணிற்று - " பதிவா ராவணஸ்ஸ்வயம் " ( பதிவாராவணஸ்வயம் ) இத்யா தியைக்கடாக்ஷித்து. நாம்தேடியிருந்தது - அப்ரதிஷேதம். விலக்காதொழிவது காண் - விலக்காதொழிவதொன்றே. விலக்காதான் - ப்ரதிஷேதியாதான். ஏஷঃ- ராவணஸ்தவயதா, மமாபிததாபூঃ என்றபடி. (குடற்றுடக்குடையாரிலேயிதி) " ராக்ஷஸாநாம் பலாபலம் " ( ராக்ஷஸாநாம்பலாபலம் ) என்று - இவனை ப் ராதாவாகச்சொல்லுகையாலே, இவனுடைய ப்ராதாவானபோதே தமக்கும் ப்ரா

தாராவணனென்கை ஸித்தமிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறதென்றுகருத்து. இஶ்ஶ்லோகத்தால் பலிதமர்த்தமாஹ (ஸ்ரீவிபீஷணுழ்வானித்யாதி) ஒரம் - பக்ஷபாதம். இந்தவாக்யத்தினடியிலே - இப்படியென்றத்யாஹார்யம். உதாஹரணுந்தரம் (மஹாராஜர்க்கித்யாதி) கிஷ்க்கிந்தாகாண்டே சதுர்விம்ஶே, "ஐக்ஷ்வாகாணாமயம் வீரஸ்ஸுதவாவஶோவாலிஜகந்யஜஸ்ய। ஸஞ்ஜாதபாஷ்பஃபரவீரஹந்தாராமோமுஹூர்த்தம்விமநாபபூவ" (இத்யேவமார்த்தஸ்ய ரகுப்ரவீரஶ்ஶ்ருத்வாவசோவாலிஜகந்யஜஸ்ய। ஸஞ்ஜாதபாஷ்பஃபரவீரஹந்தாராமோமுஹூர்த்தம்விமநாபபூவ.) (தர்மஇதி) பஞ்சமேம்ஶே ஏகோநவிம்ஶே, "யுஷ்மத்ஸந்ததிஜாதாநாம் ... பவிஷ்யதி। யுஷ்மத்ஸந்ததிஜாதாநாம் ... பவிஷ்யதி" (தர்மேமநஶ்சதேபத்ரஸர்வகாலம்பவிஷ்யதி। யுஷ்மத்ஸந்ததிஜாதாநாம்தீர்க்கமாயுர்ப்பவிஷ்யதி) (ஸ்ரீமாலாகாரரித்யாதி) "யுஷ்மத்ஸந்ததிஜாதாநாம்" (யுஷ்மத்ஸந்ததிஜாதாநாம்) இத்யாத்யுத்தரார்த்தத்தையுதாஹரிக்கவேண்டியிருக்க, "தர்மேமநஶ்சதேபத்ர" (தர்மேமநஶ்சதேபத்ர) என்றுதாஹரித்தது - பூர்வார்த்தஸமபிவ்யாஹாரதாத்பர்யத்தாலே. உத்தரார்த்தத்திலாயுஶ்ஶப்தம் - "யாவத்தோஹிக்ஷணாநீதா ஹரிஸ்ம்ருதிவிஹீநா। தாவத்தோஹி-க்ஷணநம்கார்யம்" (யாவந்தோஹிக்ஷணுநீதாஹரிஸ்ம்ருதிவிவர்ஜிதா। தாவந்தோஹி-கணநம்கார்யம்) என்றுஶோகோதிரிதமான வாயுஃபரமென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. (ஸ்ரீகண்டாகர்ணனித்யாதி) "யோயம்ப்ராதாதவஸ்வர்க்கீயாவதிந்த்ரோபவேத்ததா" (யோயம்ப்ராதாதவஸ்வர்க்கீயாவதிந்த்ரோபவேத்ததா) என்றத்தைப்பற்ற. (அவன்முன்னுகப்போவென்று) ஹரிவம்ஶே ஷட்பஞ்சாசச்சததமே கண்டாகர்ணம்ப்ரதிக்ருஷ்ணஃ, "அக்ஷய்யஸ்ஸ்வர்க்கவாஸஸ்தே யாவதிந்த்ரோபவிஷ்யதி। தாவத்ஸ்வர்க்கேபவாநஸ்து ஶாஸநாந்மமநாந்யதஃ। நஷ்டேஶக்ரேததஸ்ஸ்வர்க்காத்ஸாயுஜ்யம்மமகச்சது" (அக்ஷய்யஸ்ஸ்வர்க்கவாஸஸ்தேயாவதிந்த்ரோபவிஷ்யதி। தாவத்ஸ்வர்க்கேபவாநஸ்துஶாஸநாந்மமநாந்யதஃ। நஷ்டேஶக்ரேததஸ்ஸ்வர்க்காத்ஸாயுஜ்யம்மமகச்சது) என்கிறபூர்வஶ்லோகங்களும்விவக்ஷிதம். (அவன்முன்னுகப்போவிதி) பரமபதஸ்ய இதிசேஷஃ. அவனைமுன்னிட்டுக்கொண்டு போவென்றபடி.

குணசேஷ்டிதவாசக நாமாந்தரங்களிருக்க, திருத்வாதசநாமத்தாலே யநுபவிக்கிறதுக்குபாவம் (எம்பாரித்யாதி) இத்தால்-உபகாரஸ்ம்ருதியாலே திருத்வாதசநாமத்தைச்சொல்லி யநுபவிக்கையே ப்ரதாநஹேதுவாய், இதுவுமொருநாந்தரீயகப்ரயோஜநமென்று கண்டுகொள்வது. "ஸ்ரீவைஷ்ணவனுனேனென்கிறுர்" இதிவக்துர்ஹ்ருதயம்தர்ஶயதி (வைஷ்ணவத்வசிந்ஹமித்யாதி) வைஷ்ணவத்வசிந்ஹமாகையாலே யவற்றையே யநுஸந்திக்கிறுரென்றபடி.

ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் விஷயீகரிக்கைக்குரணோக்தி (ஆழ்வாருடையவித்யாதி) * நெடுமாற்கடிமை என்கிறது - ததீயபர்யந்த ப்ரேமத்தை. இந்தததீயப்ரேமமாழ்வார்க்கு ஸ்வரூபப்ரயுக்தம்; எம்பெருமானுக்கு வ்யாமோஹப்ரயுக்தம்.

இவருடையஸம்பந்தி ஸம்பந்திபர்யந்தமான பகவத்வ்யாமோஹம் - "செடியார்நோய்களெல்லாம்" இத்யாதியாலே கீழேசொல்லிற்றே யாகிலும், கீழிற்

திருவாய்மொழி-அதிசங்காநிவர்த்தநபரம் : இத்திருவாய்மொழி- ஆழ்வாருடைய ஸம்பந்திஸம்பந்தி பர்யந்தமான பகவத்வ்யாமோஹ ப்ரதிபாதநபரமென்று கண்டுகொள்வது..............................................*

---

## ஏழாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

கேசவன்றமர்கீழ்மேலெமரேழெழுபிறப்பு
மாசதிரிதுபெற்றுநம்முடைவாழ்வுவாய்க்கின்றவா
ஈசனென்கருமாணிக்கமென்செங்கோலக்கண்ணன்விண்ணோர்
நாயகனெம்பிரானெம்மானாராயணனாலே.

### ஆறாயிரப்படி.

ஸர்வேஶ்வரனாய், நிரதிசயஸௌந்தர்யாதி கல்யாணகுணகனாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், எனக்கு ஸ்வாமியாயிருந்த நாராயணனாலே, ஏநகேநாபிப்ரகாரேண ஸாக்ஷாத்வாபரம்பரயாவா என்னோடு ஸம்பந்தமுடையா ரெல்லாரும் பகவதேகபோக ரானார்கள் ; தத்ஸம்பந்தினாலே பகவதேகபோகத்வலக்ஷணமான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ நமக்கு விளையும்படியே யிதுவென்கிறார்..............................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், தம்முடைய குலத்திலுள்ளார் பகவதபிமாநாந்தர்க்கதரானபடியை யருளிச்செய்கிறார்.

ஈசன் - ஸர்வஸாதாரணமான ஸ்வாமித்வத்தை யுடையனாய். என்கருமாணிக்கம் - அப்படியே பொதுவன்றியே நீலரத்நம்போன்றவடிவை யெனக்குக்காட்டி. என்செங்கோலக் கண்ணன் - அவ்வடிவுக்கு பரபாகமாம்படி சிவந்தழகிய திருக்கண்களாலே யென்னை யநந்யார்ஹனாக்கி. விண்ணோர்நாயகன் - பரமபதவாஸிகளோபாதி அங்கீகரித்து. எம்பிரான் - என்னை யநுபவிப்பித்து. எம்மான் - எனக்கு நாதபூதனான வுறவடியாக. நாராயணனாலே - நிரதிசயவாத்ஸல்ய யுக்தனான நாராயணனாலே. கீழ்மேலேழெழுபிறப்பும் - கீழ்மேலேழேழுபிறப்பும். கேசவன்தமர் - ஸர்வாதிகனான கேசவன்தமரான. எமர் - எமரானவர்கள். இது - நிர்ஹேதுக பகவதங்கீகாரமாகிறவிந்த. மா - பெரிய. சதிர் - சதிரை. பெற்று - பெற்று. அத்தாலே, நம்முடை - நம்முடைய. வாழ்வு - ஸ்ரீவைஷ்ணவத்வ ஸ்ரீயானது. வாய்க்கின்றவா - வளருகிறபடியே..............................................*

---

### ஈடு - முதற்பாட்டு.

ஸம்பந்தி ஸம்பந்திகள்பக்கலிலு மெம்பெருமா னபிநிவிஷ்டனானபடியைக்கண்டு, இதெல்லா மென்பக்கலுண்டான விஷயீகாராதிசய மிறேயென்று ஹ்ருஷ்டராகிறார்.

(கேசவன்தமர்) ப்ரசஸ்தகேசனுன நிலையிலே தோற்றிருக்கு மவர்களென்னுதல்; விரோதி நிரஸநசீலதையிலே தோற்றிருக்கு மவர்களென்னுதல்; “ தஸ்மாத்கேஶவநாமவாந் ” (தஸ்மாத்கேஶவநாமவாந்) என்கிறபடியே, ஸர்வநிர்வாஹகனுன நிலையிலே தோற்றிருக்குமவர்களென்னுதல். ‘ ஸர்வேஶ்வரனுடையார் ” என்றுயிற்று ஆழ்வாரிவர்களை விரும்புகிறது. எமர் என்கிற - ஆழ்வாருடைய ஸம்பந்தங்கொண்டாயிற்று அவனிவர்களை விரும்புகிறது. இத்தால்-ஒரு வைஷ்ணவாபிமாநமே வேண்டுவதவன் விஷயீகரிக்கைக்கென்றபடி. (கேசவன்றமர்) அவனுடைய அவயவஸௌந்தர்யத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள். (கீழ்மேலித்யாதி) எமர்கீழ்மேலேழெழுபிறப்பும் கேசவன்றமரானூர்கள். “ ஏகாஹமபி கௌந்தேய பூமிஸ்த்தமுதகம் குரு । குலம் தாரயதே தாத ஸப்த ஸப்த ச ஸப்த ச ” (ஏகாஹமபிகௌந்தேயபூமிஸ்த்தமுதகம்குரு । குலம்தாரயதேதாத ஸப்தஸப்தசஸப்தச) என்கிறபடியே, “ தஶ பூர்வாந் தஶ அபராந் ஆத்மாநஞ்ச ” (தஶபூர்வாந்தஶாபராநாத்மாநஞ்ச)

(மாசதிரிதுபெற்று) “ விதிசூழ்ந்ததால் ” என்கிற - ஆகஸ்மிக பகவத்க்ருபையாதல், “ மாதவனென்றதேகொண்டு ” என்கிற உக்திமாத்ரத்தையாதல், தாம்பெற்றபேற்றைத்தம்மோடு ஸம்பந்தமுடையாரும் பெறும்படியான பேற்றைப்பெற்றென்னுதல். (மாசதிரிதுபெற்று) பெரும்சதிரைப்பெற்று. * தடைக்கைச்சதுரனைப்பெற்றென்றபடி. தந்தலையாலே வந்ததாகிலிறே ஸாவதியாயிருப்பது. (இதுபெற்று) காணக்காண அவன் ப்ரஸாவஹிக்கிறபடி. (நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா) நம்மோடுஸம்பந்தமுடையாரையு மவனிப்படிவிஷயீகரிக்கிறது நம்முடைய ஸம்பத்திறே. (நம்முடைவாழ்வு) ஸ்ரீவைஷ்ணவஸம்பத்து. (வாய்க்கின்றவா) ஊற்றுமாறுதே மேன்மேலனபெருகிவருகிறபடி. ஏழ்படிகாலென்றது தானேரளவில்லை, இன்றுநம்மளவும் வரச்செல்லுகிறதிறே. இப்படிவிஷயீகரிக்கைக்கு ஹேதுவென்னென்னில் (ஈசன்) வகுத்தஸ்வாமியாகையாலே. (என்கருமாணிக்கமென் செங்கோலக்கண்ணன்) கண்ணழகாலே யென்னை யநந்யார்ஹனுக்கி, தன்வடிவழகை யென்னை யநுபவிப்பித்தவன். (விண்ணோர்நாயக னெம்பிரானெம்மான்) நித்யஸூரிகளைத் தோற்பிக்குமாபோலே என்னை வடிவழகைக்காட்டித்தோற்பித்து, என்னை யவ்வடிவழகையநுபவிப்பித்த வுபகாரகன். (நாராயணனுலே) தன்மேன்மையைப்பாராதே உகவாதாரையும் விடமாட்டாதபடி வத்ஸலனுயுள்ளவனுலே. ஸமிதைபாதி ஸாவித்ரிபாதியாகவன்றிக்கே, அவனுடைய நிர்ஹேதுகக்ருபையாலே,

நாராயணனுலே - எமர் - கீழ்மேலேழெழுபிறப்பும் - கேசவன்

றமரானார்கள், மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா. நாரா யணனாலே யென்றவிடம் * மாசதிரினுடைய வுபபாதநம்..... ..... .. ..*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (கேசவன்றமரித்யாதி) "[illegible]" (பூர்வநிந்தாப்ரஶம்ஸாஸு) இத்யாதிப்படியே ப்ரஶம்ஸாயாம்மதுப்ப்ரத்யய: "[illegible]" (கேஶாத்வோந்யதரஸ்யாம்) இதிகேசாத்பரம் மதுபோவிகல்பேநவகாராதேஶம்வந்து, கேசவ: என்று கிடக்கிறதென்று ஸ்ருதிதாயாஹ (ப்ரஶஸ்தகேசனனவித்யாதி) "[illegible] [illegible]" (யஸ்மாத்த்வயைவதுஷ்டாத்மாஹத:கேஶீஜநார்த்தந। தஸ்மாத்கேஶவநாமாத்வம்லோகேக்யாதிம்கமிஷ்யஸி) இதிபஞ்சமேம்ஶே ஷோடஶோநாரதநிர்வசநம் ஸ்ருதிதாயாஹ (விரோதீத்யாதி) இவ்விடத்திலே, கேசவஶப்தார்த்தமாக, "[illegible] [illegible]" (ஹந்த்யர்த்தாத்வதே: 'அந்யேப்யோபித்ருஶ்யதே' இதிட:, ப்ருஷோதராதித்வாத் கேஶிந்ஶப்தே இகாரஸ்யாகார:நகாரலோபஶ்ச) என்கிறடீகாஸர்வஸ்வவாக்யத்தை ஸ்மரிப்பது. (தஸ்மாத்கேசவநாமவாநிதி) ஹரிவம்ஶே கைலாஸயாத்ராயாமேகஷஷ்டிசததமே க்ருஷ்ணம்ப்ரதிருத்ரஸ்தோத்ரே, "[illegible] [illegible]" (கஇதிப்ரஹ்மணோநாம ஈஶோஹம் ஸர்வதேஹிநாம்। ஆவாந்தவாங்கேஸம்பூதௌ தஸ்மாத்கேசவநாமவாந்.)

"கேசவன்றமர்கீழ்மேலெமர்" இதிபாடக்ரமம், "எமர்-கேசவன்றமரானார்கள்" இத்யந்வயக்ரமஞ்ச ஸ்ருதிதாயாஹ (ஸர்வேஶ்வரனுடையாரித்யாதி) "கீழிற்றிருவாய்மொழியிலே, 'எமர்கீழ்மேலெழுபிறப்பும்' என்று-இவர்ஸம்பந்தங்கொண்டீஶ்வரன் விரும்புகையாலே, அந்யோந்யாஶ்ரயமில்லை" என்றருளிச்செய்வர். பலிதம் (இத்தாலித்யாதி) முந்தினவர்த்தவிவரணம் (அவனுடையவித்யாதி) "கீழ்மேலேழெழுபிறப்பும்" என்றது-நடுவேழுபிறப்புக்கு முபலக்ஷணம் இதிஸ்ருதிதாய ப்ரமாணத்வயமாஹ (ஏகாஹமபீத்யாதி) யத்வா, ஒருவனபிமாநங்கொண்டெல்லாருமுஜ்ஜீவிக்கக்கூடுமோவென்ன (ஏகாஹமபீத்யாதி) ஆதல். இத்தால்-ஸாமாந்யதாமத்துக்கிப்படிகண்டால், வைஷ்ணவாபிமாநத்துக்கு கிம்புநர்ந்யாயஸித்தமென்றபடி. மஹாபாரதேதர்மஸூநும் ப்ரதிபீஷ்மோக்தம், "[illegible]" (ஏகாஹமபி) இத்யாதி. "[illegible] [illegible]" (தஶபூர்வாந்தஶாபராநாத்மாநஞ்சைகவிம்ஶதிம் பங்க்திஞ்சபுநாதி) இதிபோதாயநதர்மே. இவ்விடத்தில் - "[illegible] [illegible]" (ஆஸ்போடயந்திபிதர:ப்ரண்ருத்யந்திபிதாமஹா:। வைஷ்ணவோந:குலேஜாதஸ்ஸநஸ்ஸந்தாரயிஷ்யதி) என்கிறஶ்லோகமநுஸந்தேயம்.

இது - "மாசதிர்பெற்று" இத்யந்வய:. "இது" என்று-வக்ஷ்யமாணக்ருபாதிபராமர்ஶியாதல், கீழுக்தமான "எமர்கீழ்மேலேழுபிறப்பும் - கேசவன்றமராளுர்கள்" என்றத்தைப்பராமர்ஶிக்கிறதாதல். (விதிசூழ்ந்ததால்) இத்யாதியாற்சொல்லப்படுகிற வர்த்தத்ரயத்தில், முந்தினவர்த்தத்வயம் - உபாயபரம்; த்ருதீயார்த்தம்-பலபரம். உபாயபரமானமுந்தினவர்த்தத்வயத்தில் "மா" என்றதுக்கர்த்தம் ( பெருஞ்சதிரையித்யாதி ) இது-நாலாமர்த்தமாதல். இப்போது, அநந்தரார்த்தத்வயமும்-பலபரம். இந்தப்பெரிய சதிரைப்பெற்று இதிசப்தார்த்த:. பலபரமானத்ருதீயார்த்தத்தில் "மா" என்றதுக்கர்த்தம் (தம்தலையாலேயித்யாதி) இந்தத்ருதீயார்த்தத்தில்- "இது" என்றதுக்கர்த்தம் ( காணக்காணவித்யாதி ) இத்தால்- "கேசவன்தமர்" என்றதின் சரமாவதியைக்காட்டினாராயிற்று.

இவர்கள் கேசவன்தமராளுல் தமக்கு வாழ்வானபடி யென்னென்ன ( நம்மோடு ஸம்பந்தமித்யாதி ) ஸம்பத்தாகச்சொல்லுகிற தெத்தையென்னவருளிச்செய்கிறுர் (ஸ்ரீவைஷ்ணவஸம்பத்தென்று) வாழ்வு-ஸம்பத்து. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயென்றபடி. "வாய்க்கின்ற" என்கிறவர்த்தமாநார்த்தம் ( ஊற்றுமாறுதேயித்யாதி ) வாய்க்கின்றவா-வளர்கிறபடியென் இதிசப்தார்த்த:. ஆளுல் "கீழ்மேலேழுபிறப்பும்" என்றத்தோடு விரோதியாதோவென்ன, அதுபலக்ஷணமென்கிறுர் (ஏழ்படிகாலித்யாதி) ஓரளவு-ஒருமர்யாதை.

"விண்ணோர்நாயகன் எம்மான்-எம்பிரான்" என்றந்வயித்து, "என்கருமாணிக்கமென் செங்கோலக்கண்ணன் விண்ணோர்நாயகன்" என்றவநந்தரம் "எம்மானெம்பிரான்" என்றதுக்குபாவம் (நித்யஸூரிகளையித்யாதி) வத்ஸலனுயுள்ளவனுலேயென்றது - பஹுவ்ரீஹ்யர்த்தம். ஏகாரத்துக்குபாவம் (ஸமிதையித்யாதி) ஸமிதை பாதிஸாவித்ரிபாதியாவது - உபாகர்மத்தின் மற்றைநாள் ப்ரஹ்மசாரிகளுக்கு ஆயிரம்ஸமிதையிடுதல், இல்லாவிட்டால் ஆயிரம் காயத்ரிஜபம்பண்ணுதல் செய்யாதே, ஐந்நூறுஸமிதையும் ஐந்நூறுகாயத்ரியுமாகப்பண்ணலாகாதென்றபடி.

உபாயோபேயபரநிர்வாஹத்வயத்துக்கும் ஸாதாரணமான யோஜனையையருளிச்செய்கிறுர் ( நாராயணனுலேயித்யாதி ) நாராயணனுலேயென்கிறவிதுதத்விசேஷணங்களான "ஈசன்" இத்யாதிபதங்களுக்குமுபலக்ஷணம். "மாசதிர்" என்றது - உபாயபரமானபக்ஷத்தில், "நாராயணனுலே" என்றது புநருக்தமன்றோவென்ன ( நாராயணனுலேயென்றவிடமித்யாதி ) மாசதிரினுடைய வுபபாதகமாவது-நாராயணசப்தத்துக்கு-பஹுவ்ரீஹியாலே, வாத்ஸல்யஞ்சொல்லுகையாலே, "மாசதிர்" என்று - க்ருபாதிகளைச்சொன்னபக்ஷத்தில், * மாசதிருக்கு அதுபபாதகமாயிருக்குமென்றபடி. இந்தபக்ஷத்தில், "நாராயணனுலே" என்கிறத்ருதீயை-ப்ரதமார்த்தகம். நாராயணனுகிற மாசதிரைப்பெற்றென்றபடி. ஆக, "மாசதிரிது" என்றதின்-உபாயபரமான முந்தினவர்த்தத்தினுடைய வுபபாதகம் - "நாராயணனுலே" என்கிறவிடம்; பலபரமான த்விதீயார்த்தத்தினுடைய வுபபாதகம் "எமர்கீழ்மேலேழுபிறப்பும் கேசவன்றமராளுர்கள்" என்கிறவிடம். கீழ்மேலேழுபிறப்பிலுமுண்டானவெமரென்றபடி.

உபாயபரமானபக்ஷத்தில், "ஈசனித்யாரப்ய, நாராயணனுகிற - மாசதிரைப்பெற்று-கீழ்மேலேழுபிறப்பிலுமுண்டான வெமர் - கேசவன்றமராளுர்கள்; நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா இத்யந்வய:. பலபரமானபக்ஷத்தில், ஈசன்தொ

டங்கி, நாராயணனாலே-கீழ்மேலேழெழுபிறப்பிலுமுண்டானவெமர் கேசவன்றம ரானார்கள்; மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வு வாய்க்கின்றவா இத்யந்வயஃ...*

# இரண்டாம்பாட்டு.

நாரணன்முழுவேழுலகுக்குநாதன்வேதமயன்
காரணம்கிரிசைகருமமிவைமுதல்வனெந்தை
சீரணங்கமரர்பிறர்பலருந்தொழுதேத்தநின்று
வாரணத்தைமருப்பொசித்தபிரானென்மாதவனே.

## ஆறாயிரப்படி.

(நாரணன்) "ஈசன்" என்று ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தை யுபபாதிக்கிறது.

ஸர்வாந்தராத்ம பூதனாய், ஸர்வலோகேஶ்வரனாய், ஸர்வவேதவேத்யனாய், காரணத்துக்கும் க்ரியைக்கும் கார்யத்துக்கும் நிர்வாஹகனாயிருந்துவைத்து, எனக்குபோக்யமாகைக்காக, பெரியபிராட்டியாரும் * அயர்வறு மமரர்களும் தொழுதேத்த, அதினாலே ஸம்வர்த்திதபலனாய்நின்று வாரணத்தை மருப்பொசித்தபிரான் மாதவனாலே எமரேழெழுபிறப்பும் கேசவன்றமராயிற்றென்கிறார். ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழுக்தமான நாராயணசப்தார்த்தத்தை யுபபாதியாநின்றுகொண்டு ஸ்வவிஷயபக்ஷபாதத்தை யருளிச்செய்கிறார்.

நாரணன் - நாராயணசப்தவாச்யனாய். அதினுடையவர்த்தமான, முழுவேழுலகுக்கும் - ஸமஸ்தலோகத்துக்கும். நாதன் - ஸ்வாமியாய். வேதமயன் - அந்தசப்தத்தையே ப்ரதாநமாகப்ரதிபாதிக்கிற வேதப்ரதிபாத்யனாய். காரணம் - க்ரியாஹேது. கிரிசை - க்ரியை. கருமம் - க்ரியாபலமானகார்யம். இவை - இவற்றுக்கு - முதல்வன் - காரணபூதனாய். சீர் - குணோத்தரராய். அணங்கு - திவ்யரான. அமரர் - தேவர்களும். பிறர் - ருஷிகளும்மநுஷ்யாதிகளுமான. பலரும் - எல்லாரும். தொழுது - வணங்கி. ஏத்த - ஸ்தோத்ரம்பண்ணும்படியாக. நின்று - நின்று. வாரணத்தை - குவலயாபீடத்தை. மருப்பு - கொம்பை. ஒசித்த - முறித்த. பிரான் - மஹோபகாரகனாய். என் - இப்படிநாரசப்தார்த்தங்கள் தனக்குவிபூதியானபடியை யெனக்குப்ரகாசிப்பித்த. மாதவன் - ஶ்ரியஃபதியானக்ருஷ்ணன். எந்தை - என்னையநந்யார்ஹனுக்கினசேஷி.

சீரணங்கென்று - லக்ஷ்மியாகவுமாம்.....................................*

## ஈடு-இரண்டாம்பாட்டு.

"நாராயணனாலே" என்று நாராயணசப்தம் ப்ரஸ்துதமாயிற்றே; அதுக்கர்த்தமருளிச்செய்வதாக சப்தத்தை யுபாதாநம் பண்ணுகிறார்

(நாரணன்) இதுக்கர்த்தமென்னென்னில்) முழுவேழுலகுக்குநாதன்) ஸர்வஸ்வாமி. இவ்வர்த்தத்தில் ப்ரமாணமென்னென்னில் (வேதமயன்) "நாராயணபரம்ப்ரஹ்ம" (நராயணபரம்ப்ரஹ்ம) இத்யாதிகளாலே "ஸர்வஸ்வாமி" என்றோதப்படுகிறவன். (காரணம்கிரிசைகருமமிவை முதல்வன்) தன்விபூதியில், காரணமாயும், கார்யமாயும், உதகாஹரணமாகிற பலமாயும், வரக்கடவதான விவற்றுக்கு நியந்தாவாயுள்ளான். க்ரியாஸாதநம், அதடியாகவரும்க்ரியை, தத்ஸாத்யமானகார்யம், இவற்றுக்கு நிர்வாஹகனு யிருக்குமென்றுமாம். (எந்தை) எனக்கு ஜநகனுனவன். (சீரணங்கு) ஸ்ரீயான அணங்கு. அணங்கென்று- தெய்வப்பெண்ணென்றபடி. பெரியபிராட்டியார். அன்றியே, சீரணங்கமரரொன்று - நித்யஸூரிகளுக்கு விஶேஷணமாகவுமாம். ஶேஷத்வாநுரூபமான ஆத்மகுணங்களை தரியாநிற்பாராய் அப்ராக்ருத ஸ்வபாவரான நித்யஸூரிகள், இவ்வருகுண்டான ஸம்ஸாரிகள், இப்படி, "சிறியார்பெரியார்" என்று வாசியின்றிக்கேயெல்லாரு மெழுத்துவாங்கி ஏத்தும்படியாகநின்று, குவலயாபீடத்தின்கொம்பை அநாயாஸேநமுறித்த வுபகாரகன். "நஸமம் யஜூர்தஹா:" (நஸமம்யுத்தமித்யாஹு:) என்னும்படியாக. (என்மாதவனே) நான்தோற்றதுறை. மாதவனுன - நாராயணன் - எந்தை. ஸ்ரீமந்நாராயண னெனக்கு ஸ்வாமியென்கிறுர்....... .. ................*

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (நாரணனித்யாதி) கீழ்ப்ரஸ்துதமான நாராயணசப்தத்துக் கர்த்தமருளிச்செய்கிறுரென்று பாட்டுக்குஸங்கதி கண்டுகொள்வது.

ஆனுலர்த்தமாத்ரத்தைச்சொல்ல வமையாதோ, சப்தோபாதாநமெதுக்கென்ன (நாராயணனுலேயித்யாதி) நாரணன் - நாராயணசப்தவாச்யம்.

முழுவேழுலகுக்கும்நாதன் - அதினுடையவர்த்தமான, ஸமஸ்தமானவேழுலகுக்கும் ஸ்வாமியானவன். (காரணமாயுமிதி) காரணம் - ம்ருத்பிண்டாதிகள். கார்யம் - கடாதிகள். உதகாஹரணமாவது - அத்தால்வரும் வ்யவஹாரங்கள். இத்தால்-காரணமான பூதபஞ்சகத்தையும், தத்கார்யமான அண்டாதிகளையும், ததந்தர்வர்த்திகளான ஆத்மாக்களுடைய வ்யவஹாரங்களையுஞ் சொல்லுகிறது. கிரிசை- க்ரியை. க்ரியத இதிக்ரியா என்று - கடாதிகார்யத்தைச் சொல்லுகிறது. கருமம் - கர்மம். கார்யவர்க்கத்தினுடைய வ்யாபாரங்களைச் சொல்லுகிறது. (க்ரியாஸாதநமித்யாதி) க்ரியாஸாதநமாவது - ப்ரமணரூப க்ரியாஸாதநமான ம்ருத்பிண்டசக்ர சீவராதிகள். க்ரியை - ப்ரமணரூபக்ரியை. தத்ஸாத்யமானகார்யம் - கடாதிகார்யங்கள். "கருமம்" என்று-க்ரியத இதிகர்மஎன்று, கடாதிகார்யத்தைச்சொல்லுகிறது. இத்தால்-நிமித்தோபாதாந ஸஹகாரிகாரணங்களையும், தத்கார்யமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையும், தத்ஸாத்யமான தேவாதிபதார்த்தங்களையுஞ் சொல்லுகிறது. முந்தினவர்த்தத்திலே, சீர் - ஸ்ரீ:. சீரணங்கு - ஸ்ரீயாகிற தெய்வப்பெண். நித்யஸூரிபக்ஷே, சீரென்று - குணவாசி. அணங்கு - (அப்ராக்ருதஸ்வ

பாவர் (பிறர்) ஸம்ஸாரிகளான ப்ரஹ்மாதிகள். பலர்-உபயரும். நமஸ்காரமும் தாஸ்யஸூசகமாகையாலே சொல்லிற்று (எழுத்துவாங்கியென்று) எழுத்துவாங்குகை-சேஷிபேரைமார்பிலே யெழுதிக்கொள்ளுகை. “𑌪𑌥𑍍𑌯𑌮𑌙𑍍𑌗𑍁𑌲𑍀𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌃 𑌉𑌰𑍋𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌕𑍍𑌷𑌰𑌮𑍍 । 𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌕𑌰𑌣𑌂 𑌚𑍈𑌵 𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍇𑌤𑌚𑍍𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍” (பத்யமங்குளிவிச்சேதః உரோவிந்யஸ்தமக்ஷரம் । தந்நாமகரணஞ்சைவ தாஸ்யமேதச்சதுஷ்டயம்) என்னக்கடவதிறே. அகாரவிவரணமான நாராயணசப்தத்திலே-“𑌅𑌵𑌰𑌕𑍍𑌷𑌣𑍇” (அவரக்ஷணே) என்கிறரக்ஷகத்வமு மர்த்தஸித்தமாகையாலே, “வாரணத்தைமருப்பொசித்தபிரான்” என்று-அநிஷ்டநிவ்ருத்தி சொல்லுகிறது. “ஏத்த” என்றதுக்கு ப்ரமாணம் (நஸமமித்யாதி) இந்தஸ்லோகம் க்ருஷ்ணவிஷயமாகக் காணப்படவில்லை, “𑌸𑍍𑌥𑌲𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌰𑌥𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌰𑌕𑍍𑌷𑌸𑌃 । 𑌨 𑌸𑌮𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌦𑌾𑌨𑌵𑌾𑌃” (ஸ்த்தலஸ்த்தஸ்யசராமஸ்யரதஸ்த்தஸ்யசரக்ஷஸः। நஸமம்யுத்தமித்யாஹுர்த்தேவகந்தர்வதாநவாः) என்று ராமவிஷயமாகக் காணப்படுகிறது; க்ருஷ்ணன்விஷயத்திலேயு முண்டென்று கண்டுகொள்வது. என்மாதவன்-என்னை யெழுதிக்கொண்ட ஸ்ரிய:பதி.

அந்வயபூர்வகமாகபாவம் (மாதவனானநாராயணனெந்தையென்று) எந்தை-எனக்குஜநகனென்னுதல், எனக்கு ஸ்வாமியென்னுதல். முழுவேழுலகுக்கும் நாதனாய், வேதமயனாய், காரணம் கிரிசை கருமமிவற்றுக்கு முதல்வனாய், சீரணங்கமரர்பிறர்பலரும் தொழுதேத்தநின்று வாரணத்தை மருப்பொசித்தபிரானாய், என்மாதவனான-நாரணன்-எந்தை யித்யந்வய:..............................................*

---

## மூன்றாம்பாட்டு.

மாதவனென்றதேகொண்டென்னையினியிப்பாற்பட்ட து
யாதவங்களுஞ்சேர்கொடேனென்றென்னுட்புகுந்திருந்து
தீதவங்கெடுக்குமமுதஞ்செந்தாமரைக்கட்குன்றங்
கோதவமிலென்கன்னற்கட்டியெம்மானென்கோவிந்தனே.

### ஆறாயிரப்படி.

(மாதவன்) இப்படியெம்பெருமானென்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட விஷயீகரிக்கும்படி யென்னை வைஷ்ணவனாக்குகைக்கு ஹேதுவான என்பக்கலுள்ள சதிராகிறதென்னென்னில்; அதின்னதென்று சொல்லுகிறது.

யத்ருச்சயாபிராட்டி பரிக்ரஹித்தார் சொல்லுவதொருசொல்லைச்சொல்ல, அச்சொல்மாத்ரத்தையேகொண்டு மெய்யேபிராட்டி பரிக்ரஹமாயிருப்பாரைப்பார்த்தருளும் பார்வையாலே யென்னைப்பார்த்தருளி, “இவனையாகாதேதான் நெடுங்காலமெல்லாமிழந்தது” என்று, இழந்தகாலத்தை யநுஸந்தித்துமோஹித்து, பின்னை நெடும்போதுகூடப்ரபு

த்தனுய், போனகாலத்தை யினிச்செய்யலாவதில்லையிறே, இனி யிப்பாலுள்ளகால்மாகிலு மென்னைவிடேன் என்று, நிரதிசயஸௌந்தர்யத்தையுடையனுய், நிரதிசயபோக்யபூதனுய், ஆஸ்ரிதவத்ஸலனுய், பரமகாருணிகனுயிருந்த எம்பெருமானென்னுள்புகுந்திருந்து, என்பக்கலுள்ள ஸ்வஸம்ஸ்லேஷவிரோதியான ஸ்வரூபப்ரயுக்ததோஷத்தையும் ஹேதுக்ருதமானதோஷத்தையும்போக்கி, எனக்கு பரமபோக்யனுனெனென்கிருர்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்பக்ஷபாதமடியாக ஸ்வவிஷயத்தி லுக்திமாத்ரத்தையேபற்ருசாகக்கொண்டுபண்ணின வுபகாரத்தை யருளிச்செய்கிருர்.

என்-எனக்காக. சோவிந்தன்-க்ருஷ்ணனுய்வந்தவதரித்த. எம்மான் - என்னுடையஸ்வாமியானவன். மாதவன்-ஸ்ரீமான். என்றதே-என்று நான்சொன்னவிந்த அஹ்ருதயோக்தியே. கொண்டு-பற்ருசாகக்கொண்டு. என்னை - உக்தியில்வாசியறியாதவென்னை. இனி-உக்த்யநந்தரமாக. இப்பாற்பட்டது - மேலுள்ளகாலமெல்லாம். அவங்கள்-அவித்யாதிகளானகுறைகள். யாதும்-ஏதேனுமொன்றையும். சேர்கொடேன்-சேர்கொடேன். என்று - என்றுஸங்கல்பித்து. அதுக்கீடாக, என்னுள்-என்னெஞ்சுக்குள்ளே. புகுந்து-புகுந்து. இருந்து-அநந்யபரனுயிருந்து. தீது-புத்திபூர்வகமானதீமையையும். அவம்-ப்ராமாதிகமான அவத்தையும். கெடுக்கும்-கெடுக்கும்படியான. அமுதம்-நித்யபோக்யபூதனுய். இஸ்ஸம்ஸ்லேஷத்தாலே, செம்-சிவந்த. தாமரை-தாமரைபோலேயிருக்கிற. கண்-திருக்கண்களையும். குன்றம்-ஸுஸ்த்திரமாய்வளர்ந்தவடிவையுமநுபவிப்பித்து. கோது - கோதும். அவம் - அவமும். இல்-இல்லாத. என்கன்னற்கட்டி-கன்னற்கட்டிபோலே யெனக்கினியனுனன்.

கன்னற்கட்டி-கருப்புக்கட்டி. அதுக்கு, கோதும், அவமுமாவது-நீரஸமானவஸ்த்வந்த்ரஸம்ஸர்க்கமும், பாகதோஷமும். ஈஸ்வரனுக்கு, கோதும், அவமுமாவது-உபகாரத்தினுடையஹேது ஸாபேக்ஷத்வமும், ஸ்வப்ரயோஜநார்த்தத்வமும்.*

---

## ஈடு-மூன்ரும்பாட்டு.

கீழே " மாசதிரிதுபெற்று " என்ருர்; இந்நன்மைக்கடியென்னென்ன ; நினைவின்றிக்கேயிருக்க அந்தஃபுரவாசிகள்சொல்லும் வார்த்தையைச்சொன்னேனென்கிருர் ; " ஜாமாதாதயிதஸ்தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யாஹரிம்பஸ்யேம ) என்ருரிறேபட்டர்.

( மாதவனென்றதேகொண்டு ) நான் " மாதவன் " என்ற வுக்திமாத்ரத்தைக்கொண்டு. இத்தையேதிருவுள்ளத்திலே குவாலாகக்கொண்டு. " அல்லாத்திருநாமங்களுக்கு மிதுக்கும்வாசியறிவதே " என்றுஇத்தையே குவாலாகக்கொண்டு. ( என்னை ) அல்லாத திருநாமங்களுக்கு மிதுக்கும் வாசியறியாதவென்னை. ( இனி ) முன்புகழிந்தகாலம் கழிந்தேவிட்டதிறே. மேலத்யல்பகாலமாய்த் தோற்றுநின்றதாயிற்று ஈஸ்வரனுக்கு. " பழுதேபலபகலும்போயின " என்றீஸ்வரனைக் கிட்டினசேதநனி

ருக்கு மிருப்பைத்தா னென்பக்கலிலே யிராநின்றான். “ ஬ுத்வாகாலமதீ தஞ்ஸமுமோஹ ” ( புத்த்வாகாலமதீதஞ்சமுமோஹ ) என்றிராநின்றானே யிற்று. ( இப்பாற்பட்டது ) அணைக்குக்கிழக்குப்பட்ட நீரோபாதியிறே போனகாலம், இனிமேலுள்ள காலமாகிலும். ( யாதவங்களுஞ்சேர்கொடேனென்று ) உன்னை யாதொருதபஸ்ஸிலும் புக்குக்லேசிக்கவிடேனென்று. அம்மிதுணையாக ஆறியிருக்கையிறே இவனைவிட்டு உபாயாந்தரத்தைப்பற்றுகை. அவங்கள் - நரகஹேதுவான அவித்யாதிகள். புறம்பே, சில ப்ரயோஜநங்களைக்கொண்டு போகவிடுதல், “ அயோக்யன் ” என்றகலவிடுதல், உபாயாந்தர பரிக்ரஹம்பண்ணவிடுதல் செய்யேனென்று. ( என்று ) “ ஏதத் வ்ரதம் மம ” ( ஏதத்வ்ரதம்மம ) என்கிறபடியே ஸங்கல்பித்து. இப்படிஸங்கல்பித்து நெடுங்கைநீட்டாக விருக்கையன்றிக்கே, என் ஹ்ருதயத்திலே வந்துபுகுந்து. “ புகுந்தாலும் போக்குவரத்துண்டாமாகில், வாலிபோனவழியையடைத்து மஹாராஜர் குறும்புசெய்தாற்போலேயாம் ” என்றுஸ்த்தாவர ப்ரதிஷ்டையாகவிருந்து. (புகுந்திருந்து) இவனாவரநிறுத்தவொண்ணாதே யிவர்க்குமாகத்தான் புகுந்திருந்தானத்தனை. புகுந்துசெய்த க்ருஷியேதென்னில் ( தீதவங்கெடுக்கும் ) தீதாவது - * பொய்ந்நின்ற ஞானத்துக்குமுன்பு புத்திபூர்வகமாகப் பண்ணிப்போந்தபாபம், அவமாவது - ஜ்ஞாநம்பிறந்தபின்பு ப்ராமாதிகமாகப்பண்ணினவை. இரண்டாலுமாக-பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தக கர்மங்களைச்சொல்லுகிறது. அன்றியே, “ கோக்நே சைவ ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா। நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: ” ( கோக்நேசைவஸுராபேசசோரேபக்நவ்ரதேததா । நிஷ்க்ருதிர்விஹிதாஸத்பி: க்ருதக்நேநாஸ்திநிஷ்க்ருதி: ) என்கிறபடியே, நிஷ்க்ருதியுள்ள பாபங்களையும் இல்லாதபாபங்களையும் சொல்லிற்றாகவுமாம். இவற்றைக்கெடுப்பது கஷாயபாநத்தைப் பண்ணுவித்தோவென்னில் ( அமுதம் ) தன்னுடைய போக்யதையை யநுபவிப்பித்தாயிற்று. ( செந்தாமரைக்கண்குன்றம்) ரஸநேந்த்ரியத்துக்கே யன்றியேகண்ணுக்கும் போக்யமாயிருக்கை. ( குன்றம் ) இத்தலையிற்றீது மவமும்போக்கினால் யிருக்கையன்றிக்கே, “ தனக்குண்டாய்க்கழிந்தது ” என்றுதோற்றும்படியாயிற்று வடிவிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யம் ; “ வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:கித: ” ( வ்யஸநேஷுமநுஷ்யாணும்ப்ருஸம்பவதிது:கித: ) என்றிருக்குமவனிறே. ( கோதவமிலென்கன்னல்கட்டி ) கோதாவது - த்ரவ்யாந்தர ஸம்ஸர்க்கத்தாலேவருமது. அவமாவது-பாகத்தாலேவருமது. தார்ஷ்டாந்திகத்தில், கோதுமவமுமாகிறது- ஆந்ருஶம்ஸ்யத்துக்காகவாதல், இவனுக்குபகாரமாகவாதல் விஷயீகரிக்கை. தனக்குப் புறம்பாயிருப்பதொரு போக்யவஸ்துவில்லாதபடி தான்போக்யனாயிருக்கும். ( எம்மா

ன் ) நாள் "வேறொன்றுபோக்யம்" என்றிராதபடி யென்னைத்தோற்பித்தவன். ( என்கோவிந்தனே ) க்ருஷ்ணாவதாரமுந் தமக்கென்றிருக்கிறார் ; * ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தங்கோவிறே..................*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (மாதவனித்யாதி) கீழ்ப்பாட்டு ப்ராஸங்கிகமாகையாலே முதற்பாட்டோடே ஸங்கதி (கீழேயித்யாதி) இது-ஸாத்யபரமானயோஜநையைப் பற்ற. அந்தஃபுரஸம்பந்திகளப்படிசொல்லுவர்களோவென்ன (ஜாமாதேத்யாதி) ஸ்ரீகுணரத்நகோஶே, "𑌮𑌾𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌿 𑌯𑌥𑍈𑌵 𑌮𑍈𑌥𑌿𑌲𑌜𑌨𑌸𑍍𑌤𑍇𑌨𑌾𑌧𑍍𑌵𑌨𑌾 𑌤𑍇 𑌵𑌯𑌂 𑌤𑍍𑌵𑌦𑍍𑌦𑌾𑌸𑍍𑌯𑍈𑌕𑌰𑌸𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌸𑍁𑌭𑌗𑍈𑌰𑍍𑌭𑌾𑌵𑍈𑌰𑌿𑌹𑌾𑌮𑍁𑌤𑍍𑌰 𑌚 । 𑌜𑌾𑌮𑌾𑌤𑌾 𑌦𑌯𑌿𑌤𑌸𑍍𑌤𑌵𑍇𑌤𑌿 𑌭𑌵𑌤𑍀𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌹𑌰𑌿𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌮 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑌾𑌮 𑌯𑌾𑌮 𑌚 𑌪𑌰𑍀𑌚𑌾𑌰𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑍇𑌮 𑌚" (மாதர்லக்ஷ்மியதைவமைதிலஜநஸ்தேநாத்வநாதேவயம் த்வத்தாஸ்யைகரஸாபிமாநஸுபகைர்ப்பாவைரிஹாமுத்ர ச । ஜமாதாதயிதஸ்தவேதிபவதீஸம்பந்தத்ருஷ்ட்யாஹரிம்பஶ்யேமப்ரதியாம யாமசபரீசாராங்ப்ரஹ்ருஷ்யேமச ) அஸ்யார்த்தஃ - வாரீர்தாயாரே, லக்ஷ்மியே, மைதிலஜநமானது யாதொருபடி யும்முடைய ஸம்பந்தத்தையிட்டுப் பெருமாளை விரும்புகிறது, அந்தமார்க்கத்தாலே அந்தநாங்களும்முடைய தாஸ்யமொன்றிலுமே ரஸமாயிருக்கிறவபிமாநத்தாலே யழகியதாயிருக்கிற பாவங்களினாலே இஹலோக பரலோகங்களிரண்டிலும் "மணவாளப்பிள்ளை" "தேவரீருடையநாயகன்" என்னும், மைதிலஜநம்போலே தேவரீருடைய ஸம்பந்தத்தையிட்டே ஸர்வேஶ்வரனை ஸேவிக்கக்கடவோம், கிட்டக்கடவோம், கைங்கர்யங்களைப்பண்ணக்கடவோம், அந்தக்கைங்கர்யத்தாலவனுக்குவிளைகிற ப்ரீதியைக்கண்டு அத்தாலேயுகக்கக்கடவோமென்றபடி.

"என்றதே" என்ற ஏகாரத்தினர்த்தம் (நான்மாதவனென்றது) "கொண்டு" என்றதுக்குபாவம் (இத்தையேயித்யாதி) குவாலாக-அதிகமாக. "மாதவன்" என்றதுக்குபாவம் (அல்லாதவித்யாதி)

தாத்பர்யம் (முன்பித்யாதி) "இனி" என்கிறவிது-பகவத்வசநாந்தர்க்கதம். பலிதம் (மேல் அத்யல்பேத்யாதி) மேலத்யல்பகாலமாய்த்தோற்றி துஃகிப்பானிவனன்றோவென்ன (பழுதேயித்யாதி) முதற்றிருவந்தாதி. இப்படியநுபவத்தோடே செல்லுகைக்குறுப்பான கீழ்க்கழிந்தகாலமெல்லாம் வ்யர்த்தமேபோய்விட்டதேயென்றபடி. அவனிப்படியிருந்தவிடமுண்டோவென்ன (புத்த்வாகாலமித்யாதி) கிஷ்கிந்தாகாண்டேத்ரிம்ஶே, "𑌕𑌾𑌮𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌚 𑌸𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑌂 𑌨𑌷𑍍𑌟𑌾𑌂 𑌚 𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑌾𑌂 । 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌕𑌾𑌲𑌮𑌤𑍀𑌤𑌂 𑌚 𑌮𑍁𑌮𑍋𑌹 𑌪𑌰𑌮𑌾𑌤𑍁𑌰𑌃." (காமவ்ருத்தஞ்சஸுக்ரீவம் நஷ்டாஞ்சஜநகாத்மஜாம்।புத்த்வாகாலமதிதஞ்சமுமோஹபரமாதுரஃ.) "இப்பாற்பட்டது" என்கையாலே-அப்பாற்பட்டதிற் செய்யலாவதில்லையென்று விவக்ஷித்து பாவம் (அணைக்கித்யாதி) இனியிப்பாற்பட்டது-உக்த்யநந்தரமான மேலுள்ளகாலமெல்லாமென்றுசப்தார்த்தம். உபாயாந்தரங்களினுடைய ஆபாஸத்வத்தை ஸநிதர்ஶநமாகவருளிச்செய்கிறார் (அம்மிதுணையாகவித்யாதி) "அவங்கள்" என்றதுக்கர்த்தம் (நரகஹேதுவானவித்யாதி) "யாது" என்றவிஶேஷணத்துக்குபாவம் (புற

ம்பேயித்யாதி) " யாது, அவங்கள் " என்றுபதச்சேதம். ஏதேனுமொருகுறைகளு ம்சேரும்படி விட்டுக்கொடேனென்று சப்தார்த்தம்.

" என்னுள் " என்றதுக்குபாவம் ( இப்படியித்யாதி ) நெடுங்கைநீட்டாக-அ திதூரமாக. " இருந்து " என்றதுக்குபாவம் ( புகுந்தாலுமித்யாதி ) வாலிபோனவ ழியையடைத்து - வாலிபோனபிலத்வாரத்தையடைத்தென்றபடி. குறும்புசெய் கை - துஷ்டசேஷ்டிதம்பண்ணுகை. " புகுந்திருந்து " என்றதுக்குபாவம் ( இவனைநி றுத்தவித்யாதி )

தீதவம் - பூர்வோத்தராகங்களாதல், நிஷ்க்ருதியுள்ளவையுமதில்லாதவை யுமாதல். இரண்டர்த்தத்தையும் க்ரமேணவருளிச்செய்கிறார் (தீதாவது பொய்ந்நி ன்றவித்யாதியாலும், அன்றியே கோக்நேசேத்யாதியாலும்) கோக்நேசைவேத்யா திஶ்லோகః-கிஷ்கிந்தாகாண்டே சதுஸ்த்ரிம்ஶே ஸுக்ரீவம் ப்ரதிலக்ஷ்மணேநோக்தః. நிஷ்க்ருதியில்லாத பாபங்களென்றவிடத்திலே - " ப்ராயஶ்சித்தம் ஸம்யஞ்சி ஹிதம் பாதகிநோவிஹி । ஶரணாகதஹந்தாரோ நந்த்வேவரஜநீசர " ( ப்ராயஶ்சித்தேகஸந்த்யந்திமஹாபாதகிநோபிஹி । ஶரணாகதஹந்தாரோநத்வே வரஜநீசர ) என்றரகுராக்ஷஸஸம்வாதத்தின் ஶ்லோகமநுஸந்தேயம்.

(ரஸநேந்த்ரியத்துக்கேயிதி) " என்றக்காலண்ணிக்கு மழுதூறுமென்னுவுக் கு " என்றாற்போலே ஸ்துதித்வாராரஸநேந்த்ரியத்துக்கு போக்யமென்றபடி. "கு ன்றம்" என்றதுக்குபாவம் (இத்தலையிலித்யாதி) அவர்கள் வ்யஸநம் தன்னதாயிரு க்குமோவென்ன (வ்யஸநேஷ்வித்யாதி) அயோத்யாகாண்டே த்விதீயே, பூர்வமே வ "துயரறு" இத்யத்ரலிகிதம்.

த்ருஷ்டாந்தத்திலே யிவ்விரண்டுமேதென்ன ( கோதாவதித்யாதி ) தார்ஷ் டாந்திகத்தில்-இவனிடத்தில். தார்ஷ்டாந்திகத்திலென்ற வாக்யத்தால்பலிதம்-ப்ர ணயித்வத்தாலே தன்பேறாகச்செய்யுமவனென்று. ஆந்ருஶம்ஸ்யத்துக்காக-ஆந்ரு ஶம்ஸ்யத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக. இவனுக்கு-சேதநனுக்கு. "அமுதம், 'கன்னற் கட்டி " என்றபதத்வயத்துக்குபாவம் ( தனக்கித்யாதி ) இவ்வாக்யம் - "கோதவமி ல்" என்கிறதுக்குதாத்பர்யாந்தரமாதல். இப்போது, கோதாவது - ஸ்வஸமானபோ க்யவஸ்த்வந்தரஸத்பாவம். அவமாவது ஸ்வாதிகபோக்யவஸ்த்வந்தரஸத்பாவம். கன்னற்கட்டி - வெல்லக்கட்டி.

"என்" என்றதுக்குபாவம் (க்ருஷ்ணாவதாரமுமித்யாதி) அப்படி தமக்கா யிருக்குமோவென்ன (ஆட்கொள்ளவித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. ஸர்வரை யுமடிமைகொள்வதாகவந்தாவிர்ப்பவித்த கோபநிர்வாஹகனானவனே யென்றபடி. இத்தால்-ஆஶ்ரிதர்க்காகவவதரிக்கை "தமக்கு" என்னலாயிருக்குமென்றுகருத்து.

அடியேதொடங்கி, என்கோவிந்தன் - எம்மானித்யந்வயः .................*



## நான்காம் பாட்டு.

கோவிந்தன்குடக்கூத்தன்கோவலனென்றென்றேகுனித்துத்
தேவுந்தன்னையும்பாடியாடத்திருத்தியென்னைக்கொண்டென்
பாவந்தன்னையும்பாறக்கைத்தெமரேழெழுபிறப்பு
மேவுந்தன்மையமாக்கினான்வல்லனெம்பிரான்விட்டுவே.

## ஆறாயிரப்படி.

(கோவிந்தன்) இப்படியென்னுள்ளேபுகுந்திருந்து தன்னுடைய குணசேஷ்டிதங்களையேத்திக் களிக்கும்படியாகவும், தன்னுடையஸர்வேஶ்வரத்வத்தையு மாஶ்ரிதபராதீநத்வமாகிற தன்னுடையஸ்வரூபத்தையும் பாடியாடும்படியாகவு மென்னைத்திருத்தி, இப்படியென்னை விஷயீகரித்து, பின்னையென்பக்கலுள்ள ப்ரதிபந்தகங்களையெல்லாம்போக்கி யவ்வளவில் பர்யவஸியாதே, என்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட என்னைப்போலே தன்றிருவடிகளை ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவராக்கினன்; வல்லன் வல்லனெம்பிரான், வல்லனென்னயன், வல்லனென்னப்பன், வல்லனென்றென்று அவனைப்புகழுகிறுர்................................................*

## பன்னீராயிரப்படி,

அநந்தரம், இவ்வுபகாரம் ஸ்வஸம்பந்திகுலபர்யந்தமாம்படிபண்ணின ஸாமர்த்ந்யத்தையருளிச்செய்கிறுர்.

வல்லன் - நினைத்ததுசெய்யவல்லசக்திமானய். விட்டு-ஸமஸ்தபதார்த்தங்களையும் வ்யாபித்து. எம்பிரான் - ஊரைவளைந்தொருவனைப்பிடிக்குமாபோலே வென்னையங்கீகரித்தஸ்வாமியானவன். கோவிந்தன்-ஜாத்யுசிதமானகோஸம்ருத்தியையுடையவன். குடக்கூத்தன் - அந்தஸம்ருத்த்யுசிதமானஹர்ஷவ்யாபாரமாயுள்ளகுடக்கூத்தையுடையவன். கோவலன்-இந்தவைஶ்வர்யசேஷ்டிதங்களுக் கநுரூபமானகோபாலஜந்மத்தையுடையவன். என்றென்றே - என்றென்றிவற்றைத்தனித்தனியேசொல்லி. குனித்து-ப்ரீதியாலேகூத்தாடி. தேவும்-இந்தஸௌலப்யத்துக்கடியானபரத்வத்தையும். தன்னையும்-தனக்கஸாதாரணஸ்வபாவமான நீர்மையையும். பாடி-ப்ரீதிக்குப்போக்குவீடாகப்பாடி. ஆட-ஸஞ்சரிக்கும்படி. திருத்தி - இரும்பைப்பொன்னுக்குவாரைப்போலே நித்யஸூரிஸமாநனும்படிதிருத்தி. என்னை-என்னை. கொண்டு-தன்னுடையவனுகக்கைக்கொண்டு. ஸ்வாங்கீகாரவிரோதியான, என்-என்னுடைய. பாவந்தன்னையும்-பாபங்களையும். பாற-ஓடிப்போம்படி. கைத்து - துரத்தி. எமர்-என்னோடந்வயமுடையார். ஏழெழுபிறப்பும்-ஏழேழுஜந்மமும். மேவும்-தன்னைப்ராபிக்கும். தன்மையம்-தன்மையையுடையோமாம்படி. ஆக்கினன்-பண்ணினன்.

இதொருசக்தியோகமிருந்தபடியென்னென்றுகருத்து. பாற-ஓட ..........*

---

## ஈடு - நான்காம்பாட்டு.

என்னோடு பரம்பரயாஸம்பந்தமுடையாரையுங்கூட என்னைப்போலேயாக்கினு னொருவனுடைய ஸாமர்த்த்யமிருக்கும்படியே! என்று விஸ்மிதராகிறுர்.

(கோவிந்தன்) ஸ்ரீவைகுண்டத்திலில்லாததொரு ஸம்பத்திறேயிது. கோஸம்ருத்தியாலுண்டான ஐஶ்வர்யமுள்ளதிங்கேயிறே. (குடக்கூத்தன்) ப்ராஹ்மணர், ஐஶ்வர்யம்விஞ்சினல் யாகங்கள்பண்ணுமாபோ

## ஈடு-பதின்மூன்றும்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றவர்களை,'இத்திருவாய்மொழிதானே எம்பெருமான்திருவடிகளைச் சேர்த்துவிடுமென்கிறார்.

(வண்ணம்) அழகியநிறத்தை யுடைத்தாய்ப் பெருவிலையனான ரத்நம்போலேயிருக்கிற விக்ரஹத்தையுடையவனை. (வண்ணமாமணிச் சோதியை) வண்ணம் - நிறம். (மாமணி) மா - கறுப்பு. கறுத்தமணி போலே. நீலரத்நம்போன்ற வடிவில் தேஜஸ்ஸையுடையவ னென்றுமாம். இவ்வழகைக் கொள்ளைகொள்ளும் போக்தாக்களைச் சொல்லுகிறது (அமரர்தலைமகனை) ஒருநாடாக அநுபவியாநின்றாலும் தன்னழகைப்பரிச்சேதிக்க வொண்ணாதிருக்கிறவனை. (கண்ணனை) அவர்களே யநுபவித்துப்போகாமே, இங்குள்ளாரு மநுபவிக்கும்படி க்ருஷ்ணனாய்வந் தவதரித்தவனை. (நெடுமாலை) ஒருவனை விஷயீகரித்தால், அவனளவில் தலைக்கட்டாத வ்யாமோஹத்தையுடையவனை. (தென்குருகூர்ச்சடகோபன்பண்ணிய) வேதம்போலே பிறப்பிலியன்று. "ஊவளாஃஷெயழ்" (அபௌருஷேயம்) என்னுமதிலும் வீறுண்டாயிருக்கிற தாயிற்று வக்த்ருவிசேஷத்தாலே. இவைபண்ணிலே யாயிற்றுநடந்தது. (பன்னிருநாமப்பாட்டு) வைஷ்ணவத்வசிந்ஹமான திருநாமங்களை வைத்துப்பாடினவை. இவைசெய்வதென்னென்னில் (அண்ணல்தாளணைவிக்கும்) ஸர்வேஸ்வரன் திருவடிகளோடே சேர்த்துவிடும். இத்திருவாய்மொழியோட்டைஸம்பந்தந்தானே கேசவன்றம ராக்கிவிடும்.

முதற்பாட்டில் - தம்மோடு ஸம்பந்திஸம்பந்திகளு மெல்லாரும் தம்மைப்போலே விஷயீக்ருத ரானார்களென்றார்; இரண்டாம்பாட்டில்-அதுக்கடி நாராயணனாகையாலே என்றும், அந்நாராயண சப்தார்த்தத்தையு மருளிச்செய்தார்; மூன்றாம்பாட்டில் - இப்படிவிஷயீகரிக்கைக்கு ஹேதுசொன்னார்; நாலாம்பாட்டில் - ஸர்வகாலமும் தன்னையேயநுபவிக்கும்படி பண்ணினானென்றார்; அஞ்சாம்பாட்டில் - இப்படிதம்மை யநுபவிப்பித்ததனாலே அவன்வடிவில் புகரைச்சொன்னார்; ஆறாம்பாட்டில் - இப்படியென்னை விஷயீகரிக்கைக்கடி நிர்ஹேதுகக்ருபையென்றார்; ஏழாம்பாட்டில்-தன்னையே ஸர்வகாலமுமநுபவிக்கும்படியான நெஞ்சைத்தந்தானென்றார்; எட்டாம்பாட்டில்-தந்தவளவன்றிக்கே, விரோதியானநெஞ்சையும் போக்கினானென்றார்; ஒன்பதாம்பாட்டில் - தன்னுடைய கல்யாணகுணங்களையே நானநுபவிக்கும்படி யென்ஹ்ருதயத்திலே புகுந்தானென்றார்; பத்தாம்பாட்டில் - அநுபவவிரோதியான இந்த்ரியங்களையும் தன்வழியாக்கிக்கொண்டானென்றார்; பதினொன்றாம்பாட்டில்-ஏவம்பூதனானவன் என்னையல்லதறியா னானென்றார்; பன்னிரண்டாம்பாட்டில்-என்னைப்போலே காண்பார்க்குக்காணலாமதொழிய ஸ்வயத்நத்

தாலறியப்போகாதென்ருர் ; நிகமத்தில் - பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்..........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (வண்ணமாமணியித்யாதி) "பன்னிருநாமப்பாட்டண்ணல்தாளணைவிக்கும்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி)

ப்ரதமார்த்தத்தில், வண்ணம் - அழகியநிறம். "மா" என்று - மஹத்தை. "சோதி" என்று - விக்ரஹம். த்விதீயார்த்தத்தில், "மாமணி - வண்ணச்சோதி" இத்யந்வய:. "மா" என்று - கறுப்பாய், நீலமணியென்றபடி. "வண்ணம்" என்று - நிறத்துக்காஶ்ரயமான விக்ரஹத்தை லக்ஷிக்கிறது. "தலைமகனை" என்றதுக்குபாவம் (ஒருநாடாகவித்யாதி) ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் (அவர்களேயித்யாதி)

பிறப்பிலியன்ருகில் வீறுண்டாகக்கூடுமோவென்ன (அபௌருஷேயமித்யாதி) வீறு - அதிசயம். வக்த்ருவிசேஷத்தாலே யென்றவிடத்தில் - "ஸ்ரூஹ்வாதிநோவதந்தி" (ப்ரஹ்மவாதிநோவதந்தி) ஸஹோவாசவ்யாஸ:பாராஶர்ய:" (ஸஹோவாசவ்யாஸ:பாராஶர்ய:) "யத்வைகிஞ்சமநுரவதத்தத்பேஷஜம்" (யத்வைகிஞ்சமநுரவதத்தத்பேஷஜம்) என்றிருக்கையாலே, *மயர்வற மதிநலம்பெற்ற இவருடைய ஸ்ரீஸூக்திவைலக்ஷண்யம் கிம்புநர்ந்யாயஸித்தமிறே யென்றபடி. தென்குருகூரித்யாதிக்கு - அழகிய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த, த்ராவிடஸந்தர்ப்பரூபமான ஆயிரத்திலுள்ளும், பண்ணிலேவர்த்திப்பதாய்த் திருத்வாதச நாமத்தைப்பற்றி வருகிறபாட்டான இவை பன்னிரண்டுமென்று சப்தார்த்தம். "பன்னிருநாமப்பாட்டு" என்றவிடத்திலே விவக்ஷிதம் விசேஷமாஹ (வைஷ்ணவத்வேத்யாதி)

பூர்வவாக்யத்தை விவரிக்கிருர் (இத்திருவாய்மொழியித்யாதி)

ஹேதுசொன்னுரென்றது - "மாதவனென்றதேகொண்டு" என்றத்தைப் பற்ற. (இப்படியென்னை விஷயீகரிக்கைக்கடி) உக்திமாத்ரத்தையே வ்யாஜமாக்கி விஷயீகரிக்கைக்கடி..........................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(கேசவன்றமர்)

ஸ்வஸம்பந்தாத்ஸ்வஸம்பந்திபூர்வஜாந்பாவயந்தம் ஸ்வாத்மீயத்வேந விஷ்வக்ஸ்வநுஷ்ட்ருநரநகரஸ்வர்கலோகாதிஸம்ஸ்தாந் [illegible]
[illegible]
ஜநஹிதயாபாஹ்யஶாஸ்த்ராதிரஹ்ஷ்வே. (கக)

(ஸர்வாதி:) கேசவன்றமரித்யாதி - "ஊஉதிஷூஹணொ நாஜ" (க இதிப்ரஹ்மணோநாம) இத்யாதிகளிற்படியே ஸர்வகாரணமாய்; (ஸர்வநாத:) நாரணன் முழுவேழுலகுக்குநாதன் - ஸர்வஸ்வாமியுமாய்; (த்ரிபுவநஜநீவல்லப:) மாதவனென்றதேகொண்டு - பெரியபிராட்டியாருக்கு வல்லபனுமாய்; (ஸ்வாஶ்ரிதார்த்தீ) எமரேழெழுபிறப்பும் மேவுந்தன்மையமாக்கினான் - "பஹுவாக ஆஶ்ரிதருண்டாகவேணும்" என்றுப்ரார்த்திக்கு மவனுமாய்; (விஷ்வக்வ்யாப்த்யாதிதீப்த:) விட்டிலங்கு கருஞ்சுடரித்யாதி - நிரவதிக தேஜோரூபனுமாய்; (விமதநிரஸந:) மதுசூதனை யன்றிமற்றிலேன் - விரோதிநிரஸகனுமாய்; (ஸ்வாங்க்ரிஸத்பக்திதாயீ) நின்பாதபங்கயமே மருவித்தொழும் மனமேதந்தாய் - தன்திருவடிகளிலே யநந்யப்ர்யோஜனையானபக்தியை ஆஶ்ரிதருக்குக் கொடுக்குமவனுமாய்; (விஶ்வாப்த்யைவாமநாங்க:) வாமநனென்மரதகவண்ணன் - மஹாபலியாலே யபஹ்ருதமானலோகத்தை மீட்கைக்காக வாமநரூபத்தை யுடையனுமாய்; (ஸ்வவிபவரஸத:) சிரீதரன்செய்ய தாமரைக்கண்ணனென்றென்றிராப்பகல் - தன்னுடைய ஶ்ரிய:பதித்வ புண்டரீகாக்ஷத்வங்களாகிற ஐஶ்வர்யத்தை ஸர்வகாலமுஞ்சொல்லி யலற்றும்படி பண்ணுமவனுமாய்; (ஸ்வாந்தநிர்வாஹயோக்ய:) இருடீகேச னெம்பிரானித்யாதி - ஹ்ருஷீகேசனுகையாலே மநஸ்ஸைத் தன்திருவடிகளில் நின்றும்போராதபடி நிர்வஹிக்கவல்லவனுமாய்; (ஸ்வார்த்தேஹ:) எற்பரனென்னை யாக்கிக்கொண்டெனக்கே தன்னைத்தந்த கற்பகம் - ஸ்வார்த்தமாக சேதநனையர்த்திகளாகித் தன்னையநுபவிக்கக் கொடுக்குமவனுமாய்; (பந்தமோக்தா) தாமோதரனைத் தனிமுதல்வனை - "ஓாமொஓஙஂவஉநம தஶ" (தாமோதரம்பந்தகதம்) என்கிறபடியே பந்தகதர்க்கு மோக்ஷஹேதுவான தாமோதரத்வத்தையுடையனுமா யிருக்கிற எம்பெருமான், ஆஶ்ரிதருடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் ரக்ஷகனென்று "கேசவன்றமர்" என்கிறத்வாதசநாமகாதையிலே யாழ்வாரருளிச்செய்தா ரென்கிறார்...........................(கசு)



# திருவாய்மொழிநூற்றந்தாதி.

கேசவனுலெந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்
தேசடைந்தாரென்றுசிறந்துரைத்த - வீசுபுகழ்
மாறன்மலரடியேமன்னுயிர்க்கெல்லாமுய்கைக்
காறென்று நெஞ்சேயணை. (கஎ)

(கேசவனால்) இதில் - கீழ்மேலுண்டான வர்களெல்லாரும் தம்முடைய ஸம்பந்தத்தாலே பகவத்தாஸ்யலாபத்தை லபித்தார்கள்" என்றுஹ்ருஷ்டராய்ப் பேசுகிறபாசுரத்தையநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ்-தம்மளவிலுண்டான வுகப்புத்தம்மொருவரளவிலும் சுவறிவிடுகையன்றிக்கே, தம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளளவும், "எமர்கீழ்மேலெழுபிறப்பும் விடியாவெந் நரகத்தென்றுஞ்சேர்தல் மாறினர்" என்கிற - விரோதிநிவ்ருத்தி யளவுமன்றிக்கே, பலத்திலும் வெள்ளமிட்டலையெறிகிறபடியைக்கண்டு, "ஶஶாமெவஷய யாதவ" (மமாப்யேஷயதாதவ) என்னும்படி யொருவனுடைய வ்யாமோஹமி

ருக்கும்படியே !" என்றுவித்தராய், தம்மையிப்படி ஸபரிகரமாக விஷயீகரிக்கைக்கடியான அவன்குணசேஷ்டிதங்களைத் திருத்வாதசநாமமுகத்தாலே பேசியநுபவித்து ப்ரீதராகிற * கேசவன்றமரிலர்த்தத்தை "கேசவனாலெந்தமர்கள்" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

(கேசவனாலெந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்புந் தேசடைந்தாரென்று சிறந்துரைத்த) "எம்பிரானெம்மான் நாராயணனாலே - எமர்கீழ்மேலெழுபிறப்பும் - கேசவன்றமரானார்கள் - மாசதிரிதுபெற்று, அத்தாலேநம்முடைவாழ்வு வாய்க்கின்றவா" என்றத்தைநினைக்கிறது. (கேசவனாலெந்தமர்கள்) ஜகத்காரணபூதனாய், விரோதிநிராகரணம் பண்ணுமவனாய், ப்ரசஸ்தகேசனான அவனாலேமதியர் தேசடைந்தாரென்று-தேஜஸ்ஸை ப்ராப்தரானார்களென்று. கேசவன்றமராகையிறே- இவர்களுக்குத்தேசு. தாஸ்யமிறே ஆத்மாவுக்கு தேஜஸ்கரமாவது ; அத்தைத்தம்மோட்டை ஸம்பந்தத்தாலே கீழ்மேலுண்டான ஸம்பந்திபரம்பரையி லுள்ளவர்களெல்லாரும் லபித்தார்களென்று, அந்தவுபகார கௌரவத்தாலே, அவன்குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாய் வைஷ்ணவத்வசிந்ஹமாய் "கேசவன், நாரணன், மாதவன், கோவிந்தன், விட்டு, மதுசூதன், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன், இருடீகேசன், பற்பநாபன், தாமோதரன்" என்கிறதிருத்வாதசநாமத்தைப்பேசியநுபவித்து ஹ்ருஷ்டராய், அத்தையிப்படி நன்றாகவருளிச்செய்த. சிறப்பு-நன்றி. (வீசுபுகழ்மாறன்) ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் வைஷ்ணவத்வமேறிப் பாயும்படியான வைபவத்தால்வந்த ப்ரசுரமானயஶஸ்ஸையுடையரான ஆழ்வாருடைய. (மலரடியேமன்னுயிர்க்கெல்லா முய்கைக்காறென்று) புஷ்பம்போன்ற திருவடிகளிலே நித்யமான ஆத்மாக்களுக் கெல்லாமுஜ்ஜீவிக்கைக்கு உசிதோபாயமென்று. (நெஞ்சேயணை) அவர்களிலே யொருவனாயம்ஶம்பெறும்படியானவெனக்கு பகரணமாய் ஸௌமநஸ்யமுள்ளமநஸ்ஸே ப்ரஸூநஸமாநமான திருவடிகளைநீயும் ஸமாஶ்ரயணம்பண்ணு.

"நாராயணனாலே" என்று - அவனுடைய ஸ்வீகாரமே நிரபேக்ஷோபாயமென்றதினநுவாதமான - கேசவனாலென்கிற விப்பதத்திலே - தத்விவரணமாக, "மாதவனென்றதேகொண்டு" என்றும், "எமர்கீழ்மேலெழுபிறப்பும் மேவும்தன்மையமாக்கினான்" என்றும், "என்னைக்கொண்டு" என்றும், தன்பேறானமைக்கு, "விட்டிலங்குசெஞ்சோதி" என்றும், "அம்மான்றிரிவிக்கிரமனே - எனக்கேயருள்கள்செய்ய - எனக்கென்ன - விதிசூழ்ந்தது" என்றும், "தொழுமனமே தந்தாய்" என்றும், "என்னைத்தீமனம்கெடுத்தாய்" என்றும், "உன்னையென்னுள் வைத்தனையென்னிருடீகேசனே" என்றும், "எற்பரனென்னை யாக்கிக்கொண்டெனக்கே தன்னைத்தந்தகற்பகம்" என்றும், "தாமோதரனை" என்றுமருளிச்செய்த சந்தைகளு மநுஸந்தேயங்கள்....................................*

இரண்டாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக-திருவாய்மொழி-௧௭—பாட்டு-௧௮௯.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### அணைவதரவணை - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

(அணைவது) "தாமோதரனை" என்கிறபாட்டில் ப்ரஸ்துதமான ஸர்வேஶ்வரத்வத்தைத் தம்முடைய ப்ரீத்யதிசயத்தாலே ஸஹேதுகமாக வுபபாதித்து, இப்படி ஸர்வேஶ்வரனான வெம்பெருமானை யாஶ்ரயியுங்கோளென்று பரரைநோக்கி யருளிச்செய்கிறார்.......................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், "மேவுந்தன்மையமாக்கினான்" என்று-ஸ்வஸம்பந்தி ஜநங்களுக்கும் ப்ராப்திபர்யந்தரூப மோக்ஷப்ரதனாய்க் கொண்டீஶ்வரன் நிற்கிறநிலையையும், அதுக்கடியான பரத்வத்தையு மநுஸந்தித்து, "இத்தை ஸம்ஸாரிகளழிக்கவொண்ணாது" என்றுபதேசிப்பாராகக்கோலி; அவனுடைய ஸர்வநிர்வாஹகத்வத்தையும், ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமான மோக்ஷப்ரதத்வத்தையும், அதுக்குறுப்பானசேஷ்டித வைலக்ஷண்யத்தையும், இந்தவ்யாபார ப்ரகாசிதமான ஸௌலப்யாதிகுணங்கள் நித்யாநுபாவ்ய மென்னுமிடத்தையும், அந்தகுண ப்ரகாசகமான வவதாரபாஹுள்யத்தையும், அவதாரதசையிலும் பரத்வமதிப்ரஸித்தமென்னுமிடத்தையும், அவதீர்ணனானவன் ரக்ஷணவ்யாமோஹத்தால் பண்ணும்வ்யாபார மநேகமென்னுமிடத்தையும், அவதீர்ணனுடைய பரத்வோபயுக்தமான வதிசயிதாகாரங்களறியவல்லாரில்லையென்னு மிடத்தையும், அவனுடைய வாஶ்ரிதஸௌலப்யமபரிச்சிந்நமென்னு மிடத்தையும், ஏவம்விதனைத் தாமநுபவிக்கப்பெற்றமையையு மருளிச்செய்து, உபதேசாந்நிவ்ருத்தராய் ஸ்வலாபத்தோடே தலைக்கட்டுகிறார். இதிற்சொல்லுகிற பரத்வம், முதற்றிருவாய்மொழிபோலே-ஸ்வரூபகதமாயுமன்றியே, * திண்ணன்வீட்டிற்போலே - மநுஷ்யத்வே பரத்வமுமன்றியே, மோக்ஷப்ரதத்வோபயுக்தமா யிருக்கிறது.......................................*

ஏடு.

ஸர்வேஸ்வரன் தம்பக்கல்பண்ணின வ்யாமோஹம் தம்மொருவரளவிலுமன்றிக்கே, தம்மோடு ஸம்பந்தமுடையாரளவிலும் வெள்ளமிட்டபடியைச்சொன்னார் - கீழ்; இத்திருவாய்மொழியில் - "நம்மோட்டை ஸம்பந்தமே ஹேதுவாக அவனிப்படி விஷயீகரிப்பானானபின்பு ஸம்ஸாரிகளுக்கும் நம்மோட்டையொரு ஸம்பந்தத்தையுண்டாக்கி அவன்க்ருபைக்கு விஷயமாக்குவோம்" என்று, அவர்களுக்கு மோக்ஷப்ரதத்வத்தை யருளிச்செய்கிறார். இத்திருவாய்மொழிதன்னை - "ஈஸ்வரத்வஞ்சொல்லுகிறது" என்று நிர்வஹிப்பாருமுண்டு; "மோக்ஷப்ரதத்வஞ்சொல்லுகிறது" என்று பட்டரருளிச்செய்யும்படி. இவைதானொன்றை யொன்றுவிட்டிராது, ஈஸ்வரனாயிற்று மோக்ஷப்ரதனுமவன்; மோக்ஷப்ரதனும்போது ஈஸ்வரனாகவேணும். இதுதன்னிற் செய்ததாகிறதென்னென்னில்; ஆழ்வார்க்கு முதல்தன்னிலே ஸர்வேஸ்வரனத்வேஷத்தைப் பிறப்பித்து, ஆபிமுக்யத்தைப்பிறப்பித்து, ருசியையுண்டாக்கி, இவர்விடிலும்தான் விடாதேவிரும்பி, இதுதானிவர் தம்மளவிலன்றிக்கே தம்மோடு ஸம்பந்தமுடையாரளவு மிப்படியேபெருகிக் கரைபுரளுகிறபடியையநுஸந்தித்து, "ஸர்வேஸ்வரன் ஸ்வபாவமிதுவானபின்பு, நாம் பெற்றபேறெல்லாரும் பெறும்படிபண்ணுவோம்" என்று, ஸம்ஸாரிகளையடையப்பார்த்து, அவர்களுக்கு, "மோக்ஷப்ரதன்" என்னுமிடத்தை யருளிச்செய்கிறார். இவர், தாம்பெற்றதாய்ப் பிறர்க்குபதேசிக்கிறபேறுதான்; பிராட்டி, திருவடி, திருவநந்தாழ்வானைப்பரிகரமாகவுடைத்தாய், எத்தனையேனு மளவுடையார்க்கும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவரிதாய், அவனாலே பெறப்பார்ப்பார்க்கு வருத்தமறப்பெறலாய், ஸம்ஸாரத்தில் போகங்கள்போலே அஸ்த்திரமாயிருக்கையன்றிக்கே நித்யமாய், அவிசதமாயிருக்கை யன்றிக்கே அத்யந்தம்ஸ்ப்புடமாய், துஃக்கமிஸ்ரமா யிருக்கையன்றிக்கே ஸுகைகதாநமாய், மங்களமாய், உத்தமமாய், அபரிச்சிந்நமாய், இப்படியிருக்கிற முக்தப்ராப்யபோகத்தைத் தமக்கும்தம்பரிகரத்துக்கு மவன்கொடுப்பானாகப் பார்க்கிறபடியைக்கண்டு, "ஸம்ஸாரிகளையு மித்ருஸபோகிகளாம்படிபண்ணவேணும்" என்றுபார்த்து அவர்களைக்குறித்து ஹிதமருளிச்செய்ய, அதுகேட்டபின்புமவர்கள் பழையநிலையில் நின்றும்குலையாதே, மால்யவான் தொடக்கமானார் ராவணனுக்குச் சொன்னஹிதம்போலே அவர்களித்தை யநாதரித்திருக்க, "நாம்நம்முடைய வநுபவத்தைவிட்டு இவர்களோடே துவக்குண்கிறவிதுக்கு ப்ரயோஜநமென்"; என்று, வழிபறிக்கும்நிலத்தில் தம்மைப்பொருள்கொண்டு தப்பினார் ஹ்ருஷ்டராமாபோலே, "நாம்முந்தற முன்னமிவர்களைப்போலே யாகாதொழியப் பெற்றோமிறே" என்று ஸ்வலாபத்தையநுஸந்த்தித் தினியராகிறார்...............................................*

## ஜீயர் அரும்பதம்.

அணைவதரவணைப்ரவேஶ. வ்ருத்தாநுவாத பூர்வகமாகஸங்கதி ( ஸர்வேஶ்வரனித்யாதி ) இந்தவாக்யம் - "கேசவன்றமர்கீழ்மே லெமரேழெழுபிறப்பும்" இத்யாதியைக்கடாக்ஷித்து. ( நம்மோட்டை யொருஸம்பந்தத்தையுண்டாக்கி ) நாமுபதேசித்து சிஷ்யரூபஸம்பந்தத்தை யுண்டாக்கி. நம்மோட்டை ஸம்பந்தமென்கிறவிடத்திலே - "பிள்ளைலோகாசார்யர், 'ஆய்க்குடி' என்கிறக்ராமத்திலே பெருமாள் பறிகொடுத்தார்' என்றுகேட்டுத்தாமும் பறிகொடுத்தார்; அத்தைக்கேட்டருளி பெருமாள் அத்யந்தம் ப்ரீதராய்ப்பிள்ளை லோகாசார்யரைப்பார்த்து, 'உமக்கும் உம்முடைய ஸம்பந்திகளுக்கும் மோக்ஷம்தந்தோம்' என்று திருவுள்ளமாக. அநந்தரம்பிள்ளை லோகாசார்யர் 'யம்யம்ஸ்ப்ருஶதி பாணிப்யாம்' இத்யாதிப்படியே தம்முடைய பரமக்ருபையாலே யெறும்பு முதலானவற்றை ஸ்பர்ஶிப்பது, ஸ்த்தாவராதிகளைக் கடாக்ஷிப்பது முதலானக்ருபாகார்யமான செயல்களைச்செய்து எல்லார்க்கும் ஸ்வஸம்பந்தத்தையுண்டாக்கி யருளினாப்போலே" என்றருளிச்செய்வர்.

"நீர்த்தனுலகளந்த" இத்யாதியையும், "இருவரவர்முதலுந்தானே" இத்யாதியையும்பற்ற ( ஈஶ்வரத்வம்சொல்லுகிறதென்று நிர்வஹிப்பாருமுண்டென்றது ) அது-முதற்றிருவாய்மொழி, "திண்ணன்வீடு" இத்யாதியாலே ஸித்தமாகையாலே, "பிறவிக்கடல்நீந்துவார்க்கு - புணைவன்" என்றத்தை யுபஜீவித்துக்கொண்டு மோக்ஷப்ரதத்வம் சொல்லுகிறதென்று பட்டருளிச்செய்யும்படி யென்றபடி. அந்யதரபக்ஷே அந்யதராபிதாயிநாம் ஶப்தாநாம்காகதிரித்யத்ராஹ ( இவைதானித்யாதி வாக்யத்ரயேண ) மோக்ஷப்ரதனானவீஶ்வர ப்ரதிபாதக மித்திருவாய்மொழி யென்றபடி. இரண்டும் - முதற்பாட்டிலேவ்யக்தம்.

விஸ்தரஸங்கதி ( இதுதன்னிலித்யாதி ) இதுதன்னில் - இத்திருவாய்மொழியிலே. ( அத்வேஷத்தைப்பிறப்பித்தென்றது ) "யாதானும்பற்றி நீங்கும்விரதத்தை நல்வீடுசெய்யும்" "இசைவித்தென்னை" "என்னிசைவினை" இத்யாதியைப்பற்ற ( ஆபிமுக்யத்தைப்பிறப்பித்தென்றது ) *மயர்வற மதிநலமருளின மையைப்பற்ற. யத்வா, இரண்டும் - "தீமனங்கெடுத்தாய்" "மருவித்தொழும்மனமேதந்தாய்" என்றத்தைப்பற்றவாதல். ( ருசியையுண்டாக்கியென்றது ) "அடிமைக்கணன்புசெய்வித்து" "நின்னலாலிலேன்காண்" இத்யாதியைப்பற்ற. "யானொட்டி" இத்யாதியைப்பற்ற ( இவர்விடிலுமித்யாதி ) "முடியாததென்னெனக்கேலினி" "கேசவன்றமர்" "கோவிந்தன்" இத்யாதிகளைப்பற்ற ( இதானிவர் தம்மளவிலன்றிக்கேயித்யாதி) "அவன்க்ருபைக்கு விஷயமாக்குவோம்" என்றதின்விவரணம் (நாம்பெற்றபேறெல்லாருமித்யாதி)

பாட்டுக்களிலேயிறங்கி உக்தார்த்தத்தை விவரிக்கிறார் (இவர்தாமித்யாதி) பரிகரமாகவுடைத்தாய்-பரிகாமாகவுடைய ஸர்வேஶ்வரனை விஷயமாகவுடைத்தாய். பிராட்டிதிருவடி திருவநந்தாழ்வானென்றதுக்கு - "அணைவதரவணைமேல்" இத்யாதௌஹ்ருதயம். (ஸ்வயத்நத்தால் ப்ராபிக்கவரிதாயென்றது) "ஆர்காண்பாரோ" என்றத்தைப்பற்ற. (வருத்தமறப்பெறலாயென்றது) "புணைவன்" என்றத்தைப்பற்ற. "நலமந்தமில்லதோர்நாடு" என்றத்தைப்பற்ற. ( ஸம்ஸாரத்தில்போகங்களித்யாதி ) மேலெல்லாம் - "[Grantha text]" (பரிபூர்ணாநவரதநித்யவிஶததம) இத்யாதிகத்யவாக்யமநுஸந்தேயம். (அபரிச்சின்

நமாய்) இருக்குமென்றுகூட்டி நிர்வஹிப்பது. (தமக்கும் தம்பரிகரத்துக்குமென்றது) "கேசவன்றமர்" இத்யாதியைப்பற்ற. (அவன்கொடுப்பானாகப் பாரிக்கிறபடியேயென்றது) "ஆள்வரெம்மாவீடே" என்றதிலே ஸூசிதம். (ஹிதமருளிச்செய்யவென்றது) "நாடுபுகுவீர்" என்றதைப்பற்ற. பழையநிலை - பூர்வஸ்த்திதி. (மால்யவான்தொடக்கமானசொன்றது) மாரீசன், ஸ்ரீவிபீஷணாழ்வான், இவர்களை. "தர்மஸம்ரோசதே ஸந்திஸ்ஸஹராமேண ராவண। யதர்த்தமபியுக்தாஸ்ஸ்மஸீதாதஸ்மைப்ரதீயதாம்" (தர்மஹ்யம்ரோசதே ஸந்திஸ்ஸஹராமேண ராவண।யதர்த்தமபியுக்தாஸ்ஸ்மஸீதாதஸ்மைப்ரதீயதாம்) என்றுமால்யவானும், "நவிரோதோபலவதாக்ஷமோராவணதேநதே" (நவிரோதோபலவதாக்ஷமோராவணதேநதே) என்றுமாரீசனும், "ப்ரஸாதயேத்வாம்பந்துத்வாத்குருஷ்வவசநம்மம। இதம்தத்வம்த்வஹம்ப்ரூமிதீயதாமஸ்யமைதிலீ" (ப்ரஸாதயேத்வாம்பந்துத்வாத்குருஷ்வவசநம்மம। இதம்தத்வம்த்வஹம்ப்ரூமிதீயதாமஸ்யமைதிலீ) என்று விபீஷணாழ்வானும் சொன்னார்களிறே. அவக்குண்கிற-ஈடுபடுகிற. (ஸ்வலாபத்தையநுஸந்தித்தென்றது) "கண்ணனைநான்கண்டேனே" என்றத்தைப்பற்ற. இனியராகிறார்-ப்ரீதராகிறார்... ... ... ... ... ... ... *



# எட்டாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

அணைவதரவணைமேற்பூம்பாவையாகம்
புணர்வதிருவரவர்முதலுந்தானே
இணைவனாமெப்பொருட்கும்வீடுமுதலாம்
புணைவன்பிறவிக்கடனீந்துவார்க்கே.

## ஆறாயிரப்படி.

நாகபர்யங்கசாயியாகையாலும், ஸ்ரிய:பதியாகையாலும், ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனாகையாலும், ஸர்வாத்மஸஜாதீயதயாவதீர்ணனாய்க்கொண்டு ஸர்வஜகத்ரக்ஷகனாகையாலும், முமுக்ஷுக்களுக்கு ப்ரதிபந்தகநிவர்த்தகனாய்க்கொண்டு மோக்ஷப்ரதனாகையாலும், நாராயணனே ஸர்வேஸ்வரனென்கிறார்... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், இத்திருவாய்மொழியிலர்த்தத்துக்கு ஸங்க்ரஹரூபமான ஸர்வநிர்வாஹகத்வத்தை யருளிச்செய்கிறார்.

அரவு-திருவநந்தாழ்வானாகிற. அணைமேல்-அணைமேலே. அணைவது - அபிமதமாகச்சேர்வது. பூ - பூவிலேபரிமளம்வடிவுகொண்டாற்போலே போக்யபூதையான. பாவை-பிராட்டியின். ஆகம்-திருமேனியை. புணர்வது-போக்யமாகஸம்ஶ்

லேஷிப்பது. இதுநித்யவிபூதிநிர்வாஹகத்வம். லீலாவிபூதிநிர்வஹணத்தில், அவர்-காரணேஸ்வரராகப்ரஸித்தரான. இருவர் - ப்ரஹ்மருத்ரர்கள்-இவருடையவுத்பத்திஸ்த்தித்யாதிகளுக்கும். தானே-தானே. முதலும்-ஹேதுவாயிருக்கும். எப்பொருட்கும்-ரக்ஷ்யமானஜகத்தில் ஸமஸ்தபதார்த்தங்களுக்கும். இணைவனும்-அவதாரமுகத்தாலே ஸஜாதீயனாயிருக்கும். வீடு - ரக்ஷணத்துக்குமேலெல்லையானமோக்ஷத்துக்கு. முதலாம் - ஹேதுவாயிருக்கும். இத்தால் ஸர்வமுக்திப்ரஸங்கியாமைக்காக, பிறவி-ஸம்ஸாரமாகிற. கடல்-கடலை. நீந்துவார்க்கு - நீந்திக்கரையேறவேண்டுவார்க்கு. புணைவன்-தெப்பமாமவனாயிருக்கும்.

புணைவன்-தெப்பமாமவன்... ... ... ... ... ... ... ... ... *

---

## ஈடு-முதற்பாட்டு.

முக்தப்ராப்யபோகத்தைச்சொல்லுகிறது. முதற்பாட்டுத்தானித்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமாய், மேலுள்ளபாட்டுக்களிலே யொருபதத்தைப்பற்றிப்போருமவையும். அதுதன்னைப்பற்றி யெழுமவையுமாயிருக்கிறது.

(அணைவதரவணைமேல்) முக்தப்ராப்யபோகந்தானிருக்கிறபடி. பர்யங்கவித்யையிற்சொல்லுகிறபடியே, ஸர்வேஸ்வரனும் பிராட்டிமாருங்கூடத் திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலேயிருக்கிறவிருப்பிலே, இச்சேதநன்முக்தனாய்ச்சென்று கிட்டினால் “ அஹம் ப்ரஹ்மாஸ்மி ” (அஹம் ப்ரஹ்மாஸ்மி) நான்ராஜபுத்ரன், ப்ரஹ்மப்ரகாரபூதன் என்னக்கடவன்; “ ஆகிலிங்ஙனேபோராய் ” என்றுலவனங்கீகாரம்பெற்று, மாதாபிதாக்களிருந்தபடுக்கையிலே ப்ரஜைசென்றேறுமாபோலே “ தமேவம்வித் பாதேநாத்யாரோஹதி ” (தமேவம்வித்பாதேநாத்யாரோஹதி) என்றேறக்கடவனாகச்சொல்லுகிற அப்பேற்றைச்சொல்லுகிறது. (அணைவது) தாபத்ரயங்களாலேநொந்த ஸம்ஸாரிசேதநன், “ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி” (ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மி) என்கிறபடியே-அப்பெரியமடுவிலேவிழுந்து தன்தாபமெல்லா மாறுமாபோலேயாயிற்று, முதலிலேயிவை யில்லாதவன் திருவநந்தாழ்வான்மேலேயணைந்து, இவை யுண்டாய்க்கழிந்தாரைப்போலே யிருக்கும்படி. விடாயர்மடுவிலே விழுமாபோலே யாயிற்றணைவது. ( அரவணைமேல் ) நாற்றம், குளிர்த்தி, மென்மைகளை ஸ்வபாவமாகவுடைய திருவநந்தாழ்வானோடே யணைவது; “ புல்குமணையாம் ” என்னக்கடவதிறேயவனை. சேஷபூதனடிமை செய்தல்லது தரியாதாப்போலே, சேஷியும்சேஷபூதனோடே அணைந்தல்லது தரியாதானாயிருக்கிறபடி.

( பூம்பாவையாகம்புணர்வது ) போக்யதைகவேஷையாய் நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய பெரியபிராட்டியாரோடே கலந்துவர்த்தி

ப்பது. (ஆகம்புணர்வது) ஆத்மகுணங்கள்குமரிருந்துபோமித்தனை. "அணைவது, புணர்வது" என்கிறதிறே - மூவர்க்கும் போகமொத்திருக்கையாலே. [ரம்யமாவஸதம்க்ருத்வா] (ரம்யமாவஸதம்க்ருத்வா) அறுபதினாயிர மாண்டுமேலடுகின்ற சக்ரவர்த்தி தன்னுதரத்துக்குப் போருமபடி சமைத்தமாளிகைகளிலும், திருவுள்ளத்துக்குப்பொருந்தி அழகியதா யிருந்ததுகாட்டிலே இளையபெருமாள் சமைத்த ஆஶ்ரமமாயிற்று. [த்ரயோரமமாணா:] (த்ரயோரமமாணு:) நாயகரான பெருமாள் ரஸமல்லவேபிராட்டியது, பிராட்டிக்குப்பிறக்கும் ரஸமன்றேபெருமாளது, அப்படியே, அச்சேர்த்திகண்டு கக்குமவரிறே யிளையபெருமாள். [வநே] (வநே) "படைவீடர்காட்டிலே ரமித்தார்கள்" என்றுதோற்றுதே, காடர்காட்டிலேவர்த்தித்தாப்போலே பொருந்தியிருந்தபடி. ஆகச்சொல்லிற்றாயிற்று - ஸர்வேஶ்வரனும் பிராட்டிமாருமாகத் திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே யிருக்கக்கண்டுகந்தடிமைசெய்கை முக்தப்ராப்ய போகமாகிறது.

(இருவரவர்முதலுந்தானே) ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணபூதனாயிருக்கும். "ஸப்ரஹ்மாஸஶிவ:" (ஸப்ரஹ்மாஸஶிவ:) என்கிறப்ரஸித்தியாலே (இருவரவனொன்கிறார்) அவ்விபூதியைச் சொல்லுகிறவிடத்திலே (அணைவது, புணர்வது) என்கையாலே - அதுபோகபூமியாய் நித்யமாயிருக்கு மென்னுமிடமும், இங்கு (முதல்) என்கையாலே - இவ்விபூதியில் கார்யகாரணபாவத்தால் வந்தஸம்பந்தமும், இதுதான் ஆவதழிவதாமென்னு மிடமும்சொல்லுகிறது. இத்தால்-ப்ரஹ்மருத்ரர்கள் ஸம்ஸாரபத்தர்க ளென்னுமிடமும், ஈஶ்வரனே மோக்ஷப்ரதனுக வல்லானென்னு மிடமும்சொல்லுகிறார். ஆக, ஆஶ்ரயணீயனவனே, ப்ரஹ்மருத்ரர்க ளாஶ்ரயணீயரல்லரென்கை ; "ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தாஜகதந்தர்வ்யவஸ்த்திதா:। ப்ராணிந:கர்மஜநிதஸம்ஸாரவஶவர்த்திந:" (ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தாஜகதந்தர்வ்யவஸ்த்திதா: । ப்ராணிந:கர்மஜநிதஸம்ஸாரவஶவர்த்திந:) என்னுநின்றதிறே.

இப்படி ப்ரஹ்மருத்ரர்களுக்குகும் காரணபூதனாகையாலேவந்த மேன்மையையுடையவன் (எப்பொருட்குமிணைவனும்) தேவாதிஸகல பதார்த்தங்கள்தோறும் ஸஜாதீயனாய் வந்தவதரிக்கும். ப்ரஹ்மருத்ரர்கள் நடுவேவந்தவதரிப்பது, உபேந்த்ரனாவது, சக்ரவர்த்தி ஸ்ரீவஸுதேவர்களளவிலே அமைத்துவந்துபிறப்பது, மஹாவராஹமாவது, குப்ஜாம்ரமாவதாகாநிற்கும்.

இப்படிதாழவிட்டுப் பிறக்கிறதெதுக்காகவென்னில் (வீடுமுதலாம்) மோக்ஷப்ரதனாகைக்காக. அவதரித்தவிடங்களிலே பக்ஷிக்குமோ

க்ஷத்தைக்கொடுப்பது, பிசாசத்துக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதாகா நிற்கும்.

அவன்வந் தவதரிப்பது மோக்ஷப்ரதனுகைக் காகவாகில், எல்லாரும்பின்னை முக்தராக வேண்டாவோவென்னில் ( பிறவிக்கடல்நீந்துவார்க்கு - புணைவன் ) "ஸம்ஸாரமென்றொருபெருங்கடல், அதெங்களாற்கடக்கப்போகாது, ப்ரபலனைநீயே கழித்துத்தரவேணும்" என்றிருப்பார்க்கு ப்ரதிபூவாய் நின்றுகடத்திக்கொடுக்கும். புணையாமவனென்றபடி. - ஸர்வபரநிர்வாஹகனுமவனென்றபடி. "ஸஂஸாரஸாகரஂ஘ோரமநந்தக்லேஶபாஜநஂ। த்வாமேவஶரணஂப்ராப்ய" (ஸம்ஸாரஸாகரம்கோரமநந்தக்லேஶபாஜநம் । த்வாமேவஶரணம்ப்ராப்ய ) என்றிருப்பார்க்குக் கடத்திக்கொடுக்கும். ( புணைவனென்று - தெப்பமாமவ னென்னவுமாம். ) "விஷ்ணுபோதஂ" ( விஷ்ணுபோதம் ) என்னக்கடவதிறே - ஏகதேசத்தைப்பற்றி நிற்கையன்றிக்கே, அக்கரையு மிக்கரையுமாய்நிற்கு மோடமாயிற்று...........................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. ( அணைவதித்யாதி ) "அணைவதரவணைமேல் பூம்பாவையாகம்புணர்வது" என்கிறவிவ்வளவைப் பராமர்ஶித் தருளிச்செய்கிறார் (முக்தப்ராப்யேத்யாதி ) "இருவரவர்முதலுந்தானே" இத்யாதியைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறார் ( முதற்பாட்டுத்தானித்யாதி ) அதுதன்னைப்பற்றி - அப்பாட்டுத்தன்னைப் பற்றி.

முக்தப்ராப்ய போகந்தானிருக்கிறபடி யென்கிறவிடத்திலே - "கூர்மாதீந்" ( கூர்மாதீந் ) என்கிறஶ்லோகமும், "ஸவ்யஂபாதஂ" ( ஸவ்யம்பாதம் ) என்கிறஶ்லோகமு மநுஸந்திப்பது. "அணைவதரவணைமேல்" என்றால் - முக்தப்ராப்யபோகமெப்படி சொல்லிற்றுமென்ன ( பர்யங்கவித்யையிலித்யாதி ) "ஸஹஸ்ரஸ்தூணேவிமிதேத்ருடஉக்ரேயத்ரதேவாநாமதிதேவஆஸ்தே" ( ஸஹஸ்ரஸ்தூணேவிமிதேத்ருடஉக்ரேயத்ரதேவாநாமதிதேவஆஸ்தே ) என்ற- திருமாமணிமண்டபத்திலே, திருவநந்தாழ்வான்மேலே தர்மாத்யஷ்டபீடத்தையுடைத்தான திவ்யஸிம்ஹாஸநத்தின்மேலே, "தந்மத்யேஷ்டதளஂபத்மஂ" ( தந்மத்யேஷ்டதளம்பத்மம் ) என்கிறபத்மத்திலே, "விமலோத்கர்ஷிணீஜ்ஞாநாக்ரியாயோகாததைவச। ப்ரஹ்வாஸத்யாததேஶாநாதாஸர்ந்நாம்நாஸமர்சயேத்" (விமலோத்கர்ஷிணீஜ்ஞாநாக்ரியாயோகாததைவச । ப்ரஹ்வாஸத்யாததேஶாநாதாஸர்ந்நாம்நாஸமர்சயேத் ) என்று-அந்தபத்மத்தி னஷ்டதளத்திலே, விமலாத்யஷ்ட பரிசாரிகைகளும், அதின்கர்ணிகையிலே யிருக்கிற "அநுக்ரஹை" ( அநுக்ரஹை ) என்றவளோடே கூடத்திருவெண்சாமரம்பரிமாற, அந்தக்கர்ணிகையிலே திருவநந்தாழ்வான்மேலே பிராட்டிமாரோடே கூடவீற்றிருக்குமது-பர்யங்க வித்யாப்ரகாரம், கௌஷீதகிப்ராஹ்மணத்திலேசொல்லப்பட்ட

து, என்றருளிச்செய்வர். விமிதே - விஸாலே. உக்ரோ - அநபிபவநீயே. "ஸோஹம் ப்ரஹ்மாஸ்மி" (அஹம்ப்ரஹ்மாஸ்மி) என்றஸாமாநாதிகரண்யம் - கார்யகாரண பாவத்தாலேயாதல், சரீராத்மபாவத்தாலேயாதல். இந்தவிரண்டையு மருளிச்செய்கிறார் (நான்ராஜபுத்ரன் ப்ரஹ்மப்ரகாரபூதனென்று) ராஜபுத்ரனென்கையாலே - கார்யகாரணபாவம். ப்ரஹ்மப்ரகாரபூதனென்கையாலே - சரீராத்மபாவம். ராஜபுத்ரன் - ப்ரஹ்மபுத்ரனென்றபடி. போராய் - வாராய். ஏவம்வித் - ஏவம்ப்ரகாரோபாஸகஃ. தம் - பாதோநாத்யாரோ ஹதீத்யந்வயஃ.

அபிமதவிஷயத்தையணைவார் அத்யபிநிவிஷ்டரா யணையுமாபோலே, இவனோடே யணையும்போது மபிநிவேசம் தோற்றவணையுமாகையாலே யவ்வபிநிவேசத்தை யருளிச்செய்கிறார் (தாபத்ரயேத்யாதி) இது - "அணைவது" என்றபத ஸாமர்த்த்ய ஸித்தமானபாவம். ஸ்ரீபாரதேமஹாகிதாயாம், "த்வக்த்வா காமஞ்ச

க்ரோதஞ்ச லோபம் மோஹஞ்ச மத்ஸரம் । ஏஷ ப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே

ஸீதமிவ ஹ்ரதம்." (த்யக்த்வாகாமம்பயம்க்ரோதம்லோபம்மோஹஞ்சமத்ஸரம் । ஏஷபாஹ்மப்ரவிஷ்டோஸ்மிக்ரீஷ்மேஸீதமிவஹ்ரதம்.) "ப்ருஹத்த்வாத் ப்ரு

ம்ஹணத்வாச்ச தத் ப்ரஹ்மேத்யபிதீயதே" (ப்ருஹத்வாத்ப்ரும்ஹணத்வாச்சதத் ப்ரஹ்மேத்யபிதீயதே) என்றப்ரஹ்மஸப்தத்தின் நிருக்தியைப்பற்ற (அப்பெரிய மடுவிலேயென்றது) இவையில்லாதவன் - தாபங்களில்லாதவன். "க்ரீஷ்மே ஸீத

மிவ ஹ்ரதம்" (க்ரீஷ்மேஸீதமிவஹ்ரதம்) என்றதுக்கர்த்தம் (விடாயரித்யாதி)

"அரவணை" என்றபதத்துக்குவாஸனை (நாற்றமித்யாதி) மென்மை-ம்ருதுத்வம். "அணைமேல்" என்றது - அணையோடேயென்று த்ருதீயாவிபக்தியாக்கி (திருவநந்தாழ்வானோடேயென்கிறது) உக்தார்த்தேப்ரமாணம் (புல்குமணையா மென்னக்கடவதிறே யவனையென்று) முதற்றிருவந்தாதி. புல்குமணையாம் - சாய்ந்துகொள்ள யோக்யமானவணையாமென்றபடி. ஸம்ஸாரதப்தனாகையாலே தன்னைப்பற்றி யிவனாநந்திக்கிறான், ஸ்வதோநிரதிசயா நந்தியானவனிவனைப்பெற்றாநந்திக்கக் கூடுமோவென்ன (சேஷபூதனித்யாதி) ஸங்கத்தாலேயென்றபடி.

"பூம்" என்று - அழகாய், அத்தால், போக்யதையைச் சொல்லுகிறது. ஸ்த்ரீத்வம் அல்லாதார்க்கு மிவளுக்குமொத்திருக்கையாலே லக்ஷ்மியென்னவமைந்திருக்க, "ஸ்த்ரீ" என்றுவிசேஷிக்கிறது - கர்மோபாதிகமல்லாத ஸ்த்ரீத்வத்தையுடைய ளாகையாலே; அவர்களில் வ்யாவ்ருத்தமான ஸ்த்ரீத்வமுண்டென்னுமிடந்தோன்ற (நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடையவென்கிறார்) "ஆகம்புணர்வது" என்றபதப்ரயோகத்துக்குபாவம் (ஆத்மகுணங்களித்யாதி) குமரிருக்கை - குமரியாயிருக்கை யென்றுசப்தார்த்தம். அதாவது - குமரி-குமாரீ. கந்நிகை. அநுபவயோக்யமன்றிக்கே யிருக்கையென்றபடி. ஆத்மகுணங்களித்யாதி வாக்யத்துக்கு - பரமரஸிகனானவீஸ்வரன் பிராட்டியுடைய விக்ரஹஸௌந்தர்யாதி சயாத்ருபகுணங்களையிட்டு ஆத்மகுணபர்யந்தம் போகமாட்டானென்றுகருத்து.

அணைவது புணர்வதென்கிறதிறே யென்கிறவாக்யம். வ்யாக்யாதாவினுடைய பாடு. இவ்வாக்யத்துக்குக்கருத்து - அக்ர்யப்ராய ந்யாயத்தாலே, பிராட்டியோடே

கூடவெடுக்கையாலே-இவ்விருவருக்கும் பிறக்கும்ரஸம், சேர்த்தியையநுபவிக்கையாலே திருவநந்தாழ்வானுக்கும் பிறக்குமென்று. உக்தத்துக்கு ஸம்வாதம் (ரம்யமாவஸதமித்யாதி) ஸ்ரீஸங்க்ஷேபே. "ரம்யம்" என்றதுக்குபாவம் (அநுபதிநுயிரமித்யாதி) சமைத்த - ஆக்கின. கட்டினவென்றபடி. நாயகநாயகிகள் பரஸ்பரஸம்ஶ்லேஷத்தாலே ரமிக்கிறார்கள், இளையபெருமாள் ரமிக்கும்படியென்னென்ன (நாயகரானவித்யாதி) விஷயபேத ப்ரயுக்தரஸபேதஸ்ஸர்வத்ர ஸமாநஇதிபாவ:. சித்ரகூடத்தி லிருப்பைச்சொன்னபோதே - "வநே" என்றதுஸித்தமாயிருக்க, புந: "வநே" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (படைவீடரித்யாதி) படைவீடர் - படைவீட்டிலே யிருக்குமவர்கள். காடர் - காட்டிலேயிருக்குமவர்கள். "பர்யங்கவித்யையில்" இத்யாதிவாக்யோக்தார்த்த நிகமநம் (ஆகவித்யாதி) ஆகிறதென்ற வநந்தரம் - என்று இத்யத்யாஹார்யம்.

இன்னாரென்னாதே, "இருவரவர்" என்கிறதென்னென்னில் (ஸப்ரஹ்மேத்யாதி) இவ்விடத்திலே - "ஸ:" என்கிறதநுபயுக்தம்; "ப்ரஹ்மா, ஶிவ:" (ப்ரஹ்மா, ஶிவ:) என்கிறதேவேண்டுவது. இத்தால்பலிதம் (அவ்விபூதியையித்யாதி) நித்யமாயிருக்குமென்றது - "அணைவது, புணர்வது" என்கிறவர்த்தமாநத்தாலே ஸித்தமானவர்த்தம். ஆவதழிவது - உண்டாவது நசிப்பது. காரணத்வகதநத்தாலேபலிதம் (இத்தாலித்யாதி) கர்மவஶ்யராகையாலே பத்தரென்றபடி. "முதலும்" என்றசஶப்தத்துக்கர்த்தம் (ஆகவாஶ்ரயணீயனித்யாதி) த்யேயனுமென்றநுக்தஸமுச்சயமென்றபடி. ப்ரஹ்மாதிகளாஶ்ரயணீய ரல்லாமைக்கடி - ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வங்களென்று திருவுள்ளம்பற்றி, அவர்கள் கர்மவஶ்யரொன்கைக்கு ப்ரமாணம் (ஆப்ரஹ்மேத்யாதி) ஸ்ரீவிஷ்ணுதர்மே ஶௌநகவசநம்.

"ஸர்வாதிகனானவன் ஸுலபனானன்" என்றுஅவன் ஸௌலப்யத்துக்கதிசயஞ்சொல்லுவாராக, இத்தாலவன் பெருமைசொல்லுகிறதென்கிறார் (இப்படியித்யாதி) இணைவன் - ஸஜாதீயன். தேவாதி ஸமஸ்தபதார்த்தங்களுக்கு மவதாரமுகேந ஸஜாதீயனானமென்று ஶப்தார்த்தம். அப்படியவனவதரித்தமை யுண்டோவென்ன (ப்ரஹ்மருத்ரர்களித்யாதி) அமைத்து - ஸங்கோசித்து.

வீடுமுதலாம் - மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கும். அப்படிமோக்ஷம் கொடுத்தவிடமுண்டோவென்ன (அவதரித்தவித்யாதி) "ஸம்ஸாரமகரோத்தஸ்ய ப்ரஹ்மமேதேநராகவ:। ஸ்வபதஞ்சததௌதஸ்மையோகித்யேயம்ஸநாதநம்" (ஸம்ஸ்காரமகரோத்தஸ்யப்ரஹ்மமேதேநராகவ:। ஸ்வபதஞ்சததௌதஸ்மையோகித்யேயம்ஸநாதநம்) என்றத்தைப்பற்ற (பக்ஷிக்குமோக்ஷத்தைக்கொடுப்பதென்றது) பக்ஷி - ஜடாயு. "அக்ஷய்யஸ்ஸ்வர்க்கவாஸஸ்தேயாவதிந்த்ரோபவிஷ்யதி। நஷ்டேஶக்ரேததஸ்ஸ்வர்க்காத்ஸாயுஜ்யம்மமகச்சது" (அக்ஷய்யஸ்ஸ்வர்க்கவாஸஸ்தேயாவதிந்த்ரோபவிஷ்யதி। நஷ்டேஶக்ரேததஸ்ஸ்வர்க்காத்ஸாயுஜ்யம்மமகச்சது) என்றத்தைப்பற்ற (பிசாசத்துக்கு மோக்ஷத்தைக்கொடுப்பதென்றது) பிஶாச: - கண்டாகர்ண:.

புணைவனும் - புணைபட்டவனும். புணை - ப்ரதிபூவும், தெப்பமும், பரமும் யோதநிகாத மர்ணயோர்மத்யேதிஷ்டதி, ஸ: - ப்ரதிபூரித்யுச்யதே. இவன்புணையாய், பலப்ரதன் வேறொருத்தனென்ன (புணையாமவனித்யாதி) அப்படிசடத்திக்கொடுக்குமோவென்ன (ஸம்ஸாரஸாகரமித்யாதி) ஜிதந்தாயாம். "நிஸ்தார நிமீஷிண:" (நிஸ்தரந்திமநீஷிண:) என்றுமேல். புணைவன்-தெப்பமாமவனென்றர்த்தாந்தரத்துக்கு ப்ரமாணம் (விஷ்ணுபோதமித்யாதி) ஸ்ரீவிஷ்ணுதர்மே, ஸம்ஸாரார்ணவமக்நாநாம்விஷயாக்ராந்தசேதஸாம்। விஷ்ணுபோதம்விநாநாந்யத்கிஞ்சிதஸ்திபராயணம்॥" (ஸம்ஸாரார்ணவமக்நாநாம்விஷயாக்ராந்தசேதஸாம் । விஷ்ணுபோதம்விநாநாந்யத்கிஞ்சிதஸ்திபராயணம்) "விஷ்லுவ்யாப்தௌ" (விஷ்ல்வ்யாப்தௌ) இதிதாதும் ஹ்ருதிநிதாய விஷ்ணுஶப்தார்த்தமாஹ (ஏகதேசத்தையித்யாதி) மத்யேபங்குரத்வ ஶங்காவகா ஶோநேதிபாவ:.

அரவணைமேல் - அணைவது, பூம்பாவையாகம் புணர்வது, இருவரவர் முதலுந்தானே, வீடுமுதலாகைக்காக - எப்பொருட்கு மிணைவனும், பிறவிக்கடல்நீந்துவார்க்கு - புணைவனித்யந்வய:........................................................*

# இரண்டாம்பாட்டு.

நீந்துந்துயர்ப்பிறவியுட்படமற்றெவ்வெவையும்
நீந்துந்துயரில்லாவீடுமுதலாம்
பூந்தண்புனற்பொய்கையானையிடர்கடிந்த
பூந்தண்டுழாயென்றனிநாயகன்புணர்ப்பே.

## ஆறாயிரப்படி.

(நீந்தும்) "வீடுமுதலாம்" என்கிறபதத்தைவிவரிக்கிறது. ஜந்மஜராமரணாத்யபரிமித ஸமஸ்தது:கரஹிதமான மோக்ஷத்துக்குக்காரணமெம்பெருமானோடுள்ள ஸம்பந்தம்; அதெங்கேகண்டோமென்னில், ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பக்கலிலே கண்டோமென்கிறார் ......... ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸம்ஸாரநிஸ்தரணபூர்வகமான மோக்ஷத்துக்கு ஹேதுவவனுடைய ஸம்பந்தமென்கிறார்.

இஸ்ஸம்ஸாரநிவ்ருத்திக்கு நிதர்ஶநமென்னலாம்படி, பூ - பூவையுடைத்தாய். தண்-குளிர்ந்த. புனல்-புனலையுடைய. பொய்கை-பொய்கையிலே, யானை - யானைக்கு. இடர்-முதலையால்வந்தவிடரை. கடிந்த-போக்கின. பூ - செவ்வியையுடைத்தாய். தண்-குளிர்ந்த. துழாய்-திருத்துழாய்யையுடையனாய். அத்தாலே, என்-எனக்கு. தனிநாயகன் - அத்விதீயநாயகனானவனுடைய். புணர்ப்பு - ஸம்பந்தமானது. நீந்தும்-இச்சேதநனுக்கு நீந்தாநிற்கும்படி துஸ்தரமாய். துயர்-து:கோத்தரமான.

பிறவி-பிறவி. உட்பட—உட்பட. மற்று-மற்றும். நீந்தும் – நீந்தும்படியான. எவ்வெவை-ஜராமரணாதிகளானவெவ்வகைப்பட்ட. துயரும்-து:க்கமும். இல்லா-ஸ்பர்ஶியாத. வீடு-மோக்ஷாநந்தத்துக்கு. முதலாம்-ஹேதுவாம்.

முதற்பாட்டில் " வீடுமுதலாம் " என்றத்தைவிவரித்தது.................... *

## ஈடு - இரண்டாம்பாட்டு.

என்தனிநாயகன்புணர்ப்பு என்கையாலே-எம்பெருமான்றான்வேணுமோ, அவனோடுள்ளஸம்பந்தமே மோக்ஷப்ரதமென்கிறார்.

( நீந்துமித்யாதி ) "பிறவிக்கடல்நீந்துவார்க்கு" என்கிறவதினுடைய விவரணமாயிருக்கிறது. நீந்தும் துயர்ப்பிறவியுட்படமற்றெவ்வெவையும் நீந்தும், துயரில்லாவீடுமுதலாமென்றுபிரித்து யோஜிக்கவுமாம்; அன்றிக்கே, ஒன்றாக வீட்டுவிசேஷணமாகவுமாம். (நீந்துமித்யாதி) "நீந்தும்" என்கிற வர்த்தமாநநிர்த்தேசத்தாலே-கடக்கவரிதான து:கத்தை விளைப்பதானஜநநந்தொடக்கமான மற்றுமுண்டான அபக்ஷயவிநாஶாதிகளையும்கடத்தும்; (துயரில்லாவீடுமுதலாம்) து:ககந்தரஹிதமான மோக்ஷத்துக்கும் ஹேதுவாம். கடக்கவரிதானதுகத்தையுடைத்தான ஜந்மந்தொடக்கமாக நீந்துந்துயரான மற்றெவ்வெவையுமில்லாதமோக்ஷத்துக்குஹேதுவாமென்னுதல். இவர் வீடென்கிறது-ஸம்ஸாரநிவ்ருத்திமாத்ரத்தையன்று,*ஸுகபாவைகலக்ஷணையான பகவத்ப்ராப்தியை. "ஜீ ரோக்ஷாஹோநந்தஃ" ( முக்திர்மோக்ஷோமஹாநந்தஃ ) என்னக்கடவதிறே. இப்படிதுகத்தைப்போக்கி வீடுமுதலாக எங்கேகண்டோமென்னில் (பூந்தணித்யாதி) பரப்புமாறப்பூத்துக்குளிர்ந்த புனலையுடைத்தானபொய்கையிலேபோய்ப்புக்கு முதலையாலேயிடர்பட்ட வானையினுடைய துகத்தை வாஸனையோடேபோக்கினவன். "பூவிற்செவ்வியழியாமே திருவடிகளிலே யிடவேணும்" என்றுநினைத்தது பெறுமையால்வந்தவிடரைப்போக்கின. (பூந்தண்டுழாயென்றனிநாயகன்) வைத்தவளையத்தோடேகாணும் மடுவிலேபோய்விழுந்தது. திருத்துழாயிற் பரிமளம்போலே காணும் ஆனையிடரைக்கடிந்தது. ஆனையிடராவது – "'ஸர்வேஶ்வரனாஶ்ரிதவத்ஸலன்' என்றிருந்தோம், இவனிப்படி யாபந்நனாக உதவாதொழிவதே, நிர்க்ருணனாயிருந்தானே!' என்று நாட்டிலுள்ளார் நினைக்கிற்செய்வதென் " என்று அத்தாலேவந்த இடராகிலுமாம். (என்தனிநாயகன்) ஆனையிடரைப்போக்குகையன்றிக்கே, தம்மிடரைப் பரிஹரித்தாப்போலேயாயிற்று இவரிருக்கிறது. (புணர்ப்பு) அவனோட்டைஸம்பந்தம்.

அவன்திருவடிகளில் ஸம்பந்தம், து:கநிவ்ருத்தியையும்பண்ணி, "ஸுவஹாவெகலக்ஷணம்" (ஸுகபாவைகலக்ஷணம்) என்கிறபேற்றையும்தரும். தனிநாயகன்புணர்ப்பு - வீடுமுதலாம் என்றந்வயம்..........*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (நீந்துமித்யாதி) புணர்ப்பு-ஸம்பந்தம்.

(பிறவிக்கடலித்யாதி) "பிறவிக்கடல்நீந்துவார்க்கு - புணைவனும்" என்று சொன்னமோக்ஷப்ரதத்வவிவரணமித்யர்த்த:.

முந்தினவந்வயத்துக்குச்சேரவர்த்தம் (நீந்துமென்கிறவித்யாதி) எவ்வெவையுநீந்தும் - நீத்தும். "நீந்தும்" என்கிறமெல்லொற்றை - வல்லொற்றாக்கிக்கொள்வது. நீத்தும் -(கடத்தும்) த்விதீயாந்வயத்துக்குச்சேரவர்த்தம் (கடக்கவரிதானவித்யாதி) துயர்ப்பிறவி-துயரைவிளைக்கிறபிறவி. ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவேந. "மற்றெவ்வெவையும்" என்று-ஜந்மவ்யதிரிக்தவிகாரபஞ்சகத்தையும் சொல்லுகிறது. (நீந்தும்துயரான-மற்றெவ்வெவையும்-இல்லாத) நீந்தாநிற்கும்படி துஸ்தரமாய் து:கோத்தரமான ஜராமரணாதிகளான மற்றெவ்வெவ்வகைப்பட்ட து:கங்களுமில்லாதவென்றபடி. முந்தினவந்வயார்த்தத்திலே-அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைச்சொல்லுகிறது. த்விதீயாந்வயார்த்தத்திலே - கேவலமிஷ்டப்ராப்தியைச்சொல்லுகிறது.

கைவல்யப்ராந்திம்வாரயதி (இவர்வீடென்கிறவித்யாதி) (ஸுகபாவைகேதி) ஷஷ்ட்டேம்ஶேயஞ்சமே, (நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணா । பேஷஜம்பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா) (நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணா। பேஷஜம்பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீமதா) பூர்வாத்யாயே-தாபத்ரயஜநிதது:கப்ரதர்ஶநேந, ஸம்ஸாரேது:கம் விநாஸுகலேஶோபிநாஸ்தீத்யுக்தம்; ஏதாத்ருஶது:கம்கேநநிவர்த்யத இத்யத்ர, நிரதிஶயாநந்தப்ரஹ்மப்ராப்த்யாநிவர்த்யத இத்யுச்யதே - அநேநஶ்லோகேந. (நிரஸ்தாதிஶயேதி) ஸுகாந்தரஸ்யப்ரஹ்மலோகாதிகதஸ்யாதிஶயோ நிரஸ்தோயேந ப்ரஹ்மாநுபவஸுகேந, தத்-நிரஸ்தாதிஶயம். ஆஹ்லாதரூபம்ஸுகம் - ஆஹ்லாதஸுகம். ஆஹ்லாத:-மோஹஸம்பேத:. ஸுகாந்தராநுபவாக்ஷமத்வாபாதகோத்கர்ஷவத்ஸுகம்-ஆஹ்லாதஸுகம். அதாவது- "யத்ர நாந்யத்பஶ்யதி" (யத்ரநாந்யத்பஶ்யதி) என்கிறபடியே ப்ரஹ்மாநுபவதசையிலே வேறொருஸுகாந்தரத்திலே நெஞ்சுசெல்லாதபடியாயிருக்கிற ஸுகமென்றபடி. (பாவஶப்தத்தாலே) து:கநிவ்ருத்தியும்-ஸுகமாயிருக்குமிறே, அத்தைவ்யாவர்த்திக்கிறது. ஏகஶப்தேந - ஸுகஸாதநத்வேந ஸுகஶப்தவாச்யசந்தநகுஸுமாதீநிவ்யாவர்த்தயதி. ஆக, நிரஸ்தமான ப்ரஹ்மலோகாதிகதஸுகாந்தரங்களினுடைய அதிஶயத்தையுடைத்தாயிருக்கிற ஆஹ்லாதரூபஸுகமாகையொன்றையுமே வடிவாகவுடைத்தாயிருப்பதாயென்றபடி. ஏகாந்தா - து:காஸம்பிந்நா. இத்தால்-ஸ்வர்க்காத்யநுபவங்கள்போலே து:கமிஶ்ரமாயிருக்கையன்றிக்கே ஸுகைகதாநமாயிருக்குமென்று, ஸ்வர்க்காத்யநுபவவ்யாவ்ருத்தி. யத்வா, ஏகாந்தா-அநந்யப்ரயோஜநா. ஆத்யந்திகீ-அந்தமதீத்யவர்த்தமாநா. நித்யையென்றபடி. பகவத்ப்ராப்தி:-பகவதநுபவ:. பேஷஜம்மதா - ஸம்ஸாரது:கத்துக்கு மருந்தாயிருக்குமென்று இஷ்டமாயிருக்குமென்றபடி. ப்ராப்திஶப்தம்-அநுபவத்தைச்சொல்லுமோவென்னில்; "மதிஜ்ஞாவுஜ்ஞா:" (கத்யர்த்தாபுத்த்யர்த்தா:) என்கிறந்யாயத்தாலே ப்ராப்திஶப்தம் - அநுபவத்தைச் சொல்லுகிறது. பகவச்சப்த: - ப்ராப்யஸ்யஹேயப்ரத்யநீககல்யாணகுணாத்மகத்வம் வக்ஷ்யமாணம்ஸூசயந், தத்ப்ராப்தேர்நிரஸ்தாதிஶயேத்யாத்யுச்யமாநம்வை

ஶிஷ்ட்யமுபபாதயதி. "வீடு" என்று-விடுகையைச்சொல்லுமொழிய, பகவதநுபவத்தைச்சொல்லுமோவென்ன (முக்திர்மோக்ஷஇத்யாதி) "ஊக்திர்மோக்ஷோ ஊஹாநநஃ" (முக்திர்மோக்ஷோமஹாநந்தஃ) இதிநைகண்டுகாஃ.

பரப்புமாற-விஸ்தாரமெல்லாம். புனல்-ஜலம். "இடர்" என்றதுக்குமூன்றர்த்தம் - முதலேயால்வந்தக்லேஶமாதல், "நாஹங்களேபரஸ்யாஸ்ய பரிஜீர்ணஸ்யகாமயே। கரஸ்த்தகமலாந்யேவ பாதயோரர்ப்பிதும்ஹரேஃ" (நாஹம்களேபரஸ்யாஸ்யபரிஜீர்ணஸ்யகாமயே। கரஸ்த்தகமலாந்யேவபாதயோரர்ப்பிதும்ஹரேஃ) என்று-பூவிற்செவ்வியழியாமே திருவடிகளிலேயிடப்பெறுமையால்வந்த மநஃக்லேஶமாதல், "ஆப்த்ஸகனான ஸர்வேஶ்வரனே, இன்றுதவாதொழிந்தால், 'நிர்க்ருணன்' என்றுலோகத்தார்சொல்லப்போகிறார்கள்" என்கிறக்லேஶமாதல். முதலர்த்தம் (பரப்புமாறவித்யாதி) த்விதீயார்த்தம் (பூவிலித்யாதி) "பூம்தண்டுழாயென்தனிநாயகன் - பொய்கையானை யிடர்கடிந்த" என்றுகூட்டியர்த்தம் (வைத்தவித்யாதி) "ஆனையிடர்கடிந்த, பூம்தண்டுழாய்" என்றுகூட்டிதாத்பர்யம் (திருத்துழாயிலித்யாதி) நதுஸர்வேஶ்வர இத்யர்த்தஃ. பரிமளம் முன்னேவந்திடாைப்போக்கிற்றென்றபடி. த்ருதீயார்த்தம் (ஆனையிடராவதித்யாதி) "என்" என்றதுக்குபாவம் (ஆனையிடரித்யாதி)

அந்வயமுகேந ப்ரதமயோஜநாமாஹ (அவன்திருவடிகளித்யாதி) ஸம்பந்தம்-ஸம்பந்தஜ்ஞாநம். "தமேவம்வித்வாந்" (தமேவம்வித்வாந்) "ஸந்தமேநம்" (ஸந்தமேநம்) என்னக்கடவதிறே. த்விதீயயோஜநையைப்பற்ற (தனிநாயகனித்யாதி) உபயவிதநிர்வாஹேபி - உத்தரார்த்தபூர்வகமந்வயஃ. பூந்தண்ணித்யாரப்ய, நாயகன் புணர்ப்பு-நீந்தும்துயர்தொடங்கி, எவ்வெவையும்நீந்தும்; துயரில்லாவீடுமுதலாமித்யந்வயஃ. யத்வா, நீந்தும்துயர்ப்பிறவியுட்பட-நீந்தும்துயரான மற்றெவ்வெவையும் இல்லாவீடுமுதலாமித்யந்வயஃ.... ... ... ... ... ... ... *



## மூன்றாம்பாட்டு.

புணர்க்குமயனுமழிக்குமரனும்
புணர்த்ததன்னுந்தியோடாகத்துமன்னிப்
புணர்த்ததிருவாகித்தன்மார்விற்றான்சேர்
புணர்ப்பன்பெரும்புணர்ப்பெங்கும்புலனே.

### ஆறாயிரப்படி.

(புணர்க்கும்) ஜகத்ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கும் தன்னுந்தியையாஶ்ரயமாகக் கொடுத்துவைக்கும்; ஜகத்ஸம்ஹர்த்தாவான ருத்ரனுக்கும் தன்திருவுடம்பை யாஶ்ரயமாகக்கொடுத்துவைக்கும்; ஸர்வலோகேஶ்வரியான பிராட்டிக்கும் தன்திருமார்வைக் கொடுத்துவைக்கும்; திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளும்; இப்படியெம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வ சிஹ்நபூதமான திவ்யசேஷ்டிதங்களெங்கும் ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய திவ்யமான சேஷ்டிதங்கள் ஸர்வத்ரப்ரஸித்தமென்கிறார்.

தன் - தன்னை. புணர்த்த - உத்பாதித்த. உந்தியோடு - திருநாபியோடேகூட. ஆகத்து-திருமேனியிலொருபார்ஶ்வத்திலும். மன்னி - நித்யவாஸம்பண்ணி. புணர்க்கும் - லோகஸ்ருஷ்டிபண்ணுகிற. அயனும் - அஜனுமாய். அழிக்கும் - ஸம்ஹரிக்கிற. அரனும் - ஹரனுமாய். இப்படிதத்ததந்தராத்மதையாலேததாத்மகனாய், தன்மார்வில் - தன்மார்விலே. புணர்த்த - நிருபகமாம்படி சேர்த்துக்கொள்ளப்பட்ட. திருவாகி - திருவுடையனாய். தான் - தானே. சேர் - தனக்குத்தகுதியான. புணர்ப்பன் - ஸ்வாதீநசேஷ்டிதனானவனுடைய. பெரு - அபரிச்சிந்நமான. புணர்ப்பு - திவ்யவ்யாபாரங்களானவை. எங்கும் - எங்கும். புலன் - கண்டநுபவிக்கலாம்படிப்ரஸித்தம்.

“ இருவரவர்முதலுந்தானே ” என்றத்தைவிவரித்தது.......................*

---

## ஈடு - மூன்றும்பாட்டு.

“ இருவரவர்முதலுந்தானே ” என்கிறபதத்தை விவரியாநின்றுகொண்டு, ஶ்ரியஃபதியானவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களை ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

( புணர்க்குமயனும் ) இவற்றை ஸ்ருஷ்டிக்கையே தொழிலாயிருக்கிற ப்ரஹ்மாவுமாம். ( அழிக்குமரனும் ) சுடுதடிபோலே இவற்றையடைய அழித்துக்கொண்டு நிற்கிறருத்ரனும். “ தஃாஃஸ்ரிதவஹ்ாஹளஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ ” ( ததாதர்ஶிதபந்தாநௌஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ ) “ ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யாமித்வாமாவிஶ்யப்ரஜாபதே ” ( ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யாமித்வாமாவிஶ்யப்ரஜாபதே ) என்கிறபடியே - அவனந்தராத்மாவாய்நின்று ப்ரவர்த்திப்பிக்க, இவற்றைச்செய்கிறார்கள். ( புணர்த்ததன்னுந்தியோடாகத்துமன்னி ) புணர்க்குமயனு மழிக்குமரனும். இவைதானிவர்கள் செய்யவல்லராவது அவன்றிருமேனியைப் பற்றியிருந்தபோதாயிற்று, ஸ்தநந்தயப்ரஜை, வாயில்முலைவாங்கினால் தரியாதாப்போலே. இத்தால், ஸாமாநாதிகரண்யத்தாலே - அந்தர்யாமித்வஞ் சொல்லிற்று. புணர்த்ததன்னுந்தி யென்கையாலே - காரணத்வஞ்சொல்லிற்று, ஆகத்து மன்னியென்கையாலே - திருமேனியைப்பற்றி லப்தஸ்வரூபரென்னு மிடஞ்சொல்லிற்று.

( புணர்த்ததிருவாகித்தன்மார்வில் ) தன்றிருமார்வில் நித்யஸம்ஶ்லிஷ்டையாயிருக்கிற பெரியபிராட்டியாரையுடையனாய். இதுஇப்போதுசொல்லுகிறதென்னென்னில்; ப்ரஹ்மாதிகளுக்கு நிர்வாஹகன் என்றவோபாதி, லக்ஷ்மீஸம்பந்தமும் ஐஶ்வர்யத்துக் குடலாகையாலே. பெரியபிராட்டியா ரோட்டைச்சேர்த்தி, நீர்மைக்கும் மேன்மைக்கு முடலா

யிருக்குமிறே. ( தான்சேர்புணர்ப்பன் ) ஸ்ருஷ்ட்யர்த்தமாக ஏகார்ணவத்திலே சாய்ந்தருளினவ னென்னுதல், தனக்குத்தகுதியான சேஷ்டிதங்களையுடையவ னென்னுதல். ( பெரும்புணர்ப்பெங்கும்புலனே ) ப்ரஹ்மாதிக ளதிகரித்தகார்யங்களை அவர்கள் வழியாலேநடத்தியும், தானதிகரித்த கார்யங்களைத்தானே நடத்தியும்போருகையாலே, தன்னுடையபெரும்புணர்ப்பு - ஆனைத்தொழில்களெங்கும் காணலாயிருக்கும். .........*

---

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. ( புணர்க்குமித்யாதி ) “ ஆகத்துமன்னி ” என்கிறபதங்களையும், “ புணர்த்ததிருவாகி ” என்றுதொடங்கி “எங்கும்புலனே” என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( இருவரவரித்யாதி ) “ பெரும்புணர்ப்பு ” என்கையாலே ( அதிமாநுஷசேஷ்டிதங்களையென்றது )

“ புணர்க்கும் ” என்கிறவர்த்தமாநார்த்தம் ( ஸ்ருஷ்டிக்கையே தொழிலாயிருக்கிறவென்றது ) “ அயனும் ” என்கிறஸாமாநாதி கரண்யநிபந்தநம் - சரீராத்மபாவமென்றுவிவக்ஷித்து, ப்ரமாணம் (ததாதர்ஶிதேத்யாதி) நாராயணீயேநாம நிர்வசநாத்யாயே, “ஏதௌ த்வௌ விபுதஶ்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌ ஸ்ம்ருதௌ” (ஏதௌத்வௌவிபுதஶ்ரேஷ்டௌப்ரஸாதக்ரோதஜௌஸ்ம்ருதௌ) இதிபூர்வார்த்தம். ( ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யாமி ) ஸ்ரீவிஷ்ணுதர்மே, “ உத்பாத்ய ப்ருதிவீம் ஸம்யக் ஸ்தாபயித்வா யதாபுரம் ” (உத்பாத்யப்ருதிவீம்ஸம்யக்ஸ்தாபயித்வாயதாபுரம்) இதிபூர்வார்த்தம்.

( புணர்த்ததன்னுந்தியோடிதி ) தன்னையுண்டாக்கின வுந்தியோடேகூடத் திருமேனியி லொருபார்ஶ்வத்தில் நித்யவாஸம்பண்ணி ஸ்ருஷ்டிக்கிற அஜனுமாம், ஸம்ஹரிக்கிற ருத்ரனுமாமென்று சப்தார்த்தம். ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் ( இவைதானித்யாதி) ஸ்தநந்தயேத்யாதிக்குமுன்னே-அல்லாதபோதென்றுகூட்டுவது. இத்தால் - “ புணர்க்குமயனும் ” இத்யாதி ப்ரதமபாதத்தாலே. அந்தர்யாமித்வஞ் சொல்லிற்று - சரீராத்மபாவஞ் சொல்லிற்று.

தன்மார்வில்- “ புணர்த்ததிருவாகி ” என்றநவயித்தர்த்தம் ( தன்றிருமார்விலித்யாதி ) “ விஷ்ணோஃ ஶ்ரீரநபாயிநீ ” ( விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ ) “ அகலகில்லேனிறையும் ” இத்யாதியைப்பற்ற ( நித்யஸம்ஶ்லிஷ்டையாயென்றது ) புணர்த்த - சேர்த்துக்கொள்ளப்பட்ட. தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் (இது இப்போதித்யாதி) இது - லக்ஷ்மீஸம்பந்தம். ஈஶ்வரத்வஞ்சொல்லுகிற ப்ரகரணத்திலே யிதுசொல்லுகை யபேக்ஷிதமோ, ஆனபின்பு இதுசொல்லுகிற தென்னென்னிலென்றபடி. லக்ஷ்மீஸம்பந்தம் நீர்மைக்குடலாயன்றோ விருப்பதென்ன ( பெரியபிராட்டியாரித்யாதி )

முந்தினவர்த்தத்தில், புணரியை - “ புணர்ப்பு ” என்றதாய், அத்தையுடையவன் - “புணர்ப்பன்” என்றதாய், தான்சேருகிற ஸமுத்ரத்தை யுடையவனென்றபடி. புணரி - ஸமுத்ரம். த்விதீயார்த்தத்தில், தான்சேர் - தனக்குத்தகுதியாகச் சேர்ந்திருக்கிற, புணர்ப்பை-சேஷ்டிதத்தை யுடையவனென்றபடி. பூர்வார்த்தம் பராம்ருஶ்நாஹ ( ப்ரஹ்மாதிகளித்யாதி ) “ தான்சேர்-புணர்ப்பன் ” என்றதின்

த்விதீயார்த்தத்தைப்பற்ற ( தானதிகரித்தவித்யாதி ) ஆனைத்தொழில் - அதிமாநுஷவ்யாபாரம். புலன் - இந்த்ரியம். இங்கு - தத்கோசரத்திலேலக்ஷணை.

புணர்த்ததன்னுந்தியோடு - மன்னி - புணர்க்குமயனும்; ஆகத்துமன்னி - அழிக்குமரனும்; தன்மார்வில் - புணர்த்ததிருவாகி - தான்சேர் புணர்ப்பனுடையபெரும் புணர்ப்பெங்கும் புலனேயித்யந்வய:..............................................*

# நான்காம் பாட்டு.

புலனைந்துமேயும்பொறியைந்துநீங்கி
நலமந்தமில்லதோர்நாடுபுகுவீ
ரலமந்துவீயவசுரரைச்செற்றான்
பலமுந்துசீரிற்படிமினோவாதே.

## ஆறாயிரப்படி.

( புலன் ) ப்ரக்ருதிபந்தவிநிர்முக்தராய்க்கொண்டு நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர், இப்படி ஸர்வேஸ்வரனாயிருந்த எம்பெருமானுடைய நிரதிசயபோக்யமான கல்யாணகுணங்களிலே ஓவாதே படியுங்களென்கிறார் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமான பரமபத ப்ராப்திக்கு ஏவம்விதனுடைய குணங்களிலே நித்யாவகாஹநம்பண்ணுங்கோளென்கிறார்.

புலன்-புலப்படும்விஷயங்கள். ஐந்து-ஐந்திலும். மேயும்-பொருந்தி. பொறி-பொறிபோலேயிவனையகப்படுத்திக்கொள்ளும். ஐந்து-ஐந்திந்த்ரியங்களின் வசத்தினின்றும். நீங்கி-அகன்று. நலம்-ஆநந்தம். அந்தமில்லது-அளவிறந்திருப்பதாய். ஓர்-அத்விதீயமான. நாடு-தேசத்திலே. புகுவீர்-போய்ப்புகவேண்டியிருப்பீர். அலமந்து - அலமந்து. வீய-நசிக்கும்படி. அசுரரை-அசுரரை. செற்றான்-கொன்றவனுடைய. முந்து-ஆரம்பமேதொடங்கி. பலம்-இனிமையாலே "பலம்" என்னலாம்படியான. சீரில் - குணங்களிலே. ஓவாதே - என்றுமொக்க. படிமின் - அவகாஹியுங்கோள்.

ரஸாயநமான பய:பாநநைரந்தர்யத்தாலே பித்தசாந்தியும் இனிமையும்பிறக்குமாபோலே, போக்யகுணங்களிலே நிரந்தராநுபவம்பண்ணவே அநிஷ்டநிவ்ருத்தியு மிஷ்டப்ராப்தியுந் தன்னடையேவருமென்றுகருத்து. புலனும் பொறியுமென்கிற இவையிரண்டும்-விஷயங்களுக்கு மிந்த்ரியங்களுக்கும்கலந்துபேராய்வரும்.

---

## ஈடு - நான்காம்பாட்டு.

அவனுடைய ஈஸ்வரத்வத்தில் கண்ணழிவற்றிருந்தது, "இனியிதுக்கவ்வருகில்லை" என்று "நன்மைபெறவேணும்" என்றிருப்பார் அவனைக்கடுக ஆஸ்ரயிக்கப்பாருங்கோளென்கிறார்.

(புலனித்யாதி) புலனைந்தென்கிறது - விஷயங்களையாய், அவற்றிலே ப்ரவணமாகக்கடவவான பொறியைந்துண்டு-ஸ்ரோத்ராதிகள்; அவற்றுக்கு வஸ்யராகைதவிர்ந்து. சிலபதார்த்தங்களை வறைநாற்றத்தைக்காட்டிமுடிக்குமாபோலே, சப்தாதிகளிலேமூட்டி நசிப்பிக்கையாலே, இந்த்ரியங்களை - பொறியென்கிறது. இத்தால் - பரிச்சிந்நவஸ்துக்ராஹகமான இந்த்ரியவஸ்யராகை தவிர்ந்து. ( நலமித்யாதி ) நன்மைக்குமுடிவின்றிக்கேயிருக்கிறநாட்டிலே புகவேண்டியிருப்பீர். "ஸ்வவிநாசங்காண்மோக்ஷம்" என்கையன்றிக்கே, ஆப்ததமரான இவர் நன்மைக்கு முடிவில்லாததொரு தேசவிசேஷமுண்டாக வருளிச்செய்துவைத்தாரிறே. (புகுவீர்) இப்பேற்றுக்கு இசைவேயதிகாரமென்கிறார். அதொருநாடுமுண்டாய், "அதுபெறவேணும்" என்னும் நசையுமுண்டானாலும், ப்ரபலவிரோதிகள் கிடக்குமாகில் ப்ரயோஜநமில்லையேயென்னில் ( அலமந்து வீயவசுரரைச்செற்றான் ) விரோதிபோக்குகை நம்பணியோவென்கிறார். தடுமாறிமுடிந்துபோம்படி அஸுரவர்க்கத்தை யழியச்செய்தான். அவனுடைய ( பலமுந்துசீரில்படிமின் ) பலம்முற்பட்டிருக்கிற கல்யாணகுணங்களிலே ப்ரவணராகுங்கோள். [ ஸுஹஸுவெஂகஹுவெ௵யஂ ] [ ஸுஸுகம்கர்த்துமவ்யயம் ] என்னும்படி - ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யத்தாலே, ஸாதநதசையேதொடங்கி யினிதாயிருக்குமிறே. ( ஓவாதே ) "அபர்வணிசடல்தீண்டலாகாது" என்னுமாபோலே ஒருநியதியில்லை யிதுக்கு, மாறாதே யாஸ்ரயிக்கப்பாருங்கோள். தமக்குரஸித்தபடியாலே, இடைவிடாம லநுபவியுங்கோ ளென்கிறானென்றுமாம். "நானும்சொன்னேன் நமருமுரைமின்" என்னுமாபோலே... ... ... ... ... *

---

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (புலனித்யாதி) கீழிற்பாட்டில் ப்ரமேயம் (அவனுடைய ஈஸ்வரத்வத்தில் கண்ணழிவற்றிருந்ததென்று) கண்ணழிவற்றிருந்தது-அத்ருடமாகைதவிர்ந்து ஸ்திரமாயிருந்தது.

புலப்படும்-அறியப்படுமவையாகையாலே ( புலனைந்தென்கிறது விஷயங்களையாயென்றது ) ஐந்துமேயும்-ஐந்திலும் பொருந்திவர்த்திக்கும். அத்தாலே - (ப்ரவணமாகக்கடவவான) என்றபடி. இந்த்ரியங்களை - "பொறி" என்பானென்னென்ன ( சிலபதார்த்தங்களையித்யாதி ) சிலபதார்த்தங்களை - எலி, பெருச்சாளிமுதலானவைகளை. வறைநாற்றத்தை-ஹேயகந்தத்தை. பொறி-போன். பொறியைந்து நீங்கி-இந்த்ரியங்களைந்தினின்று மகன்று இதிசப்தார்த்தம். இத்தால் - "புலனைந்து" என்கிறவித்தால். மேலேகடாக்ஷித்து பலிதம் (பரிச்சிந்நேத்யாதி)

வித்தவ்யாக்யாத்ருவாக்யம் ( ஸ்வவிநாசங்காணித்யாதி ) "அஹமர்த்தவிநாஸஶ்சேந்மோக்ஷ இத்யத்யவஸ்யதி । அபஸர்பேதஸௌமோக்ஷகதாப்ரஸ்தாவகந்ததஃ" (அஹமர்த்தவிநாஸஶ்சேந்மோக்ஷஇத்யத்யவஸ்யதி। அபஸ

ர்ப்பேதஸௌமோக்ஷகதாப்ரஸ்த்தாவகந்தத: ) இத்யநுஸந்தேயம். "புகுவீர்" என்றதுக்கு பாவம் (இப்பேற்றுக்கித்யாதி)

பாவம் (விரோதீத்யாதி) சப்தார்த்தம் (தடுமாறியித்யாதி) அலமந்து-தடுமாறி. பலம் முற்பட்டிருக்கையாவதென்னென்ன (ஸுஸுகமித்யாதி)

படிமின்-அவகாஹியுங்கோள். இத்தால் பலிதம் (ப்ரவணராகுங்கோளென்றது) ஆஸ்ரயணம் ஸக்ருத்தாயிருக்க, "ஓவாதே" என்பானென்னென்ன (அபர்வணீத்யாதி) "..." (அஸ்வத்தம்ஸிந்துராஜஞ்ச) இத்யாத்யநுஸந்தேயம். கீழையுங்கூட்டி பாவாந்தரம் (தமக்கித்யாதி) உக்தார்த்தத்துக்குஸம்வாதம் (நானுமித்யாதி) பெரியதிருமொழி. இதரவிஷயங்களினுடையபேரைச்சொல்லிப்போந்தநானும்சொன்னேன், என்னோடு ஸம்பந்தமுடையாரு மித்தையேசொல்லிப்போருங்களென்றபடி.

புலனைந்துமேயுந்தொடங்கி, சீரில்-ஓவாதேபடி மினித்யந்வய:. ...........*

# ஐந்தாம்பாட்டு.

ஓவாத்துயர்ப்பிறவியுட்படமற்றெவ்வெவையு
மூவாத்தனிமுதலாய்மூவுலகுங்காவலோன்
மாவாகியாமையாய்மீனாகிமானிடமாந்
தேவாதிதேவபெருமானென்தீர்த்தனே.

## ஆறாயிரப்படி.

(ஓவா) "இணைவனும்" என்கிறபதத்தைவிவரிக்கிறது.

ஸம்ஸாரசக்ர ப்ரவர்த்தகனாகையாலும், ப்ரஹ்மேசாநாதிதேவர்களுக்குக் காரணபூதனாய் * அயர்வறுமமரர்களுக்கு ஸ்வாமியாகையாலும், அசேஷதோஷப்ரத்யநீகனாகையாலும், தேவமநுஷ்யாதி வ்யாபாரங்களைப்பண்ணிக்கொண்டு ஸர்வஜகத்ரக்ஷகனாகையாலும் அவனே ஸர்வேஸ்வரனென்கிறார். ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸமஸ்தகாரணபூதனானவன் கார்யபூத ஜகத்ரக்ஷணார்த்தமாகப் பண்ணின அவதாரங்களில் வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார்.

ஓவா-அவிச்சிந்நமான. துயர்-து:கத்தைத்தருவதான. பிறவி-ஜந்மஸம்பந்தரூபமானஸ்ருஷ்டி. உட்பட-அகப்பட. மற்று- மற்றுஸ்த்திதிஸம்ஹாராதிகளான. எவ்வெவையும்-எல்லாவ்யாபாரங்களுக்கும். மூவா-மூத்துச்சோம்பிவிடாத. தனிமுதலாய்-ஸஹாயாந்தரநிரபேக்ஷகாரணபூதனாய்க்கொண்டு. மூவுலகும் - ஸ்ருஜ்யமானலோகத்தினுடைய. காவலோன்-ரக்ஷணத்தையுடையனாய். தேவ-ப்ரஹ்மாதிதேவதைகளுக்கும். ஆதிதேவர்-அவ்வருகாம்படி ஆதிதேவர்களான அயர்வறுமமரர்களுக்கு. பெருமான்-அதிபதியாய். என்-எனக்கு. தீர்த்தன் - அவகாஹிக்குந்துறை

யாம்படி ஸுலபனானவன். அந்தஜகத்ரக்ஷணார்த்தமாக, மாவாகி-வேதப்ரவர்த்தகனான ஹயக்ரீவனாய். ஆமையாய்மீனாகி - புராணப்ரவர்த்தக கூர்மமத்ஸ்யரூபியாய். மானிடமாம்-கீதோபநிஷதாசார்யனுமான மநுஷ்யனுமாம்.

"இணைவனுமெப்பொருட்கும்" என்கிறபதத்தை விவரிக்கிறது............*

---

## ஈடு-ஐந்தாம்பாட்டு.

கீழே "இணைவனுமெப்பொருட்கும்" என்றார்; அத்தையுபபாதிக்கிறார்.

(ஓவாத்துயர்ப்பிறவியுட்பட) கீழே "நீந்துந்துயர்ப்பிறவி" என்றார், இதிலே-ஒருகால் விட்டுப்பிடிக்குமதுவு மில்லையென்கிறார். உச்சிவீடும் விடாததுயரைவிளைக்கக்கடவதான ஜந்மந்தொடக்கமாக மற்றுமுண்டான ஐந்துக்கும்; அவற்றையுடைத்தான பதார்த்தங்களுக்கும். மூவா வென்கிறஇத்தை-கீழேகூட்டுதல்; மூவா-தனிமுதலென்று மேலேகூட்டுதல். ப்ரவாஹரூபத்தாலே நித்யமாய்ப்போருகிற இதுக்குத்தனிமுதலென்னுதல், மூசியாத அத்விதீயகாரணமாயென்னுதல். தான், "தன்பக்கலிலே வழிபடவேணும்" என்று நினைத்து உபகரணங்களைக்கொடுத்துவிட, கொடுத்த உபகரணங்களைக்கொண்டு வழிகெடநடவாநின்றால் "இப்போதிங்ஙனேபோயிற்றதாகில், க்ரமத்திலே நம்பக்கலிலே ருசியைப்பிறப்பித்து மீட்டுக்கொள்ளுகிறோம்" என்று அநுமதிதாநத்தைப்பண்ணி உதாஸீநனாயிருக்கும்; இப்படி தன்னினைவைத்தப்பிப்போரச்செய்தேயும், கர்ஷகனாயிருக்குமவன் "ஒருகால்பதர்த்ததிறே" என்று சோம்பிக்கைவாங்காதே மேலேமேலே கோலுமாபோலே, "ஒருகாலல்லாவொருகாலாகிலுமாகிறது" என்று ஸ்ருஷ்டியாநிற்கும். "சோம்பாதிப்பலுருவையெல்லாம் படர்வித்தவித்தா" என்னக்கடவதிறே. இப்படியிவன் ஸ்ருஷ்டித்து ரக்ஷிப்பதெவ்வளவென்னில் (மூவுலகுங்காவலோன்) ஸ்ருஷ்டிக்குக்கர்மீபவிக்கு மெல்லையளவும். கீழும், மேலும், நடுவுமென்னுதல்; க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகமென்னுதல். (காவலோன்) சாஸ்த்ரப்ரதாநாதிகளாலே ரக்ஷிக்கை. இப்படிரக்ஷிப்பது தன்மேன்மை குலையாதே நின்றோவென்னில் (மாவாகியித்யாதி) அகர்மவஸ்யனானவன் கர்மவஸ்யரோடொக்கப்பிறந்தாயிற்று. (மாவாகி) ஹயக்ரீவமூர்த்தியாயவதரித்தபடி. (ஆமையாய்மீனாகி) வித்யாப்ரகாஸகமான அவதாரங்கள். (மாணிடமாய்) ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள். அநுஷ்ட்டேயார்த்த ப்ரகாஸகமான அவதாரங்கள்; "[Grantha script] " (மர்யாதாநாஞ்சலோகஸ்யகர்த்தாகாரயிதாசஸ꞉) என்றும், "[Grantha script]" (யத்யதாசரதிஸ்ரேஷ்ட்ட꞉) என்றுசொல்லுகிறபடியே. இப்படி தாழவிட்டவதரிக்கிறவன்றானாரென்னில் (தேவாதிதேவபெருமான்) மநுஷ்யகந்தம்பொறாத தேவர்கள் கந்தம்பொறாத

நித்யஸூரிகளுக் கவ்வருகானவன். (என்நிர்த்தனே) நல்லபோக்யஜாதமி ருக்க, நிஷித்தத்ரவ்யங்களைவிரும்புவாரைப்போலே, தானும் தன்னுடை யகுணங்களுமிருக்க, சப்தாதிவிஷயங்களைவிரும்பிப்போந்தவென்னை, அ வற்றைவிட்டுத்தன்னையே விரும்பும்படியான சுத்தியைப்பிறப்பித்த சுத் தியையுடையவன். அன்றிக்கே, நானிழிந்தாடும் துறையென்னுதல் ... *

---

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (ஓவாவித்யாதி) "மாவாகியாமையாய்மீனுகிமானிடமா ம்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (கீழேயித்யாதி)

புநருக்தியைப்பரிஹரிக்கிறார் (கீழேநீந்துமித்யாதி) "நீந்தும்துயர்ப்பிற வி" என்கிறவிது - "யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹோதி" (யாவஜ்ஜீவமக்நி ஹோத்ரம் ஜுஹோதி) இத்யாதிவன்மத்யே து:கரஹிதகாலமாயிருக்குமென்று தத் வ்யாவ்ருத்யர்த்தம் புநரிஹாபிதாநமென்று கருத்து. ஓவா - அவிச்சிந்நமான. ஐந் துக்கும் - "அஸ்தி, பரிணமதே, விவர்த்ததே, அபக்ஷீயதே, விநஶ்யதி," (அஸ்தி, பரிணமதே, விவர்த்ததே, அபக்ஷீயதே, விநஶ்யதி,) என்கிற ஐந்துவிகா ரங்களுக்கும். விகாரங்களைச்சொன்னது - விகாராஶ்ரயவஸ்துக்களுக்கு முபலக்ஷ ணமென்கிறார் (அவற்றையித்யாதி)

உக்தயோஜநாத்வயத்துக்கு மடைவேயர்த்தம் (ப்ரவாஹேத்யாதி) அதாவ து - ஓவாத்துயரை விளக்கக்கடவதாய், மூவா - ப்ரவாஹரூபேணநித்யமாயிருக்கி ற-பிறவியுட்பட மற்றெவ்வெவற்றுக்கும் தனிமுதலென்று முந்தினயோஜனையிலர் த்தம்; இந்தயோஜனையில், மூவுதல்-நசித்தலாய், அதில்லாதது - "மூவா" என்று ய், நித்யதையைச்சொல்லுகிறது. த்விதீயயோஜனையில், "மூவா" என்பது-முசியா மையைச்சொல்லுகிறது. இதுக்கு-ஜந்மாதிவிகாரத்துக்கும், ஜந்மாதிவிகாரத்தையு டைய பதார்த்தஸமூஹத்துக்குமென்றபடி. முசியாத - சோம்பாத. முசியாமையை யுபபாதிக்கிறார் (தான்தன்பக்கலிலேயித்யாதி) உபகரணங்கள்-களேபராதிகள். ப தர்த்ததிறே-பதராய்ப்போயிற்றிறே. நிஷ்பலமாயிற்றிறேயென்றபடி. கோலுகை- உத்யோகிக்கை. உக்தார்த்தேப்ரமாணம் (சோம்பானித்யாதி) பெரியதிருவந்தாதி. சோம்பிக்கைவாங்காதே யிந்தப்பலவகைப்பட்ட வஸ்துக்களை யெல்லாம் விஸ்த்ரு தமாக்கினகாரணபூதனேயென்று பாசுரார்த்தம்.

எல்லைக்குபபாதகம் (கீழுமித்யாதி) "மூவுலகும்" என்றது - ஸ்ருஜ்யங்க ளுக்கெல்லாமுபலக்ஷணம். கீழென்றது - பூமிக்குக்கீழான ஏழுலோகத்தை. மே லென்றது - பூமிக்குமேலான ஆறுலோகத்தை. நடுவும்-நடுவானபூமியுமென்றபடி. "பூர்ப்புவஸ்ஸுவ:" (பூர்ப்புவஸ்ஸுவः) என்கிறமூன்றுலோகமும்-க்ருதக ம். "ஜநஸ்தபஸ்ஸத்யம்" (ஜநஸ்தபஸ்ஸத்யம்) என்கிறமூன்றும் - அக்ருதகம். மஹர்லோகம்-க்ருதகாக்ருதகம். காவலோன் - ரக்ஷகன். ரக்ஷகத்வம்கதமித்யத்ரா ஹ (சாஸ்த்ரேத்யாதி) மேலே "மாவாகி" இத்யாதி-வித்யாவதாரங்களைச்சொல்லு கையாலே (சாஸ்த்ரப்ரதாநாதிகளாலே ரக்ஷிக்கையென்கிறார்) ஆதிசப்தேந - அ நுஷ்டேயார்த்த ப்ரகாஶநாதிருச்யதே.

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (எக்காலத்தித்யாதி) ஆளவந்தார்நிர்வாஹத்திலே யவதாரிகை (அத்யல்பகாலமித்யாதி)

கூறிட - பாகிக்க. சிறுகூறுன - அணுமாத்ரமான. ஸ்வாமியான முறையென்றது - "எந்தையாய்" என்றதைப்பற்ற. இதொழிந்த - இவ்வத்யல்பகாலமொழிந்த. "யாதொன்றும்" என்றதுக்குபாவம் (பின்னையிதுதானுமித்யாதி) பின்னையிதுதானும்வேண்டேன் - பின்னையிப்படிப்பட்ட அத்யல்பக்ஷணகாலாநுபவமும்வேண்டேன். அப்படியொருகாலநுபவிப்பித்தால் பின்னையர்த்தியாரோவென்ன (ஜ்வரேத்யாதி)

(யத்ரருஷயஇத்யாதி) ஸூக்ஷ்மதர்ஶித்வவாசியான ருஷிசப்தத்தாலே-பகவதநுபவாதிக்யம் சொல்லப்படுகிறது. புராணா: - புராதநவா:. பகவதநுபவேநித்யாபூர்வா:. ஏதேந - விமலத்வம்ஸித்தம். அக்காரம் - சர்க்கரைக்கட்டி. அக்காரத்தினுடைய கனியென்று அர்த்தாந்தரம். (அக்காரம் வ்ருக்ஷமாயித்யாதி) கோட்புக்கு - அநுநமாக. முந்தினவர்த்தத்திலே யருளிச்செய்கிறார் (அக்காரக்கனியேயென்கிறவித்யாதி).

சிறுகக்கோலுகை - அல்பமாக ஆசைப்படுகை. ஆளவந்தார் நிர்வாஹத்திலே, "எக்காலத்து" என்றது - அத்யல்பகாலத்திலு மென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, "எக்காலத்து" என்றது - எல்லாக்காலத்திலுமென்றபடி. (மற்று-யாதொன்றும்வேண்டேன்) பகவத்வ்யதிரிக்த புருஷார்த்தங்களொன்றும் வேண்டேன்.

ஆளவந்தார்நிர்வாஹத்திலே, மிக்கார்வேத விமலர்விழுங்கும் என்னக்காரக்கனியே - எக்காலத்தெந்தையா யென்னுள்மன்னில் மற்றெக்காலத்திலும் - யான் - உன்னை - யாதொன்றும் வேண்டேனித்யந்வய:. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, மிக்கார்வேத மித்யாரப்ய, கனியே - எக்காலத்தெந்தையாயென்னுள் மன்னில் - எக்காலத்திலும் - யான் - உன்னை - மற்று - யாதொன்றும் வேண்டேனித்யந்வய:..........................................................*

---

## ஒன்பதாம்பாட்டு.

யானேயென்னையறியகிலாதே
யானேயென்றனதேயென்றிருந்தேன்
யானேநீயென்னுடைமையுநீயே
வானேயேத்துமெம்வானவரேறே.

## ஆறுயிரப்படி.

(யானே) நானுமென்னுடைமையு முனக்கேயடிமையா யிருக்கச்செய்தே, இதுக்குமுன்புபோன காலமெல்லாம் "உனக்கடிமை" என்னுமிடத்தை யறியாதே, நானென்று மென்னுடையதென்று முண்டான

ஸ்வாதந்த்ர்யாபிமாநத்தாலே நஷ்டனானேனென்று தம்முடைய இழவை யநுசந்தித்து அத்யந்தமவஸந்நராய், ஸ்வபாவதஏவாஸ்க்கலிதஜ்ஞாநரா யொருக்ஷணமாத்ரமு மெம்பெருமானை யிழவாதே திருநாட்டிலேயிருந் தநுபவிக்கிறவர்க ளாரோவென்கிறார்...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸம்பந்தம ப்ருதக்ஸித்தமாயிருக்க அநாத்யஜ்ஞாநத்தாலே அஹங்காரமமகாரதூஷிதனா யிழந்தேனென்கிறார்.

யானே - நான்றானே. என்னை - என்விஷயத்திலே. அறிய - யாதாத்ம்யஜ்ஞாநம். கிலாதே - இல்லாமையாலே. யானே - நான்ஸ்வதந்த்ரனேயாகவும். என் தனதே - என்னையொழிந்தவையென்னுடைமையாகவும், என்று - அஹங்காரமமகாரங்களைப்பண்ணி. இருந்தேன் - முடிந்துபோகாதே ஆத்மநித்யத்வமுமநர்த்தாவஹ மாம்படியிருந்தேன். வானே - இவ்வறிவுகேடின்றியிலே யாதாத்ம்யஜ்ஞாநம் நடையாடும்பரமபதமாக. ஏத்தும்-உன்னுடையசம்பந்தத்தையேத்தும்படி. அவ்வானவர் - அங்குள்ளார்க்கு. ஏறே-சேஷியானசெருக்குத்தோன்றவிருக்குமவனே. அர்த்தஸ்த்திதியுணர்ந்தால், யான் - நான். நீயே - நீயேயென்னலாம்படி அப்ருதக்ஸித்தப்ரகாரபூதனாயிருப்பன். என்னுடைமையும் - என்னுடைமையானவையும். நீயே- உனக்கப்படி ப்ரகாரமாய்க்கொண்டு நீயேயென்னலாம்படியாயிருக்கும்...*

---

## ஈடு-ஒன்பதாம்பாட்டு.

" மிக்கார்வேதவிமலர் விழுங்கும் " என்றுநித்யஸூரிகள் நித்யாநுபவம் பண்ணுகிறபடியை யநுசந்தித்தார் ; அவர்களோடொத்த ப்ராப்திதமக்குண்டாயிருக்க, இழந்திருக்கிறபடியையு மநுசந்தித்து அநர்த்தப்பட்டேனென்கிறார்.

( யானே ) என்னிழவுபகவத்க்ருதமல்ல, அவன் * எதிர்சூழல்புக்குத் திரியாநிற்க, நானேகிடீர் விநாசத்தைச் சூழ்த்துக்கொண்டேனென்கிறார். ( என்னையறியகிலாதே ) ராஜபுத்ரன் வேடன்கையிலேயகப்பட்டுத் தன்னைவேடனாக ப்ரதிபத்திபண்ணுமாபோலே, சர்வேஸ்வரனுக்கு ப்ரகாரபூதனான என்னையறியாதே. ( யானேயென்றனதேயென்றிருந்தேன் ) " அவனும் அவனுடைமையும் " என்றிருக்கைதவிர்ந்து, நானுமென்னுடைமையுமென்று வகுத்துக்கொண்டுபோந்தேன். ( இருந்தேன் ) இப்படிநெடுநாள் போருகிறவிடத்தில் ஒருநாளநுதாபம் பிறக்கவுமாமிறே, அதின்றிக்கே க்ருதக்ருத்யனாய் நிர்ப்பரனாயிருந்தேன்; [ தீவினையேன் வாளாவிருந்தேன் ] என்னுமாபோலே - " ஸஹம்ஸர்வம்கரிஷ்யாமி " ( அஹம்ஸர்வம்கரிஷ்யாமி ) என்கைக்கு ப்ராப்தியுண்டாயிருக்க, ஒருகார்யமில்லாதானாப்போலே கையொழிந்திருந்தேன்; " முடிந்தேன் " எ

ன்ருற்போலே யிருக்கிறதிறே ; ஒருநாளையிழவேபோந்திருக்க, அநாதி காலமிழந்துபோந்தேன்.

அந்நானன்றோ அர்த்ததத்வமென்ன (யானேநீ) "அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச" (அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச) என்னுநிற்பர்களாயிற்றுமுக்தர், "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்) என்னுநிற்பர் சம்ஸாரத்தில் தெளிவுடையார் ; "அஹம்ப்ரஹ்மாஸ்மி" (அஹம்ப்ரஹ்மாஸ்மி) "நான்ராஜபுத்ரன்" என்னுமாபோலே, "நான் ப்ரஹ்மம்" என்னலாம்படியிறே சம்பந்தமிருக்கும்படி. "ஸவாஸுதேவ:" (ஸவாஸுதேவ:) என்றது வாசுதேவ சரீரமென்றபடியிறே. (என்னுடைமையும்நீயே) "யஸ்யைதேதஸ்யதத்தநம்" (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்னுமாபோலே. இதெங்கேபரிமாறக்கண்டு சொல்லும்வார்த்தையென்ன ; நித்யசூரிகளடைய இப்படியன்றோ வுன்னையநுபவிப்பது. "மஞ்சா:க்ரோஶந்தி" (மஞ்சா:க்ரோஶந்தி) என்கிறபடியே (வானேயேத்துமென்கிறது) (எம்வானவரோறே) அவர்கள்தங்கள் சேஷத்வாநுரூபமாக அடிமைசெய்யாநிற்க, இவனும்தன் சேஷித்வத்தால் வந்தவுத்கர்ஷந்தோற்ற விருக்குமிருப்பு. எம்என்று - எனக்குமவர்களோடொத்த ப்ராப்தியுண்டாயிருக்க, இழந்தநர்த்தப்பட்டேனென்கிறார்..........................................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (யானேயென்னையித்யாதி) ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணுகிறவிடத்தில் "அஹங்காரமமகாரவஶ்யனுய்க் கெட்டுப்போனேன்) என்றருளிச்செய்கைக்கு ப்ரஸங்கமேதென்ன (மிக்கார்வேதமித்யாதி) ப்ராப்தி - ஶேஷத்வம்.

அவதாரணார்த்தம் (என்னிழவித்யாதி) (பசவத்க்ருதமல்லவிதி) "மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்" (மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்) "ஶங்கேமத்பாக்யஸம்க்ஷயாத்" (ஶங்கேமத்பாக்யஸம்க்ஷயாத்) இத்யாதிவத். சூழ்த்து - ஸம்பாதித்து.

"யானேயென்றனதே" என்கிற ஏவகாரார்த்தம் (அவனுமித்யாதி) வகுத்து - விபஜித்து. "இருந்தேன்" என்றதுக்குவாஸனை (இப்படியித்யாதி) உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் (தீவினையேனித்யாதி) பெரியதிருவந்தாதி. துஷ்கர்மத்தைப்பண்ணின நான்வ்யர்த்தமேயிருந்து விட்டேனென்றுபாசுரார்த்தம். "வாளாவிருந்தேன்" என்றதுக்குபாவம் (அஹம்ஸர்வமித்யாதி) "ஒழிந்தேன்" இத்யஸ்யபாவம் (முடிந்தேனித்யாதி) "கீழ்நாள்களெல்லாம்" இத்யஸ்யபாவமாஹ (ஒருநாளையித்யாதி) அத்ர "யந்முஹூர்த்தம்" (யந்முஹூர்த்தம்) இத்யாத்யநுஸந்தேயம்.

"யானேநீ" என்கிறஸாமாநாதிகரண்யம் - சரீராத்மபாவ நிபந்தநமென்று திருவுள்ளம்பற்றி, இப்படியைக்யமாகச் சொன்னபேருண்டோவென்ன (அஹம்மநுரபவமித்யாதி) ப்ருஹதாரண்யகே சதுர்த்தப்ராஹ்மணே, "𑌤𑌦𑍍𑌧𑍈𑌤𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑍃𑌷𑌿𑌰𑍍𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌃𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑍇𑌦𑍇 𑌅𑌹𑌂𑌮𑌨𑍁𑌰𑌭𑌵𑌂𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑌿𑌤𑌦𑌿𑌦𑌮𑌪𑍍𑌯𑍇𑌤𑌰𑍍𑌹𑌿𑌯 𑌏𑌵𑌂𑌵𑍇𑌦𑌾𑌹𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑌿" (தத்தைதத்பஶ்யந்ருஷிர்வாமதேவ꞉ப்ரதிபேதே அஹம்மநுரபவம்ஸூர்யஶ்சேதிததிதமப்யேதர்ஹிய ஏவம்வேதாஹம்ப்ரஹ்மாஸ்மீதி) ஏதத் - ப்ரஹ்ம, பஶ்யந்-வாமதேவ꞉-ருஷி꞉-அஹம்மநுரபவம்ஸூர்யஶ்சாபவம-இதிப்ரதிபேதே. ப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶே ப்ரஹ்லாதஸ்தோத்ரம், "𑌯𑌤𑍍𑌰𑌸𑌰𑍍𑌵𑌂𑌯𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂𑌸𑌰𑍍𑌵𑌤𑌶𑍍𑌚𑌯𑌃। 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍍𑌵𑌾𑌦𑌨𑌨𑍍𑌤𑌸𑍍𑌯𑌸𑌏𑌵𑌾𑌹𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃। 𑌮𑌤𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌂𑌮𑌯𑌿𑌸𑌰𑍍𑌵𑌂𑌸𑌨𑌾𑌤𑌨𑍇। 𑌅𑌹𑌮𑍇𑌵𑌾𑌵𑍍𑌯𑌯𑍋𑌨𑌨𑍍𑌤𑌃" (யத்ரஸர்வம்யதஸ்ஸர்வம்யஸ்ஸர்வம்ஸர்வதஶ்சய꞉। ஸர்வகத்வாதநந்தஸ்யஸஏவாஹமவஸ்த்தித꞉। மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே। அஹமேவாவ்யயோநந்த꞉) இத்யாதி. ஏவம்ப்ரயோக்தும் ஹேதுமாஹ (அஹம்ப்ரஹ்மாஸ்மீத்யாதி) ஸம்பந்தம்-ப்ரகாரப்ரகாரிபாவ꞉, கார்யகாரணபாவஶ்ச. "𑌸𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃" (ஸவாஸுதேவ꞉) இதி-ஐக்யமேவஹ்யபிதீயத' இத்யத்ராஹ (ஸவாஸுதேவஇத்யாதி) த்விதீயேம்ஶேத்வாதஶே, "𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌂𑌵𑌿𑌮𑌲𑌂𑌵𑌿𑌶𑍋𑌕𑌮𑌶𑍇𑌷𑌲𑍋𑌭𑌾𑌦𑌿𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌮𑍍। 𑌏𑌕𑌂𑌸𑌦𑍈𑌕𑌂𑌪𑌰𑌮𑌃𑌪𑌰𑍇𑌶𑌸𑍍𑌸𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋𑌨𑌯𑌤𑍋𑌨𑍍𑌯𑌦𑌸𑍍𑌤𑌿" (ஜ்ஞாநம்விஶுத்தம்விமலம்விஶோகமஶேஷலோபாதிநிரஸ்தஸங்கம்। ஏகம்ஸதைகம்பரம꞉பரேஶஸ்ஸவாஸுதேவோநயதோந்யதஸ்தி)

(யஸ்யைதஇத்யாதி) மஹாபாரதே உத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம்ப்ரதிவிதுர꞉, "𑌤𑍍𑌰𑌯𑌏𑌵𑌾𑌧𑌨𑌾𑌰𑌾𑌜𑌨𑍍𑌭𑌾𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌸𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍁𑌤𑌃। 𑌯𑌤𑍍𑌤𑍇𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿𑌯𑌸𑍍𑌯𑍈𑌤𑍇𑌤𑌸𑍍𑌯𑌤𑌦𑍍𑌧𑌨𑌮𑍍" (த்ரயஏவாதநாராஜந்பார்யாதாஸஸ்ததாஸுத꞉। யத்தேஸமதிகச்சந்தியஸ்யைதேதஸ்யதத்தநம்)

"வானேயேத்தும்" என்கிறதுக்கு - ஒருநாடாகவேத்துகிற இத்யமுமர்த்தம் ஹ்ருதிநிதாயாஹ (நித்யஸூரிகளித்யாதி) "ஏத்தும்" என்கிற பதஸாமர்த்த்யத்தாலே, "வான்" என்கிறவிது - நித்யஸூரிகளைச்சொல்லுகிறதென்றபடி. "எம்" என்றது - ஏற்றுக்கு விசேஷணம்.

வானேயேத்துமெம் வானவரேறே-யானேயென்னை யித்யாரப்யாந்வய꞉...*

---

# பத்தாம் பாட்டு.

ஏறேலேழும்வென்றேர்கொளிலங்கையை
நீறேசெய்தநெடுஞ்சுடர்ச்சோதி
தேறேலென்னையுன்பொன்னடிசேர்த்தொல்லை
வேறேபோகவெஞ்ஞான்றும்விடலே.

## ஆறாயிரப்படி.

(ஏறேல்) இந்தப்ராப்யத்தைப்பெறுகைக்கு ப்ரதிபந்தகங்களுள வேயென்னில்; அவற்றையெல்லாம், நப்பின்னைப்பிராட்டிக்கும், அசோகவநிகையில் பிராட்டிக்கும் உன்னோடு சம்ஶ்லேஷிக்கைக்கு ப்ரதிபந்தகங்களை நீயேபோக்கினாற்போலே போக்கியருளி, உன்திருவடிகளிலேயென்னை யிங்ஙனச்சேர்த்தருளி, உன்திருவடிகளில் திவ்யரேகைபோலே பின்னையொருகாலமு முன்னைப்பிரியாததொருபடிபண்ணியருளவேணும்; இப்படியிக்ஷணமே செய்தருளாவிடில் ஒன்றும் தரியேனென்கிறார்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அந்தசம்பந்தங்குலையாதபடி யென்னைக் கைவிடாதொழியவேணுமென்கிறார்.

ஏல்-ஏன்றுகொண்ட. ஏறு-ஏறு. ஏழும்-ஏழையும். வென்று - வென்று. ஏர்-அழகை. கொள்-உடைத்தான. இலங்கையை-லங்கையை. நீறேசெய்த-பஸ்மஸாத்கரித்தத்தாலே. நெடும்-மிக்க. சுடர்-தேஜஸ்ஸையுடையனான. சோதி-உஜ்ஜ்வலவிக்ரஹனே. என்னை- என்னை. தேறேல் - “ எனக்குநன்மையறிவன் ” என்றுவிஶ்வஸியாதே. உன்-உன்னுடைய. பொன்-உஜ்ஜ்வலமான. அடி-திருவடிகளிலே. ஒல்லை-சடக்கென. சேர்த்து-சேர்த்து. வேறேபோக - விஷயாந்தரங்களைநினைத்து வேறுபோகும்படி. எஞ்ஞான்றும்-எல்லாக்காலத்திலும். விடல்-விடாதொழியவேணும்.

விதிநிர்மிதமான இந்த அந்வயத்தைப்பாலநம்பண்ணி, விடாதொழியவேணுமென்று கருத்து.......................................................................*

---

## ஈடு - பத்தாம்பாட்டு.

“ யானேயென்றனதேயென்றிருந்தேன் ” என்று நீரநுதபிக்கும்படிபண்ணினோமாகில் உமக்குச்செய்யவேண்டுவதொன்றுண்டோ, நீரிங்ஙனேகிடந்துபடுகிறதெதுக்காகவென்ன; இதுக்காகவென்கிறார்.

(ஏறேலேழும்வென்று) ஏறுகளேழையும்வென்று. நப்பின்னைப்பிராட்டியோட்டை சம்ஶ்லேஷத்துக்கு ப்ரதிபந்தகமான ருஷபங்களேழையும்வென்று. ( ஏர்கொளிலங்கையை ) தர்ஶநீயமாய்க்கட்டுடைத்தானலங்கையை. “ 𑌅𑌹𑍋𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑌹𑍋𑌧𑍈𑌰𑍍𑌯𑌂 ” ( அஹோவீர்யமஹோதைர்யம் ) என்று திருவடிமதிக்கும்படியானலங்கையை. [𑌬𑌹𑍁𑌵𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑍁𑌹𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯] [ பஹுவபுத்திஸ்துஹறீஸ்வரஸ்ய ] ராவணனும் ஸ்த்ரீகளுமாயிருக்கிற இருப்பைக்கண்டவாறே, தானுமொரு சமுதாயத்துக்குக்கடவனாகையாலே இங்ஙனேயிருப்பதொரு புத்திபிறந்தது. [𑌯𑌦𑍀𑌕𑍃𑌶𑍀𑌤𑍍𑌯𑌾𑌦𑌿] [ யதீக்ருஶீத்யாதி ] பையல், தானும் ஸ்த்ரீகளுமாயிருக்கிற இருப்பைப் பெருமாளும்பிராட்டியுமாயிருக்க சம்வதித்தானாகில்,

இந்த ஐஸ்வர்யம் குலையாதிருக்கலாயிற்றுக்கிடீர். [ ஊரயமாராக்ஷஸ ராஜஹாயஹ்ராஷ்டஜாதஸ்வெஸ்திஹிஷாயவையஹ்: ] [ இமாயதாராக்ஷஸ ராஜபார்யாஸ்ஸஜாதமஸ்யேதிஹிஸா துபுத்ரே: ] "சத்ருக்களுக்கும் நன்மைவேணும்" என்றிருக்கும்புக்தியையுடையவனுக்கு. (நீறேசெய்த) பிராட்டியருளிச்செய்தபடியே பஸ்மசேஷமாம்படிபண்ணின. (நெடும்சுடர்ச்சோதி) ராவணனைப்பரிகரத்தோடேகொன்று, கையும்வில்லுமான வீரஸ்ரீயோடேநின்றநிலை. அவ்விரோதிகளைப்போக்கினாற்போலே யென்னுடைய விரோதிகளையும் போக்கவேணுமென்கிறார். (தேறேலென்னை) நப்பின்னைப்பிராட்டியோட்டை சம்ஸ்லேஷத்தில் ப்ரதிபந்தகம்போக்கவமையும், ஸ்ரீஜநகராஜன்திருமகளளவில் அவளைப்பிரித்தராவணனை முடிக்கவமையும், அவர்களை யுனக்காக்கவேண்டா; பண்டேயுனக்காயிருக்கையாலே; அப்படியே "இவன்விரோதிகளைப்போக்கி நமக்காக்கினோமாகில் இனியென்" என்றிருக்கவொண்ணாதே! என்னளவில். தேறேனென்று பாடமானபோது-தெளியேனென்னுதல், தரியேனென்னுதல்.

ஆனாற்செய்யவேண்டுவதென்னென்ன. (உன்பொன்னடிசேர்த்தொல்லை) "நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்றுதொடங்கின அர்த்தத்தைத்தலைக்கட்டுகிறார் (உன்பொன்னடி) கல்லுக்கும் சைதந்யங்கொடுக்க வல்ல அடியன்றோ. சேர்த்து- சேர்த்தருளவேணும். ஒல்லை - நானிசைந்தபோதே சடக்கெனத்திருவடிகளில் திவ்யசோகையோபாதிசேர்த்தருளவேணும்.

அவ்வளவும்போராது. "இவனுக்கெல்லாவுத்கர்ஷமும் பண்ணிக்கொடுத்தோம், ஆகிலினியென்" என்னவொண்ணாது. நீயெல்லாவுயர்த்திகளும் பண்ணித்தந்தாலும் நானெல்லாத்தாழ்வுகளும்பண்ணிக்கொள்வேன், என்னையென்கையில் காட்டித்தாராதொழியவேணும்........*

---

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (ஏறேலித்யாதி) (யானேயித்யாதி) பூர்வவ்ருத்தத்தையநுஸந்தித்தநுதபிக்கும்படி பண்ணின இதுக்குமேற்பட வொருபேறுமக்குச்செய்யத்தக்க தென்னென்றபடி. (நீரிங்ஙனேயிதி) "உன்திருப்பாதமலர்க்கீழ் பேராதேயான் வந்தடையும்படிதாராதாய்" என்றுநீரிங்ஙனே படுகிறதெதுக்காகவென்றபடி. இதுக்காகவென்றது - "உன்பொன்னடிசேர்த்தொல்லை" என்றத்தைப்பற்ற.

"ஏல்" என்றது - பாதபூரணார்த்தமவ்யயம். ஏறுகிலென்றது - வார்த்தைப்பாடாய், ஏறேழையுமென்றபடி.

"ஏர்" என்று - தர்ஸநீயத்துக்கும், கட்டுடைமைக்கும்பேர். இரண்டர்த்தத்தையும் ஸமுச்சித்யாஹ (தர்ஸநீயமாயித்யாதி) கட்டுடைமையாவது - ரக்ஷாவத்வம். ரக்ஷாவத்வந்நாம - ராவணபாலிதத்வம். உக்தார்த்தேப்ரமாணத்வயம் (அ

ஹோவீர்யமித்யாதி) ஸுந்தரகாண்டே ஏகோநபஞ்சாஶே ராவணம்ப்ரதிஹநூமத்விசார:, "𑌅𑌹𑍋 𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑌹𑍋 𑌧𑍈𑌰𑍍𑌯𑌮𑌹𑍋 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌹𑍋 𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌃। 𑌅𑌹𑍋 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌰𑌾𑌜𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌲𑌕𑍍𑌷𑌣𑌯𑍁𑌕𑍍𑌤𑌤𑌾" (அஹோவீர்யமஹோதைர்யமஹோஸத்த்வமஹோத்யுதி: । அஹோராக்ஷஸராஜஸ்யஸர்வலக்ஷணயுக்ததா) தத்ரைவநவமே, "𑌬𑌭𑍂𑌵 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌤𑍁 𑌹𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌯𑌦𑍀𑌦𑍃𑌶𑍀 𑌰𑌾𑌘𑌵𑌧𑌰𑍍𑌮𑌪𑌤𑍍𑌨𑍀। 𑌇𑌮𑌾 𑌯𑌥𑌾 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌰𑌾𑌜𑌭𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌸𑍁𑌜𑌾𑌤𑌮𑌸𑍍𑌯𑍇𑌤𑌿 𑌹𑌿 𑌸𑌾𑌧𑍁𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃" (பபூவபுத்திஸ்து ஹரீஸ்வரஸ்யயதித்ருஶீ ராகவதர்மபத்நீ । இமாயதாராக்ஷஸராஜபார்யாஸ்ஸுஜாதமஸ்யேதிஹிஸாதுபுத்தே:) *ஹரீஸ்வரஸப்த* துஸப்தயோரர்த்தமாஹ (ராவணனுமித்யாதி) துஸப்த: - சார்த்தே. "இமா: - ராக்ஷஸராஜபார்யா: - யதா, ராகவதர்மபத்நீ - ஈத்ருஶீயதி" இத்யந்வய:. "𑌸𑌾𑌧𑍁𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃" (ஸாதுபுத்தே:) என்றதுக்கர்த்தம் (சத்துருக்களுமித்யாதி) "𑌶𑍍𑌮𑌶𑌾𑌨𑌸𑌦𑍃𑌶𑍀 𑌭𑌵𑍇𑌤𑍍" (ஶ்மஶாநஸத்ருஶீபவேத்) என்றத்தைப்பற்ற (பிராட்டியருளிச்செய்தபடியென்றது) நெடும்சுடர்ச்சோதி - மிக்கபுகரையுடைய வடிவையுடையவனே. இத்தால்பலித்தவர்த்தம் (ராவணனையித்யாதி)

பூர்வார்த்தத்துக்குபாவம் (அவ்விரோதிகளையித்யாதி)

தேறேலென்னை-என்னைத்தெளியேல். என்னை "எனக்குநன்மையறிவேன்" என்றுவிஸ்வஸியாதேயென்றபடி. "ஏறேலேழும்" இத்யாதியையும்கூட்டிக்கொண்டு, "என்னை" என்றதுக்குபாவம் (நப்பின்னையித்யாதி) அவர்கள் விரோதியைப்போக்கினாற்போலே யென்னுடைய அஹங்கார மமகாராதிவிரோதிகளையும்போக்கினாய், அவ்வளவாலென்னை விஸ்வஸியாதேயுன் திருவடிகளையும் அடைவிப்பிக்கவேணுமென்றபடி. (இனியென்னென்றிருக்கவொண்ணாதென்னளவில்) ப்ராப்திபர்யந்தமாகப்பண்ணித்தரவேணுமென்றபடி. (தெளியேன்) நீயிவ்வளவும் பண்ணினவித்தாலே விஸ்வஸியேனென்றபடி. தேறேன் - (தரியேன்) என்றபோது, "பயிர்தேறிற்று" என்றால் - "பயிர்தரித்தது" என்றத்தையருளிச்செய்வர்.

பொன்னடியென்றது-பரிசுத்தமானவடியென்றாய், அத்தாலே - (கல்லுக்கும்சைதந்யம் கொடுக்கவல்லவடியன்றோ வென்று) இவ்விடத்திலே - "𑌯𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌬𑍍𑌜𑌪𑌰𑌾𑌗𑌪𑌾𑌳𑌿𑌰𑌕𑌰𑍋𑌤𑍍𑌪𑌾𑌷𑌾𑌣𑌮𑍇𑌣𑍀𑌦𑍃𑌶𑌂" (யத்பாதாப்ஜபராகபாளிரகரோத்பாஷாணமேணீத்ருஶம்) என்றத்தையும், "𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌪𑌾𑌦𑌰𑌜𑌸𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌪𑍇𑌦𑍇" (ராமஸ்யபாதரஜஸாப்ரக்ருதிம்ப்ரபேதே) என்றத்தையும் கண்டுகொள்வது. பாளி: - ஸமூஹ:.

அவ்வளவும்போராது - உன்பொன்னடிசேர்த்தமாத்ரம் போராது. விவரணம். (இவனுக்கித்யாதி) "வேறேபோகவெஞ்ஞான்றும்விடல்" என்றதுக்குபாவம் (நீயெல்லாவித்யாதி) விஷயாந்தரங்களைநினைத்து வேறுபோகாதபடி யெக்காலத்திலும் விடாதொழியவேணுமென்று சப்தார்த்தம். உயர்த்தி-உத்கர்ஷம். தாழ்வுகள் - விஷயாந்தரங்களைவிரும்புகை முதலானவை. என்கையில் காட்டித்தருகையாவது - "உபாயாந்தரங்களை யநுஷ்டித்துவாரும்" என்கை.

ஏறேலேழு மித்யாரப்ய, சோதி - என்னை - தேறேல்; உன்பொன்னடி-ஒல்லை-சேர்த்து, வேறேபோக வெஞ்ஞான்றும் விடலித்யந்வய:,......................*

## பதினொன்றாம்பாட்டு.

விடலில்சக்கரத்தண்ணலைமேவல்
விடலில்வண்குருகூர்ச்சடகோபன்சொற்
கெடலிலாயிரத்துள்ளிவைபத்துங்
கெடலில்வீடுசெய்யுங்கிளர்வார்க்கே.

## ஆறாயிரப்படி.

(விடலில்) இப்படி ஆழ்வாரபேக்ஷிக்க, அபேக்ஷித்தபடியே திருமலையிலே புகுந்தருளி, ஆழ்வாரோடே, திருவாழியாழ்வானோடு சம்ஸ்லேஷித்தாற்போலே ஒருகாலும்பிரியாதபடி சம்ஸ்லேஷித்த எம்பெருமானைச்சொன்ன இத்திருவாய்மொழிவல்லார்ஆழ்வார் பெற்றபேறுபெறுவரென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி மோக்ஷாநந்தப்ரதம் என்றுபலத்தை யருளிச்செய்கிறார்.

விடம் - விடுதல். இல் - இல்லாத. சக்கரத்து - திருவாழியையுடைய. அண்ணலை-ஸ்வாமியை. அப்படியே, மேவல் - மேவி. விடலில் - விடக்ஷமரல்லாத. வண் - மஹோதாரரான. குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார். சொல் - அருளிச்செய்ததாய். இதிலந்வயித்தார்க்கு, கெடல் - அநர்த்தம். இல் - வாராதபடியான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவைபத்தும் - இவைபத்தும். கிளர்வார்க்கு - சாதரமாகச்சொல்லவல்லவர்களுக்கு. இதுதானே, கெடலில் - அவித்யாத்யநர்த்தகந்தரஹிதமான. வீடு - மோக்ஷாநந்தத்தை. செய்யும் - பண்ணிக்கொடுக்கும்.

கிளர்தல் - சொல்லுதல். கிளத்தியாய், உத்யோகமாகவுமாம்.

இது - கலிவிருத்தம்..........................................................*

## ஈடு-பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் இதிற்சொன்னப்ராப்யத்தைப் பெறுவரென்கிறார்.

"'நாம்விடுகிறோம்' என்றதிசங்கைபண்ணுகிறதென், நாமொருவரையும் விடோங்காணும்" என்று கையிற்றிருவாழியைக்காட்டினான். (விடலில்சக்கரத்தண்ணலை) ஒருகாலும் விடாததிருவாழியைக்கையிலேயுடைய சர்வேஸ்வரனைக்கவிபாடிற்று. (மேவல்விடலிலித்யாதி) அவன்ஸ்வபாவத்தாலேகிட்டி அவனைப்பிரியிற்றரியாதபடி பரமோதாரரான ஆழ்வாரருளிச்செய்தார். வண்மையாவது-,இவ்வநுபவத்துக்குப்பாசுரமிட்டுபகரித்த வுபகாரம். (கெடலிலாயிரம்) இவ்வாத்மாவுக்கநர்த்தகந்த

ம்வாராதபடி ஹிதத்தையாராய்ந்தருளிச்செய்ததிறுதான். அவற்றிலிப்ப த்தும்-கிளர்வார்க்கு - கெடலில்வீடுசெய்யும். "வரில்பொகடேன், கெடில்தேடேன்" என்றிருக்கையன்றிக்கே ஶ்ரத்ததாநராயிருப்பார்க்கு, அநர்த்தகந்தரஹிதமாய், அஹங்கார மமகாரங்களை யுடைத்தன்றிக்கே "தனக்கேயாகவேணும்" என்று இவர்ப்ரார்த்தித்தபடியே இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமானபேற்றைப் பண்ணித்தரும்.

முதற்பாட்டில் - காயிகமானபேற்றை யபேக்ஷித்தார்; இரண்டாம்பாட்டில் - மாநஸமானபேற்றையபேக்ஷித்தார்; மூன்றாம்பாட்டில்-வாசிகமானபேற்றையபேக்ஷித்தார்; நாலாம்பாட்டில் - ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யத்தைநிஷ்கர்ஷித்தார்; அஞ்சாம்பாட்டில் - நீராராயிப்பேற்றையபேக்ஷித்தீரொன்ன, நானாராயிடுக, உன்னையநுபவித்து மகிழும்படிபண்ணியருளவேணுமென்றார்; ஆறாம்பாட்டில் - த்ரிவிதகரணங்களாலுமுன்னைப்ரீதிபுரஸ்ஸரமாக அநுபவிக்கும்படிபண்ணியருளவேணுமென்றார்; ஏழாம்பாட்டில் - அப்படிசடக்கெனச் செய்யாமையாலே யின்னாதானார்; எட்டாம்பாட்டில் - ஸ்வரூபாநுரூபமாக நீக்ஷணகாலமென்னோடே யநுபவிக்கப்பெறில், பின்புள்ளகாலமெல்லாம் வேண்டேனென்றார்; ஒன்பதாம்பாட்டில்-உன்னையநுபவிக்க இட்டுப்பிறந்துவைத்து, அதுகிடையாதபடி நானேயநர்த்தத்தைச் சூழ்த்துக்கொண்டேனென்றார்; பத்தாம்பாட்டில் - எனக்கொருநாளும் "ஜ்ஞாநவிசேஷத்தைப் பண்ணித்தந்தோமிறே" என்று என்னையென் கையிற்காட்டித்தாராதொழியவேணுமென்றார்: இதுகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்..................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (விடலிலித்யாதி) "கிளர்வார்க்கு - கெடலில்வீடுசெய்யும்" என்றத்தைப்பற்ற வவதாரிகை. இதிற்சொன்ன ப்ராப்யமாவது - ஸ்வார்த்ததாகந்தரஹிதமானபேறென்றபடி.

"வேறேபோகவெஞ்ஞான்றும்விடல்" என்றவநந்தரம், "விடலில்சக்கரத்தண்ணல்" என்றுப்ரயோகிக்கிறவருடைய ஹார்த்தபாவம் (நாம்விடுகிறோமித்யாதி) அதாவது - திருவாழியை விடிலன்றோ உம்மைவிடலாவதென்றபடி.

அவன்ஸ்வபாவத்தாலே - விடலில் சக்கரத்தண்ணலானவவன் ஸ்வபாவத்தாலே. மேவல் - மேவியென்றாய், கிட்டியென்றபடி. "(பிரியிற்றரியாதபடியென்கையாலே) 'விடலில்' என்றதுக்கு - விட்டாலுளராக மாட்டாதவரென்று தோற்றுகிறது" என்றழகப்பங்கார் நிர்வாஹம். விடலில் - "விடக்ஷமரல்லாத" என்றுரையிலர்த்தம். ஸ்வார்த்ததை யநர்த்தமாகையாலே (அநர்த்தகந்தம் வாராதபடியென்றது)

கிளர்வார்க்கு - ஶ்ரத்ததாநரா யப்யஸிப்பார்க்கு. கிளருகை - ஶ்ரத்ததாநராய்ச்சொல்லுகை. "கிளர்வார்க்கு" என்றதுக்கும், "கெடலில்வீடு" என்றதுக்கும் தாத்பர்யம் (வரிற்பொகடேனித்யாதி) கிளர்தல் - சொல்லுதலும், உத்யோகித்தலும்.

ஆராயிடுக - ஆரானுலுமாயிடுக. இட்டுப்பிறந்துவைத்து - யோக்யனாயிருந்துவைத்து.

க்ரமேணாந்வய:.......................................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(எம்மாவீட்டுத்திறமும்)

ஶ்ரத்தேயஸ்வாங்க்ரியோகம் ஶுபமதிகரதம் ஸ்தோத்ரஸாமர்த்யஹேதும்
ஸ்வார்த்தீகாரோபகாரம் ஸ்ம்ருதிரஸஶமிதாந்யாதரம் ப்ரீதிவஶ்யம் |
ப்ராப்தௌகாலாக்ஷமத்வப்ரதமம்ருதரஸத்யாநமாத்மார்ப்பணார்ஹம்
வைமுக்யத்வாரயந்தம் வ்ருதவபுரவநம் வக்தி வாணீஜகாத. (உக)

(ஶ்ரத்தேயஸ்வாங்க்ரியோகம்) நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து - ப்ரார்த்தநீயமான தன்திருவடிகள் ஸம்பந்தத்தை யுடையனுமாய்; (சுபமதிகரதம்) நின்கழல் யானெய்தஞானக்கைதா - தன்திருவடிகளை ப்ராபிக்கும்படிக்கீடான ஜ்ஞாநமாகிற கையைக்கொடுக்கு மவனுமாய்; (ஸ்தோத்ரஸாமர்த்யஹேதும்) நின்கழலெய்யாதேத்தவருள்செய் - தன்திருவடிகளையே ஸர்வகாலத்திலுமேத்துகைக்கு ஸாமர்த்த்யத்தையுண்டாக்கு மவனுமாய்; (ஸ்வார்த்தீகாரோபகாரம்) தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே - ஸ்வார்த்தமாகவே யுபகரிக்குமவனுமாய்; (ஸ்ம்ருதிரஸசமிதாந்யாதரம்) மறப்பொன்றின்றியென்றும் - ஸ்வவிஷயஸ்ம்ருதியாலே யந்யவிஷயாதரத்தை சமிப்பிக்குமவனுமாய்; (ப்ரீதிவஶ்யம்) ஏன்றுமகிழ்வுற்றுன்னை வணங்க-ஸ்வவிஷயத்திலே ப்ரீதியையுடையபேர்களுக்கு வஶம்வதனுமாய்; (ப்ராப்தௌகாலாக்ஷமத்வப்ரதம்) வாராயுன்திருப்பாதமலர்க்கீழ் போராதேயான் வந்தடையும்படி - ஸ்வப்ராப்தியிலே காலக்ஷேபக்ஷமனாகாதபடி பண்ணுமவனுமாய்; (அம்ருதரஸத்யாநம்) வேதவிமலர் விழுங்குமென்னக்காரக்கனியே - அம்ருதம்போலே யத்யந்தம்போக்யமாக ப்ரகாசிக்குமவனுமாய்; (ஆத்மார்ப்பணார்ஹம்) யானேநீ யென்னுடைமையும் நீயேவானேயேத்தும் - "நானுமென்னுடைமையுமுன்னது" என்று சூரிகளாலு மேத்தப்படுகையாலே யாத்மாத்மீய ஸமர்ப்பணயோக்யனுமாய்; (வைமுக்யத்வாரயந்தம்) என்னையுன் பொன்னடிசேர்த்தொல்லைவேறேபோக வெஞ்ஞான்றும்விடலே - ஆஶ்ரிதரைத்தன் திருவடிகளில்நின்றும் விமுகராய்ப்போகாதபடி பண்ணுமவனுமாயிருக்கிற வெம்பெருமானை, "எம்மாவீடு" என்கிறதசகத்திலே கைங்கர்யோத்தேஶ்ய பூதனாக ஆழ்வாரருளிச்செய்தா ரென்கிறார்..... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... (உக)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

எம்மாவீடும்வேண்டாவென்றன்க்குன்றாளிணையே
அம்மாவமையுமெனவாய்ந்துரைத்த - நம்முடைய
வாழ்முதலாமாறன்மலர்த்தாளிணைசூடிக்
கீழ்மையற்றுநெஞ்சேகிளர். (க௯)

(எம்மாவீடும்) இதில் - ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; பிறர்க்கு "அவன்மோக்ஷப்ரதன்" என்னுமத்தை யுபதேசிக்கிறவளவில், முதல், நடுவு, இறுதி, இவர்மோக்ஷத்தை ஶ்லாகித்துக்கொண்டு பேசுகையாலே, "இவர்க்குமோக்ஷத்திலே யபேக்ஷையாயிருந்தது" என்றீஶ்வரனத்தைக் கொடுக்கப்புக, தமக்குகப்பாகத் தரும்மோக்ஷமு மஹங்காரகர்ப்பமாகையாலே "அபுருஷார்த்தம்" என்றுஅத்தைக்கழித்து; "பரமபதஸ்த்தனாய் ஸுகிக்கவுமாம், ஸம்ஸாரஸ்த்தனாய் துஃகிக்கவுமாம், எனக்கதிலொரு நிர்ப்பந்தமில்லை,தேவர்க்குகப்பாமதுவே யெனக்குவடிவாம்படி பண்ணியருளவேணும்" என்றுஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிற * எம்மாவீட்டிலர்த்தத்தை "எம்மாவீடும்வேண்டா" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(எம்மாவீடும்வேண்டா வென்றனக்குன்றாளிணையே யம்மாவமையுமென வாய்ந்துரைத்த) எவ்வகையாலும் விலக்ஷணமான மோக்ஷமும்வேண்டா, சேஷபூதனானவெனக்கு "யாவந்நசரணௌ - ஶிரஸாதாரயிஷ்யாமி" என்னும்படி சேஷியானதேவருடைய அங்க்ரியுகளமே யமையுமென்று உபயாநுகுணமாக முக்தியையாராய்ந்து தலைசேரநிஷ்கர்ஷித் தருளிச்செய்த. வாய்ந்தென்று-இவ்வர்த்தத்திலே பொருந்தியென்றுமாம். இது-* எம்மாவீட்டை யடியேதொடங்கி அடியொத்தினபடி; "நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்றுதொடங்கி, "உன்பொன்னடிசேர்த்து" என்றிறேதலைக்கட்டுத்தானிருப்பது. "தாளிணையே" என்கையாலே - "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்றதுஸூசிதம்; திருமுடியைத்திருவடிகளுக்குப் பாதபீடமாக்குகிற தத்யந்தபாரதந்த்ர்யமிறே. (நம்முடைய வாழ்முதலாமாறன்) நம்முடையஸ்வரூபாநுருபமான ஸம்பத்துக்கடியாமாழ்வார். ஆழ்வாருடையவாழ்வுக்கடி "தனியேன்வாழ்முதலே" என்கிறவீஶ்வரனாயிருக்கும், இவருடையவாழ்வுக்கடி ஆழ்வாராயிருக்கும். (மலர்த்தாளிணைசூடி) "கோலமாமென்சென்னிக்குன் கமலமன்னகுரைகழலே" "பாதபற்புத்தலைசேர்த்து" என்கிறபடியே செவ்விப்பூச்சூடுவாரைப்போலே பூப்போன்றஅடியிணையைச்சூடி. (கீழ்மையற்றுநெஞ்சேகிளர்) ததிதரஸேவையாகிற தாழ்ச்சியற்று ஆழ்வார்ஸேவையாலே ஸத்தைபெற்று மநஸ்ஸேமயங்காமல் மேன்மேலனக்கிளர்ந்துபோரு............................................................................(௧௧)

இரண்டாம்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக-திருவாய்மொழி-௧௯—பாட்டு-௨௧௧.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### கிளரொளி - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(கிளரொளி) இப்படி தம்மோடுகலந்தருளின எம்பெருமான் நின்றருளின திருமலையை யநுபவிக்கிறார்... ... ... ... ... ... *

### பன்னீராயிரப்படி.

*பத்தாந்திருவாய்மொழியில், கீழ்-புருஷார்த்ததயா நிர்ணீதமான அத்யந்த பாரதந்த்ர்யயுக்தமாயிருந்துள்ள கைங்கர்யத்தை யிவரபேக்ஷித்தபடியே, காலவிளம்பம்பிறவாதபடி யிங்கேகொடுத்தருளுகைக்காகத் தெற்குத்திருமலையிலே யெழுந்தருளிநிற்கிறபடியை ப்ரகாசிப்பிக்கக்கண்டத்யந்த ஹ்ருஷ்டராய்; அழகருடைய ஔஜ்ஜ்வல்யத்தையும், ஆபிரூப்யத்தையும், ஔதார்யத்தையும், ரக்ஷகத்வத்தையும், ரக்ஷணோபகரணவத்தையையும், ஆஶ்ரிதவ்யாமோஹத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆஶ்ரிதாநுகூலதயையும், விரோதிநிரஸநசீலதையையும், ஜ்ஞாநப்ரதத்வத்தையுமநுஸந்தித்து, " ஏவம்விதனான ப்ராப்யபூதன்றானும் விரும்பும்படியான திருமலையே பரமப்ராப்யம் " என்று நிஷ்கர்ஷித்து, முதலிட்டைந்துபாட்டாலே-திருவுள்ளத்தையும், மேலிட்டைந்துபாட்டாலே - லௌகிகரையுங்குறித்து அவன் போக்யதையை யுபதேசித்தமுடித்தருளுகிறார்.................................*

### ஈடு.

" கீழ் * எம்மாவீட்டிலே நிஷ்கர்ஷித்தப்ராப்யம் பெறுகைக்குத் திருமலையை யாஶ்ரயிக்கிறார் " என்று ஆளவந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி. எம்பெருமானார், " அங்ஙனல்ல, இவர்பாட்டுத்தோறும் 'ஒல்லை' 'ஒல்லை' என்றும், 'காலக்கழிவுசெய்யேல்' என்றும்-த்வரிக்கப்புக்கவாறே, 'நமக்குமறிவித்து நாமுமிவர்காரியஞ்செய்யக்கடவதாக வறுதியிட்டால், 'சரீரசமநந்தரம்பேறுதப்பாது' என்றறுதியிட்டிருக்கலாயிருக்க, இவரிப்படித்வரிக்கிறது இச்சரீரத்தோடேநாமடிமைகொள்ளவேணுமென்றுபோலேயிருந்தது; இனியிவர்க்கு நாம்நினைத்தபடி பரிமாறுகைக்கேகாந்தமானதேசமேதோ, என்று * ஞாலத்து

டேநடந்துழக்கிப்பார்த்து வரச்செய்தே 'இவ்விடம்சாலஏகாந்தஸ்த்தலமாயிருந்தது, என்று திருமலையிலே ஸந்நிதிபண்ணியருளி, 'நாமுமக்குமுகந்தருகைக்காகவந்துநின்றோம், நீரிங்கேவந்துநினைத்தவகைகளெல்லாம்பரிமாறி யநுபவியும், என்று தெற்குத்திருமலையிலே நிற்கிறநிலையைக்காட்டிக்கொடுக்க, இவருமதத்தையநுசந்தித்து; பகவான் ப்ராப்யனானால் அவன்வர்த்திக்கும்தேசமும் ப்ராப்பமாகக்கடவதிறே; அத்தாலே, திருமலையோடு, அத்தோடு சேர்ந்த அயன்மலையோடு, புறமலையோடு, திருப்பதியோடு, போம்வழியோடு, 'போகக்கடவோம்' என்றுதுணியும் துணிவோடுவாசியற ப்ராப்யாந்தர்க்கதமாயநுபவித்து இனியராகிறார்''என்று*

---

## ஜீயர் அரும்பதம்.

கிளரொளிப்ரவேஸோ, ''சார்வதுசதிர்'' ''அடைவதுதிறம்'' இத்யாதியைப்பற்ற ப்ராபகபரமாக ஆளவந்தார் நிர்வாஹம்.

'' எழுவதுபயன் '' இத்யாதியைப்பற்ற ப்ராப்யபரமாக எம்பெருமானார் நிர்வாஹம். நமக்குமறிவித்தென்றது - ''தனக்கேயாக'' இத்யாதியைப்பற்ற. ''விடலில்சக்கரத்தண்ணலே'' என்றத்தைப்பற்ற (நாமுமிவர்கார்யம் செய்யக்கடவதாக வறுதியிட்டாலென்றது) சாலஏகாந்தஸ்த்தலமென்றவிடத்திலே - ''ஆயிரமாறுகளும்'' இத்யாத்யநுஸந்தேயம்.

பாட்டுக்களின் ப்ரமேயம் (பகவானித்யாதி) அயன்மலை-அசல்மலை, அதாவது-தத்ஸம்பந்தமே நிரூபகமாகச்சேர்ந்திருக்கிற மலையென்றபடி. புறமலை - தத்ஸமீபஸ்த்திதமானமலை. இனியராகிறாரென்றதுக்கு - இனியராய் பரோபதேசம்பண்ணுகிறாரென்று கூட்டிக்கொள்வது... ... ... ... ... ... ... ... ... *

---

### பத்தாந்திருவாய்மொழி

## முதற்பாட்டு.

கிளரொளியிளமைகெடுவதன்முன்னம்
வளரொளிமாயோன்மருவியகோயில்
வளரிளம்பொழில்சூழ்மாலிருஞ்சோலை
தளர்விலராகிற்சார்வதுசதிரே.

## ஆறாயிரப்படி.

யாதொன்றிலே நின்றருளுகையாலே அங்குத்தைச்சோலைபோல எம்பெருமானுடைய திருவுடம்பு அதிசீதளமாய் அதிவர்த்திஷ்ணுவான ஔஜ்ஜ்வல்ய யௌவநாதிகல்யாணகுணங்களையுடைத்தாயிற்று, அங்ஙனேயிருந்த திருமாலிருஞ்சோலையை, உங்களுக்குக்கரணபாடவமுள்ளபோதே உங்களுடைய க்லேசமெல்லாம் தீரும்படிசென்று புஜியுங்கள்; இது பரமப்ராப்யமென்கிறார்... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நிரதிசயௌஜ்ஜ்வல்ய விசிஷ்டனான சர்வேஶ்வரன் விரும்பின திருமலையே ப்ராப்யமென்கிறார்.

கிளர்-கிளர்ந்துவருகிற. ஒளி-ஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத்து யோக்யதையுண்டான. இளமை-யௌவநாரம்பரூபமானவிளமை. கெடுவதன்முன்னம்-விஷயாந்தரகதமாய்க்கெடுவதற்குமுன்னே. வளர்-ஆஶ்ரிதார்த்தமாக விங்கேயெழுந்தருளினபின்பு வளர்ந்துவருகிற. ஒளி-ஶீலஸௌலப்யாதிகுணௌஜ்ஜ்வல்யத்தையுடைய. மாயோன்-ஆஶ்சர்யரூபமானசர்வேஶ்வரன். மருவிய-பொருந்திவர்த்திக்கிற. கோயில்-திவ்யஸ்த்தாநமாய். வளர்-வளராநிற்கச்செய்தே. இளம் - இளமையையுடைத்தான. பொழில்-பொழில்களாலே. சூழ்-சூழப்பட்டு. மாலிருஞ்சோலை-அத்தாலே "மாலிருஞ்சோலை" என்றுதிருநாமமானதிருமலையை. தளர்வு-ப்ரயோஜநாந்தரசம்பந்தமாகிறதளர்த்தி. இலராகி-அற்று. சார்வதே - ப்ராபிக்குமதுவே. சதிர்-சதிர்.

"இதொழிய ப்ரயோஜநாந்தரமுண்டு" என்றிருக்கை - இளமையென்றுகருத்து. சேதநர் * பால்யத்திலே விவேகாத்மாக்களாய்க்கொண்டநந்ய ப்ரயோஜநராய்ப்பற்று மிது சதிரேயென்று தந்திருவுள்ளத்தைக்குறித் துரைத்தாராயிருக்கிறது... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

## ஈடு-முதற்பாட்டு.

திருமலையை ப்ராபிக்கையே இவ்வாத்மாவுக்கு நிரதிசயபுருஷார்த்தமென்கிறார்.

(கிளரொளியிளமையித்யாதி) "திருமலையையாஶ்ரயியுங்கோள்" என்றார்; "செய்கிறோம்" என்றாறியிருந்தார்கள்; கெடுவீர்காள் எத்தை விஶ்வஸித்துத்தான் நீங்களாறியிருக்கிறது; * வயோஸ்யாஹ்யதிவர்த்ததேயன்றோ, *வாள்களாகிநாள்கள்செல்லவன்றோ நீங்களாறியிருக்கிறது-கழிந்தபருவத்தையுங்களாலேதான் மீட்கப்போமோ. (கிளரொளியிளமையென்றது) மாநஸஶ்ரத்தையாய், பிறந்த இஶ்ஶ்ரத்தையிதில் நின்றும்மாறி விஷயாந்தரத்திலே பிறப்பதற்குமுன்னே. ஒருவனுக்கொருவிஷயத்திலே ஒருகால் ஶ்ரத்தைபிறக்கும், அவன்றனக்கே யவ்விஷயத்திலே அஶ்ரத்தைபிறக்கக்கடவதாயிருக்கும்; ஆக, பிறந்தருசிமாறுவதற்குமுன்னே என்னுதல். அங்ஙனன்றிக்கே, "𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂" (ப்ராப்யம்) என்னும் ப்ரதிபத்திபிறந்தாலும், "கரணபாடவமில்லையே" என்றுகைவாங்கவேண்டாதபடி, கரணபாடவமுள்ளபோதே யென்னுதல்; "𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌕𑍍𑌰𑍀𑌡𑌨𑌕𑌾𑌸𑌕𑍍𑌤𑌾𑌃" (பால்யேக்ரீடநகாஸக்தா:) என்று, "𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌤𑍍𑌮𑌾 𑌯𑌤𑍇𑌤" (தஸ்மாத்பால்யேவிவேகாத்மாயதேத) என்றுநின்றதிறே. (வளரொளி) ஸ்வத:வ்ருத்திக்ஷயாதிகளில்லாதவனுக்குவிகாரத்தைப்பிறப்பிக்கவற்றாயிற்று தேஶஸ்வபாவம். நாட்செல்ல நாட்செல்லவளராநின்றுள்ள புகரையுடையனாய், ஆஶ்சர்யசக்தியுக்தனான சர்வே

ஶ்வரன், அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரசாதியாதே நித்யவாசம்ப ண்ணுகிறதேசம். (வளரிளம்பொழில்சூழ்மாலிருஞ்சோலை) அடிமைசெ ய்கிறவர்கள் * கிளரொளியிளமையையுடையவர்கள், அடிமைகொள்ளுகி றவன் * வளரொளிமாயோன், அடிமைசெய்கிறதேசம் வளரிளம்பொழி ல்சூழ் மாலிருஞ்சோலை; ஆக, இப்படி யடிமைசெய்யுமவனும், அடிமை கொள்ளுமவனும், அடிமைசெய்யும்தேசமுமொத்த பருவமாயாயிற்றிரு ப்பது. வளரவளர இளகிப்பதித்துச்செல்லாநிற்குமாயிற்று சோலை. ( த ளர்விலராகில் ) " யந்முஹூர்த்தம்க்ஷணம்வாபி " (யந்முஹூர்த்தம்க்ஷண ம்வாபி) இத்யாதி. சர்வப்ரகாரத்தாலும் வருமநர்த்தமாகிறது - திருமலை யைக்கிட்டாமை யென்றிருக்கிறார். "திருமலைப்ராப்யம்" என்னும்புத்திபி றந்து லபிக்கைக்கு விரோதியாய்வரு மநர்த்தயாகிகளன்றியே ஒழியவேு ண்டில். (சார்வதுசதிரே) திருமலையைக்கிட்டுமிதுவே இவ்வாத்மாவுக்கு ச்சதிர்; அல்லாதவையெல்லாமிளிம்பு. " கண்ணுக்கிலக்கானவிஷயங்க ளைவிட்டுவேறே சிலவற்றைப்பெறுகைக்கு யத்நியாநின்றிகோளீ" என்று நீங்கள் நினைத்திருக்குமதுவேயிளிம்பு; இதுவேசதிர்... ... ... ....*

---

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (கிளரொளியித்யாதி) " சார்வதுசதிர் " என்றத்தைப்பற்ற அவதாரிகை (திருமலையையித்யாத்)

ஆளவந்தார்நிர்வாஹத்திலே " முன்னம் " என்றதுக்கவதாரிகாதநமுகேந "இளமை" என்று-பருவமாகவர்த்தமருளிச்செய்கிறார் ( திருமலையையாஶ்ரயியுங் கோளித்யாதி ) " இளமைகெடுவதன்முன்னம் " என்னும்போது- அவர்களாறியிரு ந்தார்களென்னுமது ஸித்தமாகையாலே யத்தைக்காட்டுகிறார் (ஆறியிருந்தார்களெ ன்று) இளமை-பால்யம். இதுகெடுக்குமென்றதுக்கு ப்ரமாணத்வயம் ( வயோஸ் யாஇத்யாதி) யுத்தகாண்டேபஞ்சமே, " நமெஐஃஃவம்ப்ரியாஜஃமொ நமெஐ ஃஃவம்ஹ்ருதெதிவா । ஊதமெஐவாநஃமொஸாவாஙிவயொஸ்ஹ்ராஹ்ஜிவ தஃமெத " ( நமேதுஃகம்ப்ரியாதூரேநமேதுஃகம்ஹ்ருதேதிவா । ஏததேவாநுசோ சாமிவயோஸ்யாஹ்யதிவர்த்ததே ) ( வாள்களாகியித்யாதி ) திருச்சந்தவிருத்தம். வ்யர்த்தமாகநாள்கள்செல்லவென்னுதல், ஆயுஸ்ஸைச்சேதிக்கிறவாள்களாகியென் னுதல். வாள் - ஆயுதம். ப்ரமாணத்வயத்துக்கும் பாவம் ( கழிந்தபருவத்தைமித் யாதி ) இதஞ்சப்ரமாணத்வயம் - கரணபாடவதசாகமாத் பூர்வமித்யஸ்மிந்நர்த்த இதித்ரஷ்டவ்யம். " ஒளிகொள்விளக்கு " " ஞானச்சுடர்விளக்கு " என்கிறபடி யே, " ஒளி " என்று-ஜ்ஞாநமாய், ததவஸ்த்தாவிசேஷமான விச்சையைச்சொல் லி, " இளமை " என்றது - ததுபக்ரமாவஸ்த்தையான ஸங்கத்தைச்சொல்லி, அது தானிச்சாரூபஜ்ஞாந ப்ரஸ்ருதித்வாரமான மநோஜந்யமாகையாலே மாநஸஶ்ரத் தையென்கிறார் (கிளரொளியிளமையென்றதித்யாதி) பிறந்தஶ்ரத்தை-மநஸ்ஸூத ளமாகப்பிறந்த விஶ்ஶ்ரத்தை. இதினின்றும் - பகவத்விஷயத்தில் நின்றும். அப்படி ஶ்ரத்தைபிறந்தால் திரும்பிப்போமோவென்ன ( ஒருவனுக்கித்யாதி ) யத்வா, மா நஸஶ்ரத்தையென்றவர்த்தத்திலே யெம்பெருமானார் நிர்வாஹத்துக்குச்சேரபா

வம் ( ஒருவனுக்கித்யாதி ) எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச்சேர பருவமென்ற பக்ஷத்திலு மர்த்தாந்தரம் ( அந்தனன்றிக்கேயித்யாதி ) கிளராநின்றவொளியையுடைய விளமையென்றபடி. ஆஶ்ரயணாநுபவயோராநுரூபகரணபாடவாபகமாத் பூர்வமித்யாவத். "கிளர்ந்துவருகிற ஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத்துக்கு யோக்யதையுண்டான யௌவநாரம்பரூபமான விளமைவிஷயாந்தரகதமாய்க் கெடுவதற்குமுன்னே" என்றுரையிலர்த்தம். "இளமைகெடுவதற்குமுன்னம்" என்றிறேசொல்லிற்று, பால்யத்திலே மோக்ஷார்த்தப்ரவ்ருத்தியுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (பால்யேக்ரீடநகாஸக்தா இத்யாதி) ப்ரதமேம்ஸே ஸப்ததஶேபாலாந்ப்ரதிப்ரஹ்லாதஃ, "𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌕𑍍𑌰𑍀𑌡𑌨𑌕𑌾𑌸𑌕𑍍𑌤𑌾 𑌯𑍌𑌵𑌨𑍇 𑌵𑌿𑌷𑌯𑍋𑌨𑍍𑌮𑍁𑌖𑌾𑌃 । 𑌅𑌜𑍍𑌞𑌾 𑌨𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌵𑌾𑌰𑍍𑌧𑌕𑌂 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌤𑍍𑌮𑌾 𑌯𑌤𑍇𑌤 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍇 𑌸𑌦𑌾" (பால்யேக்ரீடநகாஸக்தாயௌவநேவிஷயோந்முகாஃ । அஜ்ஞாநயந்த்யஶக்தாஶ்சவார்த்தகம்ஸமுபஸ்த்திதம் । தஸ்மாத்பால்யேவிவேகாத்மாயதேதஶ்ரேயஸேஸதா ) அதாவது - "𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌬𑌾𑌲𑍍𑌯𑍇" ( தஸ்மாத்பால்யே ) என்கிறவிடத்திலே - க்ரீடாஹேதுவானசைசவமுமன்றிக்கே, விஷயப்ராவண்யஹேதுவான யௌவநமுமன்றிக்கே, ஆஶ்ரயணோபயுக்தமான பால்யயௌவநஸந்திவிவக்ஷிதமானாற்போலே, "கிளரொளியிளமை" என்றவிடத்திலும்-பால்யயௌவநஸந்தியைச்சொல்லுகிறதென்றுகருத்து.

"வளரொளி" இத்யாரப்ய, "கோயில்" என்னுமளவுக்கும் சப்தார்த்தம் (நாட்செல்லவித்யாதி) ஸ்வதோவ்ருத்திக்ஷயேத்யாதிவாக்யம்-தாத்பர்யார்த்தம். வர்த்தமாநார்த்தம் (நாட்செல்லநாட்செல்லவிதி) ( தீர்த்தம்ப்ரஸாதியாதே ) தீர்த்தத்துக்கநந்தரம் திருநாள்படிஸமாப்தியாமாபோலே யாகாதே.

பதச்சேர்த்தியாலே பரமபதஸாம்யமருளிச்செய்கிறார் (அடிமைசெய்கிறவர்களித்யாதி ) "வளர்" என்றுவைத்து, "இளமை" என்றதுக்கர்த்தம் (வளரவளரவித்யாதி) இளகிப்பதித்துச்செல்லாநிற்கும்-பால்யமேவ்ருத்தியடையாநிற்கும்.

"தளர்விரலராகிற்சார்வதுசதிர்" என்கையாலே - சாராதபோது தளர்வுண்டென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ப்ரமாணம் (யந்முஹூர்த்தமித்யாதி) "𑌯𑌨𑍍𑌮𑍁𑌹𑍂𑌰𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑌣𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋 𑌨 𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍇 । 𑌸𑌾 𑌹𑌾𑌨𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑌹𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌰𑌂 𑌸𑌾 𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑌾 𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌾" ( யந்முஹூர்த்தம்க்ஷணம்வாபிவாஸுதேவோநசிந்த்யதே । ஸாஹாநிஸ்தந்மஹச்சித்ரம்ஸாப்ராந்திஸ்ஸாசவிக்ரியா) இத்தால்-திருமலையைக்கிட்டாமையே தளர்வென்றபடி. ஆளவந்தார், எம்பெருமானார், இருவருடைய நிர்வாஹாநுகுணமாக க்ரமேணார்த்தத்வயம் ( ஸர்வப்ரகாரத்தாலு மித்யாதிவாக்யத்வயேந ) தளர்விலராகில் - தளர்வில்லாதவர்களாகவேண்டில். து:கபாகிகளன்றிக்கே யொழியவேண்டிலென்று முந்தினவர்த்தம்; தளர்வு - துஃகம். அநர்த்தபாகிகளன்றிக்கே யொழியவேண்டிலென்று த்விதீயார்த்தம். இந்தபக்ஷத்திலே, "தளர்வு" என்று - துஃகஹேதுவான பாபத்தைச்சொல்லுகிறது. திருமலையைச்சாராமை யாகிறதுஃகபாகிகளன்றிக்கே யொழியவேண்டிலென்று முந்தினபக்ஷத்திலே சப்தார்த்தம்; திருமலையைக்கிட்டுகைக்கு விரோதியானபாபபாகிகளன்றிக்கே யொழியவேண்டிலென்று த்விதீயபக்ஷத்திலே சப்தார்த்தம். சதிர்-சாதுர்யம். "சார்வதே-சதிர்" என்றந்வயித்து, அவதாரணத்துக்கர்த்தம் ( அல்லாதவையித்யாதி ) இளிம்பு-தைந்யம். விவரணம் (கண்ணுக்கித்யாதி) இப்பாட்டில்ப்

நாயகபரமாயும் ப்ராப்யபரமாயுமிருந்துள்ள வாக்யங்களை யுபயசிர்வாஹாநுகுணமாகக்கண்டுகொள்வது. கோயிலான - மாலிருஞ்சோலையென்று, "கோயில்" என்றது-மாலிருஞ்சோலைக்குவிசேஷணம். சோலை-சோலையை.

க்ரமேணாந்வய:... ... ... ... ... ... ... ... ... ... ... *

# இரண்டாம்பாட்டு.

சதிரிளமடவார்தாழ்ச்சியைமதியா
ததிர்குரல்சங்கத்தழகர்தங்கோயில்
மதிதவழ்குடுமிமாலிருஞ்சோலைப்
பதியதுவேத்தியெழுவதுபயனே.

## ஆறாயிரப்படி.

(சதிரிளமடவார்) ப்ராக்ருதவிஷயங்களில் ப்ராவண்யத்தை விட்டு, ப்ரதிகூல ஹ்ருதயபேதகமான திவ்யத்வநியை யுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யேந்துகையாலே நிரவதிகமான அழகையுடையனாய், அத்தாலே "அழகர்" என்னுந்திருநாமத்தையுடையனான எம்பெருமானுக்குக்கோயிலாய்; பரிபூர்ண சந்த்ரமண்டலத்தாலேயலங்க்ருதமான சிகரங்களையுடைத்தான திருமாலிருஞ்சோலைப் பதியையேத்தியெழுங்கள்; அதுவேபரமப்ரயோஜநமென்கிறார்................ .................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அழகருடைய திருமலையோடு சேர்ந்ததிருப்பதியை யேத்துமதேப்ரயோஜநமென்கிறார்.

சதிர் - அர்த்தாநுரூபமாகவும் ஸ்வதோஷத்துக்கிடாகவுமொதுக்கி யுடம்புகொடுக்குஞ் சதிரையுடையராய். இளம் - இளமையாலேமதிமயக்கி, செல்லாமைதோன்றவிருக்கும். மடவார் - ஸ்த்ரீகளுடைய. தாழ்ச்சியை - தாழ்ச்சிதோற்றவிருக்குமுக்திசேஷ்டிதாதிகளை. மதியாது - ப்ரீதிபண்ணாதே. அதிர்குரல் - ஸம்ஶ்லேஷஜநிதப்ரீதியாலேமுழங்குகிற. சங்கத்து - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையராகையாலே நிரதிசயஸௌந்தர்யத்தையுடைய. அழகர் - அழகருக்கு. தங்கோயில் - அஸாதாரணஸ்த்தாநமாய். மதி - சந்த்ரனானவன். தவழ் - தவழும்படியோங்கின. குடுமி - சிகரசிகைகளையுடைத்தான. மாலிருஞ்சோலை - திருமலையில். பதி - திருப்பதியாகிற. அது - ப்ரஸித்தஸ்த்தலத்தை. ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி. எழுவதே- உச்ச்ரிதராகையே. பயன் - ப்ரயோஜநம்.

இதுவும் - நெஞ்சுநோக்கியுரைத்தல்..........................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

திருமலையோடுசேர்ந்த ஸ்ரீபதியைக்கிட்டுகையே பரமப்ரயோஜந மென்கிறார். அன்றிக்கே, திருமலைதன்னையே சொல்லுகிறதாதல். அன்றிக்கே, திருப்பதியையாதல்.

( சதிரிளமடவார்தாழ்ச்சியைமதியாது ) சதிரிளமடவார் விஷயமாகநீங்கள் பண்ணும்தாழ்ச்சியை ஒன்றாகபுத்திபண்ணாதே யென்னுதல். சதிரிளமடவார் தாங்கள்பண்ணும் தாழ்ச்சியைமதியாதே யென்னுதல். மதித்தால் ப்ரயோஜநமில்லாமையேயன்று, மேல்நரகம், இங்குசிஷ்டகர்ஹை; "ஹதூநாழ" (பக்தாநாம்) என்று பரார்த்தமாய், நிரதிசய போக்யமாயிருக்கும் விஷயமன்றே. சதிரையுடையராயிருப்பர்கள் - பிறரையகப்படுத்திக் கொள்ளுகைக்கீடானவிரகை யுடையராயிருப்பர்கள். செத்துக்காட்டவுங் கூடவல்லராயிருக்கை. சதிரையும் பருவத்தினிளமையையும் காட்டியாயிற்றகப்படுத்துவது. கீழே "இளரொளியிளமை" என்றதே, அப்பருவங்கண்டவிடத்தே யிழுத்துக்கொள்ளும் முதலைகளாயிற்றுவிஷயங்கள். ( அதிர்குரலித்யாதி ) திருக்கையின் ஸ்பர்ஶத்தாலே யெப்போது மொக்கமுழங்காநின்றுள்ள ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத்திருக்கையிலேயுடையராய் அச்சேர்த்தியழகாலே அதுதன்னையேதமக்குத்திருநாமமாகவுடையவர், "ஆஶ்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கானநிலம்" என்றுதிருவுள்ளத்தாலேவிரும்பி, "என்னது" என்றாதரித்து வர்த்திக்கிறகோயில். ( மதிதவழ்குடுமி ) சூற்பெண்டுகள் சூரமேறுமாபோலே, சந்த்ரன் தவழ்ந்தேறாநின்றுள்ள சிகரத்தையுடைய திருமலை. மாலிருஞ்சோலையாகிற - பதியென்னுதல், மாலிருஞ்சோலையில் - பதியென்று - திருப்பதியைச்சொல்லுதல். ( பதியதுவேத்தியெழுவதுபயனே ) ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிசேஷத்தைப்பண்ணி யுஜ்ஜீவிக்குமிதுவே இவ்வாத்மாவுக்கு ப்ரயோஜநம்; அல்லாதவைநிஷ்ப்ரயோஜநம். ப்ரயோஜநமென்றது-ப்ராப்யமென்றபடி............................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( சதிரித்யாதி ) "மாலிரும்சோலைசேர்ந்தபதி" என்றுவிவக்ஷித்து - முந்தினவவதாரிகை. ஸ்ரீபதியை - திருப்பதியை. "மாலிரும்சோலையாகிற-பதி" என்று (திருமலைதன்னையேசொல்லுகிறதாதல்) ( திருப்பதியையாதல் ) என்று சிலஸ்ரீகோசங்களிலிருந்ததாகில் - முந்தினவர்த்தவிவரணமென்றுகண்டுகொள்வது.

"சதிரிளம்" இத்யாதியினர்த்தத்வயத்துக்கும், "பணிமின்திருவருள்" "பாண்டேன்வண்டறையும்" இத்யாதியைநினைப்பது. தாழ்ச்சி - இழிதொழில். மதியாதே-எண்ணாதே. மேல்நரகமென்றவிடத்திலே - "ஒ—ஹ—ஹாநாஹ—வோ ஹுாஜ ஒ—ஹுாநாஜெகூ—தாதூநாம்‖ க0நகவஷ—ஜெகொழீஷ—ஜ—ஃவெஜஂகூஜா

யதே" (முஹூர்த்தார்த்தஸுகாஸ்வாதலுப்தாநாமக்ருதாத்மநாம் । அநேகவர்ஷகோடிஷு துக்கதம்கர்மஜாயதே) "ஸம்பாஸலம்பஹுளதுக்கமநர்த்தஹேது:" (சம்பாசலம்பஹுளது:கமநர்த்தஹேது:) இத்யாத்யநுஸந்தேயம். நரகாவஹத்யாதி மாத்ரமன்றிக்கே அர்க்கடத்வாதிகமப்யாஹ (பக்தாநாமித்யாதி) ஜிதந்தாயாம், "ந தேரூபம் நசாகாரோ நாயுதாநி நசாஸ்பதம் । ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஸஸே" (நதேரூபம்நசாகாரோநாயுதாநிநசாஸ்பதம் । ததாபிபுருஷாகாரோபக்தாநாம்த்வம்ப்ரகாஸஸே) ஆச, ப்ரயோஜநசூந்யத்வநரகாவஹத்வ சிஷ்டகர்ஹிதத்வதுர்க்கடத்வாபோக்யத்வாதிதோஷேண துஷ்டமென்றபடி. பக்தாநாமித்யாதிவாக்யம் - த்விதியார்த்தாநுகுணம். த்விதியார்த்தாநுகுணமாஹ (சதிரையுடையாரித்யாதி) பிறரையகப்படுத்திக்கொள்ளுகைக்காகவென்றபடி. சாதுர்யத்தினுடைய சரமாவதியைக்காட்டுகிறார் (செத்துக்காட்டவுமித்யாதி) விஶ்லேஷப்ரஸங்காதாவிதிபாவ:. இளமைக்குபாவம் (மேலேகிளரோளியித்யாதி)

அதிர்குரல்சங்கத்து - அதிராநின்றுள்ள த்வநியையுடைய சங்கத்தையுடையவென்றபடி. அதுதன்னையே தமக்குத்திருநாமமாக - "சங்கத்தழகர்" என்றே திருநாமம். "தங்கோயில்" என்றதுக்குபாவம் (ஆஶ்ரிதரக்ஷணேத்யாதி)

"அதிர்குரல்" "மதிதவழ்" என்றவிடத்திலே - "ஶஶ்வத்ஶ்ரீஜ்ஜணாஜ்ஜஶிவம்" (ஶஶ்வதரிங்கணட்யஶிகம்) இத்யாதிஶ்லோக மநுஸந்தேயம். சூற்பெண்டுகள் - கர்ப்பிணிஸ்த்ரீகள். சுரம்-மலை.

பதி-ஸ்த்தாநம். "ஏத்தி" என்றதினர்த்தம் (ஸ்வரூபாநுரூபமானவித்யாதி) வ்ருத்தி-வாசிககைங்கர்யம். "எழுவதே-பயன்" என்றுகூட்டி, ஏவகாரத்துக்கர்த்தம் (அல்லாதவையித்யாதி)

க்ரமேணாந்வய:. ... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

# மூன்றாம்பாட்டு.

பயனல்லசெய்துபயனில்லைநெஞ்சே
புயன்மழைவண்ணர்புரிந்துறைகோயில்
மயன்மிகுபொழில்சூழ்மாலிருஞ்சோலை
அயன்மலையடைவததுகருமமே.

## ஆறாயிரப்படி.

(பயனல்ல) ப்ரயோஜநசூந்யமாயிருந்த செயல்களைச்செய்து ஒருப்ரயோஜநமில்லை நெஞ்சே, ஆதலால் அவற்றைத்தவிர்ந்து ஆஶ்ரிதர்க்காத்மதாநம்பண்ணிக்கொண்டு நிற்கிறகோயிலாய், தன்னுடையபோக்யதையாலே ப்ரவிஷ்டரை யுந்மதிப்பியாநின்ற பொழில்களையுடைத்தான மாலிருஞ்சோலையினுடைய அயன்மலையடைவது; அதுவேநமக்கு பரமஹிதமென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரமோதாரன் வர்த்திக்கிற திருமலையோடு சேர்ந்த அயன்மலையைப்ராபிக்கையே கார்யமென்கிறார்.

நெஞ்சே-நெஞ்சே. பயனல்ல-ப்ரயோஜநசூந்யமானவற்றை. செய்து-செய்து. பயன்-ப்ரயோஜநம். இல்லை-இல்லை. புயல்-தூறலுந்துளியுமான. மழை-காளமேகம்போலே. வண்ணர்-ஜலஸ்த்தலவிபாகமறவர்ஷிக்கும் ஸ்வபாவத்தையுடையவர். புரிந்து-அபிமுகனாய்க்கொண்டு. உறை-நித்யவாஸம்பண்ணுகிற. கோயில்-வாஸஸ்த்தாநமாய். மயல்மிகு - கண்டார்நெஞ்சுகலங்கும்படிதர்ஸநீயமான. பொழில்-பொழில். சூழ்-சூழ்ந்த. மாலிருஞ்சோலை-திருமலையினுடைய. அயல்-அருகின. மலை-மலையை. அடைவததுவே-அடைகையாகிறவதுவே. கருமம் - கர்த்தவ்யம் - ஸ்வரூபப்ராப்தம்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

## ஈடு - மூன்றாம்பாட்டு.

உத்தேஸ்யத்துக் கிதெல்லாம்வேணுமோ, திருமலையோடுசேர்ந்த அயன்மலையையடையவமையுமென்கிறார்.

(பயனல்லவித்யாதி) பயனல்லவாகநினைத்திருக்கிறது - பரமபதத்திலிருப்பையும், அல்லாத அவதாரங்களையும். அன்றியே (பயனித்யாதி) ப்ரயோஜநசூந்யமானவற்றைச்செய்து ஒருப்ரயோஜநமில்லை. செயலும் பலமுமிரண்டும் ப்ரயோஜநமாயிற்றுதாம்பற்றினவிஷயம், “ஸுஸுவம்கநூ” (ஸுஸுகம்கர்த்தும்) என்னக்கடவதிறே; ஸாதநதசையிலும் துःகரூபமாய், பலவேளையிலும் துःகமிஸ்ரமாயிருக்கிற ஸ்வர்க்கதத்ஸாதநங்களையாயிற்றிவர் நினைத்திருக்கிறது. (நெஞ்சே) விஷயாந்தரத்துக்கு மிவ்விஷயத்துக்குமுண்டானநெடுவாசியுனக்கநுபூதமிறே. (நெஞ்சே) பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிறே நெஞ்சுதானிருப்பது. இவ்வளவிலு மிவ்விஷயத்தை யகலுகைக்குக்காரியம்பார்த்தாய் நீயிறே.

(புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில்) பயனானவிஷயந்தானிருக்கிறபடி. வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கிற வடிவழகையுடையவர் அவ்வடிவழகை சர்வஸ்வதாநம்பண்ணிவர்த்திக்கிறகோயில். வர்ஷுகமானமேகம்போலே ஜலஸ்த்தலவிபாகமின்றிக்கே சர்வஸ்வதாநம்பண்ணி வர்த்திக்கிறதேசமென்றுமாம். இத்தால்-தமக்குப்ராப்யப்ராபகங்களொருவனேயாயிருக்கிறபடி. (மயல்மிகுபொழில்சூழ்) சோலைச்செறிவாலே புக்கார்க்கிருண்டிருக்குமென்னுதல்; அன்றியே, போக்யதாப்ரகர்ஷத்தாலே நெஞ்சையிருளப்பண்ணுமென்னுதல். (மாலிருஞ்சோலையயன்மலை) திருமலையோட்டைஸம்பந்தத்தையே தனக்குப்பேராகவுடைத்தானமலை. “கூஹூஹரா தா” (அகஸ்த்யப்ராதா) என்னுமாபோலே. (அடைவததுகருமமே) அதொன்றுமேகர்த்தவ்யம், அல்லாதவையடைய அகர்த்தவ்யமென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (பயனல்லவித்யாதி) உத்தேஶ்யத்துக்கு-தாம்நிஷ்கர்ஷித்தப்ராப்யத்துக்கு. அயன்மலை-அசல்மலை.

(பயனல்லாதவாகவிதி) பரமபதத்திலிருப்பையும் அவதாரங்களையும் ஆஶ்ரயித்தொரு ப்ரயோஜநமில்லை, இரண்டும் தேசகாலவிப்ரகர்ஷங்களால் துர்லபமாகையாலே; ஆகையாலே பகவந்நித்யஸந்நிதிமத்தேஶ ஸமாஶ்ரயணம் ப்ரயோஜநவதிதிபாவ:. ப்ரயோஜநஶூந்யமானவற்றை-காம்யகர்மங்களான ஸ்வர்க்காதிசாதநங்களை. முந்தினவர்த்தத்திலே, செய்து-ப்ராப்யப்ராபகமாக வாஶ்ரயித்து. த்விதீயார்த்தத்தில், ஸ்வர்க்காதித்ஸாதநங்களிலே யந்வயித்தென்றபடி. அவ்விஷயமப்படியிருக்குமோவென்ன (ஸாஸகமித்யாதி) த்விதீயார்த்தவிவரணம் (சாதநதசையிலுமித்யாதி) "நெஞ்சே" என்றதுக்குபாவம் (விஷயாந்தரேத்யாதி) பாவாந்தரமாஹ (பந்தமோக்ஷங்களித்யாதி)

"வண்ணர்" என்கிறவிடத்தில், வண்ணசப்தத்துக்கு- வர்ணவாசகத்வேநவும், ஸ்வபாவவாசகத்வேநவுமர்த்தபேதம். அர்த்தத்வயத்திலும், புரிதல்-கொடுத்தல். வர்ணத்வலிதம்-ஸௌந்தர்யம்; த்விதீயார்த்தத்தில், மழைபோன்ற ஸ்வ்பாவத்தையுடையராகையாலே புரிகிறுரென்றபடி. இத்தால் - அர்த்தத்வயத்தாலுமென்னுதல், "புயல்மழைவண்ணர், புரிந்து" என்றத்தாலென்னுதல். புயல்மழைவண்ணர் என்று - ப்ராப்யம். புரிந்தென்று - ப்ராபகம்.

செறிவு-நைபிட்யம். மயல்மிகுபொழில்-ப்ராந்தியை மிகப்பண்ணுகிறபொழில். மயல் - ப்ராந்தி. "மயல்மிகு" என்றவிடத்திலே, "ப்ரவிஷ்டாநந்நாதயத்பி:" (ப்ரவிஷ்டாநந்மாதயத்பி:) என்றகத்யவாக்யமும், "திமிரநிபப்ரபூததருஷண்டமயம்ப்ரமதம்" (திமிரநிபப்ரபூததருஷண்டமயம்ப்ரமதம்) இத்யாதியுமநுஸந்தேயம்.

தத்ஸம்பந்தத்தையேபேராகவுடைத்தானமைக்கு த்ருஷ்டாந்தம் (அகஸ்த்யேத்யாதி) "அதுவே-கருமம்" என்ற ஏவகாரார்த்தம் (அதொன்றுமேயித்யாதி) புயல்-வர்ஷுகமான. மழை-மேகம். உறைகை-நித்யவாஸம்பணணுகை.

க்ரமேணாந்வய:... ... ... ... ... ... ... ... ... ... ... *

## நான்காம்பாட்டு.

கருமவன்பாசங்கழித்துழன்றுய்யவே
பெருமலையெடுத்தான்பீடுறைகோயில்
வருமழைதவழுமாலிருஞ்சோலைத்
திருமலையதுவேயடைவதுதிறமே.

### ஆறுயிரப்படி.

(கருமம்) நிரஸ்தப்ரதிபந்தகராய்க்கொண்டு தன்றிருவடிகளிலே நாமடிமைசெய்துஜ் ஜீவிக்கைக்காகவே பரமகாருணிகனானதான் வந்து

றைகின்ற சமஸ்தசந்தாபநாசகமான திருமலையையடைகையே அடிமை செய்கைக் குபாயமென்கிறார்... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ரக்ஷகனானவன் வர்த்திக்கிற பெரியபொழில்சூழ்ந்த திருமலையை யாஶ்ரயிக்குமதுவே செய்யக்கடவபடி யென்கிறார்.

கருமம் - பந்தகமானகர்மங்களாகிற. வன் - கழற்றவரிய. பாசம் - பாசங்களை. கழித்து - கழற்றி. உழன்று - அடிமைசெய்துவ்யாபரித்து. உய்யவே - சேதநருஜ்ஜீவிக்கைக்காகவே. ஆர்த்தமானகோபகோபீஜநங்களுடைய ஆர்த்திதிரும்படி பெரு - பெரிய. மலை - மலையை. எடுத்தான் - எடுத்துரக்ஷித்தவன். பீடு-தன்னுடையரக்ஷணைஶ்வர்யம். உறை - விளங்கும்படிநித்யவாஸம்பண்ணுகிற. கோயில்-ஸ்தாநமாய். வரு - வர்ஷோந்முகமாய்வருகிற. மழை-மேகங்கள். தவழும்-தவழும்படி. மால் - மிகவுமுயர்ந்து. இரும் - பரந்த. சோலை - சோலையையுடைத்தான. திருமலையதுவே - திருமலைதன்னையே; அடைவதே - அடைவதே. திறம் - செய்யும்படி.

மால் - உயர்த்தி. இருமை-பரப்பு. மாலிருஞ்சோலைத் திருமலையென்கையாலே - திருமலையிற்சோலையினுடைய ப்ராப்யதை தோற்றுகிறது....................*

---

## ஈடு - நான்காம்பாட்டு.

கர்மபந்தத்தைப்போக்கி ஆஶ்ரிதரானவர்களடிமைசெய்து வாழுகைக்கீடாம்படி சர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருமலையை யாஶ்ரயிக்கையே ஸத்ருஶமென்கிறார்.

(கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே) "இதுநம்மாற்செய்து தலைக்கட்டப்போமோ திருமலையை யாஶ்ரயிக்குமதொழிய" என்று இங்ஙனே ஆழ்வானொருருவிலே பணித்தானும்; அங்ஙனும் நிர்வஹிக்கக்கடவது.

அன்றிக்கே, "கருமவன்பாசம் கழிக்கைக்காகவும், உழன்றுய்கைக்காகவும்," என்றிங்ஙனே எம்பெருமானா ரருளிச்செய்யும்படி. முராசுரன் அநேகமாயிரம் பாசங்களாலே தன்னைமறையவரிந்து கொண்டிருந்தாற்போலேயிறே அவித்யாதிகளாலே * தன்னைமறைய வரிந்துகொண்டிருக்கும்படி. கர்மமாகிற வலியபாசங்களைக் கழிக்கைக்காகவும். தன்பக்கல் கைங்கர்யத்தைப்பண்ணியுஜ் ஜீவிக்கைக்காகவும். "பரித்ராணாய ஸாதூநாம்" (பரித்ராணாயஸாதூநாம்) என்கிறபடியே - விரோதிகளைப்போக்கியுஜ் ஜீவிப்பிக்கையிறே யவதாரங்களுக்கு ப்ரயோஜநம். (பெருமலையெடுத்தான்) அரியனசெய்து மாஶ்ரிதரக்ஷணம் பண்ணுமவன்; "கோகோபீஜநஸங்குலம்। அதீவார்த்தம்" (கோகோபீஜநஸங்குலம்। அதீவார்த்தம்) என்று-இடையருமிடைச்சிகளும்நோவுபட, ஒருமலையை

யெடுத்து நோக்கினவன், அந்த ஐஶ்வர்யத்தோடேவந்து நித்யவாசம்பண்ணுகிறகோயில். ( பெருமலை ) பஞ்சலக்ஷங்குடியும் நிழலிலேயொதுங்கலாம்படியிறே மலையின்பரப்பு. பீடு - பெருமை. அதாவது - ஐஶ்வர்யம். ஆபத்ஸகத்வாதிகள். ஒருமலையை ஆதேயமாகக்கொண்டு ரக்ஷித்தவன் ஒருமலையை ஆதாரமாகக்கொண்டு ரக்ஷிக்கநிற்கிறவிடம். பசுக்களுக்குமிடையருக்கும் ரக்ஷகனானகையால்வந்த ஐஶ்வர்யந்தோற்ற வர்த்திக்கிறகோயில். ( வருமழைதவழுமாலிருஞ்சோலை ) " 𑌸𑌮𑍁𑌦𑍍𑌵𑌹𑌨𑍍𑌤𑌃 𑌸𑌲𑌿𑌲𑌾𑌤𑌿𑌭𑌾𑌰𑌂 𑌬𑌲𑌾𑌕𑌿𑌨𑍋 𑌵𑌾𑌰𑌿𑌧𑌰𑌾 𑌨𑌦𑌨𑍍𑌤𑌃 । 𑌮𑌹𑌤𑍍𑌸𑍁 𑌶𑍃𑌙𑍍𑌗𑍇𑌷𑍁 𑌮𑌹𑍀𑌧𑌰𑌾𑌣𑌾𑌂 𑌵𑌿𑌶𑍍𑌰𑌮𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌰𑌮𑍍𑌯 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 " ( ஸமுத்வஹந்தஸ்ஸலிலாதிபாரம்பலாகிநோவாரிதராநதந்த: । மஹத்ஸுஶ்ருங்கேஷுமஹீதராணாம் விஶ்ரம்யவிஶ்ரம்யபுந:ப்ரயாந்தி ) என்கிறபடியே, சூற்பெண்டுகள் சுரமேறுமாபோலே யாயிற்றுமேகங்கள் சஞ்சரிப்பது. ஊர்க்கிரண்டாயிற்றுமழை - நின்றவிடத்திலேநின்று வர்ஷிப்பதொருமேகமும், போவதுவருவதா யிருப்பதொருமேகமும் ; " புயல்மழைவண்ணர் " என்கிறதிறே. மாலிருஞ்சோலை யாகிறதிருமலையை யாஶ்ரயிக்குமிதுவே, திறம் - செய்திறம். செய்யவடுப்பதிதுவே. மாலிருஞ்சோலையையுடைத்தானதிருமலையையென்னுதல். மாலென்று - பெருமை. இருமையென்றும் - பெருமை. என்று - ஒக்கத்திலே, ஒன்றுபரப்பிலே................................ ........*

---

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. ( கருமமித்யாதி ) எம்பெருமானார் நிர்வாஹத்தைப்பற்ற ( கர்மபந்தத்தையித்யாதி )

ஆழ்வான்நிர்வாஹத்திலே, உய்யவே-உஜ்ஜீவிக்கப்போமோ என்று, ஏகாரம்-பிரிநிலையேகாரம். வ்யதிரேகார்த்தமென்றபடி

எம்பெருமானார் நிர்வாஹத்திலே, ஏகாரம் - தேற்றத்திலே. தேற்றம்-நிஶ்சயம். உழலுகை - ஸஞ்சாரமாய், " 𑌤𑍇𑌨 𑌤𑍇𑌨 𑌸𑌹 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 " ( தேநதேநஸஹகச்சதி ) என்று - கைங்கர்யத்தை நினைக்கிறதென்றபடி. " வன் " என்றதுக்கு பாவம் ( முராஸுரணித்யாதி ) வரிந்துகொண்டு - பந்தித்துக்கொண்டு. ( அவித்யாதீதி ) ஆதிசப்தேந-கர்மவாஸநாருசி ப்ரக்ருதிஸம்பந்தாதயஉச்யந்தே. சப்தார்த்தம் (கர்மமாகிறவித்யாதி)

திருமலையில் ஸ்த்திதிக்கிதுவோ ப்ரயோஜநமென்ன (பரித்ராணாயேத்யாதி) அவதாரங்களுக்கென்றதிலே - அர்ச்சாவதாரமும் விவக்ஷிதம். " பெருமலையெடுத்தான் " என்றதுக்குத்தாத்பர்யம் ( அரியனசெய்துமித்யாதி ) கோவர்த்தநோத்தரணஹேதுகதநபூர்வகமாகவர்த்தம் (கோகோபீத்யாதி) பஞ்சமேம்ஶே ஏகாதஶே, " 𑌤𑌤𑌸𑍍𑌤𑌦𑍍𑌗𑍋𑌕𑍁𑌲𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌗𑍋𑌗𑍋𑌪𑍀𑌜𑌨𑌸𑌙𑍍𑌕𑍁𑌲𑌂 । 𑌅𑌤𑍀𑌵𑌾𑌰𑍍𑌤𑌂 𑌹𑌰𑌿𑌰𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯𑌾𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌤𑍍𑌤𑌦𑌾 " ( ததஸ்தத்கோகுலம்ஸர்வம் கோகோபீஜநஸங்

குலம் । அதிவார்த்தம்ஹரிர்த்ருஷ்ட்வாமைத்ரேயாசிந்தயத்ததா ) இத்யாரப்ய, “ உத்க்ருத்ய த்ரிம் க்ருஷ்ணோ கோவர்த்தந மஹீதரம் । உத்பாட்யைககரேணைவ தாரயாமாஸ லீலயா ” ( இதிக்ருத்வாமதிம்க்ருஷ்ணே கோவர்த்தநமஹீதரம் । உத்பாட்யைககரேணைவதாரயாமாஸலீலயா ” யத்வா, கோகோபீத்யாதிவாக்யம் - ‘‘ பீடுறைகோயில் ” என்றதுக்குபாவமாதல். அந்த ஐஶ்வர்யத்தோடே - அந்தப்பெருமையோடே. பீடாவது - ஆபத்ஸகத்வாதிகளால் வந்தபெருமை. பெருமைக்கவதியைக்காட்டுகிறார் ( பஞ்சலக்ஷத்யாதி ) ஐஶ்வர்யமாவதேதென்ன ( ஆபத்ஸகத்வாதிகளென்று ) “ பெருமலை ” என்றத்தைக்கடாக்ஷித்து, “ உறைகோயில் ” என்றதுக்குபாவம் ( ஒருமலையையித்யாதி ) “ அதாவதைஶ்வர்யம்” இத்யாதியின்விவரணம் ( பசுக்களுக்குமித்யாதி )

மழை-மேகம். “ தவழும் ” என்றதுக்குபாவம் ( ஸமுத்வஹந்தஇத்யாதி ) கிஷ்கிந்தாகாண்டே லக்ஷ்மணம்ப்ரதிராமேணோக்தோயம்ஶ்லோக꞉. சூற்பெண்டுகள்-கர்ப்பிணிஸ்த்ரீகள். சுரம் - மலை. “ மழை ” என்னாதே, “ வருமழை ” என்று விசேஷித்ததுக்குபாவம் ( ஊர்க்கித்யாதி ) இவனும் மழையோவென்ன ( புயலித்யாதி )

விவரணம் ( செய்யவடுப்பதிதுவேயென்று ) “ திருமாலிருஞ்சோலை ” என்றுரூடியான திருநாமத்தையுடையமலையென்று மூர்தினவர்த்தம். யோகார்த்தமவலம்ப்ய த்விதீயோநிர்வாஹ꞉. ஓக்கம் - உயர்த்தி. பரப்பு - விஸ்தாரம். திறம்- செய்யும்படி.

கருமவன் பாசமித்யாரப்ய, திருமலை -அடைவததுவே திறமித்யந்வய꞉...*



## ஐந்தாம்பாட்டு.

திறமுடைவலத்தாற்றீவினைபெருக்கா
தறமுயலாழிப்படையவன்கோயில்
மறுவில்வண்சுனைசூழ்மாலிருஞ்சோலைப்
புறமலைசாரப்போவதுகிறியே.

### ஆறாயிரப்படி.

( திறமுடை ) விரகாலும் பலத்தாலும் தீவினைபெருக்காதே, ஆஶ்ரிதரக்ஷணைகஸ்வபாவனான திருவாழியை திவ்யாயுதமாக வுடையனானவன் நின்றருளுகிற, நிர்மலமாய் ஸர்வபோக்யமாயிருந்தசுனைகளையுடைத்தான மாலிருஞ்சோலைமலையினுடைய புறமலைசாரப்போவது பரமப்ராப்யமென்கிறார்..........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ரக்ஷணோத்யுக்தமான திருவாழியையுடையவன் வர்த்திக்கிற திருமலையின் புறமலையைக்கிட்டப்போவது நல்விரகென்கிறார்.

திறமுடை - நாநாவிதமான. வலத்தால் - பலங்களாலே. அக்ருத்யகரணாதிகளான, தீ - கொடிய. வினை-பாபங்களை. பெருக்காது - வர்த்திப்பியாதே. அறம்- ஆஸ்ரிதரக்ஷணமாகிறதர்மத்திலே. முயல் - உத்யோகத்தையுடைய. ஆழி - திருவாழியை. படையவன் - ஆயுதமாகவுடையவனுடைய. கோயில் - வாஸஸ்தாநமாய். மறு - சைவலகர்த்தமாதிகளாகிறகளங்கம். இல்-அற்று. வண் - கிட்டினார்க்குஸர்வப்ரகாரோபஜீவ்யமான. சுனை - சுனைகளாலே. சூழ் - சூழப்பட்ட. மாலிருஞ்சோலை - திருமலையின். புறமலை - புறமலையை. சார-கிட்ட. போவது-போகிறவது. கிறி-நல்விரகு.

கிட்டுமதிலும் கிட்டப்ரவர்த்திக்குமதுநல் விரகென்றுகருத்து. இப்பாட்டளவும் - உபதேசத்தை நெஞ்சோடேகூட்டி, மேல் - பிறரைக்குறித் துபதேசிக்கிறார்......................................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

திருமலைக்குப்புறம்பான மலையைப்ராபிக்கையே நல்விரகென்கிறார்.

( திறமுடைவலத்தால் ) திறம் - சமூஹம். வலம் - பலம். திரண்டபலத்தாலே ப்ரயோஜநாந்தர ப்ராவண்யமாகிற மஹாபாபத்தைக் கூடுபூரியாதே. ( அறமுயலித்யாதி ) "ரக்ஷணஸ்யவ்யவஸிதஃ" ( லக்ஷ்மணஸ்யசதீமதஃ ) என்கிறபடியே - சர்வேஸ்வரனிலுமாஸ்ரிதரக்ஷணத்திலே முயலாநின்றுள்ள திருவாழியை ஆயுதமாகவுடையவன் வந்துவர்த்திக்கிறதேசம். சர்வேஸ்வரன் கடைக்கணித்துவிட, அரைக்ஷணத்திலே வாராணஸியைதஹித்து வந்துநின்றானிறே. ( மறுவிலித்யாதி ) "ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா" ( ரமணீயம்ப்ரஸந்நாம்புஸந்மநுஷ்யமநோயதா ) என்கிறபடியே, மறுவற்று ஆழ்வார்திருவுள்ளம்போலே தெளிவையுடைத்தாய், தர்ஸநீயமாய் ஊற்றுமாறாத சுனைகளாலேசூழப்பட்ட மாலிருஞ்சோலைப் புறமலைசாரப்போமிதுவே பகவத்ப்ரத்யாஸத்தி வேண்டியிருப்பார்க்கு வருத்தமறலபிக்கலாம் நல்விரகு......*

## ஜீயர் அரும்பதம்.

ஐந்தாம்பாட்டு. ( திறமித்யாதி ) நாலாம்பாதத்தைக்கடாக்ஷித்தவதாரிகை. (திருமலைக்கித்யாதி)

பலிதம் (திரண்டவித்யாதி)

அற - மிகவுமென்றுதல்; அறம்-தர்மமாதல். அர்த்தத்வயஞ்சதந்த்ரேணாஹ ( லக்ஷ்மணஸ்யேத்யாதி ) ஸுந்தரகாண்டே ஷோடஸஸீதாம்பஸ்யந்மாருதிஃ, "ராமஸ்யவ்யவஸாயஜ்ஞாரக்ஷணஸ்யவ்யவஸிதஃ। நாத்யர்த்தம்க்ஷுப்யதேதேவீகங்கேவஜலதாகமே" ( ராமஸ்யவ்யவஸாயஜ்ஞாலக்ஷ்மணஸ்யசதீமதஃ।நாத்யர்த்தம்க்ஷுப்யதேதேவீகங்கேவஜலதாகமே ) "வ்யவஸிதஃ" ( தீமதஃ ) என்றுவிசேஷிக்கையாலே-பெருமாளைப்பற்றவு மாஸ்ரிதரக்ஷணத்தில்_மிகுந்திருப்பனென்ற

படி. முயலுகை-உத்யோகிக்கையும், உத்ஸாஹிக்கையும். அப்படியாஸ்ரிதரக்ஷணத்தில் ஸர்வேஸ்வரனிற்காட்டிலும் முயன்றவிடமுண்டோவென்ன (ஸர்வேஸ்வரனித்யாதி) வாராணஸியை தஹித்துவந்து நின்றுனிறேயென்றவிடத்திலே- "[अक्षिष्वासक्तमतिर्नाशनिरादरेण वाराणसी हरपुरी भवतारितक्ता]" (அக்ஷிஷ்வாஸக்தமதிநாசநிராதரோண வாராணஸீஹரபுரீபவதாரிதக்தா) என்றதநுஸந்தேயம். பஞ்சமேம்ஸே சதுஸ்த்ரிம்ஸே, "[ददाह तद्रोषचक्रं सकलामेव तां पुरीम्]" (ததாஹதத்தரோஸ்சக்ரம்ஸகலாமேவதாம்புரீம்) என்றது வாராணஸீதஹநத்தில் ப்ரமாணமாக வநுஸந்தேயம்.

மறுவில்-சைவலகர்த்தமாதிகளாகிறகளங்கமின்றியிருக்கிற. (ரமணீயமிதி) பாலகாண்டேத்விதீயே பாத்வாஜம்ப்ரதிவால்மீகிঃ, "[अकर्दममिदं तीर्थं भरद्वाज निशामय]" (அசர்த்தமமிதம்தீர்த்தம் பரத்வாஜநிஸாமய) இதிபூர்வார்த்தம். இத்தால் பலிதம் (ஆழ்வார்திருவுள்ளமித்யாதி) வண்மை-அழகும், ஔதார்யமும். இவ்விரண்டையு மருளிச்செய்கிருர் (தர்ஸநீயமாயூற்றுமாருதவென்று)

சாரப்போவது-கிட்டப்போகிறவது இதிசப்தார்த்தঃ. கட்டுமதிலும் கிட்டப்ரவர்த்திக்குமது நல்விரசென்று கருத்து. கிறி-விரகு.

க்ரமேணுந்வயঃ... ... ... ... ... ... ... ... ... ... ... *

---

## ஆறம்பாட்டு.

கிறியெனநினைமின்கீழ்மைசெய்யாதே
யுறியமர்வெண்ணெயுண்டவன்கோயில்
மறியொடுபிணைசேர்மாலிருஞ்சோலை
நெறிபடவதுவேநினைவதுநலமே.

### ஆருயிரப்படி.

(கிறியென) இத்தையேபரமப்ராப்யமென்று நினையுங்கள், வேறொன்றை ப்ராப்யமென்றுநினையாதே; உறியமர்வெண்ணெயுண்டவன் அச்சுவடழியாமேபுகுந்து நின்றருளுகிற சர்வபோக்யமானதிருமலையை அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு நினைக்குமதுவேப்ராப்யமென்கிருர்...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவ்யாமுக்தன்வர்த்திக்கிற திருமலைக்குப்போகிறவழியையுட்படநினைக்குமதுவே நன்மையென்கிருர்.

கீழ்மை-விஷயாந்தரங்களைநோக்கிப்போகநினைக்கும் நீசதையை. செய்யாதே-பண்ணுதே. இத்தை, கிறி-நல்விரகு. என-என்று. நினைமின் - நினையுங்கோள். ஏதென்னில், உறி - உறியிலே. அமர் - பொருந்தச்சேமித்துவைத்த. வெண்ணெய்-வெண்ணெயை. உண்டவன்-அமுதுசெய்தக்ருஷ்ணனுடைய. கோயில்-கோயிலாய். மறியொடு-தன்னுடையகன்றுகளோடேகூட, பிணை-மான்பேடைகள். சேர்-சேரு

கிற..மாலிருஞ்சோலை-திருமலையினுடைய. நெறி-வழியிலே. பட-உட்படவேணுமெ ன்கிற. அறவே-அத்தையே. நினைவது-நினைக்கை. நலம்-புருஷார்த்தம்.

மறி-குட்டி. பிணை-மான்பேடை... ... ... ... ... ... ... ... *

## ௩௫-அரும்பாட்டு.

திருமலைக்குப்போம் மார்க்கசிந்தைபண்ணுமிதுவே இவ்வாத்மாவுக்கு நல்லதென்கிறார்.

(கிறியெனநினைமின்) இதுநல்விரகென்று புத்திபண்ணுங்கோள். (கீழ்மைசெய்யாதே) நான்சொல்லுகிறவிதொழிய, தண்ணிதானவற்றைச்செய்யநில்லாதே. அதாவது-ப்ரயோஜநாந்தரப்ராவண்யம்.

(உறியித்யாதி) உறிகளிலேசேமித்துக் கள்ளக்கயிறுருவிவைத்த வெண்ணெயை "தெய்வங்கொண்டதோ" என்னலாம்படி களவுகண்டமுதுசெய்தவன் வந்துவர்த்திக்கிறதேசம். இத்தால்-அநுகூலஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாதவனென்கை. (மறியொடுபிணைசேர்மாலிருஞ்சோலை) குட்டியும்தாயும் பிரியாதேவர்த்திக்கிறதேசம். ரக்ஷ்யரக்ஷகங்கள் தம்மில்பிரியாதே வர்த்திக்குந்தேசமென்கை. (நெறியித்யாதி) நெஞ்சிலேயடிபடும்படியாகத் திருமலையை யநுசந்திக்குமதுவே நன்மையாவதென்னுதல்; அன்றிக்கே, நெறிபடுகைக்கு நினைக்குமதுவே-மார்க்கசிந்தைபண்ணுமதுவே யிவ்வாத்மாவுக்கு நன்மையாவதென்னுதல். (அதுவேநினைவதுநலம்) அத்தைநினைக்குமதுவேவிலக்ஷணம்; அதொழிந்தவையெல்லாம் பொல்லாததென்கை... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

அரும்பாட்டு. (கிறியெனவித்யாதி) நாலாம்பாதத்தைப்பற்ற-அவதாரிகை.

இது-நான்சொல்லுகிறவிது-ப்ரயோஜநாந்தரப்ராவண்யம் - விஷயாந்தரப்ராவண்யம். முன்பே "சதிரிளமடவார்தாழ்ச்சி" என்றாரே. கீழ்மை-நீசவ்ருத்தி.

களவுகண்டமுதுசெய்கிறதுக்கு ப்ரயோஜநம் (இத்தாலித்யாதி)

மறி-குட்டி. பிணை-மான். "மறியொடுபிணைசேர்" என்றத்தால் பலிதம் ஸ்வாபதேசமாஹ (ரக்ஷ்யரக்ஷகங்களித்யாதி)

நெறிபட-ப்ரஹ்ருதமாக. விசதமாகவென்று முந்தினவர்த்தம். த்விதீயார்த்தத்திலே, நெறிபடுகைக்கு- மார்க்கத்திலே வர்த்திக்கைக்கு என்றர்த்தம். அதுவே-அத்தையே. திருமலைக்குப்போம்வழியையே நினைவதுநலம். ஏவகாரவ்யவச்சேதயம் (அதொழிந்தவையித்யாதி) "மாலிரும்சோலைநெறிபட" இத்யாதிக்கு -"திருமலையினுடையவழியிலே யுட்படவேணுமென்கிறவத்தையே நினைக்கைபுருஷார்த்தம்" என்றுரையிலர்த்தம்.

கீழ்மைசெய்யாதே-கிறியெனநினைமின்; உறியமரித்யாரப்ய, க்ரமேணாந்வய:.

# ஏழாம்பாட்டு.

நலமெனநினைமினரகழுந்தாதே
நிலமுனமிடந்தானீடுறைகோயில்
மலமறுமதிசேர்மாலிருஞ்சோலை
வலமுறையெய்திமருவுதல்வலமே.

## ஆறுயிரப்படி.

(நலம்) இதுவேப்ராப்யமென்று நினையுங்கள், வேறொன்றைப் ப்ராப்யமாகநினையாதே; நிலமுனமிடந்தான் என்றைக்கும்தனக்குக் கோயிலாகக்கொண்ட, பரமபுருஷ நிர்மலஜ்ஞாநஜநகமான திருமலையை யநந்யப்ரயோஜநராய்க்கொண்டு வலம்செய்துமருவுங்கள்; இதுவேபரமப்ராப்யமென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரளயாபத்ஸகன் வர்த்திக்கிறதிருமலையிலாநுகூல்யமே ப்ரபலமென்கிறார்.

பஹிஷ்டராய், நரகு - ஸம்ஸாரநிரயத்தில். அழுந்தாதே - அழுந்தாதே. இத்தை, நலம் - பரமப்ரயோஜநம். என - என்று. நினைமின் - புத்திபண்ணுங்கோள். முனம் - ப்ரளயங்கொண்டமுற்காலத்திலே. நிலம் - பூமியை. இடந்தான் - வராஹவேஷத்தைக்கொண்டு இடந்தெடுத்தவன். நீடுறை - நித்யவாசம்பண்ணுகிற. கோயில் - கோயிலாய். மலமறு - கிரணங்களிலேதேய்கையாலே களங்கரஹிதனான. மதி - சந்த்ரன். சேர் - பொருந்துகிற. மாலிருஞ்சோலை - திருமலையை. முறை - சேஷசேஷிபாவமாகிற முறைப்பாட்டாலுள்ள. வலம் - ஆநுகூல்யத்தை. எய்தி - பெற்று. மருவுதலே - பொருந்துகையே. வலம் - பலோத்தரம்....................*

---

## ஈடு - ஏழாம்பாட்டு.

திருமலையைச்சென்று கிட்டிநிரந்தரவாசம்பண்ணுகையே யிவ்வாத்மாவுக்கு வெற்றியென்கிறார்.

(நலமெனநினைமின்) நான்சொல்லுகிறவார்த்தையை நன்மையென்று புத்திபண்ணுங்கோள். விலக்ஷணமான புருஷார்த்தமென்று புத்திபணணுங்கோள், (நரகழுந்தாதே) நரகங்களுமிவர்களுக்கு வ்யவஸ்த்திதமா யிறேயிருப்பது, [ யஸ்த்வயாஸஹஸ ] (யஸ்த்வயாஸஹஸ்ஸ ஸ்வர்க்கஃ) "காட்டிலேபோமதுதுஃகம், படைவீட்டிலே யிருக்குமது சுகம்" என்றாயிற்று பெருமாளருளிச்செய்தது; அங்ஙனல்ல, சுகதுஃகங்கள் வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதமாய்க் காணுமிருப்பது; யாதொன்றும்மோடே பொருந்துகிறது, அது சுகமாகிறது, உம்மையொழியப்படை விட்டிலிருக்குமிருப்பு துஃகமாகிறது. [ இதிஜாநந் ] (இதிஜாநந்)

தந்தாமுக்கில்லாதவை, பிறர்பக்கலிலே கற்றறியவேணுங்காணும். [ வ ரா௦ஹீதிழ ] ( பராம்ப்ரீதிம் ) உம்மைப்போலே கிறுத்தல்லகாணு மெ ன்னுடைய ப்ரீதியிருப்பது. நம்மிலுனக்கு ப்ரீதியளாயாகச்சொன்னாய், அதுக்குநம்மைச் சொல்லுகிறதென்னென்ன. [ மஹூா ஈஉயாவஹ ] ( கச்சராமமயாஸ்வஹ ) " கூறா தமெ ஹிஷ்யாகி " ( அக்ரதஸ்தேகமிஷ் யாமி ) என்று - நான்புறப்பட்டபடியே, என்னைமுன்னேபோகவிட்டுப் பின்னேவரப்பாரும். " நவஹீதா துயாஹீநா " ( நசஸீதாத்வயாஹீநா) என்றிறே யிளையபெருமாள். ( நரகழுந்தாதே ) பிரிவால்வரும் க்லே சாநுபவம்பண்ணாதே.

( நிலமித்யாதி ) வராஹகல்பத்தி ஞதியிலே மஹாவராஹமாய், அண்டபித்தியிலே சேர்ந்துருமாய்ந்தபூமியை ஒட்டுவிடுவித்தெடுத்துக் கொண்டேறினநிருபாதிகஸௌஹார்ததமுடையவன், அவதாரங்கள்போ லேதிர்த்தம் ப்ரசாதியாதே நித்யவாசம்பண்ணுகிறதேசம், ( மலமறு ) சந்த்ரபதத்துக் கவ்வருகேவளர்ந்து நிற்கையாலே, அவன்போம்போது சிகரங்களிலே தேய்ப்புண்டு சாணையிலேயிட்டாற்போலே களங்கமறுநி ற்குமென்னுதல் ; அன்றிக்கே, " திருமலையாழ்வார் தாம்ஜ்ஞாநலாபத் தையுண்டாக்குவர் " என்றுபிள்ளான்வார்த்தை. ( வலமுறையெய்தி ) காலயவநஜரா சந்தாதிகளைப்போலேயன்றிக்கே, அநுகூலமான முறையி லேகிட்டி, மருவுதல்வலமென்னுதல், வரமென்னுதல் - பலவத்தரமென் னுதல், ஶ்ரேஷ்டமென்னுதல்.......................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( நலமெனவித்யாதி ) " மாலிருஞ்சோலை-மருவுதல்வலம் " என்றத்தைப்பற்ற ( திருமலையையித்யாதி )

நன்மையாவதேதென்ன; விவரிக்கிறார் ( விலக்ஷணமானவித்யாதி ) " மரு வுதல் " என்றபதத்துக்குச்சேர, " நரகு " என்கிறது - விஶ்லேஷவ்யஸநத்தை யென்றுவிவக்ஷித்து, " நரகு " என்றால் - விஶ்லேஷவ்யஸநத்தைச் சொல்லுமோ வென்ன ( நரகங்களுமித்யாதி ) நரகு - நரகம். இவர்களுக்கு - ஆழ்வார்களுக்கு. இதுக்குஸம்வாதம் (யஸ்த்வயேத்யாதி) அயோத்யாகாண்டே ராமம்ப்ரதிஸீதா, " யதுயாஸஹஸஸ்வெர்ோநிரயோயதுயாவிநா । ஊதிஜாநநுவரா௦ஹீ திம்மஹூாஉயாஸஹ।யதிதுவ்ரஸ்ழிதாஊ-ரூ௦வநஉசெ்வாாவவுகூ றா தமெஹிஷ்யாகிஉூ நீக-ஶகணகாநு " ( யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்கோநிர யோயஸ்த்வயாவிநா। இதிஜாநந்பராம்ப்ரீதிம்கச்சராமமயாஸஹ। யதித்வம்ப்ரஸ்த்தி தோதுர்க்கம்வநமத்யைவராகவ। அக்ரதஸ்தேகமிஷ்யாமிம்ருத்நந்தீகுஶகண்டகாந்) ஶ்லோகவ்யாக்யாநார்த்தம் பூர்வவ்ருத்தமநுவததி (காட்டிலேயித்யாதி) " துயா ஸஹ-யொவாஸஃ, ஸ்வஃ; துயாவிநா-யொவாஸஃ, ஸநிரயஃ-ஊதி-உ

ஶேஷா:ப்ராப்ய தி³-ஜாநந்-ஶயாஸஹ-ஶ்ரு "(த்வயாஸஹ-யோவாஸ:, ஸஸ்வர்க்க:; த்வயாவிநா-யோவாஸ:, ஸநிரய:-இதி-மமபராம்ப்ரீதிம்-ஜாநந்-மயாஸஹ-கச்ச) இத்யந்வயம் ஹ்ருதிநிதாயார்த்தமாஹ (யாதொன்றித்யாதி) (பிறர்பக்கலிலேயிதி) மதுபதேசாதிதியாவத். "பரம்" என்றதுக்குபாவம் (உம்மைப்போலேயித்யாதி) "ஶயாஸஹ" (மயாஸஹ) என்றதுக்கு-"ஸஹயுக்தேப்ரயாநே" (ஸஹயுக்தேப்ரதாநே) என்கிறக்ரமமன்றிக்கே, லோகவ்யவஹாராநுகுணமாக வ்யாக்யாநம்பண்ணுகிறார் (அக்ரதஇத்யாதி) பிராட்டிமார்க்கன்றோவிஶ்லேஷம் நரகமாய்த்தோற்றுவது, புருஷரானவிவர்க்கப்படி தோற்றுமோவென்ன; இளையபெருமாளைப்போலே யிவர்க்கும்கூடும் இத்யபிப்ராயேணாஹ (நசஸீதேத்யாதி) "நரகமுந்தாதே" என்றதுக்குவ்யாக்யாநம் (பிரிவாலித்யாதி)

"முனம் - நிலமிடந்தான்" என்றந்வயித்தர்த்தம் (வாராஹேத்யாதி) அத்தால்பலிதம் (நிருபாதிகஸௌஹார்த்தமுடையவனென்று)

மலமறும்படி - மதிசேரென்று முந்தினவர்த்தம். மலமற்றஜ்ஞாநம் சேரும்படி யிருக்கிறமாலிரும் சோலையென்று த்விதியார்த்தம். தேய்ப்புண்டு- உரையுண்டு.

வலமுறையெய்தி -ப்ரதக்ஷிணம் செய்கையாகிற முறையாலேகிட்டியென்று சப்தார்த்தம். "வலமுறையெய்தி" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (காலயவநேத்யாதி) அர்த்தத்வயத்தையு மடைவேவிவரிக்கிறார் (பலவத்தரமித்யாதி)*

---

# எட்டாம்பாட்டு.

வலஞ்செய்துவைகல்வலங்கழியாதே
வலஞ்செய்புமாயமாயவன்கோயில்
வலஞ்செய்யும்வானோர்மாலிருஞ்சோலை
வலஞ்செய்துநாளுமருவுதல்வழக்கே.

## ஆறாயிரப்படி.

(வலம்செய்து) ஹேயவிஷயங்களிலே விநியோகித்தருமந்தபலத்தைப்போக்காதே, ஆஶ்சர்யபூதனாய் ஆஶ்ரிதசுலபனாயிருந்த எம்பெருமானும் *அயர்வறுமமரர்களும் வலம்செய்துகொண்டநுபவிக்கிற திருமாலிருஞ்சோலைமலையைவலம்செய்து நாளும்மருவுகைவழக்காவதென்கிறார்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதாநுகூலனான க்ருஷ்ணன்வர்த்திக்கிற திருமலையிலே நிரந்தராநுகூல வ்ருத்தியே ஸ்வரூபப்ராப்தமென்கிறார்,

கரணங்களுக்கு, வலம்-பலத்தை. செய்து-உண்டாக்கி. வைகல்-நிரந்தரமாக. வலம் - அந்தபலத்தை. கழியாதே - இதரவிஷயமாக்கிக்கெடாதே. வலம் - ஆஶ்ரிதர்க்குபவ்யதையாகிற ஆநுகூல்யத்தை. செய்யும் - பண்ணும். ஆயன் - க்ருஷ்ணனான. மாயவன் - ஆஶ்சர்யபூதனுடைய. கோயில் - கோயிலான. வானோர்-ப

ரமபதவாசிகள். வலம் - அநுகூலவ்ருத்தி. செய்யும் - பண்ணும். மாலிருஞ்சோலை - திருமலையைக்குறித்து. வலம் - ப்ரதக்ஷிணாத்யநுகூலவ்ருத்தியை. செய்து - பண்ணி. நாளும் - நிரந்தரம். மருவுதல் - ஸம்ஶ்லேஷம்பண்ணுகை. வழக்கு - ந்யாயம்.................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

திருமலையைநிரந்தரமாக வலஞ்செய்கையே வழக்கென்கிறார்.

(வலஞ்செய்தித்யாதி) சர்வேஶ்வரன்தன்னையாஶ்ரயிக்கைக்குறுப்பாகத்தந்த மநுஷ்யசரீரத்தைக்கொண்டு பலத்தையுண்டாக்கி, பின்னையவனை யாஶ்ரயிக்கையன்றிக்கே இதரவிஷயப்ராவண்யத்துக் குடலாக்கியநர்த்தப்படாதே. (வலஞ்செய்யும்) திருச்சித்ரகூட பரிசரத்திலே பிராட்டியையுங்கூடக் கையைப்பிடித்துக்கொண்டு உலாவினாற்போலே, பிராட்டிகையைப்பிடித்துக்கொண்டு அழகர் ஆதரத்தோடே சஞ்சரிக்கிறதேசம். "யஆத்மதாபலதா:" (யஆத்மதாபலதா:) என்கிறபடியே - தன்னையுங்கொடுத்து, தன்னையநுபவிக்கைக்கீடான சக்தியையுங்கொடுக்குமாஶ்சர்யபூதனானக்ருஷ்ணன் வர்த்திக்கிறதேசம். (வலம்செய்யும்வானோர்மாலிருஞ்சோலை) கீழ் "விண்ணோர்வெற்பன்" என்றார், இங்கே (வானோர்மாலிரும்சோலை) என்கிறார்; இதுக்குநினைவென் உகந்தருளினதேசமெல்லாங் கிடக்கவென்னில்; ப்ரஜைக்குத்தாயினுடைய அவயவமெல்லாங்கிடக்க முலைக்கண்ணிலேயிறே வாய்வைக்கலாவது, அப்படியேயிங்கு "தென்னனுயர்பொருப்பும்தெய்வவடமலையும்" என்கிற முலையாகையாலே அவர்களுக்கே யாயிருக்கிறது. (வானோர்மாலிருஞ்சோலை) பெருமாள் காட்டுக்கெழுந்தருளுகிறபோது லக்ஷ்மணபரதர்கள் பின்றொடர்ந்தாற்போலே, சர்வேஶ்வரனிங்கேபோருகையாலே நித்யசூரிகளும்போந்து வலஞ்செய்யாநிற்பர்கள். (வலஞ்செய்து) நாமுமிவர்களோடேகூட அங்கேயநுகூல வ்ருத்திகளைப்பண்ணி. "பிள்ளைதிருநறையூரரையரும் பட்டரும் ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்கப் பின்னேசேவித்துக்கொண்டுபோனேன்; அல்லாதார் கடுங்குதிரைபோலே வாராநிற்க, இவர்கள், திருக்கோபுரங்களையும் திருமாளிகைகளையும்கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக்கொண்டு வந்தார்கள் என்று நஞ்சீயரருளிச்செய்வர். (நாளும்மருவுதல்வழக்கே) நித்யசூரிகளுடைய யாத்ரையே தனக்குயாத்ரையானால் பின்னைமறுவலிடாதிறே. இதுவேவழக்கு..*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (வலம்செய்தித்யாதி) நாலாம்பாதத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகை. வழக்கு - ந்யாயம்.

“ விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும் ” (விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதம்) என்றத்தைப்பற்ற (தன்னையாஸ்ரயிச்கைக்கு றுப்பாகவென்றது) பலத்தையுண்டாக்கி - அங்கபாநாதிகளாலே யுண்டாக்கியென்றபடி. உடலாக்கி - அந்தபலத்தையுடலாக்கி. பலத்தையுடலாக்கி - நிரந்தரமாகவந்தபலத்தை யிதரவிஷயமாக்கிக் கெடாதேயென்றுசப்தார்த்தம்.

“ வலஞ்செய்யுமாயமாயவன் ” என்றதுக்கு - மாவென்று-பிராட்டியாய், அவளையுடையவன் - மாயவனாய், “ மாயவனை-ஆயன்-வலம்செய்கிற-கோயில் ” என்றுவிவக்ஷித்துபாவம் (திருச்சித்ரகூடேத்யாதி) “ வலம்செய்யும்-மாயவனை - ஆயன்வர்த்திக்கிற-கோயில் ” என்றர்த்தாந்தரம் (யஆத்மதாஇத்யாதி) இந்தபக்ஷத்தில், வலமென்று-பலமாய், செய்கை-கொடுக்கையாய், பலத்தைக்கொடுக்குமென்றபடி. மாயவன் - (ஆஸ்சர்யபூதன்)

“ஸத்ருஶாத்ருஷ்டசிந்தாத்யாஸ்ம்ருதிபீஜஸ்யபோதகாঃ” (ஸத்ருஶாத்ருஷ்டசிந்தாத்யாஸ்ம்ருதிபீஜஸ்யபோதகாঃ) இதிந்யாயேந, “ வானோர்மாலிருஞ்சோலை” இத்யஸ்யஸத்ருஶம் ப்ரயோகாந்தரம்விசிந்த்ய, ப்ரயோகத்வயஸ்ய ச ஹேதுமாஹ (கீழித்யாதிநா) நித்யசூரிகளிங்கேவருகைக்கு மநுகூலவ்ருத்தி பண்ணுகைக்கும்ஹேதுமாஹ (பெருமாளித்யாதி) (தென்னனித்யாதி) பெரியதிருமடல். உயர்ந்ததெற்குத் திருமலையும், மேன்மையிலேற்றத்தையுடைய வடக்குத் திருமலையுமென்றுசொல்லப்படுகிறவிவை யிரண்டும்முலையாகவென்று பாசுரார்த்தம்.

வலம்செய்கை உபாயகோடியி லந்வயியாதோவென்ன ; அந்வயியாதென்கைக்கைதிஹ்யம் (பிள்ளையித்யாதி) (அல்லாதாரித்யாதி) அல்லாதார் - ஸாதநத்வேந ப்ரதக்ஷிணம்பண்ணுகிறபேர். கண்ணுலேபருகுவாரைப்போலே யென்கையாலே - ப்ராப்யத்வம் ஸுஸ்பஷ்டம். “ நாளும்மருவுதல், ” என்கிறவிதுகூடுமோ, கதாசித் ப்ரயோஜநாந்தர ப்ராவண்யத்தாலே ஸாதநத்வபுத்திபிறவாதோவென்ன (நித்யசூரிகளுடையவித்யாதி) நித்யசூரிகளைப்போலே கைங்கர்யைகதாரகபோஷகபோக்யனானால், ப்ரயோஜநாந்தர ப்ராவண்யத்துக்கும் தந்மூலஸாதநத்வபுத்திக்கும் ப்ரஸங்கமில்லையென்றபடி. மறுவலிடாது - திரும்பாது. “ மருவுதலேவழக்கு ” என்றந்வயித்தர்த்தம் (இதுவேவழக்கென்று) இதமேவப்ராப்தமித்யர்த்தঃ. நாளும்மருவுதல் - நிரந்தரஸம்ஶ்லேஷம்பண்ணுகை.

வைகல் - வலம்செய்து - வலம்கழியாதே, மாயவனை - ஆயன்-வலம்செய்யும்-கோயிலாய், அதஏவ, வானோர் - வலம்செய்யுமதான - மாலிருஞ்சோலையை நீங்களும்வலம்செய்து-நாளும்மருவுதலே-வழக்கித்யந்வயঃ.........................*



## ஒன்பதாம்பாட்டு.

---

வழக்கெனநினைமின்வல்வினைமூழ்காது
அழக்கொடியட்டானமர்பெருங்கோயில்
மழக்களிற்றினஞ்சேர்மாலிருஞ்சோலை
தொழக்கருதுவதேதுணிவதுசூதே.

## ஆறாயிரப்படி.

(வழக்கென) வேறொன்றையுக்தமென்றுபாராதே இதுவேயுக்தமென்றுபார்த்து, ஆச்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனாயிருந்தவனுடைய அபிமதமான திவ்யஸ்த்தாநமாய், சர்வாத்மபோக்யமாயிருந்த திருமலையைத் தொழுவோமென்றுண்டான சங்கல்போத்யோகமாத்ரத்தைப்பண்ணுகை யவனுக்கடிமைசெய்கைக்கு நல்லவுபாயமென்கிறார்... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பூதநாநிரஸநம்பண்ணினவன் வர்த்திக்கிற திருமலையைத்தொழவேணுமென்கிற நினைவிற் றுணிவுவெற்றிக்கடியென்கிறார்.

வல்-கடக்கவரிதாம்படிப்ரபலமான. வினை-பாபங்களிலே. மூழ்காது-முழுகாதே. வழக்கு - இதுஸ்வரூபாநுரூபம். என-என்று. நினைமின் - நினையுங்கோள். அழன்-பேயான. கொடி-பெண்ணை. அட்டான்-நசிப்பித்தவன். அமர்-பொருந்திவர்த்திக்கும். பெரு - அஸங்குசிதமான. கோயில்-கோயிலாய். மழ - கன்றுகளான. களிற்றினம்-ஆனைத்திரள். சேர்-சேருகிற. மாலிருஞ்சோலை - திருமலையை. தொழ-தொழவேணுமென்கிற. கருதுவதே-நினைவிலே. துணிவதே - துணிகையே. சூது-சம்ஸாரத்தைவெல்லுகைக்குஹேது.

அழன்-பேய். கொடி-பெண்... ... ... ... ... ... ... ... ... *

---

## ஈடு-ஒன்பதாம்பாட்டு.

“ திருமலையைத்தொழுவோம் ” என்றத்யவஸித்து நினைக்கையமையும் விஜயஹேதுவென்கிறார்.

(வழக்கெனநினைமின்) நான்சொல்லுகிற இதுவே முறையென்று புத்திபண்ணுங்கோள். (வல்வினைமூழ்காது) உங்களால் போக்கிக்கொள்ளவொண்ணாத மஹாபாபங்களைப் பரிஹரிக்கவேண்டியிருந்தீர்களாகில். அழனென்று-பேய்க்குப்பேர்; கொடியென்று-பெண்ணுக்குப்பேர்; பேய்ப்பெண்ணென்றபடி. அழனென்று-பிணமாய், அத்தால் - பேயென்றபடி. பூதனையைமுடித்தவன் “ இங்ஙனொத்தவிரோதிகள் வந்தபோதாக நம்மை நெடுங்கைநீட்டாக்கிவைக்கவொண்ணாது ” என்று நித்யவாசம்பண்ணுகையாலே ஸ்லாக்யமானகோயில். (மழவித்யாதி) அங்குண்டான திர்யக்குகளும் அழகரோடோரினமாயாயிற்றிருப்பது. இளவானைக்கன்றுகள் இனமினமாகச்சேராநின்றுள்ள திருமலையை. லக்ஷணோபேதமாயிருப்பதொரு ஆனைநின்றவிடத்தே ஆயிரமானைவந்து சேராநிற்கும்; அங்குநிற்கிறதும் * சோலைமழகளிறிறே, * தென்னானையிறே. திருமலையைத்தொழவேணும் என்னும் மநோரதத்திலேதுணிவதே இவ்வாத்மாவுக்கு விஜயஹேது... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (வழக்கெனவித்யாதி) சதுர்த்தபாதத்தைக்கடாக்ஷித்து-அவதாரிகை. "சூது" என்றபதத்தைப்பற்ற (விஜயஹேதுவென்றது)

முறையென்று - ப்ராப்தமென்று. மூழ்காது-மூழ்காதேயிருக்கவேண்டில்.

"அழன்" என்று-பேயைச்சொல்லும்படி யென்னென்ன (அழனென்றுபிணமாயித்யாதி) நெடுங்கைநீட்டாக்கி-அதிதூரமாக்கி. "பெரு" என்றதினர்த்தம் (ஶ்லாக்யமானவென்றது)

"மழ" என்றவிசேஷணத்துக்குபாவம் (அங்குண்டானவித்யாதி) ஓரினம்-ஒருபருவம். இனம்-பருவம். "இனம்" என்று - ஸமூஹமாக விவக்ஷித்தர்த்தாந்தரம் (இளவானையித்யாதி) மழ - இளமை. இனத்துக்குஹேதுவேதென்ன (லக்ஷணேத்யாதி) லக்ஷணோபேதமான ஆனையங்கிருக்கிறதோவென்ன (அங்குநிற்கிறதுமித்யாதி) ப்ரமாணாந்தரம் (தென்னானையிறேயென்று) திருநெடுந்தாண்டகம்.

சூது-விஜயஹேது. தொழக்கருதுவது - தொழவேணுமென்கிற நினைவிலே. துணிவதுவே-துணிகையே.

வல்வினைமூழ்காதித்யாரப்ய, தொழக்கருதுவதே துணிவதுசூது; இத்தை வழக்கெனநினைமினித்யந்வய:... ... ... ... ... ... ... ... ... ... *

---

# பத்தாம்பாட்டு.

---

சூதென்றுகளவும்சூதுஞ்செய்யாதே
வேதமுன்விரித்தான்விரும்பியகோயில்
மாதுறுமயில்சேர்மாலிருஞ்சோலைப்
போதவிழ்மலையேபுகுவதுபொருளே.

## ஆறாயிரப்படி.

(சூதென்று) புருஷார்த்தமான செயலைச்செய்கிறோமென்றுகொண்டு சௌர்யக்ருத்ரிமங்களைச்செய்யாதே, "சர்வவேதங்களுக்கும் தானே ப்ரதிபாத்யன்" என்னுமிடத்தை ஸ்ரீகீதையாலே யருளிச்செய்தருளின அந்தமஹாகுணத்தையுடைய எம்பெருமான் றனக்குங்கூட ஸ்ப்ருஹணீயமான திருமலையிலே போய்ப்புகுவதுவே பரமபுருஷார்த்தமென்கிறார்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வைதிகஜ்ஞாநப்ரவர்த்தகன் வர்த்திக்கிற திருமலையிலேப்ரவேசிக்கிறவிது புருஷார்த்தமென் றுபக்ரமித்த வுபதேசத்தை நிகமித்தருளுகிறார்.

சூது - ஸ்வகரமானவர்த்தஸாதநம். என்று - என்றுநினைத்து. களவும் - களவுகாணுதல். சூதும் - பரா[illegible]ருக்க அபஹரித்தல். செய்யாதே - செய்யாதே. முன் - முற்காலத்திலே. கீதோபநிஷதாதிமுகத்தாலே, வேதம் - வேதார்த்தத்தை.

விரித்தான் - விவரித்தவன். விரும்பிய-விரும்பிவர்த்திக்கிற. கோயில்-கோயிலாய். மாது-மாதிமை. உறு-உடைத்தான. மயில் - மயில்கள். சேர்-சேர்ந்துவர்த்திக்கிற. மால்-ஓங்கி. இரு-பரந்த. சோலை-சோலைகளில். போது-பூவானது. அவிழ்-மலருகிற. மலை - திருமலையிலே. புகுவதே - சென்றுபுகுவதே. பொருள் - புருஷார்த்தம். மாதிமை - மென்மை. மாதுறுவென்று - பேடையோடேசேர்ந்தவென்றுமாம்..........................................*

## ௯௰ - பத்தாம்பாட்டு.

பலபடியாலும் திருமலையே பரமப்ராப்யமென்று உபக்ரமித்தபடியே உபஸம்ஹரிக்கிறார்.

( சூதென்று ) நமக்குநல்லவாய்ப்பாயிருந்ததென்று சூதும்களவும்செய்யாதே, சாஸ்த்ரங்களிவற்றை நிஷேதிக்கையாலே அவற்றையுஞ்சொல்லவுமாம். அன்றிக்கே,களவாவது-“வொரெணாத்மாவஹாரிணா” ( சோரேணாத்மாபஹாரிணா ) என்கிற ஆத்மாபஹாரமாய், சூதாவது - சாத்விகனாய் ப்ராமாணிகனா யிருப்பானொருவன் “ சர்வேஶ்வரன்ரக்ஷகன் ” என்றுவிஶ்வஸித்திருந்தால், “ காண்கிறதேஹத்துக்கவ்வருகே ஓரீஶ்வரனுவதென், ஆத்மாவாவதென் ” என்றுகாணக்காண அபஹரிக்கை. ( வேதமித்யாதி ) இவையொருவர்க்கு வாராதபடிவேதார்த்தத்தை விஶதீகரித்த கீதோபநிஷதாசார்யன் வர்த்திக்கிறகோயில்.(மாதுறுமயில்) மாதென்று - மார்த்தவத்தைச் சொல்லுகிறதாய், சுகுமாரமாய் தர்ஶநீயமான மயிலென்னுதல் : பேடையையுற்ற மயிலென்னுதல். அங்குள்ள ஸத்வங்களெல்லாம் மிதுநமேயாய் வர்த்திக்குமென்கை. ( போதவிழ்மலையே ) கொடியும்தண்டும்சருகும் இடையிடையிலே பூவுமாயிருக்கையன்றிக்கே, திருமலைதன்னை முட்டாக்கிடப் பூத்துக்கிடக்குமித்தனை. திருமலையைக்கிட்டுமதுவே இவ்வாத்மாவுக்கு ப்ரயோஜநமாய்த் தலைக்கட்டுவது, அல்லாதவையெல்லாம் வ்யர்த்தவ்ருத்திகளென்கிறார்.................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( சூதென்றித்யாதி ) “ சதிர் ” என்றும் - “ பொருள் ” என்றுமுபக்ரமோப ஸம்ஹாரங்களிலே-ப்ராப்யவாசகங்களாகக் கருதியவதாரிகை ( பலபடியாலுமித்யாதி )

சூதென்று - ஸாதகமான வர்த்தஸாதநமென்றுநினைத்து. நல்லவாய்ப்பு-நல்லவாதாயம். சூதும்களவும் - சதுரங்காதிகளும், பரத்ரவ்யாபஹாரமுமென்றபடி.

வ்யுத்க்ரமமாக வ்யாக்யாநம்பண்ணிற்று - "சூதனாய்க்கள்வனாகி" என்றத்தைப பற்ற. நிஷேதிக்கையாலே யென்றவிடத்திலே - "அநாஹிதாக்நிதாஸ்த்தைர்யம் ருணாநாஞ்சாநபக்ரியா । அஸச்சாஸ்த்ராதிகமநம் கௌஸீல்யம்வ்யஸநக்ரியா" (அநாஹிதாக்நிதாஸ்த்தைர்யம் ருணாநாஞ்சாநபக்ரியா । அஸச்சாஸ்த்ராதிகமநம் கௌஸீல்யம்வ்யஸநக்ரியா) என்றமநுவசநமநுஸந்தேயம். கௌஸீல்யம்-குத்ஸிதஸீலதா. வ்யஸநக்ரியா - த்யூதாதி:. ஸ்த்தைந்யம் - ஸ்தேநத்வம். "பவேதத்ரிகிணீத்விஜ:" (பவேதத்ரிகிணீத்விஜ:) இத்யாதௌஹ்ருதயம். அத்ரிகிணீ-த்யூதாதிவ்யாபாரரஹித:. அவற்றையென்றது - களவும்சூதும். களவாவது - காணாதேயபஹரிக்கை. சூதாவது - கண்முன்னேயபஹரிக்கை. "யோந்யதாஸந்தமாத்மாநமந்யதாப்ரதிபத்யதே । கிம்தேநநக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா" (யோந்யதாஸந்தமாத்மாநமந்யதாப்ரதிபத்யதே । கிம்தேநநக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா) இத்யுத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸநத்ஸுஜாத:.

இவை - த்யூதசௌர்யங்கள்.

மாது - ஸௌகுமார்யமும், ஸௌந்தர்யமும், ஸ்த்ரீயும். ஸௌகுமார்ய ஸௌந்தர்யங்களைதந்த்ரேணாஹ (மாதென்றித்யாதி) பேடையென்றவர்த்தத்தைப்பற்ற (அங்குள்ளவித்யாதி)

"போதே - அவிழ்மலே" என்றந்வயித்து, ஏவகாரார்த்தம் (கொடியுமித்யாதி) போது - புஷ்பம். அவிழ்கை - மலருகை. "புகுவதுவே-பொருள்" என்றந்வயித்து. ஏவகாரவ்யாவர்த்யம் (அல்லாதவையித்யாதி)

க்ரமேணாந்வய:............................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

பொருளென்றிவ்வுலகம்படைத்தவன்புகழ்மேல்
மருளில்வண்குருகூர்வண்சடகோபன்
தெருள்கொள்ளச்சொன்னவோராயிரத்துளிப்பத்
தருளுடையவன்றாளணைவிக்குமுடித்தே.

## ஆறாயிரப்படி.

(பொருளென்று) சம்ஸாரிகளான ஆத்மாக்களினுடைய ஸம்ருத்தியேநமக்கு ப்ரயோஜநமென்றுபார்த்து, தத்ஸம்ருத்த்யர்த்தமான ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணியருளினவன் குணங்களில் ஒரஜ்ஞாந கந்தமின்றியே யிருந்தவண் குருகூர்ச்சடகோபன், எல்லாருக்குமெம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாற்போலே யறியலாம்படி சொன்ன இப்பத்து அழகர் திருவடிகளிலேசேர்வித்து முடிக்குமென்கிறார். ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

பொருள் - ஆஶ்ரிதாபிமுக்யம்ப்ரயோஜநம். என்று - என்று - இ - இந்த. உலகம் - லோகத்தை. படைத்தவன் - ஸ்ருஷ்டித்தவனுடைய. புகழ்மேல் - தயாக்ஷமௌதார்யாதிகுணப்ரஸ்தவிஷயமாக. மருளில் - அஜ்ஞாநகந்தரஹிதராய். வண் - விலக்ஷணமான. குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகராய். வண் - மஹோதாரரான. சடகோபன் - ஆழ்வார். தெருள் - தத்த்வஜ்ஞாநமானது. கொள்ள - சேதநனைஸ்வீகரிக்கும்படி. சொன்ன - அருளிச்செய்த. ஓர் - அத்விதீயமான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இப்பத்து - இப்பத்தும். முடித்து - ஸம்ஸாரத்தைநசிப்பித்து அருளுடையவன் - க்ருபாபரிபூர்ணரான அழகருடைய. தாள்-திருவடிகளை. அணைவிக்கும் - அடைவிக்கும்.

முடித்தென்று - கர்த்தவ்யங்களைத் தலைக்கட்டியென்றுமாம்.

இது - கலிவிருத்தம்.... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றாரை, இத்திருவாய்மொழிதானே ஜந்மத்தைப்போக்கி அழகர்திருவடிகளிலே சேர்த்துவிடுமென்கிறார்.

(பொருளித்யாதி) ப்ரயோஜநப்படுமென்றிந்த லோகங்களையுண்டாக்கினவனுடைய கல்யாணகுணவிஷயமாக அஜ்ஞாநகந்தமில்லாத ஆழ்வாரருளிச் செய்ததிதுதான். இவற்றையுண்டாக்கி கரணகளேபரங்களைக் கொடுத்துவிட்டால், கொடுத்த உபகரணங்களைக்கொண்டு சப்தாதிவிஷயங்களிலே ப்ரவணராய்க்கை கழியப்புக்கால், “நம்நினைவுதப்பிற்றே” என்றுநெகிழ்ந்து கைவாங்குகையன்றிக்கே, “ஒருநாளல்லாவொருநாளாகிலும் ப்ரயோஜநப்படாதோ” என்றுபலகாலு முண்டாக்காநிற்கும்; * மயர்வறமதிநல மருளப்பெற்றவராகையாலே அவனுடைய குணவிஷயமாக மருளில்லாதவ ராயிற்றிவ்வாழ்வார். ப்ரபந்தமோவென்னில் (தெருள்கொள்ளச்சொன்னவோராயிரம்) மருளுண்டாய்க் கழியவேண்டிற்றிவர்க்கு, இவருடைய ப்ரபந்தமப்யஸித்தார்க்குமுதலிலேயஜ்ஞாநந்தானில்லை. கேட்டார்க்குத் தெளிவைப்பிறப்பிக்கும்படியாயிற்றருளிச்செய்தது. தம்முடைய ஜ்ஞாநத்துக்கடியீஶ்வரன், இவர்களுக்குத் தாமடியாகவந்தது, ப்ரபந்தந்தான் செய்வதென்னென்னில் (அருளுடையித்யா

தி) அருளையிட்டாயிற்று வஸ்துவைநிரூபிப்பது. அருளையுடையவன் றிருவடிகளிலே சேர்த்துவிடும். அதுசெய்யுமிடத்தில் (முடித்தே) சம்ஸார சம்பந்தத்தை வாசனையோடேபோக்கித் திருவடிகளிலேசேர்த்துவிடும். ஒருஜ்ஞானலாபத்தைப்பண்ணித்தந்து விடுமளவன்றிக்கே, அர்த்தக்ரியாகாரியாயிருக்கும்.

முதற்பாட்டில்-கடுகத்திருமலையாழ்வாரை யாஸ்ரயியுங்கோளென்றார்; இரண்டாம்பாட்டில் - திருமலையோடு சம்பந்தித்தஸ்ரீபதியை ஆஸ்ரயிக்கச்சொன்னார்; மூன்றாம்பாட்டில்-அத்தோடுசேர்ந்த அயன்மலையமையுமென்றார்; நாலாம்பாட்டில் - "திரிதந்தாகிலும்" என்கிறபடியே, திரியவும்திருமலையை யாஸ்ரயிக்கச்சொன்னார்; அஞ்சாம்பாட்டில் - அத்தோடுசேர்ந்த புறமலையை யாஸ்ரயியுங்கோளென்றார்; ஆறாம்பாட்டில் - திருமலைக்குப்போம் மார்க்கசிந்தைபண்ண வமையுமென்றார்; ஏழாம்பாட்டில் - அவ்வழியோடு சேர்ந்ததிருமலையை யாஸ்ரயிக்கச்சொன்னார்; எட்டாம்பாட்டில் - நித்யஸூரிகளுக்குங்கூட ப்ராப்யமாகையாலே திருமலையே பரமப்ராப்யமென்றார்; ஒன்பதாம்பாட்டில் - "திருமலையைத் தொழக்கடவோம்" என்கிற துணிவே வேண்டுவதென்றார்; பத்தாம்பாட்டில் - எல்லாப்படியாலும் திருமலையாழ்வாரை யாஸ்ரயிக்கையே புருஷார்த்தமென்று தலைக்கட்டினார்; நிகமத்தில்-இதுகற்றார்க்குப் பலமருளிச்செய்தார்.......................................................*

முதற்றிருவாய்மொழியாலே - "மணியைவானவர் கண்ணனைத் தன்னதோரணியை" என்ற - விலக்ஷணவிஷயமாகையாலே, பிரிந்தார் கண்ணுங்குழலை யிடப்பண்ணுமென்றார்; இரண்டாம்திருவாய்மொழியாலே - அவ்வோபாதிகூடினாலும் மறப்பிக்குமென்றார்; மூன்றாந்திருவாய்மொழியாலே - கூடினவிஷயந்தான் நிரதிசயசுகரூபமென்றார்; நாலாந்திருவாய்மொழியாலே - அவ்விஷயத்துக்கு தேசிகரோடு அநுபவிக்கப் பெறாமையாலே மோஹங்கதரானார்; அஞ்சாந்திருவாய்மொழியாலே - தாமாசைப்பட்டபடியே வந்துகலந்தபடிசொன்னார்; ஆறாந்திருவாய்மொழியாலே - தம்மிழவுக்கு மவனதிசங்கைபண்ணுமென்றார்; ஏழாந்திருவாய்மொழியாலே - தம்முடையசம்பந்தி சம்பந்திகளையும் விஷயீகரித்தபடிசொன்னார்; எட்டாந்திருவாய்மொழியாலே - அவனுடையமோக்ஷப்ரதத்வத்தை யருளிச்செய்தார்; ஒன்பதாந்திருவாய்மொழியாலே - ப்ராப்யநிஷ்கர்ஷம்பண்ணினார்; பத்தாந்திருவாய்மொழியாலே - நிஷ்கர்

ஷித்த ப்ராப்யத்தை லபிக்கைக்குத் திருமலையாழ்வாரை யாஶ்ரயிக்கச் சொன்னர்.......................................................................*

---

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (பொருளித்யாதி) "முடித்தே-அருளுடையவன்றா ளணைவிக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி) "முடித்தே" என்றதிலேநோக்காக (ஜந்மத்தைப்போக்கியென்றது)

சப்தார்த்தம் (ப்ரயோஜநேத்யாதி) பொருளென்று - பொருளையுடையதா மென்று. உக்தார்த்தவிவரணம் (இவற்றையுண்டாக்கியித்யாதி)

(அஜ்ஞாநகந்தமில்லாத) என்றவாக்யத்தை ஸஹேதுகமாக விவரிக்கிருர் (மயர்வறவித்யாதி).

எடுத்துக்கழியாமையாலே (அஜ்ஞாநந்தானில்லையென்றது) சப்தார்த்தம் (கேட்டார்க்கித்யாதி) இந்தநெடுவாசிக்கடியேதென்ன (தம்முடையவித்யாதி) பந்தமோக்ஷஸாதாரண ஸ்வதந்த்ரேஶ்வர ஹேதுகமாகையாலும் உஜ்ஜீவநைகஹேதுபூதமான தம்முடையக்ருபாமூலமாகையாலு மென்றுகருத்து.

(அருளையிட்டாயிற்றுவஸ்துவைநிரூபிப்பது) "அருளுடையபெருமாள்" என்று - அழகருக்குத் திருநாமமிதிபாவ꞉. "முடித்தே" என்றதுக்குபாவம் (ஸம்ஸாரஸம்பந்தத்தையித்யாதி) அவதாரணார்த்தம் (ஒருஜ்ஞாநலாபமித்யாதி) (அர்த்தக்ரியாகாரியாயிருக்கும்) ப்ரார்த்தநீயபல ப்ரதம்பவதீத்யர்த்த꞉. வண்குருகூர் - விலக்ஷணமானதிருநகரி. வண்சடகோபன் - உதாரரான ஆழ்வார். தெருள்கொள்ளச்சொன்ன - சேதநர், தெருளை - ஜ்ஞாநத்தை, கொள்ளும்படி யருளிச்செய்த.

தசகஸங்க்ரஹம் (முதற்பாட்டிலித்யாதி)
பத்தின்நிகமநம் (முதற்றிருவாய்மொழியாலேயித்யாதி)
முடித்தே - அருளுடையவன்றா ளணைவிக்குமித்யந்வய꞉.......................*

---

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(கிளரொளியிளமை.)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] உஉ

(தீப்தாஸ்சர்யஸ்வபாவம்) வளரொளிமாயோன் - நிரவதிகதேஜஸ்ஸை யுடையனுமாய், ஆஸ்சர்யசக்தியுக்தனுமாய்; (முகரிதஜலஜம்) அதிர்குரல்சங்கத்தழகர் - முழங்காநிற்கிற திருச்சங்கையுடையனுமாய்; (வர்ஷுகாம்போதவர்ணம்) புயல்மழைவண்ணர் - நீலமேகஸ்யாமளனுமாய்; (சைலச்சத்ராபிகுப்தாஸ்ரிதம்) பெருமலையெடுத்தான் - *கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையாலே கோகோபஜாதிகளை ரக்ஷித்தவனுமாய்; (அதிவிலஸத்ஹேதிம்) அறமுயலாழிப்படையவன் - ஆஸ்ரிதவிரோதிநிரஸநத்திலே யத்யந்தம் முயலாநிற்கிற திருவாழியை யுடையனுமாய்; (ஆபீதகவ்யம்) உறியமர்வெண்ணெயுண்டவன் - உறியிலே யமைந்திருக்கிற வெண்ணெயையுண்டவனுமாய்; (ஸம்ரம்போத்க்ஷிப்தபூமிம்) நிலமுனமிடந்தான் - வராஹரூபத்தைக்கொண்டு பூமியையுத்தரித்தவனுமாய்; (ப்ரணமதநுகுணம்) வலம்செய்யு மாயமாயவன் - ஆஸ்ரிதர்க்கு ப்ரதக்ஷிணப்ரணமாதிகளிலே சக்தியைக்கொடுத்து, அவர்களுக்கநுரூபனுமாய்; (பூதநாசேதநாந்தம்) அழக்கொடியட்டான் - பூதனையை முடித்தவனுமாய்; (பூர்வாசார்யம்ஸ்ருதீநாம்) வேதமுன்விரித்தான் - வேதங்களுக்கெல்லாம் முந்தினப்ரவர்த்தகனுமாயிருக்கிற எம்பெருமானை "கிளரொளியிளமை" என்கிறதசகத்திலே அதிஸமீபவர்த்தியாய் அதிமநோஹரமான திருமாலிருஞ்சோலை மலையிலேகண்டு ஆழ்வாரநுபவித் தருளினாரென்கிறார். (௨௨)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] (௨௩)

இப்படித்விதீயசதகத்தில் பத்துதசகங்களாலும் ப்ரதிபாதிதங்களான அர்த்தங்களை ஸங்க்ரஹித்துக் காட்டியருளுகிறார்.

க்ஷணமாத்ரமும் துஸ்ஸஹமாம்படியான தன்விரஹத்தை யுடைத்தாகையாலும், மநுஷ்யஸஜாதீயனா யவதரிக்கச்செய்தே பரனாயிருக்கையாலும், ஸமஸ்தமதுர பதார்த்தங்களுடைய ரஸத்தையுடைத்தான போக்யதையை யுடையனாகையாலும், ஆஸ்ரிதருடைய வ்யஸநத்தைஹரிக்கு மவனாகையாலும், ஆஸ்ரிதரோடே ஸம்ஸ்லேஷித்து அத்தாலேயத்யந்த ப்ரீதனாகையாலும், "ஆஸ்ரிதர்தன்னைவிடிற் செய்வதென்" என்றுமிகவும் பீதனாகையாலும், ஆஸ்ரிதருடைய ஸம்பந்திஸம்பந்திகளையும் ரக்ஷிக்குமவனாகையாலும், மோக்ஷப்ரதனாகையாலும், கைங்கர்யோத்தேஸ்யனாகையாலும், தர்ஸநீயமான தெற்குத்திருமலையிலே நின்றருளுகையாலு மெம்பெருமா னத்யந்தபோக்யனென்று த்விதீயசதகத்திலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறார்... ... ... ... ... ... ... ... ... ... ... ... (௨௩)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

கிளரொளிசேர்கீழுரைத்தபேறுகிடைக்க
வளரொளிமால்சோலைமலைக்கே - தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனுநீடுபுகழ்மாறன்றாள்
முன்செலுத்துவோமெம்முடி. (௨0)

(கிளரொளிசேர்) இதில் - "சர்வப்ரகாரத்தாலும் திருமலையையாஶ்ரயிக்கையே புருஷார்த்தஸாதநம்" என்று பரோபதேசம்பண்ணுகிற பாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறார். அன்றிக்கே, ஸ்வயம்புருஷார்த்தமாக அநுபவிக்கிற ப்ரகாரத்தை யநுவதித்தருளிச்செய்கிறாரென்றாகவுமாம். எங்ஙனேயென்னில்; * எம்மாவீட்டில் ஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிற வளவில் "ஒல்லை" "ஒல்லை" என்றிவர்த்வரிக்கப்புக்கவாறே, இவர் த்வரைக்கநுகுணமாக இங்கே யிவ்வுடம்போடேகிட்டியடிமைசெய்யலாம்படி தெற்குத்திருமலையில் தான்நிற்கிறபடியை யிவர்க்குக்காட்டிக்கொடுக்க, அத்தையநுசந்தித்து, அவனிலுமவனுகந்து வர்த்திக்கிறதேசமே ப்ராப்யமென்று நினைத்து, திருமலையாழ்வாரைப் பெரிய ஆதரத்தோடே யநுபவித்து ப்ரீதராய், சம்சாரிகளையு மங்கே ஆஶ்ரயிக்கும்படி பரோபதேசம்பண்ணுகிற * கிளரொளியிளமையிலர்த்தத்தை "கிளரொளிசேர்" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

(கிளரொளிசேர்கீழுரைத்தபேறுகிடைக்க) அதிசயமான ஔஜ்ஜ்வல்யத்தையுடைத்தாய் கீழுக்தமான * எம்மாவீட்டில் ப்ராப்யமானது லபிக்கைக்காக. (வளரொளிமால்சோலைமலைக்கே) "பயிலுஞ்சுடரொளிமூர்த்தியை" என்னும்படி நாள்செல்ல நாள்செல்ல வளர்ந்து வாராநின்றுள்ள வொளியையுடைய சர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருமாலிருஞ்சோலைமலைக்கே. (தளர்வறவேநெஞ்சைவைத்துச்சேருமெனும்) பகவத்ஸ்மரணராஹித்யமாகிற அநர்த்தமின்றிக்கே யவன்வர்த்திக்கிற திருமலையிலே மநஸ்ஸைவைத்தாஶ்ரயியுங்கோளென்றருளிச்செய்யும். தளர்வு - மநோதௌர்பல்யம். அறவே-அதின்றிக்கேயென்றபடி. கீழ்ப்ராப்யமான * பாதபற்புக்கு, * தென்னனுயர்பொருப்பை ப்ராபகமாக விதித்தபடி. இது * வன்றாட்சிமயமாகையாலே ஆஶ்ரயிக்கைக்கடியுடைத்து. "சமன்கொள்வீடுதருந்தடங்குன்றமே" இப்படி (நெஞ்சைவைத்துச்சேருமெனும்) நெஞ்சைவைத்துச்சேருமென்கிறதுக்குமூலம் - "கிளரொளியிளமை" என்கிறபாட்டு. "மாநஸஶ்ரத்தைமாறுவதற்குமுன்னே" என்றிறே அதுக்கர்த்தமருளிச்செய்தது. "உய்த்துணர்வென்னுமொளிகொள்விளக்கு" என்னக்கடவதிறே. சேருமென்றது - "கிளரொளியிளமைகெடுவதன்முன்னம்" என்கிறமுதற்பாட்டு ப்ரதாநமாய், "போதவிழ்மலையேபுகுவதுபொருளே" என்னுமளவுமருளிச்செய்தவை. அதாவது - "சார்வதுசதிரோ, ஏத்தியெழுவதுபயனே, அயன்மலையடைவதுகருமமே, திருமலையதுவே யடைவதுதிறமே, நெறிபடவதுவே நினைவதுநலமே," "𑌪𑍍𑌰𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂𑌚𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌰𑌕𑍂𑌟𑌂𑌮𑌹𑌾𑌗𑌿𑌰𑌿𑌂" (ப்ரதக்ஷிணஞ்சகுர்வாணஶ்சித்ரகூடம்மஹாகிரிம்) என்று "வலம்செய்துநாளும்மருவுதல்வழக்கே" "தொழக்கருதுவதேதுணிவதுசூதே" "போதவிழ்மலையேபுகுவதுபொருளே" என்று-திருமலையோடு, அத்தோடுசேர்ந்த அயன்மலையோடு, புறமலையோடு, திருப்பதியோடு, போம்வழியோடு, "போகக்கடவோம்" என்று துணிந்ததுணிவோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமாய் ஸ்வாநு

பவகர்ப்பபரோபதேசமுசேர அநுபவித்தினியராகிற ப்ரகாரமு மிவர்க்கிப்பாட்டிலே விவக்ஷிதம். “அந்தர்க்கதகுணோபாஸநத்தை மதித்துப்பெருக்கி மூழ்கி யழுந்திக்கீழ்மைவலம் சூதுசெய்திளமைகெடாமல் செய்யும் க்ஷேத்ரவாஸஸங்கீர்த்தநாஞ்சலி ப்ரதக்ஷிணகதிசிந்தநாத்யங்கயுக்தமாக்குகிறாரிரண்டாம்பத்தில்” என்றிறே நாயனாருபாயபரமாகவருளிச்செய்தது; ஆகையால், திருமலையை ப்ராப்யதயாவும் ப்ராபகதயாவு மாஶ்ரயிக்கும்படி யருளிச்செய்யக்குறையில்லையிறே. (நெஞ்சைவைத்துச்சேருமெனும் நீடுபுகழ்மாறன்தாள்) இப்படிபராநர்த்தம்கண்டுபரோபதேசம்பண்ணுகையாலே நெடுகிப்போருமதாய், அத்தாலே நித்யமான யஶஸ்ஸையுடைய ஆழ்வார்திருவடிகளில். (முன்செலுத்துவோமெம்முடி) அவர்திருவடிகளின்முன்பே நம்முடையதலை சேரும்படிநடத்துவோம். “𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾” (ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா) என்னக்கடவதிறே. இனி அவரடியறியவேயிறேவேண்டுவது. அன்றிக்கே, ஆழ்வார்திருவடிகள் நம்சென்னியிலே சேருவதற்குமுன்னமே, நாம் முற்பாடராய் முடியைச்செலுத்துவோமென்றாகவுமாம்... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எம்பெருமானார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

இரண்டாம்பத்தில் பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௨௰—பாட்டு - ௨௨௨.



